# கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி

சி. கோவிந்தராசன்



பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

# கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி

[கி. பி. 7 முதல் 12ஆம் நூற்றாண்டு வரை]

சி. கோவிந்தராசன்

பதிப்புத்துறை





மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

பதிப்புத் துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை



பதிப்பு எண்: 96 விலை ரூ. 30-00

பதிப்பு விவரங்கள் :

1) ஆசிரியர் : திரு. சி. கோவிந்தராசன்
(C. Govindarajan)
முன்னாள் ஆய்வாளர், தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

2) தலைப்பு : கல்வெட்டுக் கலைச்சொல் அகர முதலி

3) பதிப்பு

அ) இடம் : மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
(Madurai Kamaraj University)

ஆ) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.
(Publications Division, Madurai Kamaraj University, Madurai)

இ) ஆண்டு : முதற்பதிப்பு—1987

4) மொத்த பக்கங்கள் : x + 504

5) பொருள் : கல்வெட்டு அகராதி

6) அச்சும் அமைப்பும் : அருட்பா அச்சகம், மதுரை-10

# முகவுரை

பாரதப் பெருவளாகத்தில் தோன்றியுள்ள கோயில்கள் சமயச் சார்பில் பக்திநெறிக்குரியதாகமட்டும் அமையவில்லை. அக்கால அரசர்களும் பெருமக்களும் அறவோர்களும் கோயில்களைத் தெய்வ நெறிக் காட்சியகமாகவும், கலைக்கூடமாகவும், பொருட் கருவூலமாக வும், அறநெறிபுகட்டும் கல்விச்சாலையாகவும், அறச்சாலையாகவும், ஆவணப் பொறிப்பிடமாகவும் இயங்கச் செய்துள்ளனர்.

இவ்வாறு, சமுதாய வாழ்வியலுக்குரிய தலைமையிடமாகத் திகழ்ந்த கோயில்களில் உருப்பெற்ற கருங்கற்கட்டிட முகப்பிடங்களில், அவ்வக் காலங்களில் கோயிலுக்கும் பிறவாறும் செய்யப்பெற்ற அற நிவந்தங்கள், கிராம சபையோரின் நீதி நெறிமுறைகள், நிலம் விற் பனை செய்தல், நிலம் வாங்குதல், மக்கள் வாழ்வியல் முறைமைகள், ஆட்சி வழி நிகழும் ஆணைகள், அளவைகள் ஆகியவை போன்ற செய்திகளை, அன்றைய ஆட்சிக்கமைந்த குறிப்பும் காலமும் பொருந்த ஆவணங்களாகப் பனையோலைகளில் எழுதிய பாங்கில், கல் தச்சர்களையும் சிற்பியரையும் கொண்டு பொறிக்கச் செய்துள்ளனர்.

பனையோலைகளில் எழுதிவைக்கும் முறை சாசனம் என்று பெயர் பெற்றது. பனையோலை காலத்தால் சிதைந்தழியும் இயல் புடையதாதலின், அச்சாசனங்களைச் செப்பேடுகளிலும், கோயில் கற் களிலும் பொறித்து வைத்தனர். கற்களில் பொறித்த செய்திகள் கல்வெட்டுக்கள் என்று வழங்கப்பெற்றன.

நிகழ்ந்த செய்திகள், செயல்கள், எக்காலத்தும் நிலைத்து நிற்ப தோடு மக்களுக்கும் அரசுக்கும் நினைவு செய்வதாகவும் உறுதிப்பா டுடையதாகவும் இருக்கவேண்டும் என்ற ஏற்புடைய தீர்ப்பினாலேயே கற்களில் சாசனங்களைப் பொது நிலையமாகத் திகழ்ந்தகோயில் களில் பெரும்பான்மையும் பொறித்து வைத்தனர்.

மற்றும், இத்தகைய கல்வெட்டுச் சாசனங்கள், சூழலுக்கேற்ப குன்றுகளிலும், குன்றகக் குகை முகப்புக்களிலும், பாறைகளிலும் தனிக்கற்களிலும் பொறிக்கப்பட்டுள்ளன. நாட்டில் இதுவரையில் கிடைத்துள்ள கல்வெட்டுக்களிலும் செப்பேட்டுச் சாசனங்களிலும் கையாளப்பெற்றுள்ள எழுத்துவகைகள் பலவாகும். அவற்றுள்,

வட இந்தியாவில் அரசுபுரிந்த மௌரியப் பேரரசன் அசோகன் கல்வெட்டுக்கள், அப்பகுதியில் வழக்கிலிருந்த பிராம்மி என்ற எழுத்துமுறையில் பொறிக்கப்பட்டுள்ளன. வடபுலத்திலிருந்து தமிழகத்தில் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து பரவிய சமண பௌத்த சங்கத்துறவியர்கள் தங்கியிருந்த மலைக்குகைகளிலும் பாறைகளிலும் தங்கட்கு ஆதரவு செய்தாரின் அறச்செயல்களைக் குறிக்கும் பாங்கில் தாமறிந்த பிராம்மி எழுத்துக்களில் தமிழ்ச் சொற்களை ஆக்கிப் பொறித்துள்ளனர். அவ்வெழுத்துக்களை அறிஞர் 'தமிழ் பிராம்மி' என்று குறித்தனர். இத்தகைய பிராம்மி எழுத்து முறையினை முற்பட்ட சமண பௌத்த துறவியர்கள் கையாண்டனராயினும், அவர்களின் வழிவந்த முனிவர்கள், தமிழக வழக்கில் தெளிவாகத் திகழ்ந்த வட்டெழுத்துத் தமிழ் முறையினைக் கற்றுத்தேர்ந்து கல்வெட்டுகளில் பயன்படுத்தியுள்ளனர். இவ்வாறாகத் தமிழகத்தில் உள்ள கல்வெட்டுக்கள் கிருத்துவுக்கு முற்பட்ட காலத்திலிருந்து தமிழ்பிராம்மி வட்டெழுத்துத் தமிழ். தமிழ், கிரந்தம் என்ற வரிவடிவங்களில் தொடர்ந்ததாயினும் தமிழ் பிராம்மி வழக்கு சமண பௌத்த சமயத் தாழ்ச்சியுடன நின்றுவிட்டது.

பண்டைய தமிழ்வழக்கிலிருந்து தொடர்ந்த கண்ணெழுத்தாகும் வட்டெழுத்துடன் நாட்டில் தொடர்ந்த தமிழெழுத்து, வடமொழித் தேவைக்கேற்ப பல்லவமன்னர்கள் ஆட்சியில் படைத்துக் கொண்ட கிரந்த எழுத்துமுறை ஆகியவைகள் கல்வெட்டுவழக்கில் தனித்தும் கலந்தும் வழக்கில் இடம் பெற்றுள்ளதனை அறியலாகும். பல்லவர் காலத் தமிழ் எழுத்துமுறை பழைய வட்டெழுத்தின் தெளிவார்ந்த திருத்த வளர்ச்சி நிலையேயாகும்.

பல்லவர் ஆட்சிக்காலமாகிய கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதலாகத் தோன்றியுள்ள கல்வெட்டுக்களில் வட்டெழுத்து. தமிழ், கிரந்தம் ஆகிய எழுத்துக்களின் கலப்பு நிலையிலேயே சொற்கள் கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டுள்ளதாயினும், இக்காலத்திற்கு முற்பட்டதாகக் காணப்படும். செங்கம், தகடூர் நடுகல் கல்வெட்டுக்களில் தூய தமிழ் நடையில் வட்டெழுத்துக்களில் செய்திகள் பிழையின்றி பொறிக்கப்பட்டுள்ளமை கருதத்தக்கதாகும்.

தென்னிந்தியாவில் பல்லவர் பாண்டியர் சோழர் ஆட்சிக்கு உட்பட்டும், படையெடுப்புக்கு இலக்காகியும் இருந்த பகுதிகளில் வடக்கே நெல்லூர் முதலாகத் தெற்கே கன்னிகுமரி வரையிலமைந்த பண்டைத் தமிழக வரைப்பிடத்தில் பொறிக்கப்பட்டிருந்த கல்வெட்டுக்களையும், மன்னர்களால் வெளியிடப்பட்ட செப்பேட்டுச் சாசனங்களையும்

மேனாட்டு அறிஞரும் தமிழகத்து அறிஞரும் முயன்றுகண்டுபிடித்து ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்திலிருந்து அரசுவழியே தொகுதிகளாக அவ்வப்போது அச்சிட்டு வெளியிட்டுள்ளனர். இக்காலம் வரையில் அச்செயல் தொடர்ந்து 23 - தொகுதிகள் ஏறத்தாழ எண்பதாண்டு அளவில் வெளியிடப்பட்டுள்ளன.

இவ்வாறமைந்த கல்வெட்டுத் தொகுதிகளைக் கொண்டும், கல்வெட்டுத்துறையினரின் ஆண்டு அறிக்கைகளைக் கொண்டும் கல் வெட்டுச் செய்திகளைக் கொண்டும் அறிஞர்பலர் ஆய்வு செய்து தமிழக வரலாற்றினை வளர்த்துள்ளனர். இவ்வாறு சென்று காலங்களில் தமிழக வரலாற்றிற்கு அரும்பாடுபட்ட பேரறிஞரில், டாக்டர் ஹூல்சு, பேராசிரியர் பர்னல், திரு. வெங்கையா, கோபிநாதராயர், சீனிவாச அய்யங்கார், கனகராச ஐயர், நீலகண்ட சாத்திரியார், சதாசிவ பண்டாரத்தார் முதலிய சான்றோர்கள் குறிப்பிடத்தக்கவராவர்.

ஒரு நாட்டிற்குரிய தாய்மொழி வழக்கு வளர்ச்சியினை அறி தற்கு இலக்கண இலக்கியங்களே சான்றாதலன்றி, அந்நாட்டில் தோன்றியுள்ள கல்வெட்டுச் சாசனங்களும் சிறந்த சான்றாகவுள்ளன. இலக்கிய வழக்கில் காணவியலாத அரிய சொற்கள் மக்கள் வழக்கில் உள்ளன. அத்தகைய சொற்கள் கல்வெட்டுக்களில் அவ்வக்காலங் களில் இடம்பெற்றுள்ளன. இதுவரையில் வெளிவந்துள்ள தமிழ் அகராதிகளில் இடம்பெறாத சிறந்த கலைச்சொற்கள் கல்வெட்டுக் களில் மிகுதியாக இருக்கின்றன. கல்வெட்டுக்கள் தோன்றிய பகுதி களில் அவ்வக் காலங்களில் ஏட்டிலும் நாட்டிலும் ஆட்சியிலும் மக்கள் வழக்கிலும் நடைமுறையில் நிலவிய வட்டார வழக்குச் சொற்களும் காணப்படுகின்றன.

தமிழ் இலக்கண இலக்கியங்கள் கண்டுள்ள சொற்களுக்கு அகராதிகள் பல தோன்றியுள்ளன. இக்காலத்திலும் முயற்சிகள் நிகழ்கின்றன. ஆயினும் கல்வெட்டுக்களில் உள்ள சொற்களுக்குரிய நெறிமுறையில் அகரமுதலி தனித்திறனாக இதுவரையில் வெளியிடப் பெறவில்லை.

தமிழ்மொழிக்கு ஆக்கமாகும் இத்தகைய அரியபணியினை, மதுரை காமராசர் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் மதிப்புக் குரிய டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் 1980-இல் சிந்தித்துச் செயலாற்றும் வழியே, பல்கலைக் கழகத்தில் உருவான தமிழியல் புலத்தில் எனக்கு ஆய்வுப்பணி அளித்து, முதலாவதாகக் கல்வெட்டுக் கலைச் சொற்களாகத் தொகுத்து உரையெழுதி அகரமுதலியாக

உருவாக்கி அளிக்க ஆணையிட்டார்கள். அப்பணிப்பின்படியே கல்வெட்டு ஆய்வுப் பணியில் நாற்பது ஆண்டுகளாக நான் பெற்றிருந்த சிற்றறிவினாய அனுபவத்தினைக் கொண்டு இவ்வகர முதலி நூலினை. 5000 - சொற்களுக்கு மேலான கல்வெட்டுக் கலைச்சொற் களைத் தேர்ந்து எழுதி, வரிசைப்படுத்திச் சொற்பொருளையும் அவற்றிற்கான கல்வெட்டுத் தொடர்ச்சான்றும் பொருந்த அமைத்து ஓராண்டுக்கால அளவில் நிறைவு செய்து அளிக்கலானேன்.

அரசினரால் இதுவரையில் வெளியிடப்பட்டுள்ள தமிழ்க் கல் வெட்டுக்களிலும், தமிழகத்தில் எனது வரலாற்று ஆய்வுப் பணியின் போது ஆங்காங்கே புதிதாகக் கண்டுபிடிக்கப் பெற்ற கல்வெட்டுக் களிலும் உள்ள வழக்குச் சொற்கள் கருத்துச் சொற்கள், நுண்பொருள் சொற்கள், கிரந்தச் சொற்கள் ஆகியவைகளைத் தேர்ந்து பகுத்துத் தொகுப்பின் இலட்சம் சொற்களுக்கும் மேலானதாக அமையும்.

எனினும், கி பி. ஆறாம் நூற்றாண்டு முதல், கி.பி. பன்னிரண் டாம் நூற்றாண்டு நிறைவாகவமைந்த 700 - ஆண்டுகளுக்குரிய கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ள கலைச்சொற்களில் 5000- சொற்களுக்கு மேலாகத் தேர்ந்து அகரம் முதலாகத் தொகுத்து உரை, விளக்கம், கல்வெட்டுத் தொடர்ச்சான்று, இன்ன துறையைச் சார்ந்தது என்னும் குறிப்பு ஆகியவற்றுடன் உருவாக்கம் பெற்றதே இக் ''கல்வெட்டுக் கலைச்சொல் அகர முதலி'' என்னும் பெயரமைந்த நூலாகும். புதிய கல்வெட்டுக்களில் காணும் சொற்பொருள் நிலை களினால், முன்னர் எழுதியளித்தவுரைகளில் ஒரு சிலவற்றினுக்கு மேலும் தெளிவுரை தரவேண்டிய அமைதிக்கு ஏற்பச் சில சொற் களுக்குப் பிற்சேர்க்கையாகப் பொருளமைதி தரப்பட்டுளது.

இத்தகைய ''கல்வெட்டுக் கலைச்சொல் அகர முதலி'' பணியினை யான் செய்தற்குத் தமிழியல் புலத்தில் பணியளித்து ஆணை செய்த மதிப்புக்குரிய பெருந்தகை முன்னாள் துணைவேந்தர் டாக்டர் வ. சுப மாணிக்கம் அவர்கட்கும், தமிழியல் புலப்பணியில் மேலும் நான் தொடர்ந்து, 1. 'கரந்தைச் செப்பேடுகள்' - ஆய்வுரையுடன், 2. கல்வெட்டுக்களில் தமிழகச் சமுதாயவியல், 3. கண்ணகியார் அடிச் சுவட்டில், புகார் முதல் வஞ்சிவரை என்ற ஆராய்ச்சி நூல்களை எழுதி உருவாக்கித்தருதற்கு ஆதரவு செய்து ஊக்கமளித்த மதிப்புக் குரிய துணைவேந்தர் டாக்டர் ஜெ. இராமச்சந்திரன் அவர்கட்கும், இந்நாள் துணைவேந்தர் மதிப்புக்குரிய விஞ்ஞானப் பெருந்தகை டாக்டர் சீனி. கிருட்டிணசாமி அவர்கட்கும் எனது பணிவார்ந்த நன்றியுரித்தாகும்.

எனக்கமைந்த ஆய்வு நூல்கள் சிறப்புடன் அமைவதற்கான கருத்துக்களை அவ்வப்போது நேரிற் கண்டு அன்புடன் வழங்கி நெறிப் படுத்தியதோடு துணைநின்றருளிய அன்புப் பெருந்தகை பேராசிரியர் டாக்டர் இராம. பெரியகருப்பன் (தமிழண்ணல்) அவர்கட்கு எனது அன்பார்ந்த நன்றியுரித்தாகும்.

இடையறாது முயன்று தொடர்ந்து, கல்வெட்டுக் கலைச்சொல் அகர முதலியினை நூல் உருவாக்கி, கருத்தமைந்த அழகிய முகப்புடன் விளங்குமாறு செய்தளித்துள்ள பதிப்புத்துறைத் தலைவர் திருவாளர் அறிஞர் பேராசிரியர் டாக்டர் கதிர். மகாதேவன் அவர்கட்கு எனது அன்பமைந்த நன்றியுரித்தாகும்.

பொறுப்புடன் ஏற்று அச்சிட்டளித்த மதுரை அருட்பா அச்சகத்தார்க்கும், அச்சுப்படிகளில் தொடர்ந்து பிழைதிருத்தம் பார்த்தளித்த பேராசிரியர் டாக்டர் ச. சாம்பசிவன் அவர்கட்கும் எனது நன்றியுரித்தாகும்.

இங்ஙனம்,

சி. கோவிந்தராசன்

## கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி

(அடைப்புக் குறிக்குள் அடங்கிய எழுத்துக்களுக்கு விளக்கம்)

அ — அரசியல்

வ — வழக்கியல்

சம — சமயவியல்

சமு — சமுதாயவியல்

வே — வேளாணியல்

மொ — மொழியியல்

பொ — பொருளியல்

வா — வாணிப இயல்

கலை — கலையியல், கட்டடக் கலை, நுண்கலைகள், அணிகலன்கள்.



தமிழண்ணல்
**டாக்டர் இராம. பெரியகருப்பன்**
*தமிழியல் துறைத் தலைவர்*

மதுரை காமராசர் பல்கலைக்
கழகம், மதுரை-21

17-8-1987

# அணிந்துரை

கல்வெட்டுக்களில் நூற்றுக்கணக்காகக் கலைச் சொற்களும், குறியீட்டுச் சொற்களும், துறைச் சொற்களும் போல்வன ஆளப்பட்டு வந்துள்ளன. சிறுசிறு கல்வெட்டுத் தொகுப்பு நூல்களில் அவ்வக் கல்வெட்டுக்கான விளக்கங் களைத் தரும்பொழுது இச்சொற்களுக்கும் அறிஞர் பெருமக்கள் ஆங்காங்கு விளக்கம் தந்துள்ளனர். முதன் முறையாக ஐந்நூறு பக்கங்களில், ஏறத்தாழ மூவாயிரம் சொற் களுக்கு இந்நூலில் பொருள் விளக்கம் தரப் பட்டுள்ளது. சொல்லுக்கு விளக்கம் தருவதுடன் பெரும்பான்மையான சொற்களுக்கு வருமிட மும் கல்வெட்டு எண்ணும் தரப்பட்டுள்ளமை மிகவும் பயனுடையதாகும். ஒருசிலஇடங்களில் ஒப்புமைப் பகுதிகளும் மேற்கோளாகத் தரப் பட்டுள்ளன. கல்வெட்டு அறிஞர்க்கும், ஆராய்ச்சியாளர்க்கும் மற்றும் கல்வெட்டைக் கற்கின்றமாணவர்களுக்கும் இந்நூல் பெருந் துணையாக அமையும். கல்வெட்டறிஞர் சி. கோவிந்தராசனார் இவ்வரிய பணியினைச் செவ்வனே செய்துள்ளார். இத்தகையதொரு

நூலினை முதன் முறையாகக் கொண்டு வந்துள்ள மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தைத் தமிழ்மக்கள் கருத்தில் கொண்டு போற்றுவர் எனக் கருதுகிறேன். இத்துறையில் மேன்மேலும் ஊக்கம் தந்து, போற்றிப் புரந்தருகின்ற துணைவேந்தர், முனைவர் சீனி. கிருட்டிணசாமி அவர்களுக்கும் மற்றும் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினர்க்கும் தமிழியல் துறை, தமிழியற்புலத்தின் நன்றி என்றும் உரியதாகும்.

இந்நூல் வெளிவருவதற்கு மிகவும் முயன்று, நன்முறையில் கொணரத் துணை நின்ற பதிப்புத்துறையினரும், பதிப்புத்துறை அலுவலர் முனைவர் மேசர் கதிர் மகாதேவன் அவர்களும் பாராட்டுக்குரியர் என்பது இவண் குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழண்ணல்

**அக்கசாலை :** (அ) அரசு வெளியிடும் பொன், வெள்ளி, செப்பு ஆகிய உலோகங்களாலான நாணயங்களை அளவு, வடிவு, தரம், எடை ஆகியவற்றில் குறையாமல் அமைத்து, அரச இலச்சினை ஒருபுறமும் நாணய மதிப்புக் குறி மறுபுறமும் அமையுமாறு முத்திரையிடும் தொழிற்சாலை.

*"கொற்கையான மதுரோதயநல்லூர் அக்கசாலை ஈஸ்வர முடையார்"*

(*கொற்கை — விநாயகர்கோயில் கல்வெட்டு*)

**அக்கசாலைவரி :** (அ) நாணயங்களை அச்சிடுவதற்காக அமைந்த தொழிற்சாலைக்குரிய வகையில் அரசு மக்களிடம் பெறும் வரி.

**அக்கம் :** (அ) காசுக்குக்கீழ் பின்ன நாணயமாக வழங்கப்பட்ட நாணயம். தமிழகத்தில் பல்லவர் ஆட்சிக்காலம் முதலாக வழக்கிலிருந்த நாணயம். முதல் பராந்தகன் காலத்தில் இவ்வக்கம் புத்தக்கம் என்ற பெயரால் வழங்கப்பட்டுள்ளது.

வேந்தர்களின் ஆட்சிக்காலத்தில் பொருளாதார நிலைக்கு ஏற்ப அக்கத்தின் மதிப்பும் காலந்தோறும் மாறுபட்டுவந்துள்ளது. 12-அக்கம் ஒரு காசாகவும், 8-அக்கம் ஒரு காசாகவும் 6-அக்கம் ஒரு காசாகவும் கல்வெட்டுக்களில் மதிக்கப்பட்டுள்ளது.

*"ஒரு ஈழக்காசுக்குப் புத்தக்கம் ஏழரைஆக ஈழக்காசு ஆறு"*

(*முதல் பராந்தகன்-தெ. கல். தொ. 3:3, கல். 106*)

*"காசு ஒன்றுக்கு அக்கம் பன்னிரண்டாக்கி வந்த பொலிசைக்காசு முன்றேமுக்காலுக்கு வைத்த காசு முப்பது"*

(*முதல் இராசராசன் — கி.பி. 1014, தெ. கல். தொ. 2:2, கல். 24*)

*"காசு ஒன்றுக்கு அக்கம் எட்டாக காசு ஒன்றுக்கு நெல் ஏழு கலமாக" (முதல் இராசராசன், தெ. கல். தொ.5, கல். 724)*

*"காசு ஒன்றினால் ஆடு மூன்றும் — அக்கம் இரண்டினால் ஆடு ஒன்றும் ஆக" (6 — அக்கம் = 1 காசு)*

(*முதல் இராசராசன், தெ. கல். தொ. 2, கல். 64*)

முதலீடுகளுக்கு அமைந்த வட்டித்தொகை, பொருள்களுக்கு விதிக்கப்பட்ட நாணய மதிப்பீடு, கால்நடைகளுக்கு அமைந்த விலை ஆகிய இனங்களுக்கு ஏற்ப அக்க மதிப்பீடுகளும்நாட்டுப் பொருளாதார அடிப்படையில் மாற்றம் பெற்றிருப்பதைக் கல்வெட்டுச் செய்திகள் புலப்படுத்துகின்றன. முதல் பராந்தக சோழன் ஆட்சியில் இவ்வக்கம், ஈழக்காசு என்றும் தென் காசின் பின்னநாணயமாகவும், புத்தக்கம் என்ற பெயராலும், ஏழரை புத்தக்கத்திற்குஒரு காசெனும் மதிப்பீட்டாலும் வழங்கப் பட்டுள்ளது.

**அஃகம் :** (பொ) மதிப்படங்கியது ஈடாக அமைந்தது.

*''ஒரு காசுக்கு நிறைமதி நாராயத்தால் பதின்கல நெல்ல ஃகமாக''*
(தெ. கல். தொ. XIV கல் — 13)

**அக்கன் :** (வ) தமக்கையாரைக் குறிக்கும் முறைப்பெயர். முதல் இராசராசன் தன் தமக்கையார் குந்தவைப் பிராட்டியாரை அக்கன் எனக் குறித்துள்ளான்.

*''பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி ஸ்ரீராஜராஜீச்வர. முடையார்க்கு நாங்குடுத்தனவும் அக்கன் குடுத்தனவும்''*
(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு,தெ. கல். தொ. 2 கல் 1)

**அக்காரவடிசில் :** (பொ) (அக்கார் அடலை) சர்க்கரைப் பொங்கல்

*''திருவநந்தேஸ்வரத்து பட்டாரகரை சந்திராதித்தவற் நியதம் அக்காரவடியல்லமுது செய்வதற்கு''*

*''அக்காரடலைக்கு நீக்கி நின்ற நிலன்''*

(தெ. கல். தொ. 19, கல் -60

**அக்காளி :** (பொ) கற்கண்டுச் சாதம் (நிவேதப் பிரசாதம்) அக்காளிதம் என்றும் பெயர் பெறும்.

**அக்கிரசாலை :** (சம) பிராமணர்க்கு நாளும் தர்மமாக உணவளிக்கும் சத்திரம் (சாலை—உணவுஅறச்சாலை)

**அக்ரமகாதேவி :** (அ) அரசியருள் முதல் மரியாதைக் குரியவள் பட்டத்தரசி.

*"உடையார் உத்தமசோழர் அக்ரமஹா தேவியார் ஒறட்டணன் சோரப்பையார்"*

*(தெ. கல். தொ. 19, கல். 141)*

**அக்ரமண்டபம் :** (சம) கோயிலின் முன்மண்டபம். முகமண்டபமென்றும் கூறுவர். அக்ரதானமாக பிராமணர் உணவு பெறும் மண்டபம்.

**அகச்சுற்று :** (கலை) கோயில் கருவறையைச் சூழ்ந்த திருச்சுற்றாலை (முதற் பிரகாரம்)

**அகநாழிகை :** (கலை) இறையகம். கருவறை.

*"சந்திராதித்தவல் அகநாழிகையிலே முன்று விளக்குமெரிவதாக வைத்தேன்"* (தெ. கல். தொ. 5, கல். 534)

**அகநாழிகைச்சென்னடை :** (சம) கோயிலில் சுவாமிக்கு நாளும் முறையாக நிகழும் வழிபாட்டுச் செலவினங்கள்.

*(செல் நடை — நாளும் நிகழும் நடைமுறைகள்)*

**அகநாழிகைப்பணி :** (சம) கோயில் இறையகத்திற்குரிய பல்வேறுபட்ட வழிபாட்டுப்பணி. அர்ச்சகர் நிகழ்த்தும் வழிபாட்டு நிகழ்ச்சிகள்.

**அகநாழிகையார் :** (சம) கருவறையில் வழிபாடு செய்யும் பஞ்ச ஆசாரமுடைய சிவாச்சாரியர்கள். அர்ச்சகர்கள். ஆதிசைவர்கள்.

*"இத்தளி முட்டாமலெரிப்போமாயினோம் இத்தளிபணி செய்யும் அகநாழிகையோம்",*

*(தெ. கல். தொ. 14, கல். 59,60.)*

*"இத்திருக்கோயில் திருவாராதனைப் பண்ணும் அகநாழிகையோம்"* (தெ. கல். தொ. XIV. கல் - 140.)

**அகப்பட :** (வ) உள்படுத்த; உள்ளடங்கியதாக; எல்லா உரிமைகளையும் சாசனத்தில் உள்படுத்தி எழுதி.

*"பாகமும் பாகாஸ்ரயமும் மற்றும் எப்பேற்பட்ட உரிமைகளும் அகப்பட விற்றுக் குடுத்த இந்நிலத்துக்கு இதுவே விலை யாவதாகவும்"*

(தெ. கல். தொ. 8, கல். 265)

*"இன்னாற்பாலெல்லைக்குள்ளும் நடுவு கிணறு அகப்பட சடையன் செறுவு தடிஇரண்டினால்"* (தெ. கல். தொ. 8, கல். 16)

**அகப்பட்ட நிலம் :** (வ) நான்கு எல்லைகட்குள் அடங்கியவற்றைப் பற்றி விளக்கமாக எழுதப்பெற்ற நிலம். விற்கப்பட்ட அல்லது இறையிலி செய்யப்பெற்ற நிலங்களைப்பற்றி ஆவணக்களரியில் எழுதப் பெறும் சாசனத்தில் அந்நிலப்பரப்பினுள் இயற்கையும் செயற்கையுமாக அமைந்த அமைப்பினை விளக்கமாக எழுதுதல் சாசன வழக்கு.

*"இவ்விசைந்த பெருநான்கெல்லையுள்ளகப்பட்ட நிலம் வளையிற் சுற்றுமுற்றும் உண்ணில மொழிவின்றியே, நீர் நிலமும் புன்செயும் மென்செயும் கிணறும் குளமும் கொட்டகாரமும் மன்றும் கன்று மேய்ப் பாழும் புற்றும் தெற்றியும் சுடுகாடும் உட்பட மற்றுமெப்பேர்ப்பட்ட நிலமும், இந்நிலமெழுந்த மரமும் மரப்பயனும் மற்றுமுடும்போடியாமை தவழ்ந்ததெப்பேர்ப் பட்டதும்"*

(தெ. கல். தொ. 5, கல். 679. முதல்இராசராசன், கி.பி. 991)

**அகப்படி :** (அ) உள்ளடங்கிய நிலக்கணக்குப்படி.

*"திருநாமத்துக்காணியில் அகப்படி நிலத்துக்கு கோயிற்கணக்கு ஆதலூருடையான் எழுத்திட்ட கணக்குப்படி"*

(தெ. கல். தொ. 5, கல். 708)

**அகப்பரிவாரம் :** (அ) அரண்மனையில் பணிசெய்யும் அதிகாரிகளுள்ளிட்ட குழுவினர்; அந்தரங்கப் பணியாளர்கள்.

*"நம்பிராட்டியார் நேரியன் மாதேவியார் அகப்பரிவாரத்து கைக்கோளன் சோறுடையான்"*

(தெ. கல். தொ. 5, கல். 700)

**அகப்பொதுவாள் :** (சம)கோயிலுக்குரிய செல்வங்களை நிர்வாகம் செய்பவர்.

*"தேவகணத்தார்" என்றும் பெயர் கூறப்பெறும் பெருமக்கள்.*

**அகம்படி :** (அ) அந்தப்புறம். அரண்மனையில் சிறந்த பகுதி. அரண்மனை நிர்வாக உள்துறை.

**அகம்படிஉடையான் :** (அ) அந்தப்புற நிர்வாகப் பணியாளர் அதிகாரி.

*"அகம்படி மறமுதலிகள்".*

**அகம்படித் தனமுதலிகள் :** (அ) அரசன்வாழ் அரண்மனையிலும் அமைச்சர், சேனைத் தலைவர் போன்ற பெருமக்கள் வாழ் இல்லத்திலும், அவ்வவர்க்கு அணுக்கப் பணி செய்வாருள் முதன்மையானவர்.

*"அரசுருடையான் செங்கனிவாயன் சோழ கோனார் அகம் படித்தன முதலிகளில்".*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 118)

**அகம்படிப்பெண்டுகள் :** (அ) அந்தப்புரத்தில் பணிபுரியும் பெண்கள் பேரரசர்க்கு உற்றவராகவுள்ள அரசவுரிமை மகளிரல்லாத காதற் கிழத்திகள்.

*'நம் பெண்டுகள் கொடுத்தனவும்" (முதல் இராசராசன், கி.பி. 1014 தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)*

**அகம்படிமறமுதலிகள் :** (அ) படைவீரர்களாய் அரண்மனையிலிருந்து அரச ஊழியம் செய்வாருள் முதன்மையானவர்கள். இவர்கள் "அகம்படி சேனை முதலிகள் என்றும் பெறுவர்"

*"பல்லவந் கோப்பெருஞ்சிங்கந் அகம்படி முதலிகளில் எதிரிக ணாயகந் பொத்தப்பிச் சோழன்"*

(தெ. கல். தொ. 7, கல். 149)

*குலோத்துங்க சோழக் கடம்பராயந் அகம்படி மற முதலிகளில் நாற்றன் பெரியானான வீரம் அழகிய பல்லவரையன்"*

(புதுக்.கல். 181)

**அகம்படிமை :** (அ) அந்தப்புறத்திற்கான பணியாளர். அகம்படிமைத் தொழில்.

**அகம்படியார் :** (அ) அரண்மனை மேல்நிலைப் பணியாளர்.

**அகமண்டபம் :** (கலை) திருக்கோயிலமைப்பில் கருவறையோடு சேர்ந்தாற்போல் முன்புறம் அமைக்கப்பெறும் மண்டபம்.

**அகமனை :** (வே) விளைநிலத்தின் உட்பகுதியில் மேடான பகுதியில் அமைக்கப்பெற்ற வீடு.

*"தங்கள் காணியான அகமனைப் புழக்கடையில்"*

*(தெ. கல். தொ. 17. . கல் 560)*

**அகமார்க்கம் :** (கலை) கோயில்களில் ஆடப்பெறும் கூத்தின் ஒரு வகை. அகச்சுவைபற்றி நிகழுங் கூத்து.

**அகமியாகமனம் :** பொதுமகளைப் புணர்ந்த செயல் (அகம்மியை-பொதுமகள்)

*"அகமியாகமனம் செய்து ப்ராயசித்தஞ் செய்து சுத்தரானாரையும் (உத்தரமேரூர் கல்வெட்டு, கி.பி. 921)*

**அகமுடையாள் :** (வ) இல்லக்கிழத்தி. மனைவி.
*"பூமி சுந்தரந் கண்ணாளந்தேவந் அகமுடையாள் பூங்கமலச் செல்வி"*

*(விக்கிரமசோழன் கி.பி. 1125, தெ. கல். தொ.7,. கல் 416)*

**அகரப்பற்று :** (சமு) அரசர்களால் இறையிலியாக மனையளிக்கப் பெற்றுக் குடியேறிய பிராமணர்கட்கு இறையிலியாக அளிக்கப் பெற்ற விளைநிலம். இது "பிர்ம்மதேயம்" என்றும் கூறப்பெறும்.

**அகரப்பிர்ம்மதேயம் :** (சமு) பிராமணர் குடியிருப்புக்காகப் பெரும்பாலும் இறைவரி இன்றி விடப்பெற்ற கிராமம். ஊர்ச்சபையையும் குறிக்கும்.

*"பிர்ம்மதேயக் கிழவர்"*

**அகரம் :** (சமு) பார்ப்பனச் சேரி. தமிழக மன்னர்கள், சமயச் சார்பில் வெளிநாட்டிலிருந்து வேதப் பிராமணர்களைக் குடியேற்றி வாழ வைத்த ஊர்ப்பகுதி. (நத்தம்) வேதப் பிராமணர்கள் அகரத்தில் சேர்ந்து தனித்து வாழ்ந்ததினால் "பார்ப்பனச்சேரி" என்றும் பெயர் பெறும்.

"இத்தேவர் மேலைத் திருவீதிக்கு மேற்காக நத்தமாகக் கொண்டு இருமாவும் தூய பெருமாள் சதுர்வேதி மங்கலப் பேரால் ஏற்றின அகரத்துப் பிராமணர்கட்கும்"

(தெ. கல். தொ. 5. கல். 708)

"இந்நாயனார் திருநாள் அஞ்சுக்கும் யாக மண்டபத்திலே அத்யயனம பண்ண, இவ்வூர்த்திருப்புவனவாயலில் அகரம் வைக்கையால் இவ்வாரத்திலிருந்த பிராமணர் அத்யயனம் பண்ணக்கடவதாகவும் இந்நிலங்களும் மனைகளும் இவற்குக் குடுத்தபடி"

(தெ. கல். தொ. 8. கல். 213)

"ஊர் நத்தத்து சிவபிராமணர் குடியிருப்புமனை இரண்டும்"

(தெ. கல். தொ. 4. கல். 424)

**அகழி :** (அ) நிலத்தை அகழ்ந்து ஆக்கப்படும் நெடும்பள்ளம். கோட்டை மதிலைச் சூழ்ந்திருக்கும் பாங்கில் புறத்தே அமைக்கப் பெறும் நீர் நிறைந்த நெடும் பள்ளம். இதில் பகைவர்க்குப் பகையாகக் கொடிய முதலைகள் வளர்க்கப் பெறுதல் வழக்கம்.

**அகழி திருத்துதல் :** (வே) விளை நிலங்களைச் சார்ந்த பள்ளங்களைத் தூர்த்து நிலத்தோடு சமமாக்குதல்.

**அகிதம் :** (வ) (அகுதம்) கேடு, இடையூறு, அழிவு, தீங்கு, மறைத்துக் கொள்ளல், உள்ளதை இல்லை எனல். இச்சொல் கல்வெட்டுக்களின் இறுதியில் உரைக்கப்பெறும் காப்புரையில் வழங்கப் பெறுகின்றது.

"இதுக்கு அகுதம் செயிதவன் கங்கைக்கரையில் காராம்பசுவைக் கொன்ற பாவத்தே போவது".

(தெ. கல். தொ. 5 கல் 258)

"இந்த தர்மத்துக்கு யாதொருவர் அகிதம் நினைத்தவன் திருவேங்கடமுடையானுக்கு துரோகியுமாகி தன்னுடைய மாதா பிதாவையும் தன்னுடைய குருவையும் கங்கைக்கரையிலே வதைத்த தோஷத்திலே போகக் கடவனாகவும்"
(தெ. கல். தொ. 17 கல் - 263)

**அகை வாய்க்கால் :** (வே) பெரிய வாய்க்காலிலிருந்து நிலங்கட்குத் தண்ணீர் பாயும் முறையில் பிரிக்கப்பட்ட சிறு வாய்க்கால். அகைத்தல்-பிரித்தல்.

**அகோரவனம் :** (வே) பாழடைந்த நிலப்பகுதி, தரிசு நிலமாகவும் பொருள் பெறும்.

**அங்கசாலை :** (கலை) நடனசாலை, நாடகம் நிகழ்த்துதற்கேற்ற அங்கங்களுடன் அமைக்கப்பெறுதலால் இப்பெயர் பெற்றது.

*"தூநெறி மரபின் அரங்கம்"*

*(சிலம்பு-அரங்கேற்றுக்காதை வரி - 99)*

**அங்க தேவதை :** (சம) கோயில் கருவறையின் வெளிப்புறம் திருச்சுற்றிடங்களில் அமைக்கப்பெறும் கோட்டங்களில் எழுந்தருளப் பெற்றுள்ள தெய்வங்கள்.

**அங்கம் :** (சம) கோயிலின் பகுதி. தேவ கோஷ்டம்-தெய்வ மூர்த்தங்களின் திருமேனிகளை நிறுவும் மாடப்புரை.

**அங்கரங்க வைபவம் :** (சம) திரு மேனியின் அங்கங்கள் அணிகலன்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கும் காட்சி.

**அங்க ரக்ஷகன் :** (அ) அரசனின் மெய்க்காவலன் (ரக்ஷகன் - பாது காப்பாளன்.)

**அங்காடிக் கூலி :** (அ) கடைவீதியில் நாளும் சிறுவியாபாரம் செய்பவரிடம் பெறும் வரி.

*"எங்களூர் கடைத்தெருவில் அங்காடிக கூலியாவது புறவூர் நின்று நெல்லும் அரிசியும் மற்றும் அளப்பின கொடுவந்து விற்றாரைக் காசின் வாய்நாழி கொள்ளப் பெறுவதாகவும்"*

*(தெ. கல். தொ. 3 : 3 - கல்-90)*

**அங்காடிகள் :** (வா) சிறு வணிகர்கள். நாளங்காடி, அல்லங்காடி என இருபொழுதும் பண்டங்கள் விற்பனை செய்யும் வணிகரே அங்காடிகள் எனக்கூறப்பெற்றனர்.

*"உடையார் ராஜராஜ தேவர் ஆலையத்துப் பிள்ளையார் கணபதியார்க்கு வாழைப்பழம் அமுதுசெய்தருள உடையார் பண்டாரத்து பொலிசையூட்டுக்கு. வைத்தருளின இக்காசு, பொலிசையூட்டுக்கு கொண்ட அங்காடிகளும், கல்லில் வெட்டியது.*

*(தெ. கல் தொ. - 2 : 2 - கல் - 37)*

**அங்காடிப் பாட்டம் :** (அ) வீதிகளில் நாள்தோறும் அவ்வப்போது விலைபோகும் பண்டங்களையும், பொருட்களையும், விற்பனை செய்வார்களிடம் பொருள் மதிப்பீட்டிற்கேற்ப அரசு பெறும் வரி.

**அங்காடி மாற்றுத்தண்டம் :** (அ) நாள்தோறும் இருந்து விற்பனை செய்யும் இடத்தை, அங்காடிகள் மாற்றினால் அதற்கு அரசு விதிக்கும் அபராதம்.

*"இவ்வூரில் வெற்றிலை விற்பார் பிடாரி கோயிலன்றி விற்றாரை, ஏரிவாரியப் பெருமக்களே ஏரிக்கு முதலாக கழஞ்சு பொன் தண்டது கொள்ளப் பெறுவாராகவும்"*

*(தெ கல். தொ.3 : கல்-6)*

**அச்சஞ்சு பழங்காசு :-** (அ) ஐந்து புள்ளியிட்ட அச்சுடன் கூடிய பழைய பொற்காசு. தென்பாண்டிநாட்டில், கி. பி. 8 முதல் 12 நூற்றாண்டு வரையில் வழக்கிலிருந்த பொற்காசாகும்.

**அச்சு :-** (அ) நிலத்தின் தரத்திற்கேற்ப விதிக்கப்பட்ட வரிக்காசு.

*"இவர் விலை கொண்ட நிலத்துக்கு நாடீந்த மரியாதி உள்ள அச்சும்"*

*(தெ. கல் .தொ . 8- கல்-411)*

**அச்சுத்தறி :-** (அ) நெய்த ஆடைகளில் வண்ண அச்சிடும் ஒரு வகைத் தறிக்குரிய வரியின் பெயர்.

*"நெல்லாயமும் காசாயமும் — சாலிகர் அச்சுத்தறி, கோலியத் தறி இனவரி உள்ளிட்ட கடமைகளும்"*

*தெ.கல் தொ.VII-கல்- 98)*

**அசல்நிலம் :-** (வேளா) நன்செய்யாகவே இருந்துவரும் மண்வளம் நிறைந்த விளைநிலம்.

*"தேவர் கடமைக்கு அசல் நிலம் வரிசைப்படி"*
*(விக்கிரம சோழன் கல்வெட்டு)*

*(தெ. கல். தொ. 5-கல்-694)*

**அஞ்சடுத்து விளக்கின திண்மணி வடம் :-** (கலை) திரட்சியாக அமைந்த ஐந்து வகையான இரத்தினங்களை வரிசையாகவும் அம்முறையே அடுத்தடுத்தும் கோக்கப்பட்ட மணிவடம் (மார்பணி).

**அஞ்சஷ்டகத்துர்சபை :-** (அ) கிராமமகாசபையின் உட்பிரிவாகிய வாரியங்களில் ஐவராகவும், எண்மராகவும் உறுப்பினர் அமைந்து செயல்படும் உட்சபை.

**அஞ்சாலி :-** (அ) நெல்வயல்கட்கு அரசுபெறும் பொதுவரி

**அஞ்சிரண்டு வண்ணம்** :- (வ) ஐந்து அளவு நெல்லைக் குற்றித் தூயதாகப் பெறும் இரண்டு அளவு அரிசி (வண்ணம்-வகை).

*"நாள் ஒன்றினுக்கு திருவமுதரிசி குறுணியினால் அஞ்சிரண்டு வண்ணத்தால் நெல்லு பதக்கு நாநாழியும்"*

*(தெ. கல். தொ. 8-கல்.66)*

**அஞ்சினான் புகலிடம்** :- (சமு) வாழ்வில் அச்சமுற்றான் பாதுகாப்புப் பெறுமிடம். அடைக்கலம் புகும் இடம்.
(சமணர் தங்கியிருந்த பாழிகள் இப்பெயர் பெற்றன.)
(வீரசிகாமணி-பாழிக்கல்வெட்டு.)

**அஞ்சு பஞ்சாலத்தர்** :- (வ) பஞ்சகர்மாளர். பொன், வெள்ளி, செம்பு, வெங்கலம், இரும்பு ஆகிய ஐந்து உலோகத்திலும் கம் மத்தொழில் செய்பவர். கம்மாளர்

**அஞ்சுமேனி இறுப்பதாகவும்** :- (வ) மாவுக்கு ஐந்துமேனி கொடுப் பதாகவும், ஒருமா விளைவிற்கு ஐந்து மரக்கால் வீதம் கொடுப் பதாகவும் என்று கொள்ளலாம்.
(மேனி-வீதம்)
(புதுக்கோட்டை கல்வெட்டுத் தொகுதி. கல். 260)

**அஞ்ஞாங் கண்ணாறு** :- (வே) ஐந்தாவது கன்னி வாய்க்கால்.
(தெ.கல்.தொ,12 கல்-228)

**அஞ்ஞாழிக் கால்** :- (வ) (ஐந்து நாழிக்கால்), ஐந்து நாழி அளவு கொண்ட மரக்கால்.

**அட்டவணை** :- (அ) அரசாங்கத்து வருவாயான நிலத்தீர்வை, பிற வரிகள் ஆகியவற்றை நிர்ணயித்து வசூலிக்கும் பிரிவு வசூலிக் கும் அதிகாரி.
(இப்பதவி நாயக்கமன்னர் ஆட்சியில் சிறப்பாக அமைந்துள்ள தைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

**அட்டவித பத்திக்கிரியை** :- (சம) எட்டுவகை பத்திச் செயல்கள். 1. பூசனை 2 வணக்கம் 3. தியானம். 4. திருவடி தொழுதல் 5. தவம் 6. வலம்வருதல் 7. சக்யம் 8. மனத்தால் வழிபடல் என்பனவாம். வடநூலார்: அர்ச்சனை, வந்தனம், ஸ்மரணம், பாத சேவை, ஸ்தவம்,பிரதக்ஷிணம், சக்யம், ஆத்ம நிவேதனம்-என்பர்.

**அட்டவிதார்ச்சனை** :- (சம) எட்டுவகையால் நிகழ்த்தும் இறைவழி பாடு. அவை : 1. நீர். 2. வாசனைப் பொருள். 3. மலர்.

4. தானியம். 5. நறுமணம். 6. திருவிளக்கு. 7. தூயணவு. 8. தாம்பூலம்.

**அட்டழிதல் :-** (சம) சமைத்துக் கொடுத்ததினால் குறைதல் (அட்டு அழிதல்)

*"திருவாதிரை நான்று அட்டழிய வைத்த அரிசி இருநூற்று நாழி நூற்றுவர்க்கு".*

(தெ. கல். தொ. 12 பகு. 1, கல்-46)

**அட்டிக்கிடத்தல் :-** (வே) பெருநிலப்பரப்பு சேர்ந்தாற்போல் பிரிக்கப் பட்டிருத்தல்.

*"நூற்றுக்காலாக அட்டிக்கிடந்த நிலத்தின் சிறுவரம்புக்கு வடக்கும்"*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**அட்டிக்குடுத்தல் :-** (பொ) சேர்த்துக் கொடுத்தல். மூலதனத்தோடு சேர்த்துக்கொடுத்தல்.

**அட்டி முட்டி :-** (வ) (அட்டில் முட்டில்) உணவிடல் தட்டுப்படல். நிவேதன உணவு தடைபடல்.

*"அட்டிமுட்டியதனாற்க் காற்பலிசை ஏற்றி"*

(தெ. கல். தொ. 12 பகு. 1. கல், 2)

*"குலங்கிழார்கள் கருமாரச் சேரிப்புலம் ஒற்றியிட்டு நாற்பத்தைங் காடி நெல் பொலியூட்ட திருவடிகட்கு திருவமிர்து முட்ட"*

(கல்வெட்டுத்துறை அறிக்கை-தொ. VIII. கல். 29)

**அட்டிமுதல் :-** (பொ) நிவேதனத்திற்கு அல்லது உணவு தானத்திற்கு அமைத்த முதலீடு.

**அட்டிப்பேறு :-** (வ) நீர் அட்டிக்கொடுத்தல், நீர்வார்த்து தானம் செய்யப்பட்ட கட்டளை. நிலம்.

**அட்டிற்பேறு :-** (சம) மடைப்பள்ளிக் கட்டளை. கோயில் மடைப் பள்ளிப் பணியாளர்க்குரிய பிரசாத நிவந்தம். பிரசாதக் கட்டளை யாகவும் பொருள் பெறும்.

*"கொடைக்கடன் ஏற்ற கோடா நெஞ்சின் உதியன் அட்டில் போல"* (அகம். 168 : 7, 8)

**அட்டுக்கிறை :-** (அ) தர்மத்துக்கு அளிக்கப்படுவனவற்றிற்கு விதிக் கப்பெறும் வரி.

**அட்டுதல்** - (வ) ஊற்றுதல் நீர்நிறைத்தல், (சமைத்தல்)

*"ஸ்ரீ கோயிலில் தண்ணீர் அட்டுவதாக வைத்த பொன்"*
*(தெ. கல். தொ. 12-கல்-108)*

**அடக்கிராவி** :- (வே) நெல்வகைகளில் ஒன்று

**அடக்கிலும் வீரிவிலும் கொள்ளும்**

**கடமை** :- (அ) ஊர்க்கணக்கிலும் நாட்டுக்கணக்கிலும் உள்ளபடி அரசு பெற்றுக் கொள்ளும் வரி.

**அடங்கலாக** :- (வ) உள்ளடங்கியதாக; விற்கப்படும் அல்லது நிவந்தம் செய்யப்பெறும் நிலங்களின் எல்லைகட்கு உட்பட்டன வாகிய மரங்கள் தெற்றிகள் நீரோடுங் கால்கள் யாவையும் உள்ளடங்கலாக சாசனத்தில் எழுதுதல் வழக்காகும். சில சாசனங் களில் வரிவகைகளும் அடங்கலுள் குறிக்கப்பெறுதல் வழக்கு.
(புதுக். கல். 63)

**அடர்ந்தேற்றம்** :- (அ) மொத்தமாக நிர்ணயிக்கப்பெற்ற கூடுதல் வரி.

**அடவிமார்** :- (சமு) அடவு செய்வார், நூல் இழை அடைவு செய்து தருபவர்கள். கைக்கோளருள் ஒரு பிரிவினர்.

**அடவிற்பாச்சி** :- (மொ) அடவியிற் பாய்ச்சி, (பகைவரின் சேனையை) காட்டிற்குள் ஓட்டி

*"அப்பெருஞ் சேனையை அடவிற்பாச்சி"*

*(வீரராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)*

**அடவோலை** :- (அ) அடமானச் சீட்டு இப்பெயர்ச்சொல் கல் வெட்டுக்களில் அடையோலை என்றும் குறிக்கப் பெறுகின்றது.

**அடிக்காசு** :- (அ) சந்தைகூடும் போது வியாபாரிகளிடமிருந்து வசூலிக்கப்பெறும் அடி இடத்திற்கான வரிக்காசு

**அடிகள்மார்** :- (சம) திருக்கோயில்களில் ஆடல் பாடல் நிகழ்த்தும் தளிச்சேரிப் பெண்டிர்.

**அடிமைக்காசு** :- (அ) ஊழியர்களிடம் வசூலிக்கும் வரிக்காசு.

**அடியாள்** :- (சமு) பணிப்பெண். செல்வர்கள், அரசியல் தலைவர்கள் ஆகியோர் இல்லங்களில் நிலையாக இருந்து ஏவினை செய்யும் மகளிர்.

**அடியுறை :-** (வ) பாதகாணிக்கை, சமயச்சார்பில் தலைமையாளராக விளங்கும் ஆச்சாரியர் போன்றார்க்கு மக்கள் பரிவுடனளிக்கும் அன்பளிப்பு.

**அடுக்களைப்புறம் :-** (சம) கோயில் ஊழியர்க்கு நித்திய உணவுக்குரிய வருவாயாக அளிக்கப்பெறும் இறையிலி நிலம். கோயில் ஊழியர் மடைப்பள்ளியிற் பெறும் உணவுக்குரியதாக நிறுவப்பெறும் இறையிலி நிலம்.

*"பூப் பறித்து கொடுத்து நமக்கு அத்தசாமம் ஸாஸ்வதியாக இருந்து தேவையிறுக்க தனக்கு ஜீவனத்துக்கு நம் அடுக்களைப் புறம் ஒரு மாவும்"*

(தெ. கல். தொ. 5. கல்-435)

**அடுக்களைப்பெண்டுகள் :-** (சம) கோயில் சமையலறையாகும் மடைப் பள்ளியில் பணிபுரியும் பெண்டுகள். (தேவரடியார்கள்)

*"உய்யக் கொண்டார் வளநாட்டுப் பாம்பூர் நாட்டு உடையார் திருநாகீஸ்வரமுடையார் கோயிற் அடுக்களைப் பெண்டுகளில் முப்பு உய்ய வந்தாள் இராஜவிச்சாதிரி"*

(தெ.கல்.தொ.6.கல்-34).

**அடுத்தமுறை கடவார் :-** (சம) அடுத்த நெருங்கிய உறவுமுறையார். நிலைத்த பணியினை ஏற்றுச் செய்தார்க்கு அடுத்த வாரிசாக அப்பணியினை மேற்கொள்ளுதற்குரிய தகுதியும் உரிமை முறையும் பெற்றவர்.

*"திருப்பதியம் விண்ணப்பம் செய்யவும் அவ்வவர்க்கு அடுத்தமுறை கடவார் தாந்தாம் யோக்யர் அல்லாதுவிடின் யோக்யராயிருப்பாரை ஆளிட்டுத் திருப்பதியம் விண்ணப்பம் செய்யவும்-"*

(தெ.கல்.தொ,2:3.கல்-65)

**அடுதூசிமுன்விட்டு :-** (அ) பகைவரைக் கொல்லும் காலாட்படையை முன்னே செலுத்தி.

(தூசி - காலாள்படை)

(வீரராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**அடை :-** (அ) நிலக்குத்தகை. வருவாய்க்குரியதாக ஒப்படைக்கும் நிலம்.

*"இந்நிலம், இவ்வூர் அடைகொண்டானே
இந்நிலமுழுது பயிர் ஏற்றி முற்றூட்டும்
கொண்டுவேந்து திருமுற்றத்திலே அளப்பதாகவும்"*

*(தெ. கல். தொ-5. கல்-678.)*

**அடைக்காய் அமுது :-** (சம) வெற்றிலையுடன் சேர்த்து தின்னுதற்குரிய அமுதாகிய பாக்கு. இதனை அடையமுது என்றும் கூறுவர். இறைவன் நிவேதனத்தின் போது பயன்படுத்தப்பெறும்.

*"உண்ணும் சோறும் தின்னும் வெற்றிலையும்"*
*(நாலாயிர திவ்யப் பிரபந்தம்)*

*"சந்தி ஒன்றுக்கு அடைக்காயமுது வெறும்பாக்கு நாலும், வெற்றிலை எட்டும்"*

*(தெ. கல். தொ-8. கல்-66)*

*"அடைக்காய் அமுதுக்கு பாக்கு ஐஞ்சும் வெற்றிலை ஒரடுக்குக்கு நெல்லு நாழியும்"*
*(முதல் இராசேந்திரன். தெ. கல். தொ 4. கல்-538)*

**அடைதறி :-** (வ) குத்தகைக் கூலிக்கு விடப் பெறும் ஆடை நெய்யும் தறி.

**அடைநிலம் :-** (வே) ஊரைச்சார்ந்துள்ள நன்செய்நிலம். ஊர்நிலக் கணக்கில் சேர்க்கப்பட்ட நிலம்.

**அடைப்பம் :-** (அ) தாம்பூலப் பெட்டி. அரசவையில் அரசர்க்கு அருகிலிருந்து முறையாக வெற்றிலை மடித்தளிக்கும் அதிகாரி. இப் பதவியினை அடைப்பு எனவும் அடைப்பக்காரன் எனவும் கூறுவர்.

**அடைப்பு :-** (வே) ஒற்றியுள்ள நிலம். பாசனநீர் அடைப்பு. அறச் செயலுக்குரிய வருவாயாக தனித்து ஒதுக்கப்பட்ட நிலம்.

*"பூசிக்கும் நம்பிமார்க்கு அடைப்பாகவும், நீக்கி உடையாரும் நாச்சியாரும் அமுது செய்தருளும் அரிசி நாழியினால் சோறும் தயிரும் இந்த உபையத்துக்கு முப்பது வட்டத்து சிவப் பிராமணர்க்கு அடைப்பாகவும்-உபையங் கொண்ட நிலம்"*

*(தெ.கல தொ,17. கல்-171) (தொ.12. கல்.131.)*

**அடைப்புமுதலிகள் :-** (அ) அரசவைக்குரிய அடைப்பக்காரர்கள். கிராம நீர்ப்பாசன முறைகளில் ஈடுபடும் அதிகாரிகள்.

**அடைபடி :-** (வ) அடைமானச்சீட்டு, (படி-சீட்டு)

**அடையாள் :-** (சமு) நிரந்தர வேலைக்காரன். செல்வரும் அதிகாரிகளும் நிலையாக அமைத்துக் கொள்ளும் பணியாள்.

**அடையெழுதுதல் :-** (சம) தொகுப்பாக ஊர்க்கணக்கில் சேர்த்து எழுதுதல்.

**அடைவு குத்துவித்தல் :-** (வே) ஊர் நிலக்கணக்கில் சேர்த்துப் பதிவித்தல்.

*"காணிகளில் பணி செய்மக்கள் பணிசெய் காணியொழிய நின்றார் காணி விற்கவென்றருளிச் செய்ய புக்க கேழ்விப்படி அதிகாரிகள் வானவன் மூவேந்த வேளார் அடைவு குத்துவித்து வரிசை விட்டபடி விற்று".)*

(*முதல் இராசராசன்-கி. பி.* 1002, *தெ. கல். தொ.* 5. *கல்.* 1409)

**அடையோலை :-** ஆவணக்களரியில் பாதுகாக்கப்பெறும் சாசனப் பிரதி ஓலை.

**அண்ணாவன் உழக்கு :-** (அ) குலோத்துங்க சோழன் ஆட்சியில் திருவண்ணாமலைக் கோயிலில் நெய்யளக்க இருந்த உழக்களவையின் பெயர்.

அண்ணா என்பது திருவண்ணாமலையின் பெயராதலின் அங்குள்ள இறைவன் அண்ணாவன் எனக் குறிக்கப்பெற்றார்.

**அண்ணாவி :-** (வ) அண்ணாழ்வி, தமையன், தனக்கு முன்னோன்.
(நாஞ்சில் நாட்டார் வழக்கு)
(தென்காசி-கல்வெட்டு)

**அணுக்கச் சேவகம் :-**(அ) அரசரிடம் நெருங்கிப் பணிபுரியும் ஊழியம்.

**அணுக்கர் :-** (அ) நெருங்கியவர். அரசர் முதலியோரிடம் நெருங்கிப் பழகும் அந்தரங்க ஊழியர். பெண்பாலரும் இத்தகுதி பெறுவர். அவர் அணுக்கியர் என்று பெயர் பெறுவர்.

**அணுக்கன் திருநுந்தாவிளக்கு :-** (சம) கருவறையுள் மூலவர்க்கு அருகில் எப்பொழுதும் எரியும்படியாக அமைக்கப்பெறும் திருவிளக்கு.

*"திருவண்ணாமலை உடைய நாயனாற்கு -திருமுன்பேய் அணுக்கன் திருநுந்தாவிளக்காக எரிய நான் இட்ட திருக்குத்தி விளக்கு"*
(*தெ. கல். தொ.* 8 *கல்.*124)

**அணுக்கவிளக்கு :-** (சம) கருவறையைச் சூழ்ந்த திருச் சுற்றில் இரவில் எரியும் விளக்கு.

''ஸ்ரீவிமானத்தைச் சூழ இராவை சந்திக்கு அணுக்க விளக்காக எரிய வைத்த விளக்கு ஒன்றுக்கு எண்ணை செவிடரை''

(தெ.கல்.தொ. 8 கல். 66)

**அணுக்கன் திருவாயில் :-** (சம) இறையகத்தின் திருவாயில். தஞ்சைப் பெரிய கோயிலில், இறையகத்தைச் சார்ந்துள்ள நெருங்கிய வாயில், அணுக்கன் திருவாயில் எனப்பெயர் பெறும்.

''நாயனார் திருக்கோயில் சர்ப்பகிரஹத்துள் திருவணுக்கந் திருவாசல்''.

(தெ. கல். தொ. 5. கல். 427)

**அணுக்கியர் :-** (அ) அரசனுக்கு அருகிருந்து பணிபுரியும் மகளிர்.

''ஸ்ரீராஜேந்திரசோழ தேவர் அணுக்கியர் ஐய்யாறந் செம்பொந் தங்கை கூத்தந் உத்தமசீலியார்''

(தெ. கல். தொ. 5 கல்- 644)

''உடையார் ஸ்ரீராஜேந்திரசோழ தேவர் அணுக்கிநக்கன் பாவை''

(தெ. கல். தொ. 4 கல் .2 23)

**அத்தத்துநாள் :-** (வ) அத்தம் (அஸ்தம்) விண்மீன் கூடியநாள். அஸ்த நட்சத்திரம். இருபத்தேழு நட்சத்திரங்களுள் ஒன்றாகும்.

**அத்தி :-** (க) அத்தாணி மண்டபம் என்பதன் சுருக்கம்.

''புலிவலத்து பெருங்குறி மஹாசபையோம் இராஜேந்திரசோழ அத்தியிலே கூட்டங்குறைவறக் கூடி''

(தெ. கல். தொ. 17. கல். 605)

**அத்தியயனவிருத்தி :-** (சம) கோயிலில் இறைவன் சந்நிதியில் வேதம் பாராயணம் செய்யும் அந்தணர் தொடர்ந்து பெறும் வருவாய்க் கமைந்த இறையிலி நிலம்.

''வேத விருத்திக்கு நிலம் நான்கு வேலி''

(கரந்தைச் செப்பேடுகள்)

''இவ்வூர் அணியாதித்தச்சதுர்வேதி மங்கலம் என்று இத்திருப்புன வாயிலில் வைத்த வகரம்.

இவ்வகரத்திலிருந்த பிராமண்ர் அத்யயனம் பண்ணக் கடவதாக வும் இந்நிலங்களும் மனைகளும் இவற்க்குக் குடுத்தபடி''

(தெ.கல்.தொ. 8 கல்.213)

அதிகரணம் :- (அ) (கரணம்-ஊர்ச்சபை) நியாய சபை. கிராமமகா சபையின் உட்பிரிவாகிய வாரியத்துள், சம்வத்சரவாரியம் சிறப்பானதும் வழக்குகளை விசாரணை செய்து தீர்ப்பளிக்கும் உரிமை பெற்றது மாதலின் அச்சபையே அதிகரணம் எனப்பட்டது. சபைக்குரியார் அதிகரணத்தார் என்றும் குறிப்பிடப்பெற்றனர்.

அதிகாரப் பேறு :- (அ) அரசியலதிகாரிகட்கு அளிக்கப்பெறும் காணிக்கை, முறைமை.

அதிகார மேலெழுத்து :- (அ) கீழ் அதிகாரிகள் இட்ட கட்டளையை மாற்றி, மேலிடத்தார் அளிக்கும் உத்தரவு.

அதிகார வர்த்தனை :- (அ) அதிகாரிகளுக்கு மக்கள் வழங்கும் காணிக்கைப் பணம்.

அதிகாரிச்சி :- (அ) சோழமன்னர் ஆட்சியில் அரசமாதேவியர்க்கு அணுக்கத்தொண்டு செய்வாரை மேற்பார்வை செய்தற்கு பெண் அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்களே ''அதிகாரிச்சி'' என்று பெயர் பெற்றனர்.

*''அதிகாரிச்சி சோமயன் அமிர்தவல்லியும்''*

*இராசாதிராசன். I. கி.பி. 1056,*

*(தெ. கல். தொ, 5. கல். 520)*

அதிட்டானம் :- (கலை) கல்லிருக்கை, கற்பாறையில் மழமழப்பாகவும் பரப்பிடமாகவும், குழிக்கப்பெறும் கற்படுக்கை, கருங்கல்லால் அமைக்கப்பெறும் கட்டட அடிப்படை வரிசை.

*''சிறுபோவில் இளையர் செய்த அதிட்டானம்''*

*(சித்தன்ன வாசல் கற்படுக்கைக் கல்வெட்டு)*

*(கி. பி: 2 ஆம் நூற்றாண்டு)*

அதிர்காணி :- (அ) கிராம ஆட்சியில் முறையாகப் பெற்ற காணி ஆட்சி உரிமை.

அதிர வீசி ஆடுவான் :- (சம) தில்லை நடராச பெருமானுக்குரிய சிறப்புப் பெயர்களுள் ஒன்று.

*''அதிர வீசி ஆடுவோன் திருநந்தவனம்''*

*(தெ.கல்.தொ 12, பகு-1, கல். 157)*

**அதிராசராசமண்டலம்** :- (அ) கொங்கு நாடு. கோயமுத்தூர் மாவட்டமும் சேலம் மாவட்டமும் திருச்சி மாவட்டத்தில் மேற்பகுதியும் கொண்ட நாடு. அதிராசராச மண்டலம் என்ற பெயர், கொங்கு மண்டலத்திற்கு ஏற்பட்டுள்ளதனை விசயராசேந்திர சோழனுடைய கருர் பசுபதீச்சரர் கோயில் கல்வெட்டு உணர்த்துகின்றது.

*"அதிராசராச மண்டலத்து வெங்கால நாட்டு கணபதி நல்லூர்"*

(தெ.கல்.தொ III : I. கல். 21.)

**அதிஷ்டானம்** :- (கலை) கருங்கல்லால் கட்டப்பெறும் திருக்கோயிலின் அடிப்படை வரிசை; இருக்கையமைப்பு; ஆசனவரிசை; கோயில் விமானத்தின் கருங்கல் சிற்ப வேலைப்பாட்டுப் பகுதியில் தளக்கல் முதலாக பீடக்கல் வரையிலுள்ள சிற்பக் கட்டுக்கோப்புப் பகுதி.

**அந்தர விநியோகம்** :- (அ) உள் வரிவகையில், நீக்கப்பெற்றது போக எஞ்சியதில் பங்காகப் பெற்றது.

**அந்தராயக்காசு** :- (அ) தற்காலிகமாக இடப்படும் சிறு வரிக்காசு.

**அந்தராயம்** :- (அ) உள்வரி. அரசுக்குத் தனிப்பட்ட முறைகளில் வரியாக வரும் வருமானம்.

*"தேவதானம் உள்ள நிலத்தில் கடமையும் வரியும் அந்தராயமும் இவ்வாண்டு முதல் தவிர்த்தோம்"*

**(புதுக்-கல்-246 )**

**அந்திக்காப்பு** :- (ச) கோயிலில் நிகழும் மாலைக்கால பூசை.

**அநுஷ்டுப்** :- (மொ) வடமொழி சுலோகங்களுக்கு அமைந்த யாப்பமைதி.

*"பீதாம்பர பட்டனென்ற மறை வாழ்நனை, மதித்தருளி நீய் செய்கென, மற்றவனும் மனமகிழ்ந்து விதித்தமைத்த அநுஷ்டுப் பின் விழுப்பம் நோக்கி"* (வீரபாண்டியன்-சிவகாசிச் செப்பேடுகள்)

**அநுதாரத்தார்** :- (வ) நெருங்கிய சுற்றமும் நட்பும் உடையார். ஆதரவு பெற்றுள்ளவர்.

*"இவர்கள் அநுதாரத்தில் உள்ளார் பக்கல்-உறவு அறுதி செய்தல் செய்யக் கடவோமல்லாதோமாகவும்"*

**(தெ.கல்.தொ.8 கல். 166)**

**அப்பம் :-** (பொ) ஓர்வகை உணவுப் பண்டம். பல்லவர் காலத்தில் நிவேதன வழக்கிலுள்ளது. தட்டில் அப்பிச் செய்யப் பெறுவதால் அப்பமெனப் பெயர் பெற்றது.

*"தக்ஷிணாமூர்த்திதேவர் அமுது செய்தருளவும் வெண்போன கத்துக்கும், பருப்புப் போனகத்துக்கும் அப்பத்துக்கும்"*

*(தெ. கல். தொ.12 கல்.201)*

**அபயசாசனம் ;** (வ) பாதுகாப்பளிக்கும் சாசனம். ஒருவர்க்குரிய நிலபுலங்கள் அவர்க்குப் பின் பெறுதற்கு உரிமையுடையவர், தவறாது பெறுதற்குரிய செய்திகளடங்கியதாகவும், அதற்கு அரசின் பாதுகாப்பு அமைவதாகவும் எழுதப்பெறும் சாசனம்.

**அபிநவம் :** (கலை) புதுமை, செங்கற்றளியாகவும் சிற்ப வேலைப் பாட்டுடனும் செய்யும் புதுமைத் தொழில் .

**அபிஷேக கலசப்பானை :** (சம) இறைத்திரு மேனிக்குத் திருமுழுக்குச் செய்தற்குரிய உலோகப்பானை. (பொற்குடம்)

*"கலசப்பானை ஒன்று" (தொ. கல். தொ. 11. கல்-91)*

**அபிஷேக நாமம் :** (வ) அபிடேக நாமம். அரசுரிமைப்பட்டம் கட்டப்பெறும் நாளில் புதிய அரசனுக்கு இடப்பெறும் சிறப்புப்பெயர்.

**அபிஷேக மண்டபம் :** (சம) திருமேனிக்குத் திருமஞ்சனம் ஆட்டும் மண்டபம். அரசன் குளிக்கும் இடமும் இப்பெயர் பெறும்.

**அபூர்வர்கள் :** (சமு) புதிதாக வந்தவர்கள். யாத்திரையாக வந்தவர்கள்.

*"இதிலே நாளுரி அரிசிச் சோற்றால் அபூர்வ்வர்கள் பூசித்தார்க்கு இடக்கடவோமாக சம்மதித்து கைக்கொண்ட காசு இரண்டு."*

*(முதல் இராசராசன் கி.பி. 990. தெ. கல். தொ. 8. கல். 27)*

**அபூர்வி :** (சம) தலயாத்திரை செய்யும் வேதபிராமணர், மீமாம்ச விருத்தியில் வல்ல பிராமணரையும் குறிக்கும். கல்வெட்டுக்களில் "அபூரி" என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

*"இவ்வமுது செய்த பிரசாதத்தில் செம்பாதியும அபூர்வி ஸ்ரீ வைஷ்ணவராய் வந்தார்க்கு இடுவதாகவும்" (தெ. கல். தொ. 3; . கல். 35.)*

அபூர்விகள் : (சம) கோயில் விழாக் காலங்களில் பறையறையும் தொழிற்குப் புதிதாக நியமிக்கப்பெறும் வெளியூர் பணியாட்கள். தலயாத்திரையாளர்கள்; பக்தர்கள்

*"இத்திருப்பறையறைய அபூர்விகளைப் பெறாவிடில் இரண்டும் ஒருவனே கேட்ப்பிக்கினும் பேரால் காசு ஒன்று இடவும்"*
*(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு கி.பி. 1014)*

*(தெ. கல். தொ. 2:2 கல்.25)*

அபோஹனம் : (வே) அபோவனம், பாழ்நிலம், தரிசுநிலம்.

அம்பலத்தார் :- (அ) கிராமசபையார், ஊர்ச்சபையார். ஊர் அம்பலத்தில் கூடி விசாரணை நடத்தும் சபையார்.

அம்பலப்புறம் :- (அ) கிராமசபை கூடும் மண்டபத்தின் நிர்வாகத்திற்கு கிராமசபையார் ஒதுக்கிய கிராமப்பொதுநிலம். கோயிலைச் சார்ந்ததாக அமைக்கப்பெறும் அம்பலம், அறச்சாலையாக நிகழ அளிக்கப்பெறும் இறையிலிநிலமும் இப்பெயர் பெறும்.

*"நான் எடுப்பித்த அம்பலத்துக்கு அம்பலப்புறமாக உதகபூர்வஞ் செய்து குடுத்து இதுக்கு நிவந்தஞ்செய்தபடி தண்ணீரட்டும் பிராமணனொருவனுக்கும் இருவர் பிராமணர் உண்ணவும், அம்பலம் மெழுகுவாளுக்கும், புதுக்குப்புறத்திற்கும் ஆக நிவந்தமாவதாகவும்."*

*(முதல் இராசராசன் கி.பி.991. தெ. கல். தொ.8. கல். 612)*

அம்புமுது :- (பொ) முத்துவகையுள் முதிர்ந்த தன்மை உடையது. நீரோட்ட ஒளியும் முதிர்ச்சியும் பொருந்திய வளர்ச்சியான முத்து.

*"கோத்த முத்து - குறுமுத்தும் நிம்போளமும் பயிட்டமும் அம்புமுதும்"*

*(தெ. கல். தொ. 2-கல். 3)*

அம்புமுதுபாடன் :- (பொ) நீரோட்டச்சாயலும், பழமையின் ஒளி மிகுந்ததுமான முத்து. (பாடன்-ஒளிக்கதிர்)

அம்புமுதுவரை :- (பொ) நீரோட்டப் பொலிவும் கோடும் பொருந்திய முத்து (வரை-கோடு)

அமஞ்சி :- (வே) கூலி இல்லாமல் வேலை செய்வது.

*"இன்னிலம் உழுதார், கலிச்சங்காலுக்கு வேண்டும் அமைஞ்சி செய்வார்களாகவும்."*

*(தெ. கல். தொ.8. கல்.1)*

அமண்சேர்க்கை :- (சம) சமணத்துறவியர்களுள் சிலர் சேர்ந்து இருந்துவாழும் பள்ளியும், பாழியும் உள்ள இடம்.

*''வெண்குன்றக் கோட்டத்து பெருநகர நாட்டு அமண்சேர்க்கை பருத்திக் குன்றில் வச்சிரநந்தி குரவர்க்கு பள்ளிச் சந்தமாகக் கொடுத்தோம்''*

*(மூன்றாம சிம்மவர்மன் கி.பி. 550. பள்ளன் கோயில் செப்பேடு.*

அமராலயம் :- (சம) நிலைபேறுடையதாக அமைத்த கோயில்.

*''அமராலயம் பல செய்தும்''*

*(பராந்தக வீரநாராயணன் செப்பேடுகள். கி.பி.887)*

அமிர்தகணத்தார் : (சம) கோயில் நிர்வாகத்தினையும் வருவாய்களையும் அறக்கட்டளைகளையும் அறிந்து பாதுகாத்து வரும் மரியாதைக்குரிய பெருமக்கள் (அந்தணர்)

*''பெருமபாக்கத்துச்சபையோமும் அமிர்த கணத்தோமும்''*

*(அபராசிதவர்மன், கி. பி. 897, தெ. கல். தொ, 12. கல். 91)*

அமுதுபடி சாத்துபடி உள்ளிட்ட போக திரவ்ய வியஞ்ஜன முள்ளிட்ட தேவைகள்; (சம) கோயிலில்,இறைவனுக்குரியநிவேதனம் அலங்காரம் உள்பட்டவைகளுக்குரிய சிறப்புப் பொருள்களுடன் கறிவகைகளும் உள்ளிட்ட நாள் வழிபாட்டுத்தேவைகள்.

அமுதுபடி : (சம) இறைவனுக்குப் படைக்கும் பிரசாதமாகிய நிவேதன உணவுக்குரிய வருவாய்.

*''செல்வப் பிள்ளையார்க்கு அமுதுபடி அரிசி இருநாழியும''*

*(தெ. கல். தொ. 17. கல் - 171.)*

அமுதுபிலா : (சம) அமுதுபலா, கோயில் நிவேதனத்துக்குரியதாகச் சாசனத்தில் குறித்தெழுதப்பட்ட பலாமரம். பல பலாமரங்களுள் ஒன்றினை நிவேதனத்திற்கென்று ஒதுக்கிவைப்பது.

*''மதுராந்தகன் திருநந்தவானத்திலும் அமுதுபிலா ஒன்றும் அமுது மா ஒன்றும், அமுது தெங்கு ஒன்றும், பூமரங்களும் நீங்கலாக நின்ற மாவும் பிலாவும் தெங்கும்''*
*(முதல் இராசேந்திரன் கி.பி. 1029. (தெ.கல்.தொ, 7. கல்.801)*

**அமைஞ்சி** :- (வே) ஊதியமின்றி ஊர்ப் பொதுக்காரியங்களில் உழைப்பினைத் தருதல்.

*"இன்னிலம் உழுதால் கலிச்சங்காலுக்கு வேண்டும் அமைஞ்சி செய்வார்களாகவும்"*

(தெ. கல். தொ. 8. கல். 1)

**அமைஞ்சோம்:** (வ) ஒப்புக்கொண்டோம். உரியவரானோம் (நாஞ்சில் நாட்டு வழக்கு கி.பி. 11). ஒப்புக் கொண்டவர்களானொம்.

**அய்யன்போகம்** :- (சம) கிராமதெய்வங்களுள் ஒன்றான அய்யனார் சோயில் நாள் வழிபாடு, திருவிழா செலவினங்கட்குரிய வருவாயாக ஊராட்சியின்கீழ் நிலமாக இறையிலி செய்யப் பெறும் போகங்கள். நிலம்,

**அயோகவர்** :- (சமு) வணிகரும் வேளாளரும் இணைந்த ஒரு பிரிவினர்.

**அர்த்தங்கொண்டு** :- (வ) சரிபாதிபினைக்கொண்டு

*"குறும்புறை அர்த்தங்கொண்டு திருவஞ்சக்களத்து சாத்தனுக்கடிக்கு காராண்மை குடுத்த ஊர"*.

(தெ. கல். தொ.7 கல்.174)

**அர்ச்சனாபோகம்** :- (சம) கோயிலில் அர்ச்சனை செய்யும் அர்ச்சகர் பெறும் இறையிலி நிலம். இதன் வருவாய் அர்ச்சனைச் செலவினங்கட்கும், அர்ச்சகர்கட்கும் பயன்படும்.

*"மஹா விஷ்ணுக்களுக்கு அர்ச்சனாபோகமாக குடுத்தோம். இவ்வர்ச்சனாபோகம ஆச்சித்துக்கொண்டு உண்பாநாக"*
*(உத்ரமேரூர், விசயகம்ப விக்கிரவர்மன் கல்வெட்டு)*

(தெ. கல். தொ. 6. கல்.288)

**அர்த்தசாமப்புறம்** :- (சம) கோயிலில், அர்த்தசாமப்பூசை நிகழ்வதற்குரிய வருவாயுள்ளதாக அளிக்கப்பட்ட அல்லது விடப்பட்ட நிலமானியம். (புறம்-விளை நிலம்)

**அர்த்த மண்டபம்** :- (கலை) கோயிலில் கருவறைக்கும் முகமண்டபத்திற்கும் இடைப்பட்ட மண்டபம். கருவறை முகப்புடன் ஒட்டுக்கோப்பான மண்டபம்.

**அரக்கு, பிஞ்சு, பொத்தி** :- (பொ) முதல் இராசராசன் தான் எழுப்பிய, தஞ்சை இராசராசேசுவரத்தில் செய்தமைத்த திருமேனி

கட்கு அளித்த பொன், மணி, அணி கலன்களில் அமைக்கப்பட்ட பகுதிகள்.

1. அரக்கு :- பொன்னாவான அணிகலன்களில், உள்ளீடாக அமைக்கப்பெறும் வலிய மெழுகு. செவ்வரக்கு.

2. பிஞ்சு :- பொன் மணித் தொங்கல், பிசிர் என்றும் கூறுவர்.

3. பொத்தி :- அணிகலன்களின் ஒப்பனை வேலைப்பாட்டில் ஆங்காங்கே மேற்பொருத்தப்படும் பொற்றகடுகள். பொன் ரேக்குத் தகடுகள். உம்முசங்கள்.

இவை மூன்றையும் அணிகலன்களை எடையிடும் போது தனித்து எடையிட்டு, அரக்கு நீக்கி, பிஞ்சும், பொத்தியும் எடையிட்டுக் கொள்வதால், இவை இரண்டும் பொன்னால் அமைந்தவை என்பது புலனாகின்றது.

*"திருப்பட்டிகை ஒன்று-பொன் பதின் கழஞ்சே முக்காலே குன்றியும், அரக்குநிறை ஒன்பதின் கழஞ்சே ஆறுமஞ்சாடியும்., தடவிக் கட்டின பளிங்கு பதினைஞ்சினால் நிறை கழஞ்சே மூன்று மஞ்சாடியும், பொத்தி மூன்றினால் நிறை நாலு மஞ்சாடியும் குன்றியும்" "அரக்கும் பிஞ்சும உட்பட-நிறை எடுத்துக் கல்லில் வெட்டின"*

*(தெ. கல். தொ 2:2 கல். 59)*

அரசகரும அணுக்கத்தினர் :- (அ) அரசனுடைய செயல்களை உடனிருந்து ஆராய்ந்து கூறும் பெருமக்களாகிய அதிகாரிகள். இவர்கள் "அரசகருமமாராய்வார்" என்றும் பெயர் பெறுவர்.

*"நம் கரும மாராயும் ஆரூரன் அரவணையானான பராக்கிரம சோழ மூவேந்த வேளான்"(முதல் இராசராசன். பெரிய வெய்டன் செப்பேடுகள்.)*

அரசிமாணிக்கம் :- (பொ) ஒளியும், நல்ல செந்நிறமும் பொருந்தியது அரசிமாணிக்கமெனும் பெயருக்குரிய மாணிக்கமாகும். ஒளியுடன் வெண்மையும் சிவப்பும் கலந்ததாயின் பத்மராஜன் என்று பெயர் பெறும். (நவமணிகள்-நூல்)

*"திருப்பட்டிகை நாணும் அரசி மாணிக்கமும் படு கண்ணும்" (தஞ்சை பெரிய கோயில் கல்வெட்டு)*

அரசுப் பேறு :- (அ) அரசகாணிக்கையாக ஆட்சிக்குட்பட்ட மக்கள் ஆண்டுதோறும் செலுத்தும் சிறுவரி.

**அரட்டநேமிபடாரர் :-** (சம) அரட்டநேமி என்னும் பெயரமைந்த சமணத்துறவியார், (படாரர்-சமணமுனிவர்) (திருப்பருத்திக் குன்றம்-கல்வெட்டு )

**அராவின :-** (பொ) (முத்து) மெருகிட்டதைப்போன்ற பளபளப்புடையது. செம்மையாக்கப்பட்ட முத்து என்றும் கூறுவர்.

*''முத்து வட்டமும், அணுவட்டமும் - அராவினவும் சிவந்த நீரும்''*

(தெ. கல் தொ 2:2 கல். 7)

**அரிஇரு :-** (வே) நெல்மகசூல். அறுவடை செய்த நெற்கட்டு.

**அரிகூலி :-** (வே) நெல் அறுவடைக் கூலி. இது அரியாகவும் நெல்லாகவும் கொடுக்கப் பெறும் (அரி-நெற் கட்டு).

**அரிசிக்காணத் தேவை :-** (அ) அரிசிக் கொள்முதல் செய்து விற்பதற்கமைந்த வரி.

**அரிசிக்காணம் :-** (அ) அரிசி குத்துவதற்காகப் பெறப்படும் வரி. எடுத்து அளத்தற்குரிய அரிசி போன்ற தானியங்கட்கு அரசு காசாசப்பெற விதிக்கும் வரி என்றும் கூறுவர்.

*''எடுத்து அளக்கும் அரிசிக்காணம்''*

(தெ. கல். தொ 7 கல் 820)

**அரிப்பாடிக் காவல் :-** (அ) அறுவடைக்கால நிலங்களை மட்டும் காக்கும் காவல்.

*''ஊர்க்காவல் கொள்ளும் காவலப்பேறு நீக்கி நாங்கள் கொள்ளக் கடவ அரிப்பாடிக் காவல்''.*

(தெ. கல். தொ. 12 பகு. 1 கல் -120)

**அரிப்புச்சரி :-** (கலை) ஒருவகை அணிகலன். இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட பொன்னணிகளில் ஒருவகை. காதிற்கமைந்த தொங்கல் என்றும் கூறுவர்.

**அரியென்ன வல்லாநாழி :-** (பொ) காஞ்சிபுரம் திருவத்தியூர் அருளாளப் பெருமாள் கோயிலிருந்த நெய், பால் அளக்கும் முகவை. 'அரியென்னவல்லான் நாழி' என்பது இதன் திருத்தமான வடிவம்.

**அரிவாட்பதக்கு :-** (அ) அரிவாள் செய்யும் கருமானிடம் பெறும் சிறுவரி. இவ்வரி தானியமாகப் பதக்கு என்னும் அளவு பெறப்படும்.

**அரியவாணம் :-** (பொ) செப்புத்தாலம். (தாலம்-அகன்றதட்டு) இக் காலத்தார் அரிக்கஞ்சட்டி என்பர்.

**அருமொழி தேவநாழி :-** (பொ) திருவெண்ணெய் நல்லூர் சிவன் கோயிலில் இருந்த பால் அளக்கும் நாழிக்குரிய பெயர். (அருள்மொழி தேவன்-முதல் இராசராசன்.)

**அருமொழி நங்கைமரக்கால் :-** (பொ) அருமொழி நங்கை என்பது வீரராசேந்திர சோழன் மனைவியின் பெயர். இவ்வம்மையார் பெயரால் சின்ன காஞ்சீபுரம் அருளாளப் பெருமாள் கோயிலில் வழங்கி வந்த மரக்காலின் பெயர்,

*"கோயிலில் சிலவளக்கும் அருமொழி நங்கை மரக்காலால் திருக் கேட்டை நாளொன்றுக்கு நெல்லு முப்பதின் கலமாக"* *(அருளாளப்பெருமாள் கோயில் சாசனம்)*

(தெ. கல். தொ. III: II. பக். 187.)

**அருளுத்து :-** (மொ) அருளியது, கொடுத்தது (மரியாதைச் சொல்)

*"இவ்வெண்பா பெருமானடிகள் தாம்பாடி அருளுத்து"*

(தெ. கல். தொ 12: கல். 94)

**அரையன் :-** (அ) அரச மரபில் தோன்றியவனாகவோ அல்லது அரசியலில் பெருந்தலைவனாகவோ, ஊராட்சியில் மதிக்கப் பட்டவனாகவோ இருப்பானுக்குரிய சிறப்புப் பெயர்.

*"அரையன் மகிமாலயனான பிராந்தக முத்தரையன்" "தான தொங்கன் தெரிந்த கைக்கோளரில் அரையன் கேயவிடங்கனேன்" "பொய்கை நாட்டு பெரும்புலியூர் மணக்குடி அரையன்"*

*(தெ. கல். தொ. 19 கல். 15, 61, 144)*

**அல்பமிறை :-** (அ) சிறிய அளவில் பெறப்படும் வரி.

**அலகுநிலைப்படி :-** (வா) தராசில் சரியாக எடையிட்ட கணக்குப் படி (அலகு-சிறிய பொருள்களை எடையிடும் தராசு. அலகு வேறு, துலாக்கோல் வேறு)

*"அலகுநிலைப்படி சயள பலமும்"* (*முதல் இராசராசன். கி.பி.995.*

*தொல் துறை அறிக்கை எண் 199-1901.*)

**அலசந்திப்பயறு :-** (வே) சோழ நாட்டில் விளைந்த பயறு வகைகளுள் ஒன்று. சீர்காழியிலுள்ள திருஞானசம்பந்தர் திருக்கோயிலில் நாளும் பிரசாதமாக வழங்கப்பட்டது.

*"ஆளுடை பிள்ளையார்க்கு கறியமுதாக அமுது செய்தருள நாள் ஒன்றுக்கு அலசந்திப்பயிறு நாழியாக ஆட்டைக்குப் பயறு நாற்கலமாக"*

*(இராசாதிராசன். கி.பி. 1177, தெ. கல். தொ 5 கல். 988)*

**அவசரவர்த்தனை :-** (அ) அவசரம் என்னும் அணுக்க அதிகாரி பெறும் காணிக்கைப் பொருள்.

**அவசரம் :-** (அ) செய்திகளை உடனுக்குடன் அரசனுக்கு அறிவிக்கும் அணுக்க அதிகாரி.

**அவலமுதுப்புறம் :** (சம) அவல் நிவேதனத்துக்கென கோயிலுக்கு அளிக்கப்பட்ட இறையிலி நெல் விளைநிலம்.

**அவனிவேதனப் :** (அ) ஊர்க்காவல், ஊர் பாதுகாப்புத்துறை.

**அவிக்கிணறு ;** (சம) மடைப்பள்ளியிலமைந்த கிணறு.

**அவிட்டத்து நாள் :** (வ) இருபத்துமூன்றாவது நட்சத்திரமாகிய அவிட்டம் கூடிய நாள்.

**அவிநயம் :** (கலை) நான்கு வகை கூத்துள் ஒன்று. சாந்திக் கூத்தின் வகை.

*(சிலம்பு-அரங்-வரி. 12-உரை)*

**அவிப்புலம் :** (சம) இறைவனுக்கு நிவேதன உணவிற்குரியதாக அளிக்கப்பட்ட விளைநிலம். அவி-உணவு என்ற பொருளில் வந்துள்ளது.

*"முட்டில் அவிப்புலத்தும் காரைக்கிழான் புலக்கும்-காட்டுவோமானோம்".*

*(தந்திவர்மபல்லவன். கி.பி. 787 கல்வெட்டறிக்கை I. தொகுதி.8. கல். 29.)*

**அவிப்புறம் :** (சம) இறைவன் நிவேதனத்திற்குரிய வருவாயாக அளிப்படும் இறையிலி நிலம்.

*"அவிப்புறமாகக் குடுத்தேன். இந்நிலத்தின் பேர்சத்தால் நிசதம்*

*முந்நாழி அரிசி நெய்யுட்பட இரண்டு பொழுதுந் திருவமுது காட்டுவோனாகப் பணித்தோம்''*
*(மூன்றாம் நந்திவர்மன் காலம், தெ. கல். தொ. 6, கல். 356)*

**அவிரோதம் :** (மொ) மாறுபாடில்லாமை.

**அழகெருது :** (அ) நல்ல எருதுகளைப் பொதுமக்கள் பார்வைக்கு வைப்பதற்குரியதாகச் செலுத்தும் வரிக்காசு.

*''தேவதானங்களைக் கொண்டுவரும்படி அழகெருது காட்சிக்காசும்''*

*(தெ.கல்.தொ. 14. கல்-157).*

**அழகச்சு :** (பொ) அழகிய சிறுநாணயம். (அச்சு-அரசு இலச்சினையும் மதிப்பீடும் அச்சடிக்கப் பெற்ற நாணயம்)

**அழித்துக் கூறிடுதல் :** (அ) ஊரின் ஒரு பகுதியிலமைந்த நிலங்கட்குரிய இறை வரி ஆகியவற்றை, யாவரும் சேர்ந்து முழுமையாகச் செலுத்தாமல், அவ்வவர்க்குரிய நில அளவிற்கேற்பப் பிரித்துப் பல பகுதிகளாகச் செலுத்துதல்.

*''நாமடைந்த நாள்முதல் நெல்லும் நிலமும் நங்களில் ஒக்க கூறிடாமையாலே ஆண்டுகள் தோறும் அழித்துக் கூறிட்டு வருகையாலே''*

*(தெ. கல். தொ. 17-கல் 599)*

**அழிவு :** (மொ) வீண் செலவு, செலவு, பயிரழிவு குற்றம்.

**அழிவு செய்வான் :-** (சம) உரிய விகிதப்படி செலவு செய்யும் கோயில் நிர்வாகத்தினன். அறப்பொருளை முறைப்படி அழிவு செய்பவன்
*''ஆனித் திருநாளில் அமுதுபடிக்கும் திருவிளக்கு எண்ணை நானூற்று நாழி உள்ளிட்ட அழிவுகளுக்கும் காசு நூற்றெண்பதும்''*
*(தெ. கல். தொ. 4. கல் - 223)*

**அழிவு பிழை :-** (அ) அறநிவந்தப் பொருளை உரிய காலத்தில் செலவு செய்யாததற்குரியதாகச் செலுத்தும் தண்டம். (அழிவு-வருவாய்ச் செலவு. முறைப்படிச் செய்யவேண்டிய செலவு)

**அழுகல் சரக்கு :-** (வா) வாழை, மா, பலா போன்ற பழங்களை விற்பனை செய்வாரிடம் பெறும் வரி.

**அள்ளாயம் :-** (அ) அள்ளு ஆயம், சந்தைக்கோ, அங்காடிக்கோ வரும் சரக்குகளில் இருகையாலும் சேர்த்து அள்ளிக் கொள்ளும் உரிமை. இது சில்லாயம் என்ற வரிவகையுள் ஒன்றாம்.

உரிமைக் காணிக்கை. இவ்வாறு கொள்ளுதல் மகமை என்றும் பெயர் பெறும்.

**அளக்கக்கடவது :-** (மொ) அளந்து கொடுப்பதாகவும்

**அளம் ;-** (வே) உப்பு விளைவிக்கும் பாத்திகளமைந்த கடற்கழிநிலம்.

*"உப்புப் பழுக்கும் அளம் தொண்ணூற்றிலும் உப்புப் படுத்து"*

(தெ. கல். தொ. 8-கல்-31.)

**அளவர் :-** (வே) உப்பளத் தொழிலாளர் கடற் கழிமுகப்பகுதியில் வாழ்பவர்.

**அளவுகோல் அருள்நிதி :-** (பொ) தென்பாண்டி நாட்டில் சீவல்லப பாண்டியன் ஆட்சியில் வழக்கிலிருந்த நிலமளக்கும் கோல்.

**அளு :-** (மொ) அள்ளு, அள்ளாயம் பார்க்க

**அற்றமின்றி :-** (மொ) தடையின்றி. இடையூறு இல்லாமல்.

*"அற்றமின்றி நின்றுசொண்டு"* (திருவுறையூர் கல்வெட்டு)

**அறக்கொண்டு :-** (மொ) முழுவதும் கைகொண்டு, பாக்கியின்றி வசூலித்துக் கொண்டு.

**அறங்காவல் :-** (அ) கோயில், அறச்சாலை, கல்விச்சாலை, ஆதுலர் சாலை ஆகிய அறநிலையங்களைப் பாதுகாக்கும் காவலதிகாரி.

**அறச்சாலா போகம் :** (சம) அறவழி நிகழும் அன்னச்சாலைக்குரிய வருவாய்களான இறையிலி நிலங்கள்.

**அறச்செய்தல் :** (மொ) நீக்கி வைத்தல் சுற்றம், நட்பு ஆகிய தொடர்பினின்றும் விலக்கி வைத்தல்.

*"விரோதமாகச் சில காரியம் பார்த்தாருண்டாகில் தேவரும் நாங்களும் இவனை அறச்செய்யக் கடவோமாகவும்"*

(தெ. கல். தொ. 8. கல். 106)

**அறப்பயிர் :** (வே) அறச்செயலுக்குரிய வருவாயாக அறமாக்கப் பட்ட நிலத்தில் விளைந்த பயிர்.

**அறப்புறக்காவல் :** (அ) அறத்திற்கமைந்த நிலபுலன்களைப் பாதுகாக்கும் அதிகாரி.

**அறாறுதிங்களால் :** (வ) ஆறாறு, ஆறு ஆறு மாதங்களில்

*"இவ்வாட்டை திருமுதலாக ஆறாறு திங்களால்"*

(தெ. கல். தொ. 12. பகு. 1. கல். 100)

**அறிவர் கோஇல் :** (சம) சமண தீர்த்தங்கரர் கோயில்

*"அண்ணல் வாஇல் அறிவர் கோ இல் முன்னாள் மண்டபகங்கல் லாலெய் நிறீஇ"*

*(சிற்றன்னவாயில் குடைதளி-கல்வெட்டு)*

**அறுகை வாணிகர் :** (வா) பஞ்சாலும் பட்டாலும் நெய்த ஆடைகளை விற்பனை செய்யும் வியாபாரிகள்.

*"எய்யினாட்டு தேவதானம் சிரிகண்டபுரத்து அறுகை வாணிகர் கைவ்வழி வைத்தது.*

*(தெ. கல். தொ. 7. கல் 120) 'அறுவை' என்பது 'அறுகை' எனத் திரிந்து வழங்கியது.*

**அறுதி செய்தல் :** (மொ) நீக்கிவிடல். கூடிப்பேசி முடிவு செய்தல். பொருள்களுக்கமைந்த விற்பனை மதிப்பீட்டினைத் தேர்ந்து உறுதி செய்தல்

*"உறவு அறுதிசெய்தல் செய்யக்கடவோமல்லாதோமாகவும்"*

*(தெ. கல். தொ. 8. கல். 106)*

**அறுதிமுறி :** (வ) தீர்ந்துபோன பத்திரம் (முறி-ஒப்பந்த காலம் நிறைவுபெற்றதால்உரிமை அற்றுப்போன ஒப்பந்தச் சீட்டு,ஓலை.

**அறுநாழிக்கால் :-** (பொ) ஆறுநாழி கொண்ட மரக்கால். இம்மரக்கால் முதல் பராந்தகன் ஆட்சியில் தொண்டை மண்டலத்தில் நெல்லாகப் பெறும் அரசிறைக்குரியதாக இருந்த மரக்காலாகும். அதேகாலத்தில் மக்கள் புழக்கத்தில் தொண்டை மண்டலத்தில் வழக்கிலிருந்த மரக்கால் எண்ணாழிக்காலாகும். இதனால் அரசு குறைந்த அளவுடைய மரக்காலால் இறை பெற்ற தன்மை புலனாகின்றது.

*1. "மணையிற் கோட்டத்துத் திருவூறல்ப் புறத்துப் போந்தைப் பாக்கத்து ஸபையோம்-யாங்கள் சொண்டு கடவ நெல் எண்ணாழிக் காலால் எண்ணூற்றுக் காடி (முதல் பராந்தகன்)*

*2. "திருவூறல்புறத்துக் கயத்தூர் ஊரோம் திருவூறல் மஹாதேவர்க்கு ஆண்டுவரை அறுநாழிக் காலாலளக்கக்கடவ புரவு நெல் முந்நூற்றுக்காடி"*

*(முதல் பராந்தகன். தெ. கல். தொ. 5. கல். 1371, 1375)*

அறுவகைச்சமயம் : (சம) சைவம், வைணவம், சாக்தம், சௌரம், கணபதியம், கௌமாரம் என்பன.

1. சிவனை வழிபடுவது சைவம்
2. திருமாலை வழிபடுவது வைணவம்.
3. சக்தியை வழிபடுவது சாக்தம்.
4. சூரியனை வழிபடுவது சௌரம்.
5. கணபதியை வழிபடுவது கணபதியம். (காணபத்யம்)
6. குமரனை வழிபடுவது கௌமாரம்.

''*அறுவகைச் சமயமுமழகுடன் திகழ*''

(*புதுக்கோட்டை கல்வெட்டு - கல். 250*)

அறுவைவாணிபச் சேரி : (வா) பருத்தி, பட்டு ஆடைகள் விற்பார் சேர்ந்து வாழும் இடம்.

அறைஓலை : (அ) அறநிலை செய்யப்பட்ட பொருளைப் பற்றி விளக்கமாக எழுதப்பெற்ற சாசன ஓலை.

அறையோலை : (அ) தானமாகவோ, பிறவாகவோ உறுதி செய்யப் பெற்று அதுபற்றிய விளக்கங்களை எழுதிய சாசன ஓலையை, பறையறைந்து அப்பகுதியினருக்கு அறிமுகம் செய்தற்காகும் உத்தரவு.

''*அறையோலை செய்து கொடுத்தோம் சபையோம்*''

(*ஆனை மங்கலச் செப்பேடு*)

அந்தியம் போது :- (வ) அந்தியப்போது. மாலைப்பொழுது.

''*அந்தியம் போது திருவாராதனை முடிஞ்சவாறே*''

(*தெ. கல் தொ. 5 கல். 724*)

அன்றாடு கண்ட கோபாலன் வாசிபடா புதுமாடை :(பொ) அன்றைய வழக்கிலுள்ள கண்ட கோபாலன் என்னும் பெயரமைந்த உரையும் நிறையும் குறையாத புதுப் பொற்காசு

(*மாடை-பொற்காசு*) (*வாசி-குற்றம்*)

(*தெ. கல். தொ. 12. கல். 190*)

அன்றாடு செல்லு நற்காசு :- (பொ) அன்றைய ஆட்சியில் வழக்கில் செல்லுபடியாகும் குற்றமற்ற காசு. (செல்லு-செலவாணியிலுள்ள)

**அன்றாள்கோ :-** (அ) அந்தந்த காலத்தில் ஆட்சிசெய்யும் மன்னன், திருக்கோயில்கள், அறச்சாலைகள் ஆகியவற்றிற்குச் செய்யப் பட்ட முதலீடாகும் நிலபுலன்களோ, காசுகளோ எக்காலத்தும் வைத்த நிலையில் மாறுபடாது இருக்கும் அறப் பொருளாகும். அதனைக் காத்துச் செயற்படுத்தும் ஆட்சிக்குரிய அரசன் மாறு படுதல் காலத்தியல்பு. எனவே, செய்யப்பட்ட அறப்பொருளுக்கோ, அறச்செயலுக்கோ குறைவருங்காலத்து அப்பொழுது ஆளும் அரசன் காக்க வேண்டும் என்னும் குறிப்பினை அறஞ்செய்தார் முற்கூட்டியே சாசனங்களில், அன்று ஆள் கோ என்று எழுதி வைத்துள்ளனர்.

"*அன்றாள் கோவே இரக்ஷிப்பதாகவும் ஒட்டி விற்றுக் குடுத்தோம்*"

(*தெ. கல் தொ. 12. கல். 102*)

**அன்றாள் கோவெய் இரக்ஷிப்பதாகவும் :-** (வ) அந்தந்தக் காலங்களில் ஆளும் அரசன் பாதுகாப்பதாகவும் (காப்புரை)

**அன்னிய நாமகரணம் :-** வ) பிறரின் பெயரைப் பயன்படுத்துவது. மற்றொருவர் பெயர் வழி காரியம் நிகழ்வது.

**அன்னியாய வாவதண்ட இறை :-** (அ) வணிகர் அளவிற்கு மேல் இலாபம்வைத்து விற்றதற்கு அரசு தண்டித்துப் பெறும் தண்டவரி. (வாவதண்டம்-பேராசையால் விளையும் குற்றங்கட்கமைந்த தண்டனை)

**அனசனம்** (சம)(அன்னசனம்) சமணத்துறவியரின் உண்ணாநோன்பு

(*திருநாதர்குன்று கல்வெட்டு, கி.பி. 2-ஆம் நூற்றாண்டு*)

**அனந்தலைவிளக்கு :-** (பொ) அன்னப்பறவை உருவைத் தலைப் பாகக் கொண்ட திருவிளக்கு. இதனை, ஓதிமவிளக்கென்றும் கூறுவர்.

"*யவனர் ஓதிம விளக்கு*"

(*பெரும்பாண் வரி. 318*)

"***அனந்தலை** விளக்கு **உள்**கருவும் நாராசமும் **உள்**பட*"

(*திருவையாறு ஒலோகமாதேவீச்சரக் கல்வெட்டு*)

(*தெ. கல். தொ.5 கல். 521*)

**அனவரதானன் :-** (பொ) திருநெல்வேலி சிவன் கோயிலில் சடைய வர்மன் வீரபாண்டியன் ஆட்சியில் வழக்கிலிருந்த எண்ணெய் அளக்கும் நாழி.

*"திருநெல்வேலி உடைய நாயனார் கோயிலில் தடாரீச்சிர முடைய நாயனார்க்கு நித்த நிமந்தமாக அனவரதானஜாலே உழக்செண்ணண திரு நுந்தா விளக்குக்கு"*

*(தெ. கல் தொ '. கல். 433)*

அனாதி இறையிலி :- (அ) பத்திரச் சான்றின்றி சொல்லளவில் செய்யப் பெற்ற இறையிலி நிலம். கிராமசபை ஊழியங்கட்குத் தற்காலிகமாகச் சபையார் செய்யும் இறையிலி நிலம்.

அனாதிபாழ் :- (அ) ஊர்நிலக்கணக்கில் வாரிசு இல்லாத பாழ்நிலம் என்று குறிக்கப்பெறும் தரிசு நிலம். வாரிசு உரிமையாளர் இல்லாததினால் பல ஆண்டுகள் பயிரிடப்பெறாமல் பாழாகக் கிடக்கும் நன்செய் புன்செய் நிலங்கள். இந்நிலங்கட்கமைந்த வரி பெறுதற்கில்லாமையினால் ஊர்நிலக்கணக்குக் குறிப்பில் இந்நிலங்கள் "அனாதிபாழ்" என்று குறிக்கப்பெறுதல் வழக்கு.

அனாதேசம்போனார் :- (வ) யாத்திரையின் காரணமாகவோ பிற வாறோ அயல்நாடு சென்றவர்

*"உடையார் ஸ்ரீராஜராஜீச்வரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ்செய்ய உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மர். இவர்களில் செத்தார்க்கும் அனா தேசம் போனார்க்கும் தலைமாறு-ஆளிட்டு விண்ணப்பம் செய்ய"*

*(தெ. கல். தொ. 2;3 கல். 6 )*

*(திருப்பதியம் கல்வெட்டு)*

அனுசிதம் :- (மொ) குற்றம், அழிவு, சிதைவு.

*"இத்தர்மத்திற்கு அனுசிதம் செய்தார்".*

அனுபோகப்பற்றொழுகு :- (வ) நிலபுலன்களின் உரிமை அனுபோக மூல சாசனம். சொத்துரிமைத் தொடர்ச்சி. நிலபுலன்களையோ, குடியிருப்புமனையினையோ விலைக்குப்பெறாமல் நிலைத்து அனுபவித்து, வரிசெலுத்தி வருபவர்க்கு, அந்நிலை என்றும் மாறாதிருக்கும் அனுபோகமாக, அரசு ஆய்ந்து அளிக்கும் உரிமைச்சான்று.

அனுவட்டம் : (பொ) முத்துவகையுள் ஒன்று. சிறிய வட்டவடிவ மான தோற்றத்தில் விளைந்த நன்முத்து.

**அஃகமாக :** (மொ) அடக்கமாக, உள்பட்டதாக, ஈடுஉடையதாக.

*"ஒருகாசுக்கு நிறைமதி நாராயத்தாற் பதின்கல நெல்லஃகமாக"*

*(1 காசுக்கு பதின் கல நெல்)*

*(தெ. கல். தொ. 11. கல். 16)*

**அஷ்டபோகம் :** (வ) மண்ணுலகில் மக்கள் அனுபவிக்கும் எட்டு வகையான உரிமைகள்.

1. வருவாய் 2. கிரையம். 3 தானம். 4. பங்கீடு 5. பாசனம். 6. மரங்கள். 7. பூமி 8. செல்வம்.

**வடநூலார் :** கிரயம், தானம், வினிமயம், ஜலம், தரு, பாஷாணம், நிதி, நிக்ஷேபம் என்பர்.

**வாழ்க்கை அனுபோகமாக :** 1. பெண். 2. ஆடை. 3. அணிகலன். 4. உணவு." 5. தாம்பூலம். 6. மணப்பொருள். 7. இசை. 8 மலரணை என்னும் எட்டினையும் குறிப்பர்.

**ஆக்கப்பெருக்கம் :** (வே) சீர்திருத்தம் செய்ததினால் மேலும் உண்டான அதிக வருமானம். நிலச் சீர்திருந்த ஆக்கத்தினால் மகசூல் வருமானப் பெருக்கம்.

**ஆக :-** (மொ) ஆகிய. கூடிய ஆகக்கூடுதல், இவ்வாறாக அமைந்த, என முற்கூறியவற்றைத் தொகுத்துக் கூறும் சொல்.

*"ஆக திருநந்தாவிளக்கு ஆறு"*

*(கல். ஆண்டு அறிக்கை—எண் 175 கி.பி.1894).*

**ஆக நிறை :** (மொ) கூடிய எடையளவு. எடையிட்ட வகையால் கூடுதல் நிறையளவு. ஒரு பொருளின் தனித்தனியான பகுதிகளையோ, பல பொருள்களையோ எடையிட்டுத் தொகுப்பாகக் கூறப் பெறும் எடைக்கணக்களவு.

**ஆகமம் :-** (சம) வேதியர்க்கும் அரசர்கட்கும் வணிகர்க்கும் வேளாளர்க்கும் பொதுவான சாத்திரம். பிராமணரின் வழக்கில் வேதாகமம் உள்ளதாகும்.

*"இந்நெல்லு வேதமும் ஆகமமும் பேர் தீக்ஷிதனா யிருக்கும் பிராமணனுக்கு"*

*(தெ. கல். தொ. 3:1. கல்-55)*

**ஆசந்ரதாரகம் :** (வ) சந்திரனும் நட்சத்திரங்களும் உள்ளவரையில் செய்யப்பெறும் அறச்செயல், என்றும் நிலைத்திருக்க வேண்டு மென்னும் குறிப்பிற் கறிகுறியாக இவ்வாறு சாசனங்களில் கூறு தல் வழக்கு.

*''ஆசந்ர காலமும் முட்டாமே ஒரு நந்தா விளக்கு எரிப் போமா னோம்''*

(தெ. கல். தொ. 19. கல்-180.)

**ஆசறுதி :** (மொ) மூலைத்திருப்பம், நிலங்களின் கோடித் திருப்பம், கோடிமுனை முடிபு.

*''மேற்கு நோக்கிப்போன பெருவழி என்பத்தேழு கோலாசறு திக்கு வடக்கு''*

(தெ. கல். தொ.3:1 கல்.15)

*''மேற்கு நோக்கி பதினறு கோலசறுதியில் நாட்டிய புள்ளடிக் கல்லேயுற்று''*

(தெ. கல். தொ. 5. கல். 518.)

*''முதல் கண்ணாற்று வடவாசறுதிக்கு தெற்கும்''*

(தெ. கல். தொ. 14. கல். 161)

**ஆசார்யபோகம் :** (சம) ஆசார்யராக விளங்கும் அரசகுரு அனு பவிக்க வேண்டியதாக அரசன் செய்யும் நிவந்தம். இவ்வா சாரியர் சிவன் கோயில்களில் ஆகம விதிப்படி வழிபாடுகள் நிகழ்வதற்கும் தலைமையாளராக இருப்பர். இவர்கள் தேவகன் மிகள் என்றும் பெயர் பெறுவர்.

*''இந்த ஸ்தானமுடைய ஈசாந சிவனும் பிர்மசிவனும் உள்ளிட்ட தேவகன்மிகளுக்கு ஆசார்ய போகத்துக்கு-நெல்லு 240-கலமும்''*

(தெ. கல். தொ. 17. கல்.243.)

*''உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் கோயிலில் ஆச்சாரிய போகம் நம் உடையார் சர்வசிவ பண்டித சைவாச்சாரியர்க்கும் உள்ளூர் பண்டாரத்தே நிறைச்சலளவாகஇரண்டாயிரக்கலநெல்லு ஆண்டாண்டு தோறும் சந்திராதித்தவல் பெற, (முதல் இராசேந்

**ஆவணம்** : (பொ) பதிவுப்பத்திரம், உறுதிப்பத்திரம், உறுதிச்சீட்டு கிரையப்பத்திரம், விலையாவணம், விலையுறுதிச்சீட்டு.

*"காவிரியினின்றும் திருமஞ்சன நீராட்டுவானுக்குப் போகமாக ஆவணம் செய்து குடுத்த நிலமாவது"*

(தெ. கல். தொ. 19. கல். 131)

**ஆவரணம்** : (கலை) மதிள் சுவர். சுற்றாலைப் பெருமதிள். கோயிலின் முன் வாயிலாகும் தோரண வாயிலின் இருபுறமும் வந்துகூடும் திருச்சுற்றாலை மதிள்.

**ஆழ்வார் பராந்தகன் குந்தவையார்** : (அ) பக்தியால் உயர்ந்த இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழனின் மகளார் குந்தவையார் இராசராசனின் தமக்கையார். இது குந்தவையார்க்கமைந்த சிறப்புப்பெயர்.

*"ஸ்ரீ ராஜராஜதேவர் திருத்தமக்கையார், வல்லவரையர் வந்தியத்தேவர் மஹாதேவியார் ஆழ்வார் பராந்தகன் குந்தவையார்"*

(தெ. கல். தொ. 2 : 1. கல். 7)

**ஆழாக்கு** : (பொ) ஆழாக்கு, நாழியளவில் - எட்டில் ஒரு பகுதி. (முகத்தலளவை) (8 ஆழாக்கு - 1 நாழி).

**ஆழியும் நிகளமும்கழற்றி** : (அ) பகையரசரைச் சிறைப்படுத்திக் கொணருங்கால், அவர்கள் கழுத்தில் இறுக்கிப் பிணைத்த சக்கரம் கையில் பிணித்த இருப்பு வளையச் சங்கிலி ஆகியவற்றைக் கழற்றி - விடுவித்து.

(முதல் வீரராசேந்திரன் மெய்க்கீர்த்திகள்-

தெ. கல். தொ. 3 : 1 கல். 30).

**ஆள்அமஞ்சி** : (அ) கூலி இல்லாமல், கடமையாக கிராம மராமத்து வேலை செய்வது.

**ஆள்வரி** : (அ) கிராமத்திலமைந்த குடியிருப்புத் தலைக்கட்டு ஒவ்வொன்றிற்கும் பெறும் வரி, நிலமுழுத குடி மக்களிடம் பெறும் வரி.

*"இந்த நிலத்துக்கு வேலிக்காசுள்ளிட்ட அந்தராயமென்றும், நீர்விலை என்றும் நிலமுழுத குடிமக்களை ஆள்வரி என்றும் காட்டவும், கொள்ளவும் பெறாதோமாகவும்"*

(தெ. கல். தொ. 7. கல். 542, முதற்குலோத்துங்கன்.)

**ஆளிட்டு :** (சமு) ஆள் அமைத்து, ஆள் ஏற்படுத்தி; கிராமப் பொதுப் பணிகட்கு ஆள் அமைத்து.

**ஆளுடைய நம்பி புராணம் :** (சம) சுந்தரமூர்த்தி நாயனார் புராணம். திருவொற்றியூரில் பங்குனித் திருநாளில் ஆறாம் நாள் திரு மகிழ மரத்தடியில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும்போது, இறைவன் திருமுன் படிக்கப்பெறும் புராணம்.

*"ஆறாம் திருநாளான புதன்கிழமையும் ஏகாதசியும் பெற்ற ஆயிலையத்தினான்று - தேவதிர் ருமசிழின் கீழ் திருவோலக்கஞ் செய்து எழுந்தருளியிருந்து ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணம் கேட்டருளா நிற்க"*

(*இராசாதிராசசோழன் கி.பி. 1053*)

(தெ. கல். தொ. 5. கல். 1358).

**ஆளும் கணத்தார் :** (அ) ஊராட்சி செய்யும் சபையார் - பெருமக்கள்

*"காவிதிப்பாக்கம் யாளும் கணத்தார்"*

(தெ. கல். தொ 12. பகு.1. கல். 107).

**ஆற்றங்கரைத்தேவை :** (அ) ஆற்றங்கரைப் பாதுகாப்பாகும் பரா மரிப்புக்குத் தேவைப்படும் நிதியமைப்புக்குரியதாகப் பெறும்வரி. ஊரைச் சார்ந்து ஓடும் ஆற்றங்கரை உடைந்து ஊரழியாமல் கரையைத் திண்மைப்படுத்திக் கண்காணிப்பதற்குரிய நிதியாக ஊர்மக்களிடம் கிராம சபையார் பெறும் வரி. இதனை ஆற்றுப் பாட்டம் என்றும் கூறுவர்.

(புதுக்கோட்டை - தொகுதி. கல்வெட்டு எண். 559.)

**ஆற்றுக்கால் அமஞ்சி :** (சமு) கிராமமக்கள், தம்மூர் நிலங்களுக்கு உரிய பாசனத்திற்குரியதாக ஆற்றிலிருந்து பிரிக்கப்பட்டு வந் துள்ள கால்வாயினை, நீரற்ற காலங்களின் தாமே கூலியின்றி செப்பனிட்டுக் கொள்வது. கூலி இன்றி நாட் சோறிட்டு அச் செயல் ஆள்வழி நிகழினும் ஆற்றுக்கால் அமஞ்சியாகும். (*அமஞ்சி — காசுக்கூலியின்றிச் செய்யும் வேலை*)

**ஆற்றுக்குலை ;** (வே) ஆற்றங்கரையிடத்து வண்டலிட்டு உயர்ந்த மேடுகள். ஆற்றுப்படுகை என்பதும் இதுவேயாகும்.

**ஆற்றுநீரோடு கால் :** (வே) ஆற்றிலிருந்து நீரோடும் கால்வாய். ஆற்றுப்பாசனம்.

*(தெ. கல். தொ. 8. கல். 336).*

**ஆற்றுப்பாட்டம் :** (அ) ஆற்றங்கரைகளைச் செப்பனிடப்பெறும் வரி. ''ஆற்றங்கரைத் தேவை'' என்றும் கூறப்பெறும்.

**ஆறாயிரத்து :** (மொ) உயிர்மெய் நெட்டெழுத்திற்குரிய வரி வடிவு. பக்கக் காலிட்டெழுதும் முறை தொண்டை நாட்டில் பல்லவர் காலத்தில் இருந்தமையே இக்கல்வெட்டு உணர்த்துகின்றது. விசய நந்திவர்மன்.

*(தெ. கல். தொ. 12:1 கல். 34.)*

**ஆறிடு படுகை :** (வே) ஆற்றில் புது நீர் வரும் காலத்தில் அதனோடு கலந்து வரும் வண்டல்மண் இருபுறமும் படிவதனால் உண்டாகும் படிமக்கரை. திட்டு.

*(தெ. கல். தொ. 17. கல். 129)*

**ஆறிதக்கன் செங்கழு நீர் பொற்பூ :** (கலை) ஆறிதக்கன் என்ற பெயரால் செங்கழு நீர் மலர் வடிவில் பொன்னால் செய்யப்பட்ட பொற்பூ.

*''ஆறிதக்கன் செங்கழு நீர் பொற்பூ ஒன்றினால் பொன் இருகழஞ்சே காலாக''*

*(தெ. கல். தொ. 5. கல். 520)*

**ஆறிலொன்று அவநியிற் கூறுகொள் :** (வ) ''தென்புலத்தார் தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்ற ஐந்துடன் அரசுக்குரிய 'இறை' என்று மக்கள் தம் வருவாயுள் கூறு செய்து வழங்கும் வரியினைப் பெற்று''

*(இராசாதிராசன், மெய்க்கீர்த்தி).*

**ஆறுபாய்ச்சல் :** (வே) ஆற்று நீர்ப்பாசனமுள்ள நிலம்.

*''இவ்வெல்லையுள் அகப்பட்ட இருபூ ஆறு பாய்ச்சல் நிலன் ஆறு வேலியும்''*

*(தெ. கல். தொ. 14. கல். 143)*

**ஆனஞ்சு :** (சம) (ஆன் ஐந்து) பசுவிடத்திலிருந்து பெறும் ஐந்து பொருள்கள். பஞ்சகவ்யம், பால், தயிர், நெய், சாணம், சிறுநீர் என்பனவாகும். இவற்றின் கூட்டு தெய்வத் தன்மை கொண்டதென்பர்.

**ஆனை அச்சு :** (பெ) யானை உருவம் பொறித்த நாணயம்- பாண்டியர் ஆட்சியில் பாண்டிய நாட்டில் வழக்கிலிருந்த நாணயங் களுள் ஒன்று.

*"இவர் பக்கல் கைக்கொண்ட அச்சு ஏழு"*

*"நாந்கொண்டு கடவ ஆனை அச்சு"*

(பேரூர் கல்வெட்டு தெ. கல். தொ. 5. கல். 225, 226)

**ஆனைச்சாலை :** (அ) யானைகள் கட்டும் நெடிய இடம். யானை- களைப் பாதுகாத்தற்குரியதாக மக்களிடத்து அரசு பெறும் வரி யினையும் குறிக்கும்.

(புதுக். கல்வெட்டுத்தொகுதி - கல்வெட்டுஎண். 656.)

**ஆனைச் சாலைத்தேவை :** (அ) யானைகளைக்கட்டும் இடங்களில் பராமரிப்புக்காகப் பெறும் வரி.

**ஆஸ்பாலவிருத்தர் :** (சமு) கிராமத்திலுள்ள இளைஞர் முதல் அனு பவமும் வயதும் மிகுந்த கிராம காரியத்திற்கமைந்த சான்றோர் வரையில்.

*"பால் நம் வாசல் மரத்தேய் ஆஸ்பாலவிருத்தர் நிரம்ப பெருங்குறி கூடி இருந்து"*

(தெ. கல். தொ. 7. கல். 805)

*"மகாசபை திருவடியாரை ஆபால விருத்தம் நிரம்பக்கூட்டி"*

(உத்தரமேரூர் கல்வெட்டு. முதல் பராந்தகசோழன் கி. பி. 921)

**இங்குவிட்டு இது போய் :** (வ) அறம் செய்யப்பட்ட நிலங்கள் துண்டு துண்டாகப் பல இடங்களில் அமையுமானால் அவற்றை அளவிட்டுக் குறிக்கும் சாசன வழக்கில் அளந்து கணக்கிட்ட துண்டத்தை *"இதனை அளந்தபடி இங்கு விட்டுச்சென்று"* என்ற கருத்தமைப்பான சொற்கள் அருகி குறிக்கப்பட்டுள்ளன. (தடி- துண்டு நிலம்)

*"இந்நான்கு எல்லையுள் நடுவுபட்ட தடி நாலினால் இந்நிலம் ஒன்றேகாலே அரைமாவும், இங்குவிட்டு இதுபோய், பூவணமுடை யான் தடிநிலத்துக்கும்"*

(தெ. கல். தொ. 8. கல். 338).

**ஆண்டெழுத்துத்தேவை :** (அ) வரிவகையுள் ஒன்று. ஓராண்டள விற்கு சாசன மூலமாக காராண்மையோ, மீயாட்சியோ கொண்ட வர்கள், அவ்வுரிமையினைத் தொடர்ந்து ஆண்டுதோறும் புதுப் பித்துக் கொள்ளுதற்கு கிராமவரிப்புத்தகத்தாரிடம் பெறும் அனு மதி கையொப்பத்திற்கு அளிக்கும் வரி.

(தெ.கல், தொ.17 கல்.127)

**ஆணத்தி :** (அ அரசன் அறம் பற்றிச் செய்யும் நிவந்த ஆணையை, அப்படியே நிறைவேற்றும் அதிகாரம். இதனை 'ஆஜ்ஞப்தி', என்பர்.

*''விக்கிரமாதித்த வாணராயன் விண்ணப்பத்தாலும் காடுவெட்டி தமிழ் பேரரையன் ஆணத்தியாலும் ஏககிராமமாக்கி''*

*(விஜயநந்தி விக்கிரமவர்மன், 9,ம் நூற்றாண்டு)*

(தெ. கல். தொ.3; கல்.43)

**ஆணிப்பொன் :** (பொ) பத்தரை மாற்றுரைக்குக் குறையாத செப்பொன்

*''ஆணிப்பொன்னுக்கு அரைமாவரை''*

(தெ. கல். தொ. 4. கல்.160)

**ஆணியம் :** (வ) நாள் உதவித்தொகை. ஒருநாள் கூலிக்காசு.

**ஆணைவாசல் :** அரண்மனையின் தலைவாசல். அரசு ஆணை யிணைச் செயல்படுத்தும் அலுவலகம்.

**ஆணைவிலை :** (அ) அரசனிட்ட உத்தரவுப்படி அதிகாரிகள் செய்த விற்பனை.

**ஆத்திறைப்பாட்டம் :** (அ) பசுப்பண்ணை வைத்திருப்போர் செலுத் தும் வரி. இதனை ஆண்டொன்றில் சிலதடவையாகச் செலுத் துவர்.

**ஆதிரசாலை :** (சமு) ஆதுவர் சாலை 'மருத்துவசாலை, மருத்துவ விடுதி'

**ஆதிவாணியன் :** (வா) ஊரில் பழங்காலத்திலிருந்தே நிலையாக வாழ்ந்து வரும் வாணியக் குடியினன். ஊருக்கு உரிமை வாணியக் குடியினன். ஊருக்கு உரிமை வாணியன் எனினுமாம்.

*''தஞ்சாவூர் இருக்கும் ஆதி வாணியந் பொற்காமந் புலியந் வைச்ச திருநந்தா விளக்கு''*

(முதல்இராசராசன் கி.பி, 1010, தெ.கல். தொ.7. கல். 880)

**ஆதேசம் :** (மொ) கட்டளை. அரசன் அல்லது சபையார் தீர்மானம் செய்த முடிபு.

**ஆ பால விருத்தம் :** (சமு) இளைஞர் முதல் முதியோர் வரையில் (ஆ - இடைச்சொல்) குடவோலைத் தேர்வு.

*''மஹாசபைத் திருவடியாரை ஆ பால விருத்தம் நிரம்ப உட்புகக் கொண்டு, அன்று உள்ளூரிலே இருந்த நம்பிமார் ஒருவரையும் ஒழியாமே மஹாசபையிலே உள் மண்டபத்திலே இருத்திக் கொண்டு'' மகாசபை நிகழுமென்பதனை, உத்தரமேரூர்க் கல்வெட்டு உணர்த்துகின்றது,*

**ஆமைதவழ் :** (வே) நீரும் நிலமுமாக அமைந்த ஆமைதவழும் நிலம். இந்நிலம் 'ஆமைதவழி'' என்றும் கூறப்பெறும். சதுப்பு நிலம் எனினுமாம்.

**ஆயக்கடமை :** (அ) குறிப்பிட்ட நீர் நிலையை பாசனத்திற்காகப் பயன்படுத்தச் செலுத்தும் வரி.

**ஆயகம் :** (அ) ஊர்ச்சபை அமைக்கவியலாத சிறு கிராமங்களில், கிராம அதிகாரிகளைக் கொண்டே நிர்வாகம் நடத்தும் முறை. ஆயக அதிகாரிகளே ஆயக்காரர் ஆவர். இவர்கள் வரி வசூலிக்கும் உரிமை பெற்றிருக்கும் சிறப்பினால் ஆயக்காரர் என்னும் பெயர் பெற்றுள்ளனர்.

**ஆயம் :** (அ) சுங்கவரி. ஊர் எல்லைக்குள் வணிகத்திற்குரிய பொருள்கள் வரவும் போகவும் பெறும் வரி ஆயம் எனப்படும். ஆயம் பெறும் இடம் சுங்கச்சாவடி எனப்படும். குறித்த இடத்தில் வியாபாரிகள் கடையிட்டு விற்பனை செய்யும் சரக்குகட்குப் பெறும் காசும், பொருளும் ஆயமெனப்படும்.

*''நாங்கள் ஆயம் வைத்துக் குடுத்த பரிசாவது-சரக்குகளெல்லாத்திலும் பிள்ளையார்க்கு நீர்ந்த சுங்கத்தில் வரிகொள்ளக் கடவார்களாகவும்''*

(தெ. கல். தொ. 5 கல். 492) (முதல் குலோத்துங்கன் காலம்)

*''இவர் திருவாசலில் கடைய்பரிமாறுங் கடை ஒன்றுக்கு ஆயமும்' ''கடை ஒன்றுக்கு வேண்டுஞ் சரக்குகள் இக்கடையில் இருந்தவன் தான் வேண்டின இடங்களிலே கொண்டு பரிமாறி ஆயத்தால் உள்ளது இவர் பண்டாரத்தே ஒடுக்கக் கடவனாகவும்''*

(தெ. கல். தொ. 8. கல். 712)

**உபயம் :** (வடசொல்) (உபையம்) கோயிலுக்குரிய அறச்செயல்களை அமைத்த விதிப்படி முறையாக நிகழ்வித்தல். இறைகாணிக்கை. அறக்கட்டளை. தன் முதலீட்டால் பிறர்வழியே நிலையாக நிகழச் செய்விக்கும் அறச்செயல்.

*''இப்பசு இரண்டும் கன்று ஒன்றும் கைக்கொண்டு உபையமாகக் கைக்கொண்டு இச்சந்தி விளக்கு ஒன்றும்-எரிக்கக்கடவோம்''*

(தெ. கல். தொ. VII. கல்-400 குலோத்துங்கசோழன்)

*''ஒரு நுந்தாவிளக்குக்கு விட்ட பசுமுப்பது இப்பசுமுப்பது உபையமாகக் கைக்கொண்டு சந்திராதித்தவற் செலுத்தக் கடவோமாக''* (தெ. கல். தொ. 8. கல்-520)

*''திருவீழிமிழலை உடையான் பக்கல், இன்னாயனார் கோயிலிலே சந்திவிளக்கு எரிக்க உபையமாக்க கைக்கொண்டு சந்திராதித்தவரை ஒரு விளக்கு எரிக்கக் கடவோம்.*

(தெ. கல். தொ. 12 : 1 கல்-182, 197.)

**உபாசகர் :** (சம) ஆன்ம வழிபாட்டுடன் ஆகம நெறிமுறைகளோடு இறைவழி பாட்டிற்கு ஆவனசெய்யும் சைவாகம தவசியர்.

*,'திருக்காளத்தி மாதேவர் உபாசகரை அழைத்து நீங்கள் திருக்காளத்தி மாதேவற்கு நிவந்தப்படி செய்யக்கடவ நிவந்தங்கள் செய்யாதொழிந்ததேன்''*

(தெ. கல். தொ. 17. கல் - 328. முதல் இராசராசன். கி. பி. 1012)

**உபானம் :** (கலை) கோயில் கட்டட அடிப்படை. சிற்ப வேலைப் பாட்டுடன் அமைக்கப்பெறும் பீடத்தின் அடிப்படை.

*''உபாநாதி ஸ்தூபி பர்யந்தம்''*

**உபையத்தீட்டு :** (சம) கோயிலில் வழிபாடு செய்யும் பொறுப்பினை ஏற்பக் கொண்டதற்கமைந்த உடன்பாட்டுச் சீட்டு கோயில் செலவினங்களுக்குரிய வருவாயாகும் நிவந்தத்தினை ஏற்றுக் கொண்டாரிடம் பெறும் உறுதிச்சீட்டு.

*,'இவ்வனைவரோம் உபையத்தீட்டுக்குடுத்த பரிசாவது பூசைப் பேற்றுக்குக் கைக்கொண்டு இன்னாள் முதல் சந்திராதித்த வரையும், பூசிக்க கடவோமாகச் சம்மதித்து உபையத்தீட்டுக் குடுத்தோம்''*

(தெ. கல். தொ. 5. கல்-481)

**உய்யக்கொண்டார் :** (ச) சோழநாட்டு, திருநாகீஸ்வரம் கோயிலில் முதல் இராசேந்திரன் ஆட்சியாண்டு 14-ல் இருந்த செப்புத் திருமேனிகளுள் ஒரு மூர்த்தியின் பெயராகும். முதல் இராசராசனின் விருதுப்பெயர்களுள் ஒன்று.

*"ஸ்ரீபலி எழுந்தருளும் உய்யக் கொண்டார்க்கு சாத்தியருளச் செய்த திருப்பொற்பூ"*
(தெ. கல். தொ. 6. கல்-33)

**உரு :** (வா) உருப்படி, உருவம்

*"பசு ஆயிரத்தெண்பத்தாறினால் உரு ஒன்றுக்கு செல்விராசகேசரியால் உழக்காக அளந்து வருகிறபால்"*
(தெ. கல். தொ. 8. கல்-53)

**உருத்திரகணம் :** (சம) சிவனடியார் கூட்டம். (உருத்திரன்-சிவன்) 'உரிமையிற்றொழுவார் உருத்திரபல்கணத்தார்' என்பது தேவாரம்.

**உருத்திரகணிகை :** (கலை) சிவன் கோயில் தாசி.

**உருத்திரர் :** (ச) சிவனையே முழுமுதல் தெய்வமாகக்கொண்டு வழிபடும் அடியார்கள். சிவனடியார்.

**உருத்திர மகேசுவரர் :** (சம) சைவாகமத்தைக் கடைப்பிடித்து. ஆகம நியதிகளோடு இறைவழிபாடு செய்வதுடன், மக்கள் நலனுக்கும் அமைந்த சாந்திக்கிரியைகள் செய்யும் சிவவழிபாடுடைய சைவாச்சாரியர்.

*"திருஞான சம்பந்தன் திருக்காவணத்து-ஸ்ரீருத்ரமஹேஸ்வரரோம்'*
(தெ. கல். தொ. 23. கல்-95)

**உருத்திராக்கம் :** (சம) சிவசின்னங்களுள் சிறந்தது. இமயமலைச் சாரலில் வளரும் ஒருவகை மரத்தின் மணி (காய்) திரட்சியாகவும் பலமுகப்புடையதாகவும் அமைந்திருக்கும். இயற்கையுடன் பொன்னிறமும் பெற்றொளிர்வது சிறந்த மணியாகும்.

**உருத்திராக்ஷச்சரி :** (கலை) உத்திராட்ச மாலையில் உருத்திராக்க மணிகளுக்கிடையே கோர்க்கப்பெறும் வட்டத்தகட்டிணைப்பு. (சரி-நடுவில் துளையுடன் சுரித்த வளைவும் குப்பித வடிவம் பொருந்திய பொன்தகடு)

*"உத்திராக்ஷசரி பொன்னின் நூலிற்கோத்த உத்திராக்ஷம் ஒன்றும்"*
*"நம்பியாரூரர்க்கு குடுத்தன உருத்திராக்ஷத்தாழ்வடம் ஒன்றிற் பொன்னின் சரி ஐம்பத்தாறும், உருத்திராக்ஷம் ஐம்பத்தாறும் உட்பட நிறை"*
(தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டு தெ. கல். தொ. 2:2 கல்-38)

**உரோசணி நாள் ;** (வ) உரோகணி நாள். இருபத்தேழுவின்மீன்களுள் ஒன்று. உரோகணி நட்சத்திரம் கூடிய நாள்.

**உல்கு :** (அ) சுங்கவரி. கடல்துறை வழியாக ஏற்றுமதி இறக்குமதி செய்யப் பெறும் பொருள்களின் மீது விதிக்கப்பெறும் வரி

*''உல்கும் வரக்கூலியும் நாங்களேபட்டு அளந்து தரவு கொள்வோமாகவும்''*

(தெ. கல். தொ VIII. கல்-5.)

*''சாத்தொடு வழங்கும் உல்குடைப் பெருவழி''*
(பெரும்பாணாற்றுப்படை-வரி. 80-81 )

**உலகளந்தான் நாழி :** (பொ) உலகளந்தான் என்னும் பெயருடன் திருவிடைக்கழி திருமால் கோயிலில் நெய் அளக்க இருந்த முகவையாகும்.

*''இப்பசு ஆறுக்கும் மாதம் ஒன்றுக்கு உலகளந்தாந் நாழியால் அளக்கும் நெய்நாழிஉரி.*
(நாழி உரி-நாடுரி)

(தெ. கல். தொ. 12. கல். 147)

**உலகளந்தான்மரக்கால் :** (பொ) திருக்கோவலூர் திருவிடைக்கழி ஆழ்வார் கோயிலில் நெய் அளக்க இருந்த மரக்காலின் பெயர்
(தெ. கல். தொ. 7. கல். 143)

**உலகுடைய பெருமாள் :** (அ) நாட்டை ஆளும் பெருந்தலைவன். அரசன்; பெரியதேவர்; பெரியபெருமாள்; என்பதும் அரசனையே குறிக்கும்.

**உலைந்தனதேவை :** (அ) சீர்குலைந்தவற்றைச் செம்மை செய்து கொள்ளுதற்குச் செலுத்தும் வரியாகலாம். கூரை வேய்தல், விழுந்த மரங்களை வெட்டி எடுத்தல் போன்றவைகள் எனலாம்.

**உவச்சு :** (சம) திருக்கோயில்களில் செயகண்டி, தாரை, காளம் முதலிய இசைக்கருவிகளை, நாள் வழிபாட்டிலும், விழாக்களிலும் இசைக்கும் தொழில். இத்தொழில் செய்வார் ''உவச்சர்'' என்று கல்வெட்டுக்களில் கூறப்பட்டுள்ளது இவர்கள் ஊர் நன்மை தீமை கட்டும் பறை முதலிய இசைக்கருவியை இசைப்பவர்களாவர்.

*''உவச்சு எட்டாள் கொண்டு கொட்டுவாராக''*

(முதல் இராசராசன், தெ. கல். தொ. 12. பகு. 1. கல்-114)
*''ஊர் நன்மை தீமைக்கு உவச்சு கொட்டவும்''*

(தெ. கல். தொ. 23. கல்-463)
*''உவச்சுகள் தலைப்பறை கொட்டுவான் ஒருவனுக்கு குறுணி-நெல்'*
(தெ. கல். தொ. 17. கல்-252, 243. முதல் இராசராசன். கி.பி.100)

**உவச்சுப்புறம் :** (சம) திருக்கோயில்களில் இறைவழிபாட்டுக்குரிய மலர்களை நந்தவனத்திலிருந்து பறித்துவந்து மாலையாக்கித் தரலும், வழிபாட்டின் போது, செயகண்டிகை, காளம், சங்கு முதலிய இசைக்கருவிகளை இசைத்தலுமாகிய கோயிற் பணிகட்-கென்று இறையிலியாக விடப்பெறும் நிலம் (புதுக்கோட்டை கல்வெட்டு,30.

*''இத்தேவர்க்கு திருப்பணி மூன்று தேசகாலமும் செகண்டிகை உட்பட ஐஞ்சாள் சொண்டு திருப்பலி கொட்டுவதற்கு வைத்த நிலம் இவ்வூரில் உவச்சர்க்குரியது''*

*(வயிரமேகவர்மன். தெ கல். தொ. 12. கல்-114)*

*''சாலை கலமலுத்த கோவிராஜராஜகேசரி பந்மற்கு யாண்டு உவச்சர்கள் நிலப்புதுக்குளங்கரை, காளப்புறம், செயகண்டிகைப்-புறம்''*

*(தெ கல். தொ. 5. கல்-660)*

**உவச்சுவரி :** (அ) கோயில்வழிபாட்டின் போது செகண்டிகை, தாளம்,சங்கு ஆகிய இசைக்கருவிகளை இசைப்பதற்குரிய உவச்சர் தமக்குரிய காணியாட்சிக்குச் செலுத்தும் வரி.

**உழவுகாணியாட்சி:** (வே) நிலத்தை உழுது பயிர் செய்யும் உரிமை

**உழுத்து :** (கலை) கழுத்தில் பூட்டும் இவ்வணிகலன் முத்து, மாணிக்கம், வயிரம் ஆகிய ரத்நங்களால் அமைக்கப்பெறுவதால், முத்தின் உழுத்து, மாணிக்கத்தின் உழுத்து, வயிரஉழுத்து என்றெல்லாம் பெயர் பெறும்.

*முத்தின்உழுத்து ஒன்றிற்கட்டின வயிரம் மூன்றும் மாணிக்கம் மூன்றும் பொத்தி மூன்றும்''*

*(தெ. கல். தொ. 2. கல்-93)*

*(முதல் இராசராசன்)*

**உள்வரி :** (அ) இறையிலி நிலங்கட்கு வரியிலாரும் வரிக்கூறு செய்வார்களும் கணக்கில் உட்படுத்தி எழுதிய உள்வரியாகும். இது கணக்கில் எழுதியதற்கு இடும் சிறு வரியாகும்.

*''முன்பு காணியுடைய மன்றாடிகளுக்கே காணியாய் பதினொன்றாவது பசான முதல் அந்தராயம் பாட்டம் முன்பட தேவதாநம் இறையிலியாக இட்டுவரியிலாரும் வரிக்கூறு செய்வார்களும் எழுத்திட்ட உள்வரி தரச்சொன்னோம்''.*

*(தெ. கல். தொ. 5. கல். 663)*

**உள்ளாலை :** (கலை) கோட்டைக்குள் அமைந்த சுற்றிடம்.

*''தஞ்சாவூர் உள்ளாலைப் பாண்டி வேளத்து இருக்கும் இடையன் பனையூர் காரியும்''.* (*தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டு*)

**உள்ளாலை கணபதியார் :** (சம) உள்ளாலை கணபதியார். கோயில் முதல் திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் நிறுவப்பெறும் கணபதியார் (விநாயகர்) பிரகாரப்பிள்ளையார்.

*''ஆர்க்காடு கிழான் காடனானைக்காக உள்ளாலை கணபதியார்க்கு நாட்போனகம் இருநாழி''.*
(*முதல் இராசராசன், கி.பி. 996. தெ. கல். தொ. 8. கல். 841*)

**உள்ளிட்டார் :** (அ) சமவுரிமை உடையார். அரச நிர்வாகத்திற்கு உட்பட்ட அதிகாரிகள்.

**உள்ளிருப்பு :** (பொ) சேமிப்பு நிதி, பண்டாரத்தின் மூலப்பொருளான இருப்பு நிதி.

**உறுபாதை :** (அ) செம்மையாக்கப்பட்ட வழிகட்குரியதாகப் பெறும் வரி.

**ஊசிவாசி :** (அ) தட்டார் பேரால், அவர்களிடம் அரசுபெறும் வரி. தையற்காரர் செலுத்தும் சிறுவரி என்றும் கூறுவர்.

*''தட்டார் பேரால் ஊசிவாசி''* (*தெ. கல். தொ. 7 கல் 820*)

**ஊடுபோக்கு :** (அ) ஊர்ப்பொதுநிலத்தும் அரசுக்குரிய நிலத்தும் வழி அமைத்துக் கொள்ளுதற்குரியதாகப் பெறும் வரி.

**ஊர்க்கற்செம்மை :** (பொ) ஊரில் பொன் நிறுப்பதற்கென அரசு முத்திரையிட்டு வழங்கிய எடைக்கல்லால்சரியாக நிறுக்கப்பட்டமை (ஊர் கல் செம்மை)

*''பழியந் பில்லிகுடுத்த பொன் ஊர்க்கற்செம்மை அய்ங்கழஞ்சு''*
*''பொன் ஊர்க்கற் செம்மைமுப்பதின் கழஞ்சு''*
(*நிருபதுங்கவர்மன். கி.பி. 868-தெ. கல். தொ. 12. கல். 70. 87*)

**ஊர்கீழ் இறையிலி :** (வே) ஊராட்சி நிர்வாகத்தின் கீழ் இருந்து வரும் இறையிலி நிலம்.

*''இன்னிலம் இறுக்க பற்றாதென்றும், இன்னிலம் ஊர்க்கீழ் இறையிலியாக பெறவேணும் என்றும் இவ்வூர் நியாயத்தாரும்-ஊர்க்கீழ் இறையிலியாக நிறுத்திக்குடுத்து''* (*தெ. கல். தொ. 8. கல். 206*)
*''நிலம் இருவேலியும் ஊர்க்கீழ் இறையிலியாக நாங்கள் குடுக்-கையில்''* (*தெ. கல். தொ. 12. பகு. 1. கல். 233*)

**ஊர்க்குச் சமைந்து :** (வ) ஊர் நிர்வாகப் பொறுப்பிற்கு அமைக்கப் பெற்று-பணிபுரியும் சபையார்.

*"ஜெயங்கொண்ட சோழமண்டலத்துச் காலியூர் கோட்டத்துக் காயிரம் பேடு அரியாலூர் ஊரோம் ஊர்க்குச் சமைந்து—இறை யிறுப்போம்"* (தெ. கல். தொ. 7. கல். 97)

**ஊர் தண்டல் :** (அ) ஊர்களில் வரிவசூல் செய்யும் அதிகாரம்

*"இவ்வூர் ஊர்த்தண்டல் நெற்குன்றமுடையார் திருநட்டப் பெருமானான தென்னவன் மூவேந்தவேளார்".*

*(இராஜராஜதேவர் I. தெ. கல். தொ. 8. கல். 207)*

**ஊர்தரப்படி :** (வ) அரசு, அந்த அந்த ஊர்களின் நிலத்தரத்திற் கேற்ப விளையும் நெல் மகசூலின்படி—கொள்ளும் இறை.

*"இந்த நிலத்துக்கு ஊர்தரப்படி நெல்லு—இறுக்கக் கடவதாகவும்"*

*(தெ கல். தொ. 17. கல் 540. இராசராசன். கி. பி. 1180)*

**ஊர் திருப்பு :** (வே) ஊர்ச்சபை வழியே அனுமதிக்கப்பட்ட பொது நிலம் அல்லது இடம்.

**ஊர் நத்தம் :** (வே) ஊரைச் சேர்ந்துள்ள குடியிருப்பு நிலம்.

*"ஊர்நத்தத்து மனைக்களுக்கும்"* தெ. கல். தொ. 12. கல். 201)

**ஊர்பற்றாக மாட்டெறிந்து :** (வ) ஊருக்குரிய நிலங்களாக அமைந்த நிலவிபரக் கணக்கில், ஒரு பகுதி நிலத்தின் முன்னைய கணக்குடன் மேலும் ஒரு பகுதி நிலத்தினைச் சேர்த்து. மாட்டெறிந்து-மேலும் சேர்த்து

*"ஆக நிலம் இருபத்தொருமாவும் ஊர்பற்றாக ஒழுகில் மாட்டெறிந்து கல்வெட்டிக் குடுத்த நிலம்".*

(தெ. கல். தொ. 23. கல். 432)

**ஊர்மஞ்சிக்கமான பூமி :** (வே) ஊருக்குப் புறம்பாகவுள்ள தரிசு நிலம். மஞ்சிக்கப்—புறம் போக்கு நிலம், வரியற்ற வெற்று நிலம்.

*"ஊர் மஞ்சிக்கமாய் வரிசிலத்துக் கிடந்த பூமி"*

(தெ. கல். தொ. 3:3. கல். 156)

**ஊர்வாரியம் :** (அ) ஊரின் நிர்வாகத்தினை அவ்வப்போது செயல் படுத்தும் குழு. இது ஊர்ச்சபையுள் அடங்கிய குழுவாகும்.

*"அவ்வவ்வாண்டு ஊர்வாரியம் செய்யும் பெருமக்களே இடக்கடவராகவும்"*

(தெ. கல். தொ. 19 கல். 231)

**ஊரடங்கல் :** (வே) ஊர்க்கணக்கில் அடங்கிய நில புலன்கள்.

**ஊரடங்கு :** (அ) ஊர் நிலங்களைப் பற்றிய எல்லாவகையான விபரங்களும் அடங்கிய கணக்கு.

*"ஊரடங்கில் நன்செய் புன்சை கடமையும்"*

**ஊரழியப்போதேன் :** (சமு) பகைவரால் எமது ஊர் அழியப் பார்த்துக் கொண்டிரேன்.

*"ஊரழியப்போதேனென்று பட்டான்"*

*"பகைவராக ஊரழியப்பார்த்துக்கொண்டிருக்க மாட்டேனென்று சென்று எதிர்த்து இறந்தான்" (செங்கம் நடுகல்—கி. பி. 10 நூற்றாண்டு)*

**ஊராரும் கணத்தாரும் :** (வ) ஊர்ப்பொதுமக்களும், பெருநிலக்கிழவர்களும்.

(தெ. கல். தொ. 14. கல் 34,

**ஊரிடுவரிப்பாடு :** (அ) ஊர்ச்சபையார் விதிக்கும் வரி முறைகள் பற்றிய வரையறைகள். ஆண்டு வரி வருவாய்த் தொகையில் அரசுக்குச் சபையார் செலுத்தும் இறைக்காசு.

*"ஈராண்டு நிரம்பி மூவாண்டு தத்தங்காணியான நிலங்களுக்கு அவ்வவ ஊர்களிலாரோடும் ஊரிடுவரிப்பாடு இறை இறாது போநார் காணி உடையாளரைத் தவிர ஊர் நிலமாய் அவ்வவ ஊர்களிலாரே விற்றுக் கொள்ளப் பெறுவார்களாகவும்"*

(தெ. கல். தொ. 3:1. கல். 9)

*"ஊரிடு வரிப்பாட்டால் வந்த இறை எப்பேர்ப்பட்டதுக்கும் பலிசையாகக் குடுத்தபொன்"*

(தெ. கல். தொ. XIX கல். 55)

**ஊரிலேஏற்றி :** (அ) ஊர் கணக்கிலே வரி ஏற்றி

*"இன் நிலத்தால் வந்த இறையும் ஆளும் அமஞ்சியும் எப்பேர்ப்பட்ட சில்வரியும் ஊரிலே ஏற்றி நாங்களே இறுத்துக் குடுக்கக் கடவோமாகவும்"* (தெ. கல். தொ. 8. கல் 30)

**ஊராண்மை :** (அ) ஊர்ச்சபையின் ஆட்சி. ஒவ்வோரூரிலும் அதன் நிர்வாகத்திற்கென்று அமைக்கப்பட்ட ஊர்ச்சபையும் அதனுள் அடங்கிய வாரியங்களும், கிராம வரிவசூல்களையும், பிறசெயல்களையும் முறைமைகளையும் தன்னுரிமையுடன் செய்யும் அதிகாரத்தினை அரசு அளித்திருப்பதனை ஊராண்மை என்பது புலப்படுத்தும்.

"*பிரமதேயமாய்ப் பிடிசூழ்வித்து ஊராண்மையில் வேறொன்றாக்கி நாட்டாண்மையோடுடன் கூட்டி" (சிவகாச் செப்பேடுகள்)*

**ஊரும் ஊரிருக்கையும் :** (சமு) மக்கள் வாழும் ஊரும், ஊரைச் சார்ந்த நத்தம் முதலிய பகுதிகளும்.

**ஊற்றுக்கால் :** (வே) பெரிய வாய்க்காலினின்றும் தூம்பின்வழி ஊற்றாக அமைக்கப்பட்ட சிறு வாய்க்கால்.

**ஊறல்கால் :** (வே) ஊற்று நீர் பெருகி வழிந்தோடும் கால்வாய்.

**எச்சற்று :** (மொ) எச்சம் அற்று. பயிர் செய்வாரின்றி; வாரிசு இன்றி; கவனிப்பாரற்று.

*"ஆதன் பாக்கத்துக்கு காணியாளர் எச்சற்று நெடுங்காலம் பாழ் கிடந்ததென்று விட" (முதற்குலோத்துங்கன். கி. பி. 1089)*

(தெ. கல். தொ. 5. கல். 1359)

**எச்சோறும் :** (மொ) கூடவும், குறைக்கவும், செலுத்தவும் பெறும் வரிப்பாடு. எத்தகைய தேவைகளுக்கும் ஏற்ப அவ்வப்போது விதிக்கப் பெறும் வரிவகைகள்

*:"இன்னிலம் அரையே மூன்றுமாவுக்கும் இறையும் எச்சோறும்- எப்பேர்ப்பட்டதும் காட்டப்பெறாததாக இப்பரிசு கல்லில் வெட்டிக் குடுத்தோம்"*

(தெ. கல். தொ, 5. கல். 603)

எப்பேர்ப்பட்ட இறையுஞ் சொறுமாட்டும் காட்டப்பெறாதோமாக (தெ. கல். தொ. 7. கழ. 420)

*"இறையும் எச்சொறும் வெட்டி வெதிலையும் மற்றும் கொற்ற வாசலிற் போந்த குடிமை எல்லாம்"*

(தெ. கல் தொ. XVII. கல்.470.)

*"இந்நிலஞ்சுட்டி எப்பேர்ப்பட்ட வரிப்பாடும் காட்டப்பெறாதோ-மாகவும்"*

(தெ கல். தொ. 7 கல். 802)

**எட்டி ஏனாதி :** (சமு) வணிகர் தலைவன் பெறும் பட்டம் எட்டி என்பதாகும் வாட்போரில் வல்லான் பெறும் பட்டம்ஏனாதியாகும்.

*"பெருநேச்சரத்து எட்டி மண்ணனுயின மங்கல ஏனுதி உள்வீட்டுக் கோயிற் சேவகரிருவர்"*

(தெ. கல். தொ. XIV. கல். 31.)

ஏனாதி நாத நாயனார் - பெரிய புராணம்

எட்டி என்பது குலப்பெயராகவும் அமையும்.

*"மத்யஸ்தன் எட்டிக்குல ஸ்ரீகவை மங்கலதேசனேன்"*

(தெ. கல். தொ XIX. கல்.210.)

**எட்டுமாறிபொன் :** (பொ) எட்டுமாற்றமைந்த பொன்.

*''சொக்கச்சியன் கல்லிடைப்பட்டி எட்டுமாறி பொன் இருபத்தைங் கழஞ்சு''*

(*தெ. கல். தொ. 12. கல். 181*)

**எடுத்தளவு :** (பொ) எடுத்தலளவைக்குரிய கருவி (தராசு) தராசு செய்வாரிடம் பெறும் வரி.

**எடுத்துக்காட்டுப் பச்சை :** (அ) தானியங்களைத் தரங்காண்பாரும், தானிய விலைத்தரகரும் செலுத்தும் காணிக்கை வரி.

**எடுத்துக்குடியிருந்த மனை :** (வே) விளைநிலப்பகுதியில் மேடாக எடுத்துப் பயிரிடுவோன் குடியிருந்த வீடு.

*''இவ்வெல்லைக்குள்ளு ஆக்கினை - எடுத்துக் குடியிருந்த மனை-யிறையுள்ளிட்டு எப்பேற்பட்ட வரி கொள்ளக்கடவோமல்லா-தோமாகவும்*

(*விக்கிரமசோழன்-1126, தெ. கல். தொ. 5. கல். 993*)

**எண்ணாழிக்கால் :** (பொ) எட்டுநாழி கொண்ட மரக்கால். இவ் வளவை,

*''எட்டுபடி ஒரு மரக்கால்''* என்பதனோடு ஒக்கும். *முதல் பராந்தகன் காலத்தில் தொண்டை நாட்டில் மக்கள் வழக்கிலிருந்த மரக்-கால். (தெ. கல். தொ. 5. கல். 1371)*

**எண்ணாழிக்காலால் :** (மொ) எட்டுநாழி கொண்ட மரக்காலால். தமிழெழுத்துக்கள் உயிர்மெய் நெடிலாக வரும்போது, கி. பி ஒன்பதாம் நூற்றாண்டில் பக்கக்கால்கள் குறிக்கப்பெறுதல் வழக்கென்பதை இத்தொடர் காட்டுவதாகும்.

(தெ. கல். தொ. 12. பகு. 1. கல். 102) (கம்பவர்மன் ஆட்சி-யாண்டு 11)

**எண்ணைப்பந்தம் :** (அ) செக்கில் எண்ணெய் ஆட்டுபவர்கள் தொழில் முறையில் எண்ணெய் தெளிய தீப்பந்தமிடுவதற்கு இடும் வரி. பந்தம் காட்டாத எண்ணெய் தூயதாகும்.

**எத்தித்தடி :** (வே) நீர் இறைக்கும் பாசனமுள்ள நிலம். ''நீர் படுவன கருமத்துடவை தடி - 2. எத்தித்தடி-ரு''. (தொல்பொருள் ஆண்டறிக்கை எண். 12/1929)

**எதிர்கணக்கு :** (அ) கோயில்களுக்குரியதாக எழுதப்பெறும் நாள் நடை முறை வரவு செலவு கணக்கினை, உள்ளவாறு ஊர்ச் சபையினரோ, அன்றிக் கண்காணிப்பாளரோ பிரிதி செய்து வரும் கணக்கு, எதிர்கணக்கு எனப்படும். இதனை

*"எதிர்நடை" என்றும் கூறுவர்.*

*"இத்தேவர் தேவகந்மிக் கணக்கு அரையன்'*
*மதுராந்தகனான சோழபெருங்காவிதிக்காகக் கணக்கெழுதுகின்ற மத்யதஸ்ன் ஊரான் பட்டாலகனும் எதிர்கணக்கு இவ்வூர் ஸிவபிராமணந் சவுஸிகன் நெற்க்குப்பை திருமழுவாடி கணக்காகவும்"*
*(தெ கல். தொ. 5. கல். 652)*

**எதிராம் ஆண்டு** : (வ) நிகழும் ஆண்டினைத் தொடர்ந்து வரவிருக்கும் ஆண்டு.

**எதிராமாண்டின் எதிராமாண்டின்** : (வ) நிகழும் ஆண்டினைத் **எதிராமாண்டு** தொடர்ந்து அடுத்துத் தொடர்ந்து வரும் மூன்றாவது ஆண்டு (தெ. கல் தொ. 14. கல்.7)

**எதிரேன்று** : (சமு) போர்க்களத்தில் பகைவர் படைக்கு எதிர் சென்று நின்று. (ஏன்று-ஏற்று)

*"செப்பருந் திறந்த கொப்பத்தகவையிற் சென்தறதிரேன்றமர் தொடங்கிய பொழுது"*
*(இரண்டாம் இராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)*

**எந்நோபாதி** : (மொ) என் ஒரு பாதி. எனக்குச் சொந்தமான ஒரு பகுதி—நிலம்.

*"இந்நாயனார் கோயிலில் எந்நோபாதி காணியில்"*
*(தெ கல். தொ. 5 கல். 226)*

**எயில் கோட்டம்** : (அ) தொண்டை மண்டலத்தின் இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்று. எயில்நாடு இதனுள்அடங்கியதாகும்.

**எருத்துக்கூலி** : (வ) எருதுகளின் மீது விற்பனைப்பொருள் மூட்டைகளைச் சுமத்திச் செல்லுவதற்குரிய கட்டணம்.

*"மணலியினின்றும், திருவக்கரைக்கு எடுத்த எருத்துக்கூலி, பொதி ஒன்றினால் னெல்லு இருகலன்-"*
*(தெ. கல். தொ. 17. கல்-222)*

**எருமைத்தொறு கள்ளர்கொள்ள** : (சமு) எருமை நிரையினைக் கள்ளர்கள் களவிட்டுக் கொள்ள.

*"தாழையூர் இயைம்பர்தன் எருமைத்தொறு கள்ளர் கொள்ள போகாமை பட்டார் தந்தையும் மகனும்".*
*முதற் பராந்தகன் காலம்-செங்கம் நடுகல்)*

**எல்லாமாள-நின்ற காலத்து** : (மொ) எல்லா நாடுகளையும் ஆட்சி செய்கின்ற காலத்து. (கம்பவர்ம பல்லவன்-கி. பி. 9-ஆம் நூற்றாண்டு) (செங்கம் நடுகற்க;)

**எலவை வரி :** (அ) இச்சொல், "நாடென்ற வரிகளும்" "நாடென்ற எலவைகளும்" என்று புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டுக் கள் (எண்-253, 264) கூறுவதால் ஊர்கள் நாடென்ற உயர்வைப் பெறுவதற்கு அரசு விதிக்கும் சிறப்பு வரியாகும். நகராட்சி, மாநகராட்சி ஆதல்போல. நாடென்றவரி நாடென்றவரியென்றும் எல்லைவரி எலவை வரியென்றும் படிக்கப் பெற்றிருத்தல் கூடும்.

**எவ்வி. பத்திர முருளிப்பட்டான் :** (சமு) உறைபிலம்புமான (அம்ப-றாத்தூணியில் அம்புகள் தீர்ந்தமையால்) பகைவர் மேல் தானி வாள் உருவிப் போரிட்டிறந்தான் "ஒருதானாகி ஆளெறிந்தன்று" என்னும் கரந்தைத் திணையும் குறிப்பிடத்தக்கதாகும். பத்திரம்-வாள்.

(பு.வெ.மா.) (சின்னையன் பேட்டை-நடுகல்).

**எளவெழுத்து :** (மொ) எழுநூற்றுவன் எழுத்து. எண்ணும் எழுத்தும் ஒக்கநின்ற கல்லெழுத்து நடை (உத்தமசோழன் கி பி. 972. தெ. கல். தொ. 19. கல்-63)

**எற்சோறு :** (சம) (எல்சோறு) திருக்கோயில்களில் உச்சியம்போதில் அடியார் கட்களிக்கும் உணவு. (தெ. கல். தொ. 8. கல். 85)

**எறிய :** (மொ) அழிக்க, ஊரை அழிக்க.

*"மங்கள நாடுடைய மாதேவர் படை சாத்தனாரை எறிய"*
*(செங்கம் நடுகற்கள் — சம்பவர்மன் — கி. பி. 9 ஆம், நூற்றாண்டு*

**ஏகாவல்லிவடம் :** (கலை) பொன்னாலான சரட்டில் பொன் முத்துக்-கள் கோக்கப்பட்ட ஒற்றைச்சரமாலை. இம்மாலை, பொற் காசுகளாலும் இரத்தினங்களாலும் செய்யப்பட்ட சிறுபதக்கங்கள் கோத்த மாலையாகவும் அமையும்.

*"ஏகாவல்லிவடம் ஒன்றினால் நெல்லிக்காய் முத்து நூறும், கடைத்தொழில் இரண்டும்".*
*"நீலமும் முத்தும் சோத்த ஏகாவல்லிவடம்"*
*(தெ. கல். தொ. 8. கல். 121, 329)*

**ஏணிக்காணம் :** (அ) ஏணி வைத்து மரமேறும் ஈழவர்க்குரிய வரி. இது காசாக வசூலிக்கப்பெறும். (தெ. கல். தொ. 2 பக்கம் 67)

**ஏத்தப்புலம் :** (வே) ஏற்றப்பாசனத்தால் விளையும் நெல்வயல்.

**ஏத்தம் :** (வே) மேட்டுப்பாங்கான நிலம் ஏற்றமான தரை.

*"திருவூறல் மஉறாதேவர் இவ்வூருடைய வேத்தம் திருக்காரி குழி க-ம், -தென்கரை ஏத்தம் க-ம். கொட்டைப் பாக்கத்தில் திருவூறல்பட்டி க-ம் ஆக" (தெ. கல். தொ.5. கல். 1378)*

**ஏம்பல் :** (வே) ஏரிப்பாசனமாக அமைந்த நிலம்.

*"குடிகாடு அரநிருவி ஏம்பலில் கடமையும்"*
*"கல்லாத்தான் ஏரிக்கீழை ஏம்பலின் தென்கடைக் கேய் ஏறப்போகவும்"* (தெ. கல். தொ. 8. கல். 410)

**ஏர்வரி :** (அ) உழும் ஏரொன்றிற்கு இன்ன அளவு வரி என்ற முறையில் அரசு இறுக்கும் வரி.

**ஏரிப்பட்டி :** (வே) ஏரி நீர்ப்பாசனம் பெறும் நிலம் ; ஊர்.

*"பாறைச் செறுவு ஏரிப்பட்டி செய்தது"*
(தெ. கல். தொ. 12. கல்-110.)

**ஏரிப்பாசி :** (அ) ஏரியிலுள்ள மீன் குத்தகை.

*"இந்த ஏரிகளில் ஏரிப்பாசியில் விலையில் பணம் உள்ளது"*
(தெ. கல். தொ 23. கல். 69)

**ஏரி மீன் :** (அ) ஏரியிலே மீன் வளர்த்தல். பருவகால முறைமையில் இதற்கமைந்த வரி ஏரிமீன் பாட்டம் என்றும் கூறப்பெறும்
*"ஏரிமீன் இவ்வேரியிலே குழிவெட்டக் கடவதாகவும்"*
(தெ. கல். தொ. 8. கல். 83)

**ஏரிவாரியப் பெருமக்கள் :** (அ) ஏரிகுளங்களை மேற்பார்வைசெய்யும் குழுவினர். ஏரிவாரியம்-நீர்நிலைகளைப் பாதுகாத்துப் பயன் செய்யும் அதிகாரமுடையவராய், கிராமசபையின் உட்பிரிவாக அமைந்த குழுவினர்.

*"படுவூர் கோட்டத்து, காவிரி பாக்கமாகிய அமநி நாராயண சதுர்வேதி மங்கலத்துள், இவ்வாட்டை ஸம்வத்சரவாரிய பெருமக்களும், தோட்டவாரியப் பெருமக்களும், ஏரிவாரியப் பெருமக்களும் கழநிவாரியப்பெருமக்களும் ஸ்ரீ வட வீரநாராயண பெருமக்களும், பஞ்சவார வாரிய பெருமக்களும், கணக்கு வாரிய பெருமக்களும், கலிங்கு வாரிய பெருமக்களும், தடிவழிவாரிய பெருமக்களும், பட்டர்களும், விஸிட்டர்களும் உள்ளிட்ட மஹாசபையும்"*.
(தெ. கல். தொ. 3:3. கல். 156)

*"நம் பெரிய ஏரிக்கு நம்மூர் வளையிற் சுற்று எல்லா நிலமும் பரப்பூவசம் மாத்தால் பதக்கு நெல்லு சந்திராதித்தவல் ஏரி ஆயமாவதாகவும் இப்பரிசு ஸம்வத்ஸரந்தோறும் ஏரிவாரியஞ் செய்யும் பெருமக்களே கொண்டு ஏரி கல்லுவிக்கக் கடவராகவும்"*,
(முதல் இராசராசன். கி. பி. 996)
(தெ. கல். தொ. 7. கல். 805)

**ஏவற்த்திட்டு :** (அ) (ஏவற்தீட்டு) ஆணைப்பத்திரம், உத்தரவுச்சீட்டு.

**ஏழுயர்களிறு :** (பொ) ஏழுமுழம் உயர்ந்திருக்கும் உயர்சாதி யானை. இதுவே பட்டத்திற்குரியது. (விசயராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**ஏற்றம் இறுத்து:** (பொ) சேர்த்துக்கொடுத்து; மிகுத்துக்கொடுத்து.

*''முன் நிமந்தஞ் செய்தபடி பொன் பன்னிரு கழஞ்சின் மேல் ஏற்றம் இறுத்து வருகிற பொன்னிரு கழஞ்செய் ஏழுமஞ் சாடியினால்''*

(இறுத்தல்-பெறுதல், வாங்குதல்)

(முதற்குலோத்துங்கள் கி. பி. 1077)

(தெ. கல். தொ. 5. கல். 1356)

**ஏற்றிவிட்ட :** (மொ) முன்னர் இருந்த அளவைவிட, மேலும் கூடுதலாகச் செய்த.

*''இம்முதலுக்கு எங்களால் நடத்தவொண்ணாது என்று சொல்லுகையால் இந்த மிலையங்கிழான் அபிமான துங்க பல்லவரையர் எங்களுக்கு ஏற்றிவிட்ட நிலமாவது''*

(தெ. கல். தொ. 17. கல்-171.)

**ஏற :** (மொ) பொருந்த. அமையுப்படியாக, இடம்பெற.

*''இது பழைய கல்படி. இந்த ஸ்ரீவிமானத்திலே ஏற வெட்டினமையில்.''*

(தெ. கல். தொ. 12. கல். 78)

**ஏறஎடுத்துக்கொண்டு :** (மொ) தன் உரிமைக்கு மிசுதியாக எடுத்துக் கொண்டு.

*''திருநாமத்துக்காணி உடலை ஏற எடுத்துக்கொள்கையில்''*

(உடல்-முலதனம்) (தெ. கல். தொ. 8. கல். 193)

**ஏறட்டு :** (மொ) உரிமைப்பொறுப்பை ஏற்றுக்கொண்டு

*''இறைத்தேவைகளால் வந்தன நாங்களே ஏறட்டு இறுத்துக் குடுக்கக் கடவோமாகவும்''.*

(தெ. கல். தொ. 8. கல். 193)

**ஏறட்டுக்கொண்டு :** (மொ) எங்கள் பொறுப்பினதாக ஆக்கிக் கொண்டு.

*''எப்பேற்பட்ட இறைகளும் நாங்களே ஏறட்டுக் கொண்டு இறுக்கக் கடவோம்''* (தெ. கல் தொ. 7. கல். 401)

**ஏறட்டுப்பற்றுகிற :** (மொ) தன்னுடையதாகப் பற்றிக்கொள்கின்ற-
-நிலம்.

*"முன்னால் பற்றிலியாய்க் கிடந்த நிலமான கொழுந்தன்
ஆழ்வார் தன்பேர் நாட்டிக் காணி ஏறட்டு பற்றுகிற நாளில்"*

(தெ. கல். தொ. 8 கல். 266)

**ஏறப்போன தெரு :** (வ) குறுக்கிட்டுச் சென்ற தெரு.

*"தேவரடியார் மத்தவாணச் சேரியேயேறப்போன
தெருவுக்குக் கிழக்கும்"* (தெ. கல். தொ. 3:1. கல். 15)

**ஏறி அருளப்பண்ணுவித்து :** (வ) கோயிலில் பிரதிஷ்டை செய்வித்து.
(திருவாங்கூர். கல். தொ. 1. கல். பக். 91)

**ஏறின :** (மொ) சேர்ந்த; கூடின.

*"மஹாதேவர் தேவதானங்களும் திருவடிகள் தேவதானங்-
களும் அவ்வூரோடும் ஏறின பெண்பள்ளியும்"*,

(தெ. கல். தொ. 2. கல். 4)

**ஏறினகுடி :** (சமு) புதிதாகக் குடியேறிய மக்கள்.

*"இவ்வூர் ஏறினகுடிகளை ஸபாநியோகத்தால் ஸம்வத்ஸரவாரியஞ்-
செய்வோரும் ஏரிவாரியஞ்செய்வோரும், தோட்ட வாரியஞ் செய்-
வோரும் இக்குடிகளை வெட்டியும் வேதினையும் வாலக்காணமும்
கொள்ளப் பெறாதோமாகவும்"*

(தெ. கல். தொ. 3 : 1. கல். 12)

**ஏறினமடக்கு :** (அ) கோயில்களுக்கு உரியதாகவோ, ஊர்ப்பொது
வாகவோ, தனியார் உரிமையாகவோ இருந்த நிலத்தின் அளவு,
வருவாய், வரி ஆகியவற்றை ஊர்நிலக்கணக்கினுள் அடக்கிச்-
சேர்த்து எழுதுவது, ஏறின மடக்கு எனப்படும்.

*"தேவதான ஓபாதி ஏறின மடக்கால் நெல்லும் உட்பட"*
(தெ. கல். தொ. 17 கல். 462)

**ஏறின வழி :** (சமு) இடையே குறுக்கிட்டுச் செல்லும் சாலை
*"ஸ்ரீகோயில் நின்று மடவிளாகத்து ஏறின வழிக்குக் கிழக்கும்"*
(தெ. கல். தொ. 8. கல். 672)

**ஏறுசாத்து :** (வா) பொதிமாடுகளின் மேல் சரக்கு மூட்டைகளை
ஏற்றிச்செல்லும் வணிகர் தொகுதி (வணிகர் கூட்டம்) இது

சாத்து, மாசாத்து என்றும் பெயர் பெறும். இவ் வணிகத்தின் தலைவன் சாத்தன், மாசாத்தன் என்று பெயர் பெறுவன். தொழிலானமைந்தது சாத்து.

*''சாத்தொடு வழங்கும் உல்குடைப் பெருவழி''*
*(பெரும்பாணாற்றுப்படை, வரி-80-81.)*

**ஏறும்புகாணித் திருக் குத்துவிளக்கு :** பீடத்திலிருந்து எழுந்துள்ள உலோகக் கம்பியில் மாட்டப்பெறும் நெய்யகலை வேண்டிய உயர அளவில் நிறுத்தி வைப்பதற்கமைந்ததாக, கம்பியில் உள்ள துளையில் புகு ஆணியிட்டு நிறுத்தி எரியவைக்கும் குத்துவிளக்கு. (புகு ஆணி-புகாணி)

*''திருநந்தா விளக்கு எரிய நான் இட்ட ஏறும் புகாணித் திருநந்தாவிளக்கு ஒன்று''* (தெ. கல். தொ. 4. கல். 860)

**ஏனாதி :** (சமு) ஈழகுலச்சான்றார் பெறும் பட்டம். வாட் போரில் வல்லானுக்களிக்கும் பட்டம்

*''இப்படி அறிவேன் ஏனாதி கிழவனேன்''*

(தெ. கல். தொ. VI. கல்-430.) *ஏனாதி நாயனார், பெரிய புராணம்*

**ஐங்காயம் :** (சம) மிளகு, மஞ்சள், சீரகம், கடுகு, கொத்தம்பரி (கொத்துமல்லி) ஆகிய ஐந்தும் ஐங்காயமெனப்படும். திருக் கோயில்களில் நிவேதன நிவந்தமாகக் கூறப்பெறும் சாசனங்களுள், கறிவகைக்களுக்குரிய பொருள்களாக ஐங்காயம் என்ற பெயரால் இப்பொருள்கள் கூறப்பட்டுள்ளன.

(தெ. கல். தொ. 14. கல். 16-அ. *திருச்செந்தூர்*
*வரகுணபாண்டியன் - கி. பி. 9. நூற்றாண்டு)*

**ஐச்சு நிலை குத்துவிளக்கு :** (சம) ஐந்து அடுக்காக அமைந்த குத்து விளக்கு. மூன்று அடுக்குள்ள குத்து விளக்கும் வழக்கிலுள்ளது. (ஐச்சு-ஐந்து)

*''திருவண்ணாமலை உடையநாயனார்க்கும், திருக்காமக் கோட்டநம்பிராட்டியார் உண்ணாமலை நாச்சியார்க்கும் திருநந்தாவிளக்கு இட்ட ஐச்சு நிலை குத்துவிளக்கு''*
*''இவ்வட வாயிலாண்டை இட்ட மூன்றுநிலை குத்துவிளக்கு''*

(தெ. கல். தொ. 8. கல் 95., 101)

**ஐஞ்சிரண்டு வண்ணம் :** (வ) ஐந்து பங்கு நெல்லைக் குற்றி அரிசியாகக் கொள்வது இரண்டு பங்கு அரிசியாகும். இதுவே ஐந்துக்கு இரண்டு வண்ணம் என்பதாகும். ஐந்து மரக்கால் நெல்லாயின் குற்றித்தீட்டிய முழு அரிசி இரண்டு மரக்காலாகும் என்பதாகும்.

*"திருவமுது மூன்று சந்திக்கும் அரிசி குறுணி நாநாழியாக குற்றுக் கூலி உள்பட ஐஞ்சிரண்டு வண்ணத்தால் நெல்லு முக்குறுணி அறு நாழியும்"*

(தெ. கல். தொ. XVII. கல். 222)

**ஐஞ்சு :** (பெ) ஐந்து (எண்ணளவை) (வழக்கும் போலியும் வரையாது வந்த சொல்)

**ஐஞ்ஞாழி :** (பெ) ஐந்து நாழியளவு-இவ்வளவைக்குரிய மரக்கால் சோழராட்சியில் வழக்கிலிருந்தது.

**ஐந்தலைமணி :** (சம) ஐந்து மணிகளமைந்த கொத்தாக உலோகத்தால் செய்யப்பட்டு கோயில்களில் தொங்குமாறு அமைக்கப் பெறும் மணிக்கொத்து.

**ஐம்படைப்பருவம் :** (சமு) ஐம்படைத்தாலி அணிந்த இளமைப்பருவம். ஐம்படைப் பருவத்திலேயே விக்கிரமசோழன் போரில் கலந்து கொண்டிருந்தான் என்பதனை - மெய்க் கீர்த்தி குறிக்கின்றது ஐந்துபடை-திருமாலின் படைக்கலங்களாகிய, சங்கு, சக்கரம், வில், வாள், கதை ஆகியவைகளாகும். இவற்றைப் போன்ற வடிவங்களில் பொன்னால் செய்யப்பட்டு கோக்கப்பட்ட சிறு சரத்தினைக் குழந்தைகட்கு அணிவிப்பது பண்டைத் தமிழ் வழக்காகும்.

*"ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும் வேங்கை மண்டலத்து ஆங்கினி திருந்து"*

*(விக்கிரம சோழன் மெய்க்கீர்த்தி)*

**ஐயன்பாத்தி :** (அ) கிராமகாவல் தெய்வங்களுள் ஒன்றான ஐயனார் கோயிலுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்.

**ஐவகைவேள்வி :** (சமு) இதனை, "பஞ்சமஹாயக்ஞம்" என்பர் அவை; கடவுள் வேள்வி, பிரம வேள்வி, பூத வேள்வி மனித வேள்வி, தென்புலத்தார் வேள்வி என்பனவாம்.

*"ஐய்வகை வேள்வியுஞ் செய்வினையியற்ற"*
*(மாறவர்மன் சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி)*

**ஐவண்ணமாக :** (வ) கொடுக்கப்பெற்ற நெல்லை உரலில் குற்றிய பின்னர் ஐவண்ணமாக அளப்பதாகும். ஐந்து வடிவங்கள் அரிசி, நொய், நொறுங்கு (குறுணை), உமி, தவிடு என்னும் பகுதிகளாகும்.

**ஒக்கக்கொண்ட :** (மொ) ஒருசேரக்கொண்ட, ஒன்றாகக் கைக்கொண்ட, ஒரேதொகையாகக் கொண்ட-காசு.

*"காசு இருபத்துநாலுக்கு ஒக்க கொண்ட காசு ஙளசாய (குலோத்துங்கன் I-கி. பி. 1073)*

(தெ. கல். தொ. 8. கல். 284)

**ஒக்கத்திருத்தி :** (மொ) ஒன்றுபோலத் திருத்தம் செய்து, ஒரே நிலமாகத் திருத்தி.

**ஒட்டடை :** (வே) உத்தரலாடம் என்னும் வட இந்திய நாட்டில் விளையும் நெல்வகையுள் ஒன்று. கி பி. 11-ஆம் நூற்றாண்டில் இந்நாட்டினை ஆட்சிசெய்த மகிபாலன் என்னும் மன்னன் இந் நெல் வகையினுக்கு ஆக்கம் செய்ததனாற் போலும் "ஒட்டடை மகிபாலன்" என்று சிறப்பிக்கப்பட்டுள்ளான், இந்நாட்டை வென்ற முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியில் இத்தொடர் இடம் பெற்றுள்ளது.

*"தொடுகடற்சங்கு ஒட்டடை மயிபாலனை, வெஞ்சமர்வளாகத் தஞ்சுவித்தருளி"*

*(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)* (தெ. கல். தொ. V. கல்-636)

**ஒட்ட விஷயம் :** (அ) ஒரிசாதேயம், ஒட்டரர் நாடு. (விஷயம்-தேசம்)

**ஒட்டி :** (மொ) சேர்த்து உரிமையாக்கி

*"பெரும்பாணந் சக்கடி அரையர் மகனார் மாதேவனார்க்கு ஒட்டி விற்றுக்குடுத்த பரிசாவது".*

(தெ. கல். தொ. 12. பகு. I. கல். 102)

**ஒட்டிக்குடுத்தோம் :** (வ) உத்தரவு செய்து தந்தோம். இசைவு செய்து கொடுத்தோம்.

*"தண்டிக்கொள்ள ஒட்டிக் கொடுத்தோம் சபையோம்"*

(தெ. கல். தொ. 12 பகு. I. கல். 61)

**ஒட்டிக்குடுத்தபரிசு :** (வ) உறுதி செய்துகுடுத்த முறைமை (பரிசு-சாசனம்) (சேர்த்துக் கொடுத்த தீர்மானம்.)

**ஒட்டு, ஒட்டி :** (மொ உடன்படிக்கை. ஒட்டிக் கொடுத்தான்-உடன்படிக்கைச் செய்துகொடுத்தான்.

**ஒட்டுக்கொண்டு :** (மொ) சேர்த்துக்கொண்டு.

*'இப்பாலுக்கு முன்பிலாண்டுகளும் நெய் ஒட்டுக்கொண்டு வரும்படியே நெய் அளக்கவும்.'' (பாலும் நெய்யுமாகச் சேர்த்து அளக்கவும்)*

(தெ. கல். தொ 8. கல். 54)

**ஒடுக்கியும் பிரித்தும் :** (அ) சேர்த்தும் வேறுபடுத்தியும்.

*''ஊர்களை ஒடுக்கியும் பிரித்தும் கொள்ளக்கடவது''.*

(தெ. கல். தொ 12. கல் 191)

**ஒத்துரைக்குமண்டபம் :** (சம) சமணப்பள்ளிகளில் அறமுரைக்கும் மண்டபத்தில், சமணத்துறவியர் இருவர் மூவர் ஒன்றாக அமர்ந்து சொல்லும், பொருளும் மாறாது அறநெறிகளை ஒத்த குரலில் ஒரே நெறியில் உரைப்பது, வழக்கமாதலின் அத்தகைய மண்டபங்களென்று பெயர் பெற்றன. இதனை, ஓத்து என்று குறிக்கப்பெறும் வேதமுரைக்கும் மண்டபமென்றும் கூறலாம்.

*''சிங்கபுரநாட்டு கீழ்வழிச் சிற்றாமூர்க் காட்டாம் பள்ளியில் ஒத்துரைக்கு மண்டபத்திற்கு'' (முதல் இராசராசன். கி.பி 1005)*
(தெ. கல். தொ. 7. கல். 828)

*ஒத்துரைக்கும் மண்டபம். ஒத்து - ஓதப்படும் நூல்கள். உரைத்தல்-அவற்றின் பொருளை விரித்துக் கூறுதல்.*

**ஒத்துவக்காணி விருத்தி :** (கலை) சாமவேத இசைப்பாடலுக்குரிய சுலோகங்களை ஆசாரியன் முதலில் பாட, அதே சுலோகத்தை மற்றொருவர் தொடர்ந்து பாடும் முறைமையாகிய வேத விருத்திக்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

*''முருகமோடன் எடுத்த மண்டபத்துள் ஒத்துவக்காணி விருத்தியும் பாரதப்புரமும்' (தெ. கல். தொ. 5 கல். 223)*

*ஓத்துவக்காணி விருத்தி என்றிருத்தல் வேண்டும். ஓத்து-வேதம். வக்காணித்தல் - பொருள் வழுவாது ஓதுதல். விருத்தி - அவர் பெறும் நிலம்.*

**ஒப்பானமைக்கு :** (வ) சார்பானமைக்கு. சாசனத்தில் சான்றாகக் கையொப்பமிடுவாருள் ஒப்புக் கொண்டமைக்குரியாரொருவர்க்காக மற்றொருவர் கையெழுத்து இடுதல் (வழக்கு).

*"இவை கூத்தப்பெருமான், ஒப்பானமைக்கு திருச்சிற்றம்பல முடையார் எழுத்தென்றும்",*

**ஒப்புமுத்து:** (பொ) ஒளிக்கதிர் மிகுந்த முத்து. முத்துவகையில் ஒன்று. (தெ. கல். தொ. 2. 2. கல். 46)

**ஒபாதி:** (மொ) ஒரு பாதி. உரிய பங்கு. ஒரு கூறு.

*"எங்கள் பிதாக்கள் வேளன் தூணின்றான் ஒபாதி மூன்றில் ஒன்றும் (புதுக். கல்.97.)*

**ஒருகுழிநிலம்:** (வே) ஒரு குழி அளவுள்ள நிலம் இதனை பன்னீரடி சதுரக்குழி என்றும், 144 சதுரஅடிகொண்ட நிலப்பரப்பு என்றும் கூறுவர். இக்குழியென்னும் நிலப்பரப்பளவு 576 சதுர அடி வரையில் வெவ்வேறு வகையில் கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகின்றது. ஆயினும் ஒருகுழி என்பது 33 அங்குல நீளமுள்ள தச்சுமுழக் கோலால் அளந்த சதுரமான நில அளவு என்பது மனைநூல் கணக்கு.

*இரண்டாயிரங்குழி ஒரு வேலி நிலம் எனவே இரண்டாயிரத்தில் ஒருகூறு ஒருகுழியாகும்.*

**ஒருதுடை:** (மொ) ஒரு தடவை; ஒரு முறை.

**ஒருபூ:** (வே) ஒரு போகம் நெல்விளைவு, சம்பாநெல்போகம்

*'மதுராந்தக நல்லூரில் திறப்பு கார் மறுவும் எரு பூவுமான நிலத்தில்"*

*"ஒருபூ நிலம் அஙரக்காணி"* (தெ. கல். தொ 8. கல். 56)

**ஒருமாநிலம்;** (வே) ஒரு வேலி நிலத்தில் 1/20 பங்கான அளவுடைய நிலம் 100 குழி பரப்புடைய நிலம். இவ்வளவை நிலங்களின் தரத்திற்கேற்ப மாறுபடுதலும் உண்டு.

*'இந்நான்கெல்லையிலும் நடுவுபட்ட நிலம், பதினறு சாண்கோலால். நூறு குழிகொண்டது ஒருமாவாக நிலம் அரையே நான் மாவரை"*

(தெ. கல். தொ. 8. கல். 316. *முதல் இராசேந்திரன்*)

**ஒல்லையூர் கூற்றம்;** (அ) புதுக்கோட்டை மாவட்டம், திருமெய்யம் வட்டத்தின் மேற்குப்பகுதியே ஒல்லையூர்க் கூற்றமாகும். இதனுள், சாத்தனூர், காரையூர், கள்ளம்பட்டி, இடையாற்றூர், சேரனூர், மேலத்தானையம், கீழத்தானையம், குடுமியான்மலை

ஆகிய ஊர்களடங்கியிருந்ததை, புதுக்கோட்டைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. சங்க காலத்தில் இது ஒல்லையூர் நாடு என வழங்கப்பெற்றது. (புறநா-242)

**ஒழிவின்றி :** (மொ) ஒழிவு இன்றி-நீக்கமில்லாமல். தொடர்ந்து. தடைபெறாமல்

**ஒழுக்கவி :** (வ) நாளும் முறையாகக் காட்டும் நிவேதனமாகிய உணவு. கோயில்களில் நாள்வழிபாட்டு முறைமைகட்குரியதாக நாடோறும் படைக்கும் சமைத்த உணவு (பிரசாதம்)

*"இவ்வய்வோம் வயலைக்காவில் அடுத்தகாடி மூன்று கூற்றாலும் படாரர்க்கு ஒழுக்கவிக்கும் நந்தாவிளக்கு- க க்கும், கொடுத்தூட்டு-வோமாக". (நந்திவர்மபல்லவன். கி. பி. 712) தெ. கல். தொ. 12. கல. 39) "இத்தளிவழிபாடு செய்வார்க்கு வகுத்து இதனுள் மிக்கநிலம் ஒழுக்கவிக்கு விளைநிலமாகவும்" (கூரம்-செப்பேடுகள்) கி. பி. 675.*

**ஒழுக்கை :** (வே) ஒழுங்கை, கிராமங்களில் நிலங்களினூடே அமைக்கப் பெறும் குறுகலான சிறுசாலை (ஒழுங்கை—ஒழுகை)

*"தெற்கு நோக்கிப்போன ஒழுக்கைக்கு மேற்கும்".*

*(தெ. கல். தொ. 5. கல். 677)*

**ஒழுகர் மாட்டெறிந்து :** (மொ) வழக்கமாகவருகிற முறைமைகளைத் தொடர்ந்து ஏற்றுச்செய்து.

**ஒழுகு நீர்ப்பாட்டம் :** (வே) ஒழுகு என்று பெயர் பெறும் ஊர்நிலக்-கணக்கின்படி, நிலங்களுக்கமைந்த நீர்ப்பாசனத்தின் பேரில் அரசு பெறும் வரி. விவசாய வினியோகதற்குரியதாக, மதகுகளிலிருந்து முறை நீர் பாய்ச்சிக் கொள்வதற்குச் செலுத்தும் வரியும் அமையும்.

**ஒழுகும் படக்கும் :** (வே) நிலங்களின் பேரில் முறையாக அமைந்தனவும் அவற்றிலிருந்து பெறும் வருவாய்களும்

*"இன்னிலங்கள் ஒழுகும் மடக்கும் பிறக்கும் இடத்து தில்லை நாயக சருப்பேதி மங்கலத்து அத்யயன பட்டர்கள் பேரில் தில்லைமூவாயிர விளாகம் என்னும் பேராலே எழுதக் கடவர்களாகவும்".*

*(தெ. கல். தொ. 8. கல். 43)*

**ஒலிவண்ணாற்பாறை :** (அ) ஒலிவண்ணாற்பாறை, வரிவகையுள் ஒன்று. துணிகளை வெளுக்கும் வண்ணார், துறைகளில் பாறைப்

பலகையிட்டுத் துவைத்தற்குரியதாகச் செலுத்தும் வரி. வெளுத்த துணிகளை காயவைப்பதற்குத் தரையில் கருங்கற் பலகைகளைப் பரப்பி வைப்பதற்குச் செலுத்தும் வரி என்றும் கூறலாகும்.

ஒலி-வண்ணார் துணிகளைக் கல்லில் துவைத்து அடிக்கும்போது எழும் ஒலி பாறை-கற்பரப்பின் மீது காயவைக்கப்பெறுதற் கமைந்த பாறைத்தடம் அல்லது பாறைகளால் பரப்பப்பட்ட இடம்.

**ஒற்றிஇடில் :** (வ) ஒற்றி இடின், பொருள் பெறுவதற்கு ஈடாக (நிலத்தை) அடகு வைப்பின் (ஒற்றி-அடமானம்)

*''இவ்வேரியினீருணுந் நிலம் எல்லாவற்றின் மேலும் விற்கினும் ஒற்றி இடிலும்'' (நந்தி விக்கிரமவர்மன்)*

(தெ. கல். தொ. 12. கல். 34)

**ஒற்றி :** (அ) ஒற்றன். தன் நாட்டின் நிலையினையும் பகைவர் நாட்டின் நிலையினையும் உளவறிந்து மன்னனுக்குக் கூறுபவன்.

*''வீரசோழ இளங்கோவேளாயின ஒற்றி மதுராந்தகன் மகனார் பராந்தகதேவர்க்காக-ஒரு நந்தா விளக்கு இரவும் பகலும் எரிய வைத்த பொன் முப்பதின் கழஞ்சு''*

(முதல் இராசராசன். கி. பி. 990) (தெ. கல். தொ. 8. க. 676)

**ஒற்றியிட்டு :** (வ) அடமானம் வைத்து.

*' திருவல்லிக்கேணி குலங்கிழார்கள் கருமாரச்சேரிப்புலம் ஒற்றி யிட்டு நாற்பத்தைங்காடி நெல் பொலியூட்ட''*

(கல். தொகுப்பு. 8. எண். 29)

**ஒன்பது மாற்றில் பொன் :** (பொ) ஒன்பது மாற்று உரைத்திறன மைந்த பொன்.

*''கால்காறை ஒன்பது மாற்றில் பொன் இருகழஞ்சு.*

**ஓடக்காணி :** (அ) ஏரி, பெருங்குளம் ஆகியவற்றைக் குறுக்கே கடக்க அமைக்கப்பெறும் ஓடம் என்னும் மிதவையைச் செலுத்து பவன், கண்காணிப்பவன், பழுது ஏற்படும்போது கண்டு செப்பஞ் செய்யும் தச்சன், கருமான், மரமிடும் வளையர் ஆகியோருக்குரிய காணியாட்சியாக ஊர்ச் சபையாரால் அளிக்கப்படும் நிலம்.

(தெ. கல். தொ. 8. கல். 652)

**ஓடக்கூலி ;** (அ) ஏரி, ஆறு முதலிய நீர்நிலைகளைக் கடப்பதற்கு அரசோ, ஊராரோ, அமைத்துள்ள ஓடத்தில் செல்லுதற்குரிய கட்டணமாகவும் செலுத்துபவனுக்குரிய கூலியாகவும் பெறும் வரி.

**ஓடம் :** (மொ) (ஓடம்) நீர்நிலைகளைக் கடக்கப் பயன்படுத்தும் மிதவை. இப்பெயர்ச்சொல்லின் முதலெழுத்தாகும்.

'ஓகாரத்திற்கு, முதல் இராசேந்திரசோழன் ஆட்சியில் கி.பி. 1016-இல் காலிடும் குறியால் நெடிலோசைக் குறியிட்டுள்ளமையைக் காணலாகும். ஓா-ஓ.

''எம்மூர் ஏரிக்கு வைத்த ஓடம்''

(தெ. கல். தொ. 3. பகு 1. கல். 10)

**ஓடு :** (பொ) செங்கல்-தட்டோடு, சுட்டோடு என்றும் பெயர் பெறும். தளி எடுப்பதற்கு ஓடு சுடக் கொண்ட நிலம் தூளை மேட்டுப் பட்டியும்.''

(பரமேசுவரவர்மன் I. கி. பி. 675 கூரம் செப்பேடுகள்)

''தட்டோட்டால் மாளிகை எடுப்பதாகவும்''

(இராசேந்திரன் I. கி. பி. 1020. கரந்தைச் செப்பேடுகள்)

''சுட்டோட்டால் மாடமாளிகை எடுக்கப்பெறுவதாகவும்''

(ஆனை மங்கலச் செப்பேடுகள்)

''இக்காசு பதினாயிரமும் அர்த்த மண்டபமும் திருமண்டமும் ஜீர்ணித்து இருக்கையாலே தட்டோடு இடவும்''

(தெ. கல். தொ. 4. கல். 540).

**ஓடைப்புறம் :** (சம) கோயில் நாள்வழிபாட்டிற்குரிய தாமரை, செங்கழுநீர் ஆகிய நீர்வளர் மலர்த் தாவரங்களை வளர்ப்பதற்கென்று ஆக்கப்பட்ட நீரோடைகளின் பராமரிப்புக்கும், மலர் பறிப்பார்க்கும் உரிய வருவாயாக அமைக்கப்பட்ட இறையிலி நிவந்தமான நிலம்.

''திருநந்தவனப்புறமும், திருஓடைப்புறமும் உள்பட்ட நிலம் மூன்றே இரண்டு மாக்காணி''

(தெ. கல். தொ. 8 கல் 44)

**ஓடைக்குடிகள் :** (சம) மலர் பறித்து வந்து கோயில் மண்டபத்து எண்ணி இடுவாரும் அவற்றை மாலையாகக் கட்டுவாருமாகிய கோயிற்பணியாளர். ஓடைகளினருகே விடப்பட்ட நிலங்களில்குடியிருப்புகொண்டதால், ''ஓடைக்குடிகள்'' என்று கூறப்பட்டுள்ளனர்.

''ஆளுடைய தனிநாயகன் என்னும் திருநாமத்தால் செய்த திரு ஓடையும் திரு ஓடைக்குடி இருப்பு நிலம் ஒன்றரையும், திரு ஓடையாகச் செய்து செங்கழுநீர் ஆக்கி திருப்பள்ளித் தாமம் எண்ணவும்''. (தெ. கல். தொ. 8, கல். 48)

*"திருநிலை அழகியான் என்னும் திருநாமத்தால் செய்த திருநந்தவனத்துக்கும், திரு ஓடைக்கும், திருநந்தவனப் புறமும், திரு ஒடைப்புறமும் உட்பட்ட நிலம்"*

(தெ. கல். தொ. 8. கல். 44)

**ஓரணை :** (மொ) ஒரு சோடி, இரண்டு (ஓரிணை)

*"முத்திங்களுக்கு நாலணையாக ஓராண்டு நான்கு முறைக்கு வெண்கூறை பதினாறணை".* (திருச்செந்தூர் கல்வெட்டு. தொ. 14. கல். 16)

**ஓலக்ககூடம் :** (சம) இறைவன் திருமேனி எழுந்தருளியிருந்து காட்சி தரும் கூடம்.

*"திருவண்ணாமலை உடையார் கோயிலுனுள்ளால் ஓலக்க கூடத்தின் முன்பிருந்து கணக்கு கேட்டு"* (தெ. கல். தொ. 8. கல். 68)

**ஓலை எழுத்துப்பேறு :** (அ) உத்தரவுகள்பிறப்பிப்பதற்குரிய ஓலை. எழுத்துக்காணிக்கையாகப் பெறும் காசு.

**ஓலை எழுத்து விநியோகம் :** (அ) ஓலையில் சாசனங்களெழுதுவார் செலுத்தும் கட்டணம்.

**ஓலைக்கூலம் :** (அ) எழுத்திடுதற்குரியதாக பக்குவம் செய்யப் பெற்று விற்பனை செய்யும் பனையோலைகட்குரிய வரி.

**ஓலைச்சர்புடம் :** (பொ) விலை ஆவண ஓலை, முதலிய பத்திரங்களை வைத்துப் பாதுகாக்கும் உலோகத்தாலான வட்டப்பேழை.

**ஓலையும் திருமுகமும் :** (அ) அறச்செய்தி விளக்கச் சாசன ஓலையும், அரச ஆணைத் திருமுகமும். (கட்டளைத் திருமுகம்)

*"உதக பூர்வமதாநமாக கைய் ஓலையும் திருமுகமும் குடுத்து அருளிநபடிக்கு கைய் ஓலைப்படி பங்கு சயஅ'*

**ஓவியக்கடப்பு :** (கலை) ஓவியக் கலைவளர்ச்சிக்கும், ஓவியக் கலைஞருக்கும் விடப்பெறும் இறையிலி நிலம். அல்லது கிராமம்.

(கடப்பு—வளர்ச்சி, விருத்தி, கொடை.)

*"எயில் நாட்டில் ஓவியக் கடப்பான நரசிங்கநல்லூர்"*

(தெ. கல். தொ. 8. கல். 128)

**கஃசு :** (வ) பலம் என்னும் நிறுத்தலளவைக்குட்பட்ட பின்ன அளவை யாகும். தோலா என்பதனை ஒக்கும்.

*''சர்க்கரை இருபதின் பலமும் கண்ட சர்க்கரைமுக்கஃசும்''*

(தெ. கல். தொ. 3 : 2. பக். 187)

*'தொடிப்புழுதிகஃசு சாவுணக்கின்''* (திருக்குறள் - உழவு - குறள் 7)

**கங்கபாடி :** (அ) (கங்கமண்டலம்) இது மைசூர் நாட்டின் கீழ்ப் பகுதி. கங்கர் பல்லவருள் ஒரு பிரிவினர் ஆவர். அவர்களின் ஆட்சியும் வாழ்க்கையும் இங்கு நிலைத்திருந்தால் *''கங்கர் பாடி''* *''கங்கபாடி''* என்று பெயர் பெறுவதாயிற்று. முதல் இராசராசன் வென்ற நாடுகளுள் இதுவும் ஒன்று.

*''வேங்கைநாடும் கங்கைபாடியும்''* தெ. கல் தொ. 2 : 3. பக்-253)
*''நாவி கங்காபாடிக்கல் ஒன்றும்''* கல் - பச்சைக்கல்)

(தெ. (கல். தொ. 11. கல்-48 )

**கங்கில் :** (கலை) இசைக்கருவிகளுள் நீண்ட குழலாக உலோகத்தால் அமைக்கப்பெறும் *''காளம்''* என்ற குழற்கருவியின் ஒருறுப்பு

*''சிவபாத சேகரனென்றும், ஸ்ரீராஜனென்றும் திருநாமம் வாங்கி சங்கில் ஒன்றும் குழல் இரண்டும் மோதிரம் ஐஞ்சும் உடைய பொன்னின் காளங்கள்.''*

(தெ. கல். தொ. 2, கல் 91)

**கச்சம் :** (வ) ஒப்பந்தம், தீர்மானம்.

*''இவ்வெழுதின கச்சம் பிழைக்குமூராளன்''*

(தெ கல். தொ. 7, கல். 171)

**கச்சோலம் :** (சம) வட்டவடிவில் பிடியுடன் மெருகிட்டுப் பளபளப் பாக அமைக்கப்பட்ட வழிபாட்டுக்குரிய உலோகத்தாலான திருப்பரி கலங்களுள் ஒன்று. (கச்சோளம்-கச்சட்டி)

*''ஸ்ரீராஜராஜதேவர், யாண்டு இருபத்தொன்பதாவது வரை குடுத்த வெள்ளியின் திருப்பரிகலங்கள் - கச்சோளம் ஒன்று''*

(தெ. கல். தொ. 2, கல். 91)

**கசரை :** (வா) கஃசு அரை. ஒரு கஃசும் அரையும், ஒன்றரை கஃசு எடை பொருள் (நிறுத்தலளவை)

**கட்டளைக்கூட்டம் :** (சமு) ஊர் மக்களுள் சிலர் தமது கருத்துக்களை மகா சபைக்கு அறிவிக்கக்கூடும் கூட்டம். இத்தகைய கூட்டத்தைக் கிராமசபையார் தவிர்த்துள்ளனர்.

*"ஊரிலே கூட்டங்களிலே சேரவும் பிறித்து கட்டளைக் கூட்டம் என்று செய்யக்கடவதல்லாததாகவும்"*

(தெ. கல். தொ. 6, கல். 58.)

**கட்டாயம் :** (அ) கட்டும் ஆயம். குறித்த பருவங்களில் தவறாமல் செலுத்தும் வரி.

**கட்டிலேறுவோமாகவும் :** (சமு) காவல் கட்டிலில் ஏறிப்பாதுகாப்போமாகவும், இது மன்றாடிகள் என்று கல்வெட்டுக்கள் குறிக்கும் இடையர்களின் உறுதிப்பாடு. மந்தையினை ஓரிடத்து நிறுத்துங்கால், அவற்றை விலங்கினமும் கள்வரும் கைக்கொள்ளாமல் கண்டு காவல் காண்பதற்குப் 'பட்டிக்கட்டில்' என்று பெயர்கூறப் பெறும் உயர்ந்த நான்குகால்களின் மேலமைந்த சிறுகுறும்பில் ஏறியிருந்து பாதுகாவல் செய்வர். இதுவே ஈண்டு கட்டில் என்று கூறப்பெற்றுள்ளது. இடையர், மந்தைக் காவலில் குறை ஏற்படாமல் தெய்வ காணிக்கையினைக் குறித்து, இவ்வாறு காவல் கட்டிலேறுதல் வழக்காகும்.

*"மன்றாடிகளே, வாகூர் ஸ்ரீமூலட்டானத்துப் பெருமாளுக்குநாங்கள் வைத்த தர்மம் கட்டிலேறப்போம்போது ஒரு ஆடு குறித்துக்கட்டிலேறுவோமாகவும்"*

(தெ. கல். தொ. 8. கல். 804)

**கட்டு முக்கை :** (சம) ஊரில், அறுவடைக்களத்தில், கோயிலுக்கு உரிய அறக்கொடையாக, நெற்கட்டு ஒன்றில் மூன்று குடங்கை அளவு அள்ளிக்கொடுத்தல் கட்டு முக்கையாகும். இதனையே அரிமுக்கை என்றும் கல்வெட்டுகள் கூறும்

**கட்டுவாங்கம் :** (அ) கத்வாங்கம், பல்லவர்களுடைய கொடியில் குறிக்கப்பெறும் அடையாளம். இது சிவபெருமான் திருக்கையிலே தாங்கிய மழுவாயுதச்சின்னம் (கத்வாங்கப்படை). முதலாம் பரமேசுவரப் பல்லவன் கத்வாங்கத்தைக் கொடியிலே பெற்றவன் என்று காசக் குடிப்பட்டயம் கூறுகின்றன

**கடக்கை :** (வே) ஒன்றுபட்ட சேர்க்கை. நீக்கல் நீக்கிச் சேர்க்கப் பட்டவை (நிலம்)

*"இந்நிலம் ஒருமாவரையும், இதனோடேய் விலைகொண்டுடைய பதினைந்து குழியும் ஆக இவ்விரண்டு கடக்கை நிலத்தாலும்"*

(தெ. கல். தொ. 8)

**கடக்கம் :** (அ) படைவீடு. வட்டமாக உயர்ந்து தொடர்ந்த மதில ரண் கொண்ட கோட்டை.

*"நண்ணற்கருமரண் மண்ணைக்கடக்கமும்"* (முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**கடம்பு :** (மொ) காடு. மலைச்சாரல் கறட்டுநிலம்

*"வடவெல்லை காடிரும்பல் கடம்புக்கு தெற்கு"* (திருவாங்கூர் கல்வெட்டுத்தொகுதி-2:1, பக்-18)

**கடமலை :** (அ) போர்யானைகள். மதம்பொழிகின்ற மலையெனத் தகும் போர்யானைகள் யானைப்படை. கடம்-மதம்.

*"கலிங்கமிரியக் கடமலை நடாத்தி"* (விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தி)

**கடமை :** (அ) அரசு ஊர்நிலங்களை அளந்து அதன் விளைவிற் கேற்ப உரிமையாளரிடம் வசூலிக்கும் வரி-கடமை.

*"அளந்து கண்ட நிலத்துக்கு வரிசைகொள்ள நிச்சயித்த கடமைக்காசு"* (தொல்பொருள் ஆய்வு ஆண்டு அறிக்கை எண். 254/1894)

**கடமைக்கால் :** (அ) வரிக்குரிய தானியங்களை அளந்து கொள்வதற்கு, அரசு நிர்ணயித்த அளவு மரக்கால்.

**கடமைக்காரியம் :** (அ) அரசுக்குரிய வரிகளை முறையாக மக்களிடத்துப் பெறும் செயல். (வரிவசூலிக்கும் தொழில்)

**கடமைதட்டுப் போக்கறுக்க :** (அ) கடமை செலுத்துவதில் ஏற்பட்ட தட்டுப்பாடு தொடராமல் நீக்கி வரையறை செய்ய.

*"யாண்டு ஆறாவது கடமை தட்டுண்டாய் இத்தட்டுக்கு சமுதாயமாந நிலத்திலே சிறிது நிலம் விற்றாகிலும் கடமைத்தட்டுப் போக்கறுக்க வேணுமென்று மஹாஸபையோம் ஸம்மதித்து"*

*விக்கிரமசோழன் கி. பி. 1127, தெ: கல். தெ: கல். தொ. 8, கல். 303)*

**கடமைப்பற்று :** (வே) மேல்வாரம் பெற்றோர் நில விளைவில், நில உரிமையாளருக்குரிய பங்கினைத் தானியமாகத்தராமல்அத்தானியத்தின் மதிப்பீடாகும் தொகையினைத் தருவதற்கு அமைந்த நிலம் (பற்று—நிலம்) அரசுக்கோ, கிராமச்சபைக்கோ கடமை என்ற பெயரால் அளிக்கப்படும் வரிக்கு உரியதாகவுள்ள நிலம்-

**கடமையில் தட்டிறை :** (அ) கடமை செலுத்துவதில் தவறிய காலத்தில் அரசு நேராக வசூலிக்கும் இறைமுறை. கடமை - ஊரிடுவரி-

களுள் ஒன்றாம். ஒருவர் கடமை செலுத்தாது தட்டுப்படின், அரசியலதிகாரிகள் நேரில் வசூலிப்பதனால் தட்டிறை என்று பெயர் பெற்றது. அரசிறை பெரும் அதிகாரிகளால் வசூல் செய்யப்படுவதால் இறை என்னும் குறிப்பினைப் பெறுவதாயிற்று.

**கடவதாக :** (மொ) செய்வதாக (கடவ—செய்ய) இவ்வெச்சச்சொல், முறையே கடவர்களாக, கடவதல்ல, கடவோமாக, கடவரானவராக, கடவரானமைக்கு என்றெல்லாம் விரிந்து நின்று, தன்மை முன்னிலைகளில் ஒருமை பன்மை அமைப்பிலும், உடன்பாடு எதிர்மறைப்பொருளிலும், ஏவலாகவும், செய்திகட்கேற்பச் சொற்றொடர்களில் நின்று பொருளமைதி பெறுகின்றது.

''*உத்தமசோழச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் கடவ நெற் கடமைக்கு செலவுபெற இடக்கடவ நெல்லு நூற்றிருபதின் கலமும்*' (*செய்ய*)

''*இவன் நமக்குச் சொன்னமையின் இப்படி செய்யக்கடவதாகச் சொன்னோம்*'' (கடமைப்பட்டதாக)

''*வேறு ஒன்றும் கொள்ளக்கடவதல்ல*'' (கூடியதாக இல்லை)

''*நானும் என் வங்கிசத்தார் உள்ளதனையும் சந்திராதித்தவரை இவ்வமுது செலுத்தக்கடவோமாக*'' (செய்வோமாக)

''*பூமரங்கள் செய்து திருப்பூ மண்டபத்திலே கொண்டு குடுத்துச் செல்லக் கடவதாகவும்*'' (செய்வார்களாக)

'*திருநொந்தாவிளக்கு எரிக்கக் கடவரானமைக்கு*'' (பொறுப்புடையவரானமைக்கு)

(தெ. கல்.தொ. 8, கல். 3, 263, 275 285, 328)

**கடவோம் :** (சமு) கடமைப்பட்டோம். கடமைப்பட்டுள்ளோம்.

'*நாளொன்றுக்கு தேவாசிரியன் நாழியால் அளக்கும் நெய் உழக்கு. இந்நெய் உழக்கும் சந்திராதித்தவல் அளக்கக்கடவோம்.*'' (தெ கல். தொ. 8. கல். 148)

**கடற்படப்பை :** கடற்கரையைச் சார்ந்த பரந்த நிலப்பகுதி.
''*கடற்படப்பை ஒற்றி மூதூறுகந்தருளி*''
(தெ. கல். தொ. 12, கல். 93)

**கடாரம் :** (அ) பர்மா தேசம், அங்கு கிடைத்துள்ள முதல் இராசேந்திர சோழன் வெற்றித் தூண் கல்வெட்டுகள் இதனை உணர்த்து-

கின்றன. (மலேயா நாட்டின் கடற்கரைப் பட்டினமாகிய கெடா என்று கூறுவாரும் உளர்.) முதல் இராசேந்திரன் இந்நாட்டை வென்றுளான்.

*''அலைகடல் நடுவே பலகலம் செலுத்தி சங்கிராம விசையோத் துங்கவர்மனாகிய கடாரத்தரசனை கும்பக்கரியொடும் அகப்படுத்தி''*

(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

*''தஞ்சாவூர் புறம்படி மாளிகை ராஜாஸ்ரயனில் தெற்கில் மண்டபத்து நாம் இருக்க, கிடாரத்தரையன் சூடாமணி பந்மன்''* (ஆனைமங்கலச் செப்பேடுகள்)

இதனால் கடாரம் என்பது பர்மா நாடே என்பது போதரும்.

**கடிகை :** (அ) பல்லவர் ஆட்சிக்காலத்தில் பூர்வாங்க வடமொழிக் கல்வி பெற்றவர்கட்கு மேலும் உயர்நிலைக் கல்வி புகட்டுவதற்குரியதாக நிறுவப்பட்ட உயர்தர வடமொழிக்கல்லூரி. அனுமதியின்றி யாரும் செல்லுதற்கு இயலாத கட்டுப்பாட்டுடன், ஊர்கள்தோறும் அமைக்கப்பெறும், அரசியலதிகாரியின் நிர்வாக நிலையம். ஊர்ச்சபை கூடும் இடமும் இப்பெயர் பெறும்.

**கடிகைக்கோல் :** (அ) ஊர்ச்சபையில் இருக்கும் நிலமளக்கும்கோல்.

(தடி) (தெ. கல். தொ. IV. கல்-290)

(வேலூர் பாளயப்பட்டயம் - மூன்றாம் நந்திவர்மன்)

*''இது அழித்தான் கடிகை எழா இருவரையும் கொன்ற பாவத்துப்படுவான்''* (கடிகை-ஊர்ச்சபை)

(தெ. கல், தொ. 3:1, கல்.42)

**கடிகைமாராயன் :** (அ) நாளும் அரசுவழி நிகழ வேண்டிய செயல்களைக் கண்காணித்து உரிய காலத்தில் அவை நிகழ்வதற்கு ஊர்ச் சபையார் வழி திட்டம் செய்யும் அரசின் ஊர்க்கண்காணிப்பு நிலையத் தலைமை அதிகாரி.

*''ராஜேந்த்ரசிங்க வளநாட்டு மண்ணி நாட்டு நாட்டார் மங்கலத்துக் கடிகையான், உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்குத் திருவாய்க்கேழ்வி செய்யும் ராஜகேஸரி கோதண்டராமனான ஜயங்கொண்ட சோழகடிகைமாராயன்''*

(முதல் இராசராசன், கி. பி. 1014, தெ. கல். தொ 2 : 2, கல். 25)

**கடிகையார் :** (அ) (திருப்பறையறைவு கேட்பிக்கும் கடிகையார்) பறையறைந்து அரசு ஆணையினை மக்கட்குக் காலத்துடன் விளம்பரப்படுத்தும் அதிகாரிகள். (ஊர்ச்சபை உறுப்பினர்)

*''உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார் ஆட்டைப்பெரிய திருவிழாவுக்குத் திருக்கொடியேற்று நான்று திருப்பறையறைவு கேட்பிங்குங் கடிகையார் ஐவற்கு பேரால் காசு அரையாக்க் காசு இரண்டரையும்''*

(முதல் இராசராசன், கி. பி. 1014, தெ. கல். தொ. 2:2, கல். 25)

**கடிவித்து :** (மொ) நீக்குவித்து, நீக்கிவிடுமாறு ஆணைசெய்வித்து.

*''கலிங்கர்மன் வீரசலாமேகனைக் கடக்களிற்றோடும் அகப்படக் கதிர்முடி கடிவித்து''*

(விசயராசேந்திரன்—மெய்க்கீர்த்தி)

**கடுக்கின :** (பொ) ஒன்றாகப் பொருத்தின. கடுக்குதல்-ஒட்டுதல், பொருத்துதல்.

*''செம்பின் மேல் பொன் கடுக்கின குடம்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 60)

**கடைக்கட்டு இலக்கை :** (அ) அங்காடிக்கடைகள் அமைத்துக் கொள்வதற்குரிய இடத்திற்குச் செலுத்தும் வரி.

**கடைக்காட்சி :** (சமு) நேர்பார்வையில் ஆராய்ந்து சபையார் செய்யும் தீர்ப்பு.

*''இவ்வூர் தர்மிகளோம் சபையார் கடைக்காட்சியாக இப்பரிசு செய்து''* (தெ. கல். தொ. 12, பகு 1, கல். 95)

**கடைக்காண்பார் :** (சமு) நேர்பார்வை செய்வார். தாமே உடனிருந்து உண்மை அறிந்து செயற்படும் கிராமசபையார். கண்காணிப்பார்.

*''இத்தர்மம் — ஆசந்ரகாலமும், முட்டாமை ஊட்டுவிப்பதாக இப்பெருமக்களே கடைக்காண்பாரானார்''*

(திருபதுங்கபல்லவன், தெ. கல். தொ. 12, பகு. 1. கல். 104)

**கடைக்கூட்ட வந்தார் :** (பொ) தவணை நாளில் வட்டி செலுத்திக் கொடுக்க நேரில் வந்தவர்.

*''இப்பொலியூட்டுப் பொன் கடைக்கூட்ட வந்தார்க்கு நிசதி இரண்டு சோறு குடுப்போமானோம்''*

(தெ. கல். தொ. 12, பகு. 1. கல். 91, 100)

**கடைக்கூட்டிலக்கை :** (அ) பொதுவிடத்திலோர் பகுதியை தேவைகட்கேற்ப அவ்வப்போது பயன்படுத்துவார் ஆண்டொன்றிற்குக் கூடிய தொகையாகச் செலுத்தும் இடவரி. வரி, கடமை செலுத்துவதற்கு வந்தவர்கட்குத் தங்குவதற்கு இடமும் உணவும் அளித்தற்குரியதாகப் பெறும் வரி.

**கடைத்தொழில் :** (கலை) பொன்மாலையாகச் செய்யப்படும் அணிகலன்களின் இரு தலைப்பிலும் அமைக்கப்பெறும் சுரை வேலைப்பாடு.

*"ஏகவல்லி வடம் ஒன்றினால், நெல்லிக்காய் முத்து நூறும் கடைத் தொழில் இரண்டும், இவை கோத்த நூலும் உள்பட இதில் அலகு நிலைப்படி எடை நூற்று முப்பதின் கழஞ்சு"*

(தெ. கல். தொ. 8. கல். 121)

**கடைநீர் :** (வே) கடைசியாக விளைநிலங்களுக்கு விடப்பெறும் பாசன முறைநீர்.

**கடைப்பலகை :** (கலை) பொன் அணிகலன்களிலொன்றான மாலையின் இரு முனைகளிலும் அமைக்கப் பெறும் தகட்டிணைப்பு. முகப்புத் தகடுகள்.

*"திருமாலையில் நாலிநாற்பத்தொன்றும் கடைப்பலகை இரண்டும்"*

(தெ. கல். தொ. 23, கல், 46. முதல் இராசேந்திரன்)

**கடைப்பாட்டம் :** (வே) ஆண்டொன்றில், பருவகாலங்கட்கேற்பப் பயிரிடப் பெறும் பயிர் வகையில், கடைசியாக விளைவு செய்து பெறும் மகசூல். கடைப்பாட்டம் என்ற வரியுமாகும். பாட்டம்— பருவகால விளைவு.

*"இறைநீக்கி நின்ற கடைப்பாட்டத்தால் வந்த கடமை"*

(தெ. கல். தொ. 8. கல். 288)

**கடைப்பூ :** (வே) பருவகால ஆண்டகவையில் கடைசியாக விளையும் போகம் (பயிர்) மூன்றாவது போகம். இதனைச் சித்திரைக் குறுவை என்றும் கூறுவர்.

**கடைமடை :** (வே) விளைநிலங்களின் வரப்புக்களில் அமைக்கப் பெறும் நீர்வடிகால் பறிப்புப்பாதை.

*"தலைமடையாலே நீர்பாயவும் கடைமடையாலே விழவும்"*

(தெ. கல். தொ. 23. கல். 490)

**கடையடைக்காய்** : (அ) கடையிடத்து விற்பனை செய்யப்பெறும் பாக்கிற்கு விதிக்கப்பெறும் வரி.

**கடையிறை** :(அ) அரசுக்குத் தொடரும் ஆண்டுகளில், ஒவ்வோ-ராண்டின் கடைசியாகக் கொடுக்கும் வரி, அங்காடிக் கடைகட்-குரியவரியுமாகும்.

**கடையீடு** : (அ) முதன்மைக் கட்டளை, சிறப்பு ஆணை, தவறாமல் நிகழச் செய்யும் இறுதியான தனி உத்தரவு.

*''திருமாளிகையில் கல்வெட்டுவித்தல் செய்யப்பெற்றதில்லை-யென்று தானத்தார் சொல்லுகையாலே இது இந்நாளிலே இப்படி செய்வதென்று கடையீடு தந்தருளினார்.''*

(தெ. கல். தொ. 12, கல். 254)

**கண்காணி** : (அ) பயிர் வகைகளை மேற்பார்வை செய்வோன், இச்செயல் பாடிகாவலுள் அடங்கும். இதற்கு அரசு பெறும் ஆயவரியும் இப்பெயர் பெறும். இவ்வரி நெல்லாகப் பெறப்படும்.

*''வெண்குன்றக்கோட்டத்து வாதவூர் நாட்டு - சிறுபாடிகாவல், கண்காணி, அரிமுக்கை உள்ளிட்ட நெல்லாயமும்''*

(தெ. கல். தொ. 7, கல். 98)

**கண்காணிநாயகம்** : (அ) கிராம அல்லது ஊர் நிர்வாகங்களைக் கண்காணிக்கும் அதிகாரிகளின் தலைவன்.

**கண்டகம்** : (வே) கண்டம் அகம் பகுதியாகப் பிரிக்கப்பட்ட நிலத்-துண்டம். இவ்வாறு பிரிக்கப்படும் நிலத்தினைத் தடி என்றும் கூறுவர். (தடித்தல்-ஒருமுழுமையான பொருளைப் பலபகுதி-களாகப் பிரித்தல்)

**கண்டசர்க்கரை** :(பொ) கண்டுசர்க்கரை. கற்கண்டினைத்துகள் செய்து தூய்மை செய்யப்பெறும் சர்க்கரை. இக்காலத்தார் சீனி சர்க்கரை என்பர்.

*''கண்டசர்க்கரை முக்கஃசும்''* (தெ. கல். தொ.3:2: பக்:187)

**கண்டநாண்** : (கலை) கழுத்தில் அணியப்பெறும் இரத்தினங்கள் பொருத்தப்பட்ட அட்டிகை. உருத்திராக்க மணி கோக்கப்பட்ட கண்ட நாண்.

கண்டநாண் ஒன்றில் கட்டினமாணிக்கம் பதினைந்தும், மரகதம் பதினாறும், வயிரம் இருபத்தெட்டும், முத்துநாற்பதும் உள்பட நிறைநூற்று எழுபதின் கழஞ்சு''

(தெ. கல். தொ.2, கல்.93)

**கண்டநாண் நடுவு ரத்நப் பட்டிகை :** (கலை) கண்டநாணிணும் அட்டிகையின் நடுவே அமைக்கப்பட்ட வயிரம், மாணிக்கம், மரகதம், ஆகிய இரத்தினங்கள் பைத்திழைக்கப்பட்ட பதக்கம். பட்டிகை—பதக்கம் போன்ற முகப்பு.

(இரத்தினப்பதக்க அட்டிகை)

(தெ. கல். தொ. 2. கல். 93)

**கண்டப்படை :** (கலை) கற்றளிகளாக அமைக்கப்பட்ட கோயில் களின் அடிப்படை அமைப்பின் நெடிய உட்புரை கண்டம் என்று பெயர் பெறும். அப்பகுதியே கண்டப்படை எனப்படும். (கண்டம்-சிற்பவரிசையின் கழுத்து போன்று உள்ளடங்கி நிற்கும் பகுதி)

**கண்ட ஸ்புடித நவகந்மாதி :** (கலை) பழுதாகியும், வெடிப்பிட்டும் கிடந்த பகுதிகளைப் புதுப்பித்தல் முதலாக ஒன்பது வகையான கட்டடச் சீர்திருத்தத் தொழில்கள்.

(தெ. கல். தொ. 3:1, கல். 43)

**கண்ணிய :** மாற்றுக் குறைந்த—பொன்

''*கால்மாற்று கண்ணிய பொன்*''

(தெ. கல். தொ. 2. கல். 93)

**கண்ணாமடை :** (பொ) மணமும் இனிப்பும் பொருந்தியதாக ஆக்கப் பெறும் கூழ் உணவு. பாயசம். கண்ணமுது.

''*திருக்கண்ணாமடைக்கு அரிசி இருநாழியும் நெய்யுழக்கும் சற் கரை இருபதின் பலமும் வாழைப்பழம் பத்தும்*''

(தெ. கல். தொ. 3 : 2, பக். 187)

**கண்ணாலக்காணம் :** (சமு) திருமணத்தின்போது சம்பந்தியாராகும் கொள்வாரும் கொடுப்பாரும் அரசுக்குச் செலுத்தும் காசு-மகமை.

''*கண்ணாலங்களில் கொண்டவனொரு சின்னமும் குடுத்தவனொரு சின்னமும் இடக்கடவார்களாகவும்*''

(தெ. கல். தொ. 5, கல். 492) (சின்னம்-சிறிய மதிப்புடைய காசு)

**கண்ணாறு :** (வே) ஆற்றிலிருந்து பிரிக்கப்பட்டுப் பாசனத்திற்கு ஏற்புடையதாகக் கிளைக்கப்பெறும் தலை வாய்க்காலின் இரு கரையிலும் நிலங்கட்கு பாசனநீர் செல்லும் பாங்கில் பிரிக்கப் பெறும் சிறுகால்வாய் அல்லது கண்ணிக்கால் கண்ணாறு என்று பெயர் பெறும். கண்ணாறுப் பாசனம் பெறும் நிலமும் கண்ணா றென்றே பெயர்பெறும்.

*''திருவேட்களமான ஜநனாத நல்லூரில் திருச்சிற்றம்பல வதிக்குக் கிழக்கு உத்தமசோழவாய்காலுக்கு இரண்டாங்கண்ணாற்று, இரண் டாம் சதிரத்து நிலன்''*

(தெ. கல். தொ. 4, கல். 327)

*''வடுகன் வாய்க்காலுக்கு மேற்கும் கண்ணாற்றுக்கு வடக்கும்''*

(தெ. கல். தொ. XIX. கல்-63.)

*''கீழ்பாற்கெல்லை இருப்பையோடு கண்ணாறென்று பேர் கூவப் படும் நிலத்துக்கு மேற்கு''*

(தெ. கல். தொ. 8, கல். 67)

**கண்ணிட்டுக்காணம் :** (அ) ஆட்சித்துறைகளை மேற்பார்வையிடும் அதிகாரிகள் பெறும் காணிக்கைப் பணம். (காணம்-பொற்காசு)

**கணக்கக்காணி :** (அ) கிராமக்கணக்கர்களுக்குக் கிராமப் பொது நிலத்தில் சபையாரால் விடப்படும் சர்வ மானிய நிலம்.

**கணக்கப்பேறு :** (அ) கிராமக் கணக்கர் மக்களிடம் நெல்லாகப் பெறும் ஊதியம்.

**கணக்கு வாரியம் :** ஊர்ச்சபையார் வசூலிக்கும் வரி வகைகளையும், ஊரிற்குச் செய்யும் செலவினங்களையும் மேற்பார்வையிடும் வாரியக் குழுவினர்.

*''காவிரிப்பாக்கமாகிய அமநிநாராயண சதுர்வேதி மங்கலத்துள் இவ்வாட்டை ஸம்வத்சரவாரிய பெருமக்களும் கணக்கு வாரியப் பெருமக்களும்-உள்ளிட்ட மஹாசபை''*

(தெ. கல். தொ. 3 : 3, கல். 156)

**கணத்தேம் ஒட்டியது :** (சமு) ஊர்ச்சபையோம் ஏற்றுக்கொண்டது. *''பயிறூர்க் கணத்தோம் ஒட்டியது-இந்நெல் யாங்கள்கொண்டு ஆட்டாண்டுதோறும் எரிதோண்டுவிப்போமாய் - ஏற்றுக்கொண்-டோம்.''*

(நந்திவிக்ரம பருமன், தெ. கல். தொ. 12, கல். 34)

**கணப்பெருமக்கள் :** (சமு) ஊர்மக்களால் குடவோலை முறையால் தேர்ந்து எடுக்கப்பெற்ற மதிப்புடைய நிர்வாகிகள். கிராமமகா சபை உறுப்பினர். இவர்கள் கோயில் நிர்வாகத்தினையே பெரும்பாலும் மேற்கொள்ளுவர். இவர்கள் மண்டல அளவில் நிர்வாக உரிமை பெற்றவராகவும் இருந்துள்ளனர்.

"*ஸைலேஸ்வரத்து மஹாதேவர்க்கு மத்யாநவேளையிற்றிருவமுதுக்கு மண்ணைக்குடிமறமடக்கி விழுப்பேரரையர் மகன் நந்தி நிகூறமதி ஸைலேஸ்வரத்துக்கணப்பெருமக்கள் வழிகுடுத்தசெம்பொன் பதினொரு கழஞ்சி*" (தெ. கல். தொ. 12, கல். 69)

"*இவ்வாண்டு ஸ்ரீகார்யஞ்செய்கின்ற கணப்பெருமக்கள் வசமேய் தேவர்க்கு குடுத்த பொன்*"

(தெ. கல். தொ. 19, கல்.22)

"*பரகேஸரிபன்மற்கு யாண்டு ஆறாவது, இளமண்டகத்துக்கணப்பெருமக்கள்*"

(தெ. கல். தொ. XIX. கல்-177.)

**கணைப்திபடாரர் :** (சம) கணபதிஎன்னும் விநாயகக்கடவுள்

"*பரமேஸ்வரமங்கலத்து ஸைலேஸ்வரத்து கணபதி படாரரை வைய்த்துக் கோயில் எடுப்பித்தார்*" (படாரர்-இங்கு சிவ மூர்த்தங்களைக்குறிக்கும் சிறப்புப்பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது.)

(தெ. கல். தொ.12, கல். 68)

**கணிமுற்றூட்டு :** (சம) சமணத்துறவியர்க்கு பள்ளிச்சந்தமாக அளிக்கப்பட்ட இறையிலி நிலம். சோதிடர்கட்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம். சமணத்துறவியர் பெரும்பான்மையும் காலக்கணியராய் விளங்கினமையின் அவர்வழி காலக்கணிப்புக் கலையாகிய சோதிடக் கலை வளர்ச்சி பெறுதற்குச் செய்யப்பெற்ற இறையிலிநிவந்தம்.

"*பள்ளிச் சந்தகணி முற்றூட்டு*"

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**கந்திக்காணம் :** (அ) ஆயுதவரி. வேல், வாள் முதலிய ஆயுதங்களைப் பாதுகாப்பிற்காக வைத்திருப்பதற்குரியார் பொன்னாகச் செலுத்தும் வரி. ஆயுதங்கள் செய்யும் கொல்லர் செலுத்தும் வரி என்றும் கூறுவர்.

**கதலிகை நங்கனை :** (கலை) இடைப்பட்டிகையிலும், தோள்களிலும் அணியப் பெறுவதற்குரியதாகக் குஞ்சம் போன்ற அமைப்பில்

இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்டு முத்துக்களால் அரும்பிடப் பெறும் அணிகலன்.

**கந்மி :** (சம) கன்மி, குறித்த செயலைக் குறித்தபடி செய்பவன் தேவகன்மிகள்-அர்ச்சகர்கள்.

**கப்படம் :** (வ) இடையாடை. புடவை. (தெ. கல். தொ.17.கல்-222)

**கபாலம்:**(சம) சிறிய வடிவில் சற்று நீண்ட வட்டமாகவும் குழிந்த-தாகவும் அமைக்கப்பெற்றுச் சிவன் கோயில் வழிபாட்டில் பயன்-படுத்தப்பெறும் உண்கலம்.

பைரவர் திருமேனியின் வலதுகையில் கபால பாத்திரத்தை ஏந்தியிருக்கும் பாங்கில் சிலை அமைப்பது சிற்ப நியதியாகும்.

''*பொன்னின் க்ஷேத்ரபாலதேவர் பாதாதிகேசாந்தம் மூவிரலே மூன்று தோரை உசரமும் நாலு ஹஸ்தத்திலும், பிடிச்சருளின சூல மும் கபாலமும் பாசமும் தமருகமும்*''

(தெ. கல். தொ. 2, கல்.1)

**கம்பன் :** இப்பெயர் தமிழில் இராமாயணம் பாடிய கவிச்சக்கரவர்த்தி கம்பரைக் குறிப்பதாயினும், தமிழகத்தில் கி.பி. 11,12-ஆம் நூற்றாண்டில் மக்களுள் சிலரும் சிறப்பாக இடையரும் ''கம்பன்'' என்ற பெயரைப் பெற்றிருந்தனர் என்பதனைக் கல்வெட்டுக்கள் புலப்படுத்துகின்றன.

''*மாதவன் கம்பன்*''

''*கம்பன் தேவன்*''

சிவபிராமணன் கம்பன் உய்யவந்தான்''

(தெ. கல். தொ. 8, கல். 34,38,40)

''*இவ்வூர் இருக்கும் இடையன் கம்பன் தந்தையும்*''

(தெ. கல். தொ.II.கல்.95)

**கம்பிலி :** (அ) பல்லாரி மாவட்டத்தில் உள்ள நகரம். முதல் இராசாதிராசன் வென்ற நாடுகளில் வடுகவழியெனும் பகுதியிலமைந்த நகரம்.

**கமுகு நிலம் தெங்குநிலம் :** (வே) பாக்கு மரங்கள் வளர்ந்துள்ள நிலப்பகுதி தென்னை மரங்கள் வளர்ந்துள்ள நிலப்பகுதி.

(தெ. கல். தொ. 8, கல்.334)

கர்மக்கிழவராயின : (சமு) ஊர் நிர்வாகத் தலைவர்களாகவுள்ள
*"திருவொற்றியூர்க் கர்மகிழவராயின ஊரோம்"*

(தெ. கல். தொ. 12, பகு.1. கல். 92)

கரடிகை : (கலை) கரடி கத்தினாற் போன்றதாக ஒலி தரும் இசைக்கருவி. தோற்கருவியாகிய இது,

*"கரடி கத்தினாற்போலும் ஓசையையுடைத்தாதலாற் கரடிகை யென்று பெயராயிற்று"* என்பர் அடியார்க்கு நல்லார்.

*"அடுத்தன தட்டழி மத்தளி கரடிகை தாளம் காகளம் ஏற்றி"*

(பார்த்திப சேகரபுரச் செப்பேடு)

கரணிக்க சோடி : (சமு) கணக்கர் பெறும் வரி.

(கரணிக்கர்-கணக்கெழுதும் தொழிலுடையவர்)

கருக்கு : (வ) கம்மியர் தாம் செய்யும் உலோகப்பாத்திரங்களில் கிண்ணம் போன்ற அமைப்புடைய வட்டில்களின் வாய்விளிம்பில் நேர் எதிராகவும் சற்று நீண்டதாகவும் அமைக்கும் விளிம்புக்காது.

*"தாரைத்தாள் வட்டில் ஒன்று கருக்கிரண்டும் சிங்கபாத மிரண்டும்"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

கருங்கலி : கொடிய பஞ்சகாலம், வடகடகாலம்.

*"புதுமதிபோல வெண்குடை மீமிசை நிழற்றக் கருங்கலி யொளித்து வன்பிலத்திடைக்கிடப்ப"*

(விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தி)

*"மனுவாறு பெருகக் கலியாறு வறப்ப"*

(முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)

கருப்புக்கட்டி : கருப்பஞ்சாற்றின் கட்டி, வெல்லக்கட்டி

(தெ. கல். தொ. 12, கல். 244)

கருமாளிகை : (அ) இன்றியமையாத சிறப்பமைப்புக்களுடன், கட்டப்பட்ட அரசமாளிகை, அந்தரங்கசபைகூடும் மாளிகை.

*"அரசுறை கருமாளிகை பொடியாக்கி"*

(தெ. கல். தொ. 5, கல், 465)

கருவிபணம் : (அ) கொடிய படைக்கலங்களை வைத்திருப்போரிடம் பெறும் வரி. (சிறந்த ஆயுதமாகவும் கொள்ளலாம்)

**கருவூல வரி :** (அ) மதிப்பு மிகுந்த பொருள்களை அரசுக்குரிய பொருள் கருவூலங்களில் வைத்துப் பாதுகாப்பதற்குரிய வரி.

**கரைஉசர அட்டப் பெறுவதாகவும் :** (வே) ஏரி அல்லது குளத்தின் கரையை உயரமாக மண்ணிட்டுச் செய்து கொள்ளவும்.

*''இக்குளந்தான் வேண்டுமாறு கல்லிக் கரைநீளம் அட்டப் பெறுவதாகவும். இக்குளங்கரை உசர அட்டப்பெறுவதாகவும்''*

(முதல் பராந்தகன், கி. பி. 939, தெ. கல். தொ. 3:3. கல். 106)

**கரைஇட்டு கரைப்பொந்து பணித்தல் :** (வே) விளைநிலத்திற்குரிய எல்லைகளாக வரப்பிட்டு, அதில் பாய்கால் வடிகால் மடைகளை இன்ன இடத்தில் இன்னவாறு அமைத்துக் கொள்ள வேண்டுமென்று அதிகாரிகள் நேரில் திட்டப்படுத்துதல். இச் செயலைக் கிராமசபைக்கு உட்பட்ட தடிவழிவாரியம் நிகழ்த்தும். கரைப் பொந்து என்பதனை, கரைப் போந்து என்று கொண்டு. அதிகாரிகள் அளந்து கரையிட்ட வழியே சென்று நிலத்தைப் பார்வையிட்டுப் பணித்தல் என்றும் கொளலாம்.

*''சபையுள் இருந்து கரையிட்டுக் கரைப்பொந்து பணித்த காராம்பி செட்டு நாராயண கிரமவித்தனும் இராயூர் சந்திர தேவ அந்தாழிக் கிரமவித்தனும்''*

(தெ. கல். தொ, 3:1, கல். 29)

**கரைக்குலை :** (வே) ஆற்றின் கரையாக மேடிட்ட இடம்.

*''பாண்டவாய்க்கரைக்குலையுமாக இறையிலி நிலம்''*

(பாண்டவாய் ஆறு) (தெ. கல். தொ. 2, கல். 4)

**கரைக்கூறு செய்வார் :** (அ) கிராமங்களில் அவரவர்கட்குரிய நிலங்களை அளந்து பங்கிட்டு அவற்றிற்கு வரப்பிட்டு எல்லையிட்டளிக்கும் அதிகாரிகள்.

**கரைநிலம் :** (வே) தடிவழிவாரியமாக நிலக்கணக்கதிகாரிகளால் அளந்து பிரித்துக் கரையிடப்பட்ட விளைநிலம்.

**கரைப்படையிலார் :** (அ) கரைப்படைக்குத் தலைமை அதிகாரிகள். இத்தொடர் முதற் குலோத்துங்கன் கல்வெட்டில் அமைவதால், அக்காலத்துச் சோழ மண்டலக் கடற்கரைப் பாதுகாப்புப் படையொன்று இருந்ததை அறியமுடிகின்றது.

*''இவர்கட்கு இறைப்புணைப்பட்ட கரைப்படையிலார்க்கு தண்டல் நாயகம்.''*

(முதற்குலோத்துங்கன், கி.பி. 1079, தெ. கல். தொ. 5, கல். 990)

**கரைப்பொந்து :** (வே) விளைநிலங்களுக்குரிய பாய்கால், பாசன ஒழுங்கிற்கேற்ப வரப்புக்களில் ஆங்காங்கே அமைக்கப்பெறும் மடைவாய். பெரிய அளவில் தொகுதியாக அமைந்த நிலமாயின் பாசனக் காலிலிருந்து பிரித்துக் கரைகளை ஒட்டியதாகச் செல்லும் முறையில் அமைக்கும் சிறு கண்ணிக் காலில் அமைக்கும் மடைவாய்ப்பொந்து. போந்து என்று கொள்ளின் அதிகாரிகள் கரை வழியே (வரப்பின் வழியே) சென்று என்று பொருள் பெறும்.

*''இந்நிலத்துக்கு இறை இறுத்துக் குடுப்போமானோம் மகாசபையோம். ஸபையுளிருந்துக் கரையிட்டுக் கரைப் பொந்து பணித்த காராம்பி செட்டு நாராயண கிரமவித்தனும்''*

(விசயராசேந்திரன், கி. பி. 1056, அமண்பாக்கம் சாசனம்)

*''இந்நிலம் ஐவேலிக்கும் பொந்து போதாததுக்கு இக்கலிங்குக் காலுக்கு மேற்கு நீந்றுங் கள்ளி யொழுங்கையே நோக்கி கிடந்த நிலத்திலே கொள்ளப் பெறுவதாகவும்''*

(முதற்குலோத்துங்கன். கி. பி. 1106, தெ. கல். தொ. 5, கல். 1381)

**கரையிட்டு :** (வே) ஊர்ச்சபையினருள் தடிவழிவாரியத்தார் இன்னாருக்குரிய நில அளவு இது என்று அளந்து எல்லையிட்டு, வரப்பமைத்தல்.

*''சபையுள்ளிருந்து கரையிட்டுக் கரைப்பொந்து பணித்த''*

(தெ. கல். தொ. 3, பகு-1, கல். 29)

**கல்காரப் :** (கலை) கருங்கல் கட்டடம்.

*''அபிஷேக மண்டபத்து கீழைப்புலிமுகமான சோபானத்துக்கு வேண்டும் பொன்னிட்டு, கல்காரஞ் செய்வித்தான்''*

(மூன்றாம் இராசராசன், மணிமங்கலம் கல்வெட்டு)

**கல்நாடு :** (சமு) வீரமரணம் பெற்றோருக்குரிய நடுகற்கள் இட்டு வைப்பதற்கென்றே ஊரின் ஒரு புறத்தே ஒதுக்கப்பட்ட பார்வை இடம்.

*''என்னைமுன் னில்லன்மின் தெவ்விர் பலரென்னை முன்னின்று கல்நின் றவர்.''* (குறள் — அதி.78)

*''தகடூரில் பட்டார் நாகந்தை சிறுகுட்டியார் கல்நாடு*

(செங்கம் நடுகல், கி. பி. 9-ஆம் நூற்றாண்டு)

**கல்புறை :** (சம) (கல்புரை) கல்மாடம். கருவறையின் உட்பக்கம் தளிகை வைப்பதற்குரியதாக அமைக்கப்பெறும் கருங்கற் பலகை விளிம்பு. இதற்கு வெண்மையான ஆடை விரிப்பு அமைத்தல் வழக்கு.

*''கல்புறைக்கு புடவை இணை''*

(தெ. கல். தொ. 14, கல் 16, அ)

**கல்யாணதிருமேனியாதல் :** (சமு) நோயற்ற வாழ்வினனாதல். தமது அரசனது நல்வாழ்வு கருதி அதிகாரிகள் திருக்கோயில்-கட்கு இப்பெயரால் அறம் செய்வர்.

*''சக்கரவர்த்தி திருமேனி கல்லியான திருமேனி ஆக வேணுமென்று இத்திருக்கொடிநாள் எழுந்தருளிவிப்பான் பாரதாயன்பரமேஸ்வரன் ஆதித்த தேவன்''*

(முதற்குலோத்துங்கன், தெ. கல். தொ. 8, கல். 185)

**கல்லம்பலம் :** (சமு) கருங்கல்லால் கட்டப்பட்ட ஊர்ச்சபை கூடும் அம்பலம். கருங்கல் கட்டடமாக அமைந்த மண்டபம். இவ்வூர் கல்லம்பலத்து சந்திராதித்தவல் ஆற்றுத் தண்ணீர் அட்டுவதாக குடுத்தனிலம்''

(தெ. கல். தொ. 8, கல். 607)

**கல்லதர் :** (மொ) குன்றினிடையே அமைந்த வழி, மலைவழி

*''கல்லதர் நங்கிலி துடங்கி மணலூர் நடுவிந் துங்கபத்திரை-யளவும்''*

(முதல்குலோத்துங்கன்-மெய்க்கீர்த்தி)

**கல்லிவயக்கின நிலம் :** (வே) சமனில்லாதிருந்த நிலத்தை, வெட்டி ஒழுங்கு படுத்தி நன்செயாக ஆக்கின நிலம்.

*''நாட்டாண்மை மங்கலத்துத் திடல் - கல்லிவயக்கினநிலம்-இரண்டு மா''* (தெ. கல். தொ. 8, கல். 556)

**கல்லும் கள்ளியும் நாட்டி :** (வ) அரசனால் அறமாகச் செய்யப் பட்ட நிலம், கிராமம், ஊர் ஆகியவற்றிலொன்றின் எல்லை-களைக் கண்டு உறுதிசெய்வதற்கு, ஊர்ப்பொதுமக்களும் அதிகாரி களும் பிடி சூழ்ந்து படாகை நடந்து, எல்லைகட்குரிய இடங்களில் எல்லைக்கற்களும், எக்காலத்தும் அழியாது கிளைக்கும் நெடுங் கள்ளியும் நாட்டிச் செல்வது வழக்காகும்.

*''நாட்டோமுக்குத் திருமுகம் வர, நாட்டோமுந் திருமுகங்கண்டு, எதிரெழுந்து சென்று, தொழுது வாங்கித் தலைமேல் வைத்துப் பிடிசூழ்ந்து பிடாகை நடந்து எல்லை தெரித்து, கல்லுங் கள்ளியும் நாட்டி அறவோலை செய்த நிலம்''*

(பெரிய ஆனைமங்கலச் செப்பேடுகள்)

கல்வரி : (அ) செங்கல் சூளை இடுவதற்குரிய வரியாகலாம். குன்றுகளில் மக்கள் தேவைக்கேற்ப கல்தச்சரைக் கொண்டு கருங்கற்களைப் பிளந்து எடுத்தற்குச் செலுத்தும் வரி எனலாம்.

கல்வித்தபடி : (வே) அகழ்வித்தவாறு (கல்லுவித்தபடி)

*"நீர்புக வாய்க்கால் கல்வித்த படி"*

கல்வெட்டுப்படி : பழைய கல்வெட்டுப்படி.

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 58)

கலசப்பானை : (பொ) சிறிய பானை வடிவில் விளிம்பிடத்து மூக்கும் அடியிடத்துக் காலுமாக அமைக்கப்பெறும் கலன்.

*"கலசப்பானை ஒன்று; மூக்கும் அடியும் உள்பட பொன் நானூற்று முப்பத்து எண் கழஞ்சு"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

கலசயாட்டு : (சம) குட முழுக்கு. புதிதாகக் கட்டிய, அல்லது பழுது பார்த்து நிறைவுசெய்த கோயில்கட்கு, ஆகம விதிப்படி சிவப் பிராமணர்களைக்கொண்டு செய்யப்பெறும், குடமுழுக்குப் பெரு விழா.

கலஞ்சொரிகளிறு ; (அ) மரக்கலங்கள் வழியாக பிற நாட்டிலிருந்து கடல் வழியாகக் கொண்டு வரப்பட்ட யானைகள்.

*"தீவாந்தரத்து பூபாலர் திறைவிடுத்த கலஞ்சொரிகளிறு முறை முறை நிற்ப"* (முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)

கலம் : (பொ) பாத்திரம். (1) உண்ணும் பாத்திரம் (2) மரக்கலம். 3. ஒருகலம் -முகத்தல் அளவு.

1. *"ஸ்ரீராஜராஜதேவர் தம்பண்டாரங்களில் குடுத்த வெள்ளியின் திருப்பரிகலங்கள்"* (தெ. கல். தொ. 2, கல்.91)

3. *"நாளொன்றிற்கு நெல்லு முப்பதின் கலமாக"*

(தெ. கல். தொ. 3:2. பக். 187)

2. *"அலைகடல் நடுவுட் பலகலம் செலுத்தி"* (மரக்கலம்)

(முதல் இராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

கலவரை : (வா) ஒன்றரை கலம் அளவு (கலம் அரை-ஒன்றரை)

*"நிசதி கலவரை அரிசி"*

(திருவைகாவூர் கல்வெட்டு)

**கலன்** : (வ) கடன், உரிமைத்தொடர்பு. முன்தொடர்பு. தீர்க்கப் பெறாத கடன். இக்காலத்தில் வில்லங்கம் என்பர்.

*''இந்நிலத்துக்கு எப்பேற்பட்ட கலனும் இல்லை. கலனுளவாய்த் தொற்றுங்கால் நாங்களே தீத்து குடுக்கக் கடவோம்''*

(தெ கல் தொ. 12,பகு.1. கல் 190)

**கலனை** : (சமு) இனத்தவர்,வழியினர். ஓரினத்தொகுதியினர். ஒரே வகையான தொழிலைச் செய்துவரும் மரபினர்.

*''இப்பொன் பன்னிரண்டு கழஞ்சையும் கொண்டும் இவ்வூர் மன்றாடிக் கலனையோம் நித்த முழக்குநெய் யட்டுவோமானோம்''*

(தெ. கல். தொ. 19,கல்.59இ61)

**கலிங்கம்** : (அ) கோதாவரிக்கும் மகாநதிக்கும் இடையிலமைந்த வளமானநாடு. இதனை ஆட்சி செய்த மன்னர் கலிங்கர் எனப் பெயர் பெற்றனர். முதல் இராசராசன் கைப்பற்றிய நாடுகளுள் ஒன்று.

*''குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்''*

(முதல் இராசராசன்-மெய்க்கீர்த்தி)

**கலிங்கு** : (வே) ஏரிகளின் கரைகளில் அமைக்கப்படும் வலிமையான சுவரின் மேற்பகுதியில் கற்களால் மடைகளமைக்கப்பெறும். அவ் வலிய கல்லிடுமடையே கலிங்கு என்று பெயர் பெறும். ஏரியில் நீர் அளவுக்கு மேல் மிகுங்காலத்து கலிங்குகளின் மடைகள் வழியே வழிந்தோடும். (கலிங்கு வேறு மதகு மேறு)

*''ஏரியும் துகுந்து மதகுகளும் முறிந்து கலிங்குகளும் அழிந்து கிடக்கையில், உடைந்த மடைகளும் அடைத்து ஏரியும் கல்லி, கரையும் கற்கட்டி மதகுகளும் அட்டுவித்து கலிங்குகளும் செய்தபடி''*

(தெ. கல். தொ. 12, கல். 126)

**கலிங்குவாரியம்** : (சமு) ஏரியில் கட்டப்பெறும் மிகுநீர் வடிகாலாகும் கலிங்கு, பாசனத்திற்கு நீர் விடப்படும் மதகு, தூம்பு ஆகிய-வற்றைக் கண்காணிக்கும் குழுவினர். ஊர். நீர்ப்பாசனத்துறை. இக்குழு கிராம மகாசபையின் உட்பிரிவுகளிலொன்றாகும்.

**கலியாறு** : (மொ) ''பருவமழையின்மையால் நாட்டில் பெருகிய பஞ்சமாகிய ஆறு'' வறுமையாறு.

*''மனுவாறுபெருக கலியாறு வறப்ப''*

(முதற்குலோத்துங்கன்-மெய்க்கீர்த்தி)

**கலியுக ஆண்டு :** (வ) பாரத கண்டத்தில் கணக்கிடும் காலப் பேராண்டு கலியுக ஆண்டாகும். இதனைக் கணக்கிட நிகழும் கி. பி. வருடத்துடன் 3101 ஆண்டுகளைக் கூட்ட வேண்டும். கி. பி. ஆண்டுக் காண வேண்டின் கூறப்பெற்ற கலியுக ஆண்டில் 3101 ஆண்டினைக் கழிக்க கி.பி. ஆண்டு வரும்.

"*ஸ்வஸ்திஸ்ரீ கலியுக வருஷம் நாலாயிரத்தொன்பது மூன்று உத்தமசோழராகிய கோப்பரகேசரி வர்மற்குயாண்டு யகூ ஆவது*"

(கலியுகம்—4083—3101 = 982 – கி. பி. ஆண்டாகும்)

(தெ. கல். தொ. 3:3, கல். 284)

**கலியுகக்கோட்டுநாள் :** (வ) கலியுக ஆண்டு தொடங்கியநாள் முதலாக அப்போதைக்கு எண்ணி அளவிடப்பட்ட நாள்.

"*கலியுகக்கோட்டுநாள் பதினான்கு நூறாயிரத்து நாற்பத்து ஒன்பதினாயிரத்து எண்பத்து ஏழு சென்ற நாள்*"

இவ்வாறமைந்த கால அளவுமுறை சேரநாட்டார் வழக்காகும். (பார்த்திப சேகரபுரச் செப்பேடுகள்.)

**கலியுக ராமன் பணம் :** (பொ) தென்பாண்டி நாட்டில் கொல்லம் 679ஆம் ஆண்டில் வழக்கிலிருந்த பணம் (பொற்காசு)

"*ஸ்ரீபண்டாரத்தில் ஒடுக்கிந கலியுகராமன் பணம் என இப்பணம் எழுநூற்றின் உபயங்கொண்டு*"

(தெ கல். தொ. 5, கல். 754)

**கவருக்கு :** (வே) பிளவுபட்ட நிலத்துக்கு (கவர்—பிளவு, பிரிவு) பிரிந்த நிலம். பிரித்ததை வாய்க்கால். இடையே மேடிட்டமையால் இருபிரிவாகக் கவர்த்தமைந்த நிலம்.

"*இவ்வாய்க்கால் கீழ்வெட்டின கைச்சப்படியே கவர் திறப்பதாகவும்*"

(தெ. கல். தொ. XIV. கல் 78).

**கவிணி :** (சமு) கவுணிய கோத்திரமுடையவன்.

'*கவுணி சம்பந்தப் பெருமாளான வாலேந்து மவுலிபட்டர்*"

**கவ்வை :** (மொ) போரில் தோல்வியுற்றதனால் பெறும் அச்சமும் பழிச்சொல்லும்

"*வீரசலாமேகன் பொருளகத்து அஞ்சி தன் கார்களிறு இழந்து கவ்வையுற்றோட*"

(முதல் இராசாதிராசன் — மெய்க்கீர்த்தி—தெ. கல். தொ 3:1, பக். 53)

**கழஞ்சின்வாய் :** (வா) ஒரு கழஞ்சு பொன்னுக்குரியதாக-வட்டி

*"கழஞ்சின் வாய் மூன்று மஞ்சாடிப் பொன் பலிசையாக"*

(தெ. கல். தொ. 12, பகு. 1. கல். 87)

**கழஞ்சு :** (வா) பொன்னை எடையிடும் உயர்நிலை மதிப்பீட்டு அளவை. இதன் உள் எடைகள் மஞ்சாடி, குன்றி, மா என்று பெயர் பெறும். 20 மஞ்சாடி அல்லது 40 குன்றி மணி எடை ஒரு கழஞ்சாகும்.

*"பொன்-நிறை முப்பதின் கழஞ்சும் ஆக முப்பத்தேழு கழஞ்சே முக்காலே மூன்று மஞ்சாடியும் குன்றி ஏழு மாவுக்கும் விலை காசு ஐம்பது"*

(தெ. கல். தொ. 2, கல் 3)

**கழநிக்கோல் :** (வே) நிலமளக்கும் கோல். இக்கோல் பன்னிரண்டு சாண் நீளம் முதலாக முறையே, பதினான்கு, பதினாறு, பதினெட்டு சாண்களளவில், நிலங்களின் தரத்திற்கேற்ப நாடுகளில் வழக்கிலிருந்தன என்பதைச் சோழர்காலக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

**கழநிவாரியப்பெருமக்கள் :** (சமு) விளைநிலங்களாகிய நன்செய் புன்செய் நிலங்களைக் கண்காணிக்கும் குழு. இக்குழு கிராம மகாசபையுள் அடங்கிய பலதுறை நிர்வாகக்குழுவில் ஒன்றாகும்.

*"அமநிநாராயண சதுர்வேதி மங்கலத்துள் இவ்வாட்டை ஸம்வத்சரவாரியப்பெருமக்களும், தோட்டவாரியப் பெருமக்களும், கழநிவாரியப் பெருமக்களும்-இவ்வூர் பெரியதளி அபிஷேக மண்டபத்தே கூடி"*

(தெ. கல். தொ. 3, பகுதி-3, கல். 156)

**கள்வர் கள்வன் :** (அ) தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு அப்பகுதியை இரண்டாம் நந்திவர்மபல்லவனின் கீழிருந்து கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த முத்தரைய மனனாகிய சுவரன் மாறன் என்பவனின் சிறப்புப்பெயர்களுள் ஒன்று.

*"கள்வர்கள்வன் தஞ்சை நற்புகழான்"*

(செந்தலையிலுள்ள நியமக்கல்வெட்டுப்பாடல்)

**கள்ளிகொள்ளகாக்கமாட்டாது :** (வ) கள்ளி தின்பதனைக் காக்கவியலாது போகவே, கோயில்கட்குத் திருவிளக்கு நிவந்தமாக விடப்பட்ட பசுக்கள் மேய்ச்சலின் போது கள்ளித்தளிரையும்

பூக்களையும் உண்பதால் பால் சுரத்தல் வற்றிப் போதலுடன் வெப்பு நோயும் பெறுமாதலின் அத்தன்மையினின்றும் காக்க வியலாமல் போனதை இத்தொடர் புலப்படுத்துகின்றது.

*''திருநலக்குன்றத்து திருமூலட்டானத்து பெருமானடிகளுக்கு குடுத்தார் குடுத்த பசு கள்ளி கொள்ள காக்க மாட்டாது விற்றுக் கொண்ட பொன் பகல்விளக்குக்கு வைத்த பொன்''*

(முதற்பராந்தகன்-புதுக்கோட்டை கல்வெட்டு 44)

(தெ. கல். தொ. 19, கல். 151)

**கள்ளிப்பூ :** (கலை) கள்ளிப்பூவின் வடிவில் அமைக்கப்பெறும் பொற் பூவணி.

*''படுகண் ஐஞ்சும் கள்ளிப் பூ நாலும்-பாசமாலை''*

(தஞ்சைப் பெரியகோயில் கல்வெட்டு, தெ. கல். தொ. 2:2, கல். 56)

**களப்பாளன் :** (சமு) களப்பிரர் வழி வந்தவன். தமிழக வரலாற்றில் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஆறாம் நூற்றாண்டு வரையில் பாண்டிய நாட்டைக் கைப்பற்றித் தமிழகத்தின் பெரும்குதியைப அடக்கி ஆண்டவர்கள் வந்தேறிகளாகிய புதிய அரச மரபினர். அவர்கள் களப்பிரர் என்று பெயர் பெறுவர். அவர்கள் வழியினரே பிற்காலத்தில் களப்பாளர் என்று பெயர் பெற்றிருந்தனர்.

*''கோராசராசகேசரி வற்மற்கு யாண்டு ௰௫ ஆவது திருமறைக் காடுடைய புவனிவிடங்கதேவர்க்கு கோயில் கேரளாந்தகன் எடுப்பித்த உடையார் பணிமகன் பெரும் புலியூர் உடையான் ஐயாறனம்பலத்தாடியும் இடையளநாட்டு சிறிஞார் கிழவன் களப் பாள தன்னிச்சையும்''*

(முதல் இராசராசன்-தெ. கல். தொ. 17, கல். 509)

யாப்பருங்கல விருத்தியில் எடுத்துக்காட்டுப்பாடலில் இடம் பெறும் அச்சுதக்களப்பாளனும், பெரியபுராணத்தில் கூறப்பெறும் கூற்றுவ நாயனாரும் களப்பிரர் வழிவந்தவராவர்.

**களர் :** (வே) களர் நிலம். நெல்பயிர் செய்வதற்குரிய தகுதியின்றி நீர்க்கவும் உவரும் சேர்ந்த நிலம். இதனைக் ''களர்ப்பாழ்'' என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப் பெறுகின்றது.

**களரி :** (அ) ஆக்க நிலையம். பாதுகாப்பிடம். (களம்-களரி) (ஆவணக்களரி)

**களாவம் :** (கலை) அடுக்குத் தொங்கலாகவும், பல கோர்வை உள்ளதாகவும் பொன்னில் இரத்தினங்கள் வைத்திழைக்கப் பட்டதாகவும் அமைந்த இடையணி. மேகலையில் வேலைப்பாடமைந்த வகையாகும். விரித்த மயிற்றோகையின் வரிசையைப் போன்று தொங்கல் வரிகளாகவும் பின்னல்களாகவும் அமைக்கப் பெறுதலின் களாவம் என்னும் சிறப்புப்பெயரினைஇவ்விடையணி பெறுவதாயிற்று.

**கற்கிடை :** (சமு) துறுகற்களால் கோலப்பட்டு இடையே முதுமக்கள் தாழிகளைப் புதைக்கப்படும் உட்கிடையிடம். இது சுடுகாட்டின் ஒரு பகுதியாகும். இப்பகுதியும் இறையிலி நீங்கும் பொது நிலமாக சோழவரசில் குறிக்கப்படுதலை சாசனப் பகுதிகள் உணர்த்துகின்றன.

*''இவ்வூர் ஈழச்சேரியும் பறைச்சேரியும் வெள்ளான் சுடுகாடும், பறைச்சுடுகாடும், கற்கிடையும் ஆக இறையிலி நீங்கு நிலன்''*

இதனால் முதல் இராசராசன் ஆட்சி கி.பி. 1014-ல் சோழநாட்டில் கற்கிடைக்கல் இடுகாட்டகத்திருந்திருப்பதை அறியலாம்.

(தெ. கல். தொ. 2, கல். 4)

**கற்படிமாற்று :** (வ) கல்லில் பொறிக்கப்பட்ட சாசனச் செய்தியை உள்ளவாறே புத்தகத்தில் படியாக மாற்றி எழுதிவைப்பது.

*''திருமழுவாடி உடையார் விமானம் முன் வாங்கிச் செய்கிறபோது இ ஸ்ரீ விமானத்துள்ள கற்ப்படி மாற்று சேர்த்த பொத்தகப்படி''*

(தெ. கல். தொ. 5, கல். 654)

**கற்பித்த வகை :** (வ) புதிதாகச் செய்தமைத்துச் செயல் படுத்திய வகை.

*''நடந்துவரும் படிக்குக் கற்பித்த வகை அமுதுபடி சாத்துபடி திருமாலை திருவிளக்கு—உட்பட நடக்கும் நித்தல் நியமங்களுக்கு''*

(தெ. கல். தொ. 5, கல். 408)

**கற்பித்து :** புதிதாக ஏற்படுத்தி. திரும்பவும் நிகழுமாறு செயல்படுத்தி.

*''வைகாசித் திருநாள் நடவாமல் கிடக்கையில் சதயத்து நாள் துடங்கி, எழுந்தருள இம்மாதத்தில் நம்முடைய ஆட்டைப் பிறந்த நாள் திருவாதிரையிலே தீர்த்தம் பிறசாதங்கற்பித்து''*

(தெ. கல். தொ. 5, கல். 742)

**கற்பூரம் :** (சம) சீன நாட்டிலிருந்து தமிழகத்திலிருந்து கடல் வணிக வழி வந்துற்ற வெண்ணிற நறுமண எரிபொருள். பல்லவர் ஆட்சி காலத்திலேயே கற்பூரம் தமிழகத்தில் வழக்கிலுள்ளது. கோயில் இறைவழிபாட்டில் பயன்படுத்தப் பெறும் எரிபொருள்.

*"அருளாளப்பெருமாள்-திருமஞ்சனமும் பெருந்திருவமுதும் கொள்ள-கற்பூரம் ஆறுமாவும் அகில் அரைக்கழஞ்சும"*

(தெ. கல். தொ. 3:2, பக்-187)

**கற்பூரவிலை :** (அ) சரியான மதிப்பீட்டுவிலை. வரிவகைகளுள் ஒன்று. பொருள்களின் தரமறிந்து விலை நிர்ணயம் செய்வதற்கு அரசு நியமித்திருக்கும் பொருள் மதிப்பீட்டு அனுபவ அதிகாரிக்குரியதாக மக்களிடம் பெறும் வரி.

*''இந்நிலத்துக்கு காரியவாராட்சியும் ஸபா விநியோக கற்பூரவிலை காரியவாராட்சியும் மற்றும் எப்பேர்ப்பட்டவரிகளும் தவிந்தோம்''*
(தெ. கல். தொ. 5, கல்.738)

**கற்றளிப்பெருந்தச்சன் :** (கலை) கருங்கல்லால் கோயிலை அமைத்துத் தந்த பெரிய சிற்பி. தச்சன்- இங்கு சிற்பியைக் குறிக்கும். கல்தச்சன்.
(தெ. கல். தொ. 12. கல். 114)

**கற்றுப்புல் பேரகர முற்றூட்டும் :** (வ) ஆடுமாடுகள் கன்றுகள் மேய்தற்குரிய புல்வெளியும், பெரிய அளவில் பிராமணர் குடியிருக்கும் இடமும், புலவர், சோதிடர், கணியர் ஆகியோருக்கு இறையிலி முற்றூட்டாக அளிக்கப்பட்ட நிலமும். இவைகள் நீங்கலாகவே- இறையிலி செய்வது, சாசன மரபாம். (கன்று-கற்று)

*''உடும்போடு ஆமை தவழ்புற்று எழுந்த இடம் கற்றுப்புல் பேரகர முற்றூட்டும் இறுப்பதாக''*

(தெ. கல். தொ. III: I. பக்-39.)

**கறடு :** (பொ) (1) முத்தின் வகையில் ஒன்று. மேற்புறம் ஒழுங்கின்றி அமைந்திருத்தல். இது முத்திற்கமைந்த குற்றங்களுள் ஒன்றாம். பாறைப்பொதியலாக நிற்கும் சிறுகுன்றும் கறடு என்றே பெயர் பெறும்.

(2) நிலத்தின் புடைப்பாகப் பாறைகள் எழுந்து நிற்பதாயின் அப்பகுதி 'கறடு' எனப்பெறும்.

*''இரண்டாந்தரத்துக் கோத்த முத்து வட்டமும், அனுவட்டமும், ஒப்பு முத்தும், குறுமுத்தும், நிமபோளமும், பயிட்டமும், அம்புமுதும்,*

*கறடும்,இரட்டையும், சப்பத்தியும், சக்கத்தும், குளிர்ந்தநீரும், சிவந்த நீரும், உடைய முத்து''.*

(தெ. கல். தொ. 2, கல். 59)

*''தென்பாற்க்கெல்லை கறுங்கல் கறட்டுக்கு வடக்கும்''*

(தெ. கல். தொ. 3:1. கல். 22)

**கறடிகை :** (கலை)கால்காறை என்னும் அணியின் வெளிப்புறம், கரடியின் கைபோன்றதோற்றமுடன் ஒப்பனைசெய்யப்பெறுதலின் அவ்வொப்பனை உறுப்பு இப்பெயர் பெற்றுளது. (கறடிகை-கரடிகை)

*''திருவடிக்காறை ஒன்றில் துண்டம் இரண்டிற் கறடிகை ஆறும்''*

(தெ. கல். தொ. 2.2.கல்.51,)

**கறண்டிகைசெப்பு:** (பொ) இதனைப் பஞ்சலோகபாத்திரம் என்பர். கறண்டியுடன் கூடிய குவளை. செம்பினால் செய்யப்பெற்ற கறண்டிகைச் செப்பும் கோயில்களில் வழக்கிலுள்ளது. முதல் இராசராசன் இராசராசேச்சரத்திற்கு அளித்த கறண்டிகைச் செப்பும் பொன்னாலானது.

*''ஸ்ரீ ராஜராஜீச்வரமுடைய பரமஸ்சுவாமிக்குக் குடுத்த பொன்னின் சின்னங்கள்-கறண்டிகைச் செப்பு ஒன்று.''*

(தெ. கல். தொ. 2, கல். 1)

**கறியபாட்டம் :** (சம)ஊரகத்து நாளும் திகழும் காய்கனி அங்காடிக் கடைகளில், கோயிலுக்குரியதாகக் கொள்ளும் காய்கள். இது பாட்டம் என்னும் வரிமுறைகளில் ஒன்றாம்.

*''கோயிற்றாமப் பேறாய்க்கடையில் எடுக்கும் கறியபாட்டம் உடையார் திருவண்ணாமலை நாயநாற்கு விட்டேன்''*

(தெ. கல். தொ. 8, கல். 136)

**கறியமுதுவகை :** (சம) திருக்கோயில்களில், நிவந்தப்படி மடைப்பள்ளியில் சமைக்கப்பெற்று நிவேதனம் செய்யப்பெறும் கறி வகைகள், காய்க்கறி, புளிங்கறி, புழுக்குக் கறி, கூட்டுக்கறி, என்பனவாகக் கல்வெட்டுக்களில் கூறப் பட்டுள்ளன. இவை நெய் யிட்டு ஆக்கப்படும்முறை, ''கறி துமிக்கவும் பொரிக்கவும் பசுவின் நெய் ஆழாக்கு'' என்றும் விளக்கப்பட்டுள்ளன.

(தெ. கல். தொ 14, கல். 13,16-அ)

**கறைநிலம் :** (வ) மேட்டுநிலம், பயிரிடுவதற்குரிய தகுதியில்லாத பாழ்நிலம். துவர் மண்ணடைவான நிலம்.

**கன்மிகள் :** (சம) கோயிலில் தெய்வ வழிபாட்டுக்குரிய பணிகளைச் செய்பவர். இவர்கள் சண்டேசுவரர், அர்ச்சகர், தேவரடியார், ஆண்டார்கள் முதலியோர் உள்ளிட்டவர்களாகக் கூறப்பெறுதல் வழக்கு.

*"திருவானைக் காவுடைய எம்பெருமானுக்கு. மூலப்பிருத்திய நாகிய சண்டேசுவரர் உள்ளிட்ட கன்மிகளோம்"*

(தெ. கல். தொ. 3, பகு. 2, பக்-168)

**கன்மிசை ;** (மொ) கல் மேல். கல்லின்மீது.

*"கன்மிசை எழுதி வைத்தனன்."*

**கன்மிப்பேறு :** (ச) கோயில் காரியங்கள் செய்ய உரிமை பெற்றார் தம்பெயரால் செலுத்தும் காணிக்கை. அல்லது வரி.

**கன்றுநிலைபாழ் :** (வே) கால்நடைகளின் கன்றுகள் மேய்ச்சல் புலமாகக்கிடக்கும் பாழ்நிலம். புறம்போக்குத் தரிசு எனலுமாம்.

"இதனைக் கன்றுபேய்பாழ்" என்றும் கூறப்பெறும்.

*"ஊர்நத்தமும் கன்றுநிலைப்பாழும் நஞ்சை புஞ்சைகளும்"*

(தெ. கல். தொ. 8, கல். 290)

**கன்னிப்போர் :** (அ) இளவரசாக முடிசூட்டப்பெற்றவரசன். அக் காலத்தே பகைவர் நாட்டின்மீது படைசெலுத்திச் செய்யும் முதற் போர்.

*"கன்னிப் போர் செய்தருளிக் காந்தளூர்ச்சாலை கலமறுத்து மன்னு புகழ் மறையவர்தம் மணியம்பலத்துள்ளினிதிருந்து"*

(பராந்தகபாண்டியன்-கன்னியாகுமரிகோயில் கல்வெட்டு)

**கனமாகச்செய்த :** (பொ) உள்ளீடு இல்லாமல் உலோகத்திண்மை நிறைந்த வார்ப்பாகச் செய்த. கனமாக உள்ளே இடைவெளி யில்லாமல் உலோகஉருக்கு வார்ப்பாகச் செய்த.

*"இரண்டு திருக்கைய்யுடையராகக் கனமாக எழுந்தருளுவித்த திருநாவுக்கரையர் ப்ரதிமம் ஒன்று"*

*"இவரைக் கவித்த இருபத்து ஒருவிரற்ச்சுற்றிற் கனமாகச் செம் பால் செய்த பிரபை ஒன்று"*

(தஞ்சைப் பெரியகோவில் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 2, பகு. 2)

**கனப்பொள்ளல் :** உலோகத்தால் பருமையாக அமைந்த உள்கூடு.

*''கனப்பொள்ளலாகச் செய்த ரிஷபம் ஒன்று''*

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

**காகளர் :** (கலை) வட்டமாக அகன்ற வாயுடன் குவிந்து நீண்டு குழலாக இருக்கும் குழலிசைக் கருவி. எக்காளம் என்று பெயர் பெறும்.

*''அகநாழிகைச் சென்னடைக்கு அடுத்தன தட்டழி, மத்தளி, கரடிகை, தாளம், காகளம் ஏற்றி''*

(பார்த்திப சேகரபுரச் செப்பேடுகள், கி.பி. 9. நூற்.)

**காசாயக்குடி :** (சமு) கிராமத்தாரிடும் பணிகளை, அவ்வப்போது செய்யும் நிபந்தனையோடு, கிராமப் பொதுவிடத்தில் வீடு கட்டி வாழும், கிராமச் சமுதாயத் தொழிலாளக் குடிமக்கள்.

**காசாயம் :** (அ) (காசு ஆயம்) அரசு காசாகப்பெறும் சுங்கவரி. வழிநடைச் சுமைச் சாரிகை வரி.

*''பொன்வரி, காசுக்கடமை உள்ளிட்ட பலகாசு ஆயங்களும்''*

(தெ. கல். தொ. 7, கல் 82)

**காசின் வாய் பூவழி கல நெல்லு :** (வே) முதலீடு செய்த காசிற்குரிய வருவாயாக, ஒரு பருவ போக நெல் விளைவின் அறுவடையின்போது, கல நெல்லு-வட்டியாக (ஒருபூ - ஒரு பருவ விளைவு)

(தொல்பொருள் ஆண்டு அறிக்கை எண். 7/1899)

(செந்தலை-கல்வெட்டு)

**காசு :** (பொ) அணிகலன்களையும் நிலங்களையும் மதிப்பீடு செய்து விற்கவும் கொடுக்கவும் குறிக்கும் காசு பொற்காசாகும். வரி, இறை, ஆயம், அந்தராயம் ஆகிய அரசுபெறும் வரிக்காசுகள் செம்பு, பித்தளை ஆகிய வேறு உலோகங்களால் செய்யப்பெற்ற நாணயங்களாகவே அமைக்கப்பட்டிருந்தன.

*''பண்டாரத்துப் பொன் கொடு செய்த திருப்பட்டிகை நிறை அறுபத்தேழு கழஞ்சேய் ஆறுமஞ்சாடிக்கு விலைகாசு தொண்ணூற்று ஐந்து''* (பொற்காசு)

(தெ. கல். தொ. 2.) (தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுக்கள்)

**காசுக்கருதி :** (பொ) பொற்காசுகளில் முதல் தரமானது. நற்கா சென்றும் பெயர் பெறும்.

***"காசுக் கருதித்துளையிலும் உரையிலும் நிறையிலும் வழுவாதது தீப் போக்குச் செம்பொன்"***

**(தெ. கல்.** தொ. 8, கல். 199)

**காசு கல் :** (வா) பொன்னை எடைபோடும் நிறை கல்.

**காசு-சின்னம் :** (பொ) சோழபாண்டியர் ஆட்சியில் உயர்ந்த முதல் மதிப்பு நாணயம்-காசு என்பதாகும். கடைசியாக கொள்ளப்பட்ட பின்ன மதிப்புச் சின்ன நாணயம்-சின்னம் என்பதாகும். உருபா-பைசா போன்றதாகும். சோழவரசில் நாட்டில் நடைமுறையில் இருந்த நாணயமதிப்பீட்டு முறை இதுவேயாகும்.

*"ஒருகாசு தலையாக ஒரு சின்னங் கடையாகவும்"*

(தெ. கல் தொ. 8, கல்.148)

**காட்சிகாட்டின :** (பொ) மூலப் பொருள்களை நேரில் கணக்கிட்டுக் காட்டின அதிகாரிகள் நேரிற் கண்டு தணிக்கை செய்யுமாறு காட்டின பொருள்கள்.

***"பண்டாரத்துக் காட்சி காட்டின நீக்கி"***

(தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டு)

**காட்டாதே :** (பொ) கொடுக்காமல், அளிக்காமல்.

**காட்டுக்குறி :** (சமு) வைணவ பிராமணருள் ஒரு சாராருக்குரிய குடிப்பெயர்.

*"இவ்வூர் பண்டிதவத்ஸலச்சேரி காட்டுக்குறி பஞ்ஞகிரமவித்தன்"*

(தெ. கல். தொ. 19, கல். 58)

*"ஸ்ரீகிருஷ்ணபட்டனும் காட்டுக்குறி வெண்ணய கிரமவித்தனும்"*

(தெ. கல். தொ. IV. கல்-133 )

**காடி :** (வா) பல்லவர் காலத்தில் நாட்டில் சிறப்பாக வழக்கிலிருந்த நெல் அளவை. இது கூடநெல் என்பது போலாகும். 5 குறுணி அல்லது 40 நாழி 1 காடி-பல்லவர் காலம் 3 காடி 1 கலம்-சோழர் காலம்.

*"புகழ்த்துணை விசெய்யரையன் முபபதின்காடி நெல்லும் ஐங் கழஞ்சு பொன்னும் குடுத்து மீட்டு"*

(தந்திவர்மபல்லவன் கி.பி. 789, எபி. தொகுதி, 8, எண் 29)

*''ஓய்மா நாட்டு ஆன்மூர்நாட்டு மணலி ஊரார் ராஜகேஸரியா லட்டக்கடவ பஞ்சவாரநெல்லு ஆயிரக்காடி, பள்ளிப் பேறு தொண்ணூற்று அறுகாடி முக்கால் யிவை காடி கலமாக்கிய நெல்லு முன்னூற்று அறுபத்து ஐய்ங்கலனே எழுகுறுணி''*

(1096 ÷ 365 = 3காடி-1 கலம்)

(தெ. கல். தொ. 17, கல். 222)

*''இந்நெல் முதலால் பதின்கடியால் ஒருகாடி நெல் பொலி ஊட்டுவதாக''* (பரமேசுவரப் பல்லவன், கி.பி. 673)

(தெ. கல். தொ. 8, கல். 331)

**காடுகாள் :** (சம) கொற்றவை பாலைக்குரிய தெய்வம். சுடுகாட்டை விரும்பியுறையும் இறைவி.

*''காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்''*

(மணிமேகலை-காதை-6. வரி. 53)

*''இவ்வூர் காடுகாள் கோயிலுந் திருமுற்றமும் இவ்வூர் துர்க்கையார் கோயிலுந் திருமுற்றமும்''*

கொற்றவையும் துர்க்கையும் வெவ்வேறாகக் கூறப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். (தெ. கல். தொ. 2. கல். 5)

*''காடுபோக்கில் அரைமாவும் காடுகாள் வாரத்து அரைமாவும்''*

(தெ. கல். தொ. xix. கல். 71.)

**காடுகோள் :** (வே) முன்னர் விளை நிலமாக இருந்த பகுதி, பயிரிடப் பெறாமல், புற்பூண்டுகள் மண்டிக் காடாகி நிற்கும் நிலை.

**காடுவெட்டி :** (அ) பல்லவர்கட்குரிய சிறப்புப்பெயர்களுள் ஒன்று. தொண்டை மண்டலத்தில் காடுகளை வெட்டி அப்பகுதியில் நாடுகளை அமைத்ததால் இப்பெயர் பெற்றனர். காடுகளை வெட்டி அழித்து நிலமாகத் திருத்துதல்.

*''விக்ரமாதித்த வாணராயன் விண்ணப்பத்தாலும், காடு வெட்டித் தமிழ்ப்பேரரயன் ஆணத்தியாலும்''*

(தெ. கல். தொ. 3 : 1, பக். 93)

*'காடு வெட்டி கட்டைப்பறித்து மேடும் பள்ளமும் திருத்தி நீர் நிலமாக''*

(தெ. கல். தொ. 7, கல். 97)

காடெழு கரம்பு : (வே) செடிகொடிகள் மண்டிக்காடாக எழுந்து நிற்கும் சமனில்லாத நிலப்பரப்பு.

*"ஏரிக்கு மேற்கு காடெழு கரம்பு"*

(தெ. கல். தொ. 17. கல். 304)

காணநாழி : (பொ) திருச்சிராப்பள்ளி மலைக் கோயிலில் நெய் யளக்க வழக்கிலிருந்த அளவின் பெயர்.

*"காணநாழியால் நிசதி அட்டக்கடவ நெய் இருநாழி"*

(தெ. கல். தொ. 14, கல். 10)

காணப்படுவோம் :(வ) காணப்பொன் தண்டப்படுவோம். (காணம்-பொற்காசு)

*"நிலைப்பொலியூட்டாசத் திங்கடோறுமாக குடுப்போமானோம் முட்டுவதாயிற் தர்மாஸநத்து நசத் நாலேகால் காணம் படுவோமானோம்"*

(தெ. கல். தொ. 12. கல். 70)

*"காணம் இலியெனக் கையுதிர்க் கோடலும்"*

(மணிமேகலை காதை-16, வரி-10.)

காணி : (வே) வாரிசு உரிமை நிலம். கோயில்களிலும் அற நிலையங்களிலும் பணி செய்வார்க்கு அரசோ கிராமசபையோ நிலையாக வழிவழித்தொடர்ந்து ஊழியம்செய்து பரம்பரை உரிமையாக அனுபவிக்கக் கொடுக்கும் நிலம். இதனைக் காணியாட்சி என்றும் கூறப்பெறும். விருத்தி, காணி, போகம், முதலியன ஒரு பொருளாம்.

*"இந்நாயனார்க்கு வில்லவராயர் செய்வித்த உலகமுண்டான் திருநந்தவனஞ் செய்யும் பேர்க்கு இவர் காணியாக கொண்டு விட்ட நிலம்."*

(தெ. கல். தொ. 17, கல். 170)

காணிஆட்சிப்பேறு : (அ) நிலவுரிமையாளர், தன்னுரிமைக் குரியதாகச் செலுத்தும் வரி.

காணிக்கடன் : (அ) காணியாட்சி பெற்ற நிலங்களுக்குரிய நிலவரி. நிலத்தின்தரம் விளைவுஆகியவற்றிற்கேற்ப அரசுவிதிக்கும் வரி. இவ்வரி நெல்லாகவும் காசாகவும் அமையும். நிலவுரிமையாளர் அரசுக்குச் செலுத்தும் வரி.

*"இறைகட்டின நிலத்தால், காணிக்கடன்-அளக்கக் கடவ நெல்லும் இடக்கடவ பொன்னும் ஏாசும"*

(தெ. கல். தொ. II. கல்.5.)

**காணிக்கை :** (அ) அரசனுக்கும் உயர் அதிகாரிகட்கும் மக்கள் செலுத்தும் கையுறை. விருப்பவரி.

**காணிக்காரளவு :** (அ) இஃது அரசியலார் மேற்பார்வையில் ஆளிட்டுச் செய்யும் அலுவல்களில் ஒன்றாகும். இவ்வதிகாரிகள் கோயில்களுக்குரிய நில வருவாய்களை ஆங்காங்கே அறுவடைக் காலங்களில் முறைப்படிப்பெற்று, ஒன்றாகச் சேர்த்து, தலைமைப் பண்டாரத்திற்குக் கொண்டு வந்து சேர்த்து கணக்கில் பதிவிடுவார்கள். எனவே, அவர்கள் பெற்ற பதவியும் 'காரளவு' என்று பெயர் பெற்றது. இவர்கட்குரியதாகக் காணி உண்டு. இக் காலத்தில் இச்செயலார் பெரும் பண்ணையாளர்களிடம் "கார்வாரி" என்னும் பெயருடன் பணி புரிகின்றனர்.

*"உடையார்ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் கோயிலில் காரளக்கும் ராஜராஜப் பலலவராயனுக்கு தன் பாட்டன் நிலையாய் வருகிற காணிக்காரளவுக்கு காணியாகக் குடுத்தோம்"*

*"காணிக்காரளவு மாடம் உள்ளிது ஒடுக்கி வருகிற பரிசு"*

(மாடம்-நெற்களஞ்சியம்)

(தெ. கல். தொ. 2:3, கல். 68)

**காணிகொண்டாரும் அடை கொண்டாரும் :** (வே) நிலத்தைப் பரம்பரையாக உரிமையுடன் அனுபவிக்கும் உரிமையாளரும் பயிரிடும் பகுதி உரிமை கொண்டாரும்.

(உரிமையாளர்—குத்தகையாளர். பகுதி உரிமை—உள்குத்தகை.)

*"இக்கோயில் காணி கொண்டாரும் அடை கொண்டாரும் இக் கோயில் திறத்து முறை செய்தாரே இவ்விளக்கு எரிக்கக் கடவோமானோம்"*

(முதற் குலோத்துங்கன், கி.பி. 1105, தெ. கல். தொ. 5, கல். 1001)

**காணிமாடு :** (சமு) குத்தகைக் காணியைப் போன்று இடையர் உரிமையுடன் பெற்றுள்ள பயன்தரும் மாடு. தானிய விளைவினால் பயன்தரும் நிலங்களைக் காணியாட்சியாகப் பெறுதலைப் போன்று, பால்வளம் தருதல் மாடெனும் செல்வத்தாலாதனான் மாடு காணி மாடென்று கருத்துடன் கூறப்பட்டுள்ளது. காணியாட்சி போன்ற உரிமையுடன் இடையர் பெறும் மாடு.

*"மையம்பாக்கத்து மன்றாடி பெருமாள் மகன் சேக் கோனேன். இவ்வெருமை பத்தும் காணிமாடாகக் கைக் கொண்டு அருமொழி தேவன் உழக்கால்"*

(தெ. கல். தொ. 7, கல். 539)

**காணிமாறின நிலம் :** (சமு) குறிப்பிட்ட பொதுக் காரியங்கட்காக ஊர்ச்சபையார் அளிக்கும் இறையிலியாகும். காணியாட்சி நிலத்தினை, அப்பணி செவ்வனே நிகழாத குற்றத்தால், காணியாட்சி உரிமையினை மாற்றி மற்றொரு பணியாளனுக்கு உரிமை செய்யும் நிலம்.

*"இந்நாட்டு குலோத்துங்க சோழன் கருப்பூரில் துரோகஞ் செய்நாரை காணி மாறின நிலமும்"*

(தெ. கல். தொ. 5, கல். 708)

**காணியாட்சி :** (வ) நில அனுபோக பரம்பரை உரிமை.

**காணிவெட்டி :** (வே) நிலங்களின் எல்லைகளைக் கோலும் ஆள்வரி. அண்டை வெட்டிக்காட்டும் ஆள்வரி.

**காதலர் :** (வழி) புதல்வர். தம்மக்கள்

*"இருதயத்தன்பொடு கருது காதலருள், இத்தலம் புகழ் இராசேந்திர சோழன்"*

(விசயராசேந்திரன்—மெய்க்கீர்த்தி)

**காதலர் காதலர் :** (வ) பெயரர். தனது மக்களின் பிள்ளைகள்.

*"இருதயத்தன்பொடு கருது காதலருள், இத்தலம் புகழ் இராசேந்திர சோழனை, "மின்னுந்தன் காதலா காதலர் தம்முள் மேதகு கதிராங்கனை கழல் மதுராந்தகனை"*

(விசயராசேந்திரன்—மெய்க்கீர்த்தி)

**காந்தளூர்ச் சாலை கலமறுத்தளி :** இத்தொடர் முதல் இராசராசன் மெய்க்கீர்த்திப் பகுதியாகும். இதற்கு

(1) சேரநாட்டின் காந்தளூரில் இருந்த வட மொழிக் கல்லூரிக்குரிய உணவு அறச்சாலையில் வேதிய மாணவர்கள் இவ்வளவு பேர் உண்ணலாம் என்ற வரையறையினை அரசன் செய்தருளினான் என்றும்

(2) காந்தளூர்ச்சாலை என்ற பெயரான் அமைந்திருந்த கடற்கரைப்பட்டினத்தில் சேரமன்னன் அமைந்திருந்த மரக்கலப்

படையை இராசராசன் அழித்தருளினான் என்றும், இருபொருள் கூறுவர்.

இத்தொடர் ''காந்தளூர்ச்சாலை கலமறுத் தருளி'' என்றும் கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டுள்ளன.

''சாலை கலமறுத் தருளி'' என்ற சொற்களுக்கமைந்த பொருளாக, இராசராசன் காந்தளூர்ச் சாலையில் மரக்கலங்களை அழித்து அருளினான் என்று கொள்ளுதலான் பெறும் பொருள் நிலையைவிட, இராசராசன் உணவு அறச்சாலைக்கு உண்கலம் வரையறை செய்து அருளினான் என்ற பொருளே, அருளி என்ற பண்பியல்புக்கு ஏற்றதாக அமைந்துள்ளது.

'சாலை' என்ற அளவில் கல்வெட்டுக்களில் குறிக்கப்படும் பெயர்ச்சொல், வழி என்ற பொருளுக்கமையால் அறச்செய லினையே குறிப்பதாலும், அதுபற்றியே ''சாலா போகம்'' என்ற அறநிவந்தம் கூறப்பெறுதலானும் காந்தளூரில் இருந்த சாலை, அங்கிருந்த வடமொழிக் கல்லூரிக்குரிய உணவு அறச்சாலை என்ற பொருளே தெளிவு பெறுவதாகவுளது.

'காந்தளூர்ச்சாலை' என்று சேர நாட்டில் ஓரூர் கடற்கரைப் பகுதியில் இருந்ததாகச் சான்றுகள் கிடைத்திலது. ஆனால், 'காந்தளூர்' என்ற ஊர்மட்டும் இருந்ததனை இராசராசன் காலத் திற்கு முற்பட்ட காலத்தில் வெளியிடப்பட்ட, பார்த்திபசேகரபுரச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன

அச்செப்பேட்டின் தமிழ்ப் பகுதியின் அறத் தொடக்கமே ''காந்தளூர் மர்யாதையால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்கு சாலையுஞ் செய்தான் ஸ்ரீ கோக்கருநந்தடக்கன்'' என்று கூறு கின்றது. இதனால் காந்தளூர் என்ற பெயரால் சேர நாட்டுக் கடற்கரைப் பகுதியில் ஊர் ஒன்று இருந்ததும் அவ்வூரில் நிகழ்ந்த அறச்சாலையைப் போலவே கோக்கருநந்தடக்கனால் அறச்சாலை அமைக்கப்பட்டது என்பதும் புலனாகின்றது. இக்செப்பேட்டின் காலம் கி.பி. 865 ஆகும். எனவே,

இராசராசன் காந்தளூரைக் கைப்பற்றிய அளவில் அங்கமைந் திருந்த அறச்சாலையில் நாளும் உண்பார் இத்துணை பேரென உண்கலங்களை வரையறுத்து அருள் செய்தான் என்பதேபொருள் பொருந்தியதாக அமைகின்றது.

பிற கல்வெட்டுச் செய்திகளும் வரலாற்று ஆய்வுகளும் இக் கருத்திற்குச் சான்றாகவே அமைந்துள்ளன. மற்றும் இராச

ராசனின் கல்வெட்டுக்களில் அவனது நான்காம் ஆட்சி ஆண்டு முதலாகத் தோன்றிய கல்வெட்டுக்களின் (கி.பி.989) தொடக்கமே "சாலை கலமறுத்த கோவிராஜகேஸரி" என்றே சிறப்புடன் தொடங்குதலும் இக்கருத்திற்கு அமைவதாகவே உளது. இத் தொடர் பற்றி ஆய்வு செய்தவரும் சேர நாட்டின் தென்பகுதியை நன்கு அறிந்தவருமாகிய பேராசிரியர் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள், "கேரள ஆராய்ச்சிக் குழுக் கட்டுரைகள்' என்ற நூலின் பகுதி 2, பக்கம் 100-ல் உணவு அறச்சாலையே என்பதனைச் சிறந்த சான்றுகளுடன் நிறுவியுள்ளார்.

வரலாற்றுப் பேரறிஞராகிய நீலகண்டசாத்திரியார் தமது "சோழர்" என்ற தலைப்பிலமைந்த நூலில் (பதிப்பு) 2/1975) பக்கம் 189-190-ல் மிகத் தெளிவாக காந்தளூரில் இராசராசன் அறச்சாலைக்கு அருளிய சிறப்பினைப் புலப்படுத்தியுள்ளார்.

இவற்றைக்கொண்டு, வரலாற்று நோக்குடன் இத் தொடருக்கு நாம் பொருள் விரிவு காண்பதாயின்,

காந்தளூர்க் கடல்முகத்தில் நின்ற சேரரின் வலிய கடற்படையை முதல்இராசராசன் வென்று, காந்தளூரினகத்தேயிருந்த வடமொழிக் கல்லூரிக்கமைந்த உணவு அறச்சாலையில், தன் ஆட்சி சேர நாட்டில் நிலவியதற்குரிய அறிகுறியாக, மாணவர் நாளும் உண்ணும் உணவு எண்ணிக்கையினை மிகுத்து உண்கலங்களை வரையறை செய்து கல்வி வளர்ச்சிக்கு அருள் செய்தான், என்ற அளவில் கூறலாகும்.

காந்தளூரில் இருந்தது உணவு அறச்சாலை என்பதற்குரிய சான்றுகள்:-

(1) *"காந்தளூர் மர்யாதியால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்கு சாலையும் செய்தான் ஸ்ரீ சோசக்கருநந்தடக்கன்-இச்சாலைக்குப் பெய்த கலத்தில் பவிழிய சரணத்நார் உடைய கலம் நாற்பத்தைந்து"*

கலம்-உண்கலம், சாலை-உணவுச்சாலை.

(பார்த்திபசேகரபுரச் செப்பேடுகள் கி.பி. 865.)

(2). *"காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி"*

(முதல் இராசராசன்-மெய்க்கீர்த்தி)

(3) "வேலைகெழு *காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளி*"

(முதல் இராசாதிராசன் மெய்க்கீர்த்தி)

(4) *"ஸ்வஸ்திஸ்ரீ சாலைமறுத்த கோவிராசகேஸரி பன்மற்கு"*
(முதல் இராசராசன், தெ. கல். தொ. 17, கல். 339)

(5) *"ராஜராஜ பாண்டிநாட்டு உத்தம சோழவளநாட்டு புறத்தாய நாட்டு கழ்க்குடி ஸ்ரீவல்லபப் பெருஞ் சாலையான ராஜராஜ பெருஞ்சாலைக்கு"*
(திருவாங்கூர், கல். தொ, 6, பக். 150)

(6) *"குமரி இராஜராஜன் சாலையின் சாலாபோகம் நாஞ்சி நாட்டு மணக்குடி ஊரோங் சைத்திட்டு"*

(திருவாங்கூர், கல். தொ. 1, பக். 242)

(7) *"சட்டர்-பொருவார் அற்றைக் கலம் இழப்பது"*

(கலம்-உண்ணும் கலம்) (பாத்திரம்)

(8) *"ஐஞ்சுகாணம் பொன் தண்டம் இட்டு சாலை உண்பது"*

(சாலை-உணவிடும் அறச்சாலை)

(பார்த்திபசேகரபுரம்-செப்பேடு)

(9) திரு நீலகண்ட சாத்திரியார் ஆய்வுரை.
("சோழர்" பதிப்பு 2/1975, பக். 189-190.)

**காந்தார கிராமம் :** (கலை) காந்தாரப்பண்ணின் சுரநிரல்கள்-சங்கீத ரத்னாகரமுடையார் இவ்விசைத்திறன் (மூர்ச்சனை) தெய்வலோகம் சென்றுவிட்டது என்பர். மூர்ச்சனை-ஏழிசைச்சுரநிரல் தொகுதி.

முதல் மகேந்திரவர்ம பல்லவன் இக்காந்தாரகிராம நிரல் வரிசைகளை நரம்பின் வழி இசைக்கும் முறைமையினை நாட்டில் வளர்த்துள்ளானென்று குடுமியான்மலைக் கல்வெட்டு உணர்த்துவதாக ஆராய்ச்சியாளர் கூறுவர். (குடுமியான்மலை-இசைக்கல்வெட்டு.) கானல் வரிப்பாடலாக மாதவி யாழில் இசைத்து அதனால் வருந்தியதும் நுளையர் விளரிப்பண்ணாகிய காந்தார கிராமமே என்றும் கூறுவர்.

*"நுளையர் விளரி நொடிதரும் தீம்பாலை"* (சிலம்பு-கானல்வரி)

**காப்பியன் :** (சமு) காப்பியக்குடியில் வந்தவன் (பிராமணன்)

*"இப்பொன்னில் காப்பியன் வடுகங்கணத்தாந் வாசிரியும், காப்பியன் சேந்தன் மாடமுடையானும், காப்பியன் வடுகந் தாமோதிரநும்"*

*"காப்பியன் நானூற்றுவன்"* (முதற்பராந்தகன், கி.பி. 941)

(தெ. கல். தொ. 8, கல். 196, 197.)

**காமிடைதல் :** (மொ) பூமரச் சோலைகள் நெருங்கிச் சூழ்ந்திருத்தல்.

*"காமிடைவள நாமணைக் கோணை"* (முதல் இராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

காமிடை-காடுகள் நெருங்கிய.

**காமியம் :** (மொ) கருதிச் செய்தது, நேர்ந்து செய்வது.

*"தம்முடைய இட்டகாமியம் முடிகைக்கு இவ்வூர் திருப்புறத்துறை மஹாதேவர்க்கு தம்முடைய காணியாக நிலம்—குடுத்தமையில்"*

(தெ. கல். தொ. 7. கல்-496.)

(இஷ்டகாமியம்)

**காய்ஒழுகின ஆண்டு முதல் :** (வே) குலை அல்லது தார் தோன்றின ஆண்டு முதல். காய்ப்புத் தொடங்கிய கால முதல். (பாக்கு, தென்னை, வாழை இவைகட்கு வரி விதிக்கும் முறைமை).

*"கமுகிட்டாற்க்கு கமுகிட்ட நிலங்களுக்கு இவ்வாண்டு முதல் பத்து ஸம்வத்ஸரத்தில் பாதியே யிறையிறுப்பாராகவும் கிடங்கறுத்து வாழையிட்டுக் காய் ஒழுகின ஆண்டு முதல் இவ்வண்ணமிறை கொள்வோமாகவும்"*

(முதல் இராசராசன், கி.பி. 1005)

(தொல்பொருள் ஆண்டு அறிக்கை-எண். 200/1901)

**காய்யிலை :** (பொ) காய்இலை, பாக்கும் வெற்றிலையும்.

**காயில் :** (அ) காயல், கடல்நீர் பெருகி நிற்கும் கழிகளுள்ளகரை, ஓதநீர்க்கரை, காயல்பட்டினம்.

**கார்கடமை நெல்கடமை:** (வ) குறுவைச் சாகுபடிக்குச் செலுத்தும் வரி, சம்பா சாகுபடிக்குச் செலுத்தும் வரி.

இதில், கார்—கார்காலத்தில் விளையும் குறுவை நெல்.

நெல்—தைமாத போகமாகும் சம்பா நெல்லையே குறிப்பதாகும். பூ—என்பது தாமரை மலரைச் சுட்டுவதுபோல கல்வெட்டுகளில் நெல் என்று குறிக்கப்பெறும் பெயர்ச்சொல், சம்பாநெல்லையே குறிப்பிடுவதாகும். இந்நெல் தைத்திங்களளவில் அறுவடையாகும் சம்பா போகமாகும். அரசு இறை, கடமை விதிக்கும் 'பசானம்' (பசலி) என்ற நிலபோக வரிக்குரிய கால விதிப்பும் இப்பயிரைக் கொண்டே அமைவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**கார்த்திகைப்பிச்சை :** (அ) கார்த்திகைத்திங்கள் போகமாகும் நெல் அறுவடையாகும் போது பெறும் வரி. இது கார்த்திகை யரிசி என்றும் கூறப்பெறும்.

**கார்த்திகை காணிக்கை :** (அ) ''இதனைக் கார்த்திகைக் காசு' என்றும் கல்வெட்டுகள் குறிக்கின்றன. கார்த்திகை நாளின் சிறப்பிற்காக மக்களிடம் பெறும் மகமையாகும். இதனை ஊர்ச்சபையாருள் ஒரு குழுவினர் வசூல் செய்து திங்கள்தோறும் ஊரிலுள்ள கோயிலில் கார்த்திகை விண்மீன் கூடிய நாளில் திங்கட் சிறப்பு விழா நிகழ்த்துவர். இன்றும் சில கிராமங்களில் இச் சிறப்பு வழக்கிலுள்ளது.

(தெ. கல். தொ. VII. கல். 57)

**கார்பசானர் விளையும் நிலம் :** (வே) குறுவையும் சம்பாவும் ஆகிய பருவகால நெற்பயிர்கள் விளையும் இருபோக நிலம். இதனைக் ''கார் மறு நிலம்'' என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளது.

''*இந்நெல்—அளக்குமிடத்து கார் பாதி பசானம் பாதி அளப்பதாகவும்*''

(தெ. கல். தொ. 3:1, பக். 168) (முதற்குலோத்துங்கன்)

**காராண்கிழமை :** (வே) பயிரிடும் முதலுரிமை உள்ள நிலம்.

'*காராண் கிழமையாக விலைகொண்டுடைய வண்டாங்குடி வளையில்*''

(புதுக். கல். தொ. எண். 260)

**காராண்மை :** (வே) நிலத்தினை உழுது பயிர்செய்து அரசுக்கு இறை செலுத்தும் வேளாண்குடிமை காராண்மை எனப்படும்.

''*கண்டியதேவன் இவ்வூரில் காராண்மையாக விலைகொண்ட நிலம்*''

(தெ. கல். தொ. 5 கல். 302)

**காராம்பிசெட்டார் :** (சமு) பிராமணருள் ஒரு சாராருக்குரிய குடிப் பெயர். காராம்பி செட்டு (காராம்பி சேஷ்டியார்)

''*காராம்பிச் செட்டார்கட்கும் நெடுவெட்பூரார்கட்கும்*''

(தெ. கல். தொ. 12. பகு. 1, கல். 105)

''*சபையுள்ளிருந்து கரையிட்டுக் கரைபொந்து பணித்த காராம்பி செட்டு நாராயண கிரமவித்தனும்*''

(மணிமங்கலம்—கல்வெட்டு)

''*இப்படிக்கு இவை காராம்பிசெட்டு சீரங்கநாதபட்ட ஸோமயாஜி எழுத்து*''

(தெ. கல். தொ. 7, கல். 45)

**காரும் ஒருபூவும் :** (வே) கார்காலத்தில் பயிர் செய்யும் குறுவை நெற்பயிரும் ஒரு போகமாகப் பயிர் செய்யும் சம்பா நெல் பயிரும். (ஒரு பூ—ஒரு போகம், ஆறு திங்களளவில் விளையும் சம்பா நெற் போகம்)

**காரும் மறுவும் ஒரு பூவும் கடைப்பூவும் :** (வே) குறுவைப்பயிரும், தாளடிப்பயிரும், ஒருபோகச் சம்பாப் பயிரும், சித்திரைக் குறுவையும் (நெற்பயிர்வகை).

(தெ. கல். தொ. 17, கல். 127)

**கால் :** (வே) பாசனத்திற்குரிய நீரோடும் வாய்க்கால். தானியங்கள் அளக்கும் மரக்கால்.

*'சோமாசி பூமிக்குக் கிழக்கும் காலுக்குத் தெற்கும் நால்பால் எல்லை''*

(தெ. கல். தொ. 3. பகுதி. 3, கல். 156)

*''திரிபுவன மஹாதேவி பொற்கால் நாலாயிரவனோடொக்கும் சிவலோகனான மரக்கால்''*

(தெ. கல். தொ. 17, கல். 222)

**கால்பரிந்து :** காலால் விரைந்து ஓடி.

*''கால் பரிந்தோடி மேல் கடற்பாய''*

(இராசேந்திரன் 2 மெய்க்கீர்த்தி)

**கால்பாடு :** (பொ) வாய்க்கால் வழி பாசனம் பெறும் நிலம்.

*''எங்கள் நாட்டில் நாங்கள் விட்ட பாற்பள்ளியும் கால்பாடும்''*

(தெ. கல். தொ. 5, கல். 224)

**கால்மாட்டில் :** (பொ) கால்நடைச் செல்வத்தில், பசு. எருமை, ஆடு, ஆகிய மூவினமும் சேர்ந்த பண்ணையே கால்நடைச் செல்வமாகும் இச் சொற்றொடர் இராசராசன் கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ளன. கால்மாடு-கால்நடைச் செல்வம்.

*''ஸ்ரீராஜராஜதேவர் குடுத்த கால்மாட்டில் அடுத்த ஆடு அறுபத்தொன்பதும்''*

*''ஸ்ரீராஜராஜதேவர் குடுத்த கால் மாட்டில்-அடுத்த ஆடு நாற்பத்தெட்டும், எருமை நாலினால்''*

*''கௌளாந்தக வளநாட்டு உறையூர்க் கூற்றத்து ராஜாச்ரயச் சதுர்வேதி மங்கலத்துப் பிடாகை பெருங்குடி இருக்கும் இடையன்*

*தூரன் குளிர்ந்தானுக்கு உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் குடுத்த கல்மாட்டில் அடுத்த பசு நாற்பத்திரண்டும்''*

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுக்கள்)

(தெ. கல். தொ. 2, கல். 64, 95)

**காலத்தெவை :** (சமு) வரிவகையுள் ஒன்று. இது பருவ காலங்களில் அறுவடை முதலிய கூலித்தொழிலுக்கு ஆட்களை அமர்த்திக் கொள்வதற்குச் செலுத்தும் வரி எனலாம்.

**காலளவுகொள் கூலி :** (அ) (வரி) ஊர்ப்பொது மரக்காலாக ஊர்ச் சபையாரிடத்து இருக்கும் மரக்காலை, மக்களோ வணிகரோ, நெல்லளப்பித்துக் கொள்வதற்குச் சபையார் பெறும் கூலி-வரிக்காசு.

*''குணமேநகைபுரத்துக் காலளவு கொள் கூலி உள்ளிட்ட அங்காடிப் பாட்டத்துக்கு வைக்கக்கடவ காசு நாற்பது''*

(தெ. கல். தொ. IV. கல்.223.)

**காலியூர்க் கோட்டம் :** (அ) தொண்டைமண்டலம் பல்லவர் ஆட்சியில் இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் காலியூர்க் கோட்டம் ஒன்றாகும். செங்கற்பட்டு மாவட்டத்தின் மேற்குப் பகுதி, இதனுள் மாமண்டூர், உக்கல் முதலான ஊர்கள் அடங்கியிருந்தன.

*''ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து காலியூர் கோட்டத்து உக்கலாகிய ஸ்ரீ விக்கிரமாபரண சதுர்வேதி மங்கலம்''*

(தெ. கல் தொ. 3:1, கல்.4)

**காவிதி :** (அ) அரசியலதிகாரிகட்கும் கலை வல்லுநர்கட்கும் சிறப்பாக அளிக்கப்பெறும் பட்டம். காவிதிமை - கண்காணிப்புச் செய்யும் பதவி.

*''காவிதிமை செய்ய ஒருவனுக்கு அரையன் மணலிலிங்கனான செம்பியன் பெருங்காவிதிக்குப் பங்கு ஒன்றும்''*

(தெ. கல். தொ. 2, கல். 66)

**காவிதிகணை :** (கலை) காவிதிப் பட்டம் பெறுவார் பெறும் கணையாழி (மோதிரம்).

*''சுந்தரபாண்டிய ஈஸ்வரத்து தேவரடியாள் தேவன் கருதாச் சிலைக் காவிதி மகள் காவிதி கணை பெற்றாள்''*

(தெ. கல். தொ. 14, கல். 83)

**காவிதிக்காணி :** (அ) காவிதிப்பட்டம் பெற்றாருக்கு அரசோ, ஊர்ச்சபையினரோ அளிக்கும் இறையிலி நிலம்.

*"இவ்வூர் மத்யஸ்தன் தம்பிமார்-காவிதிக்காணி"*

(தெ. கல். தொ. XIX. கல்.63.)

**காளம் :** (கலை) குழற்கருவி, எக்காளம், குழல் வடிவில் நீண்டு முன்வாய் அகன்றிருக்கும் தோற்றத்தில் அமைக்கப்பெறுவது. இதன் பகுதிகள், கங்கில், குழல், மோதிரம் என்பனவாகும். கங்கிலையும் குழலையும் இணைக்கும் திருகுச்சுரையே மோதிரம் என்று பெயர் பெறும். இத்தகைய காளம் தஞ்சை இராசரா சேச்சரத்தில் சிவபாத சேகரன் காளம்; ஸ்ரீராஜராஜன் காளம் என்ற பெயர்களால் இராசராசனால் பொன்னால் செய்யப்பெற்று கொடுக்கப்பட்டிருந்தன. இராசராசன் இரட்டைக் குழலமைப்பில் செய்தளித்துள்ளமை சிறப்புடையதாகும்.

*"சிவபாத சேகரனென்றும், ஸ்ரீ ராஜராஜனென்றும் திருநாமம் வாங்கி, கங்கில் ஒன்றும் குழல் இரண்டும் மோதிரம் ஐஞ்சும் உடைய பொன்னின் காளங்கள்"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

**காளாஞ்சி :** (சம) சிவவழிபாட்டில் பயன்படுத்தும் பொன்னால் செய்த சின்னங்களுள் ஒன்று. இது வெண்கலத்தாலும் செய்யப் பெறுதலுண்டு.

*"ஸ்ரீராஜராஜீச்வரமுடைய பரமஸ்வாமிக்கு குடுத்த பொன்னின் சின்னங்கள்-காளாஞ்சி ஒன்று பொன் ஐஞ்நூற்று எண்பத்து அறு கழஞ்சு"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

*"இவனே குடுத்த வெண்கலக் காளாஞ்சில் ஒன்று"*

(தெ. கல். தொ. 8, கல். 557, முதல்பராந்தகன், கி.பி. 727)

**காளாபிடாரி :** (சம) கிராமத்தின் அல்லது ஊரின் நடுவில் அமைக்கப் பெறும் கிராம தேவதை (பெண் தெய்வம்).

*"இவ்வூர் மேற்சேரி திருமணி மண்டகமுடைய காளாபிடாரிக்கு நாங்கள் விற்றுக் குடுத்த நிலமாவது"*

(தெ. கல் தொ. 19, கல். 63)

**காற்கோளாய்க் கிடந்த :** (வே) காலமாறுபாட்டால் நீர்ப்பாசன மின்றி கவனிப்பாரற்றுக் கிடந்த நிலம்.

*''இந்ந.ற்பால் எல்லைக்கும் உட்பட்ட நிலம் காற்கோளாய்க் கிடந்தமையால்''*

(தெ. கல். தொ. 5, கல். 465)

**காஸ்யபன் :** (சமு) காஸ்யபன் கோத்திரத்து வழிவந்த பிராமணன். காஸ்யபர்-ஓர் ஆரிய இருடியாவர். ஆரியர், தம்மை ஒவ்வோர் இருடிகளின் வழி வந்தவராக அல்லது இருடிகளை முதல்வராகக் கொண்ட வழி முறை கொண்டவராக வகுத்துக் கொண்டுள்ளனர். அவ்வமைப்பு முறையினையே கோத்திரம் என்பர். அவ்வா றமைந்த பிராமண கோத்திரங்கள் தமிழகத்தில் எழுபதிற்கும் மேலாக உள்ளன.

*''இத்தேவர் கோயிலில் காணியுடைய சிவபிராமணன்-காஸ்யப கோத்திரத்து திருக்காளத்தி உடையான்''*

(தெ.கல்.தொ. 17, கல். 293)

**கிடாரம் :** (பொ) பொன்னின் கடாரம். கொப்பரை. வாயகன்றதும், அளவில் பெரியதும், விளிம்பில் இருபுறம் பிடிவளையம் பொருத்தப் பட்டதுமான குழிந்த பெரும் பாத்திரம். அபிடேக நீர் நிரப்புதற்கு இப்பெரும்பாத்திரத்தினை முதல் இராசராசன் பொன்னால் செய்து ராசராசேச்சரமுடையார்க்கு அளித்துள்ளான்.

*''ஸ்ரீராஜராஜதேவர் ஸ்ரீராஜராஜீச்வரமுடையார்க்கு குடுத்த பொன்னின் கிடாரம் ஒன்று, ஆடவல்லான் என்னும் கல்லால் நிறை பதினோராயிரத்து எழுநூற்று நாற்பத்து இரு கழஞ்சு''*

(தெ.கல்.தொ. 2, கல். 1)

**கிடை :** (சம) வேத ஆகம உபநிடத புராண பாடசாலை. கிடைப் புறம். வேதாகம சாலைகட்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

*''பவிழியக் கிடைப்புறத்துக்கு நிலம் ஒருவேலி''*
(கரந்தைச் செப்பேடுகள்-ஏடு.55)

கிடைப்புறம். வாஜ்ஸனை, ஸாதோகம், காப்பியம் தலவுக்காரம், ரகூவர வதாரம் முதலிய ஆகம உபநிடதஇதிகாச புராணத் துறை கட்குரிய பாடசாலைகட்கும் அளிக்கப்பட்டிருந்ததை முதல் இரா சேந்திரன் கி.பி. 1020-ல் வெளியிட்ட செப்பேட்டுத் தொகுதியின் அறச்செயற்பகுதி புலப்படுத்துகின்றது. (கரந்தைச் செப்பேடுகள்)

**கிண்கிணி :** (கலை) பொற்சதங்கை. சிறு பொற்சதங்கைகள் பொன் நாணில் வரிசையாகக் கோர்க்கப்பெற்றிருப்பது, சதங்கைமாலை எனப்படும்.

"*திருப்பட்டிகை கிண்கிணி பெரும் நாணும் காங்காய் நாணுடையவும்*"

(தெ. கல். தொ. 2, கல். 93)

**கிம்பிரிமுகம் :** (கலை) சோழர்கால அணிகலன்களின் முப்பாகவும், எடுப்பாகவும், தொடக்கமாகவும் பொன்னால் அமைக்கப்பெறும் யாளமுகமே கிம்பிரிமுகம் என்பதாகும். இதனை யானை முகமென்றும் கூறுவர்.

"*திருப்பட்டிகை-கிம்பிரி முகமும் உடையது*"

(தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டு, தெ கல். தொ. 2, கல். 98)

**கிரந்தம் :** (மொ) வடமொழிக்கமைத்த எழுத்து. எழுத்தில்லா வடமொழியை வழக்கிலிருந்த தமிழெழுத்து வரிவடிவங்களிலிருந்து கற்பித்துக்கொண்ட எழுத்துக்களாம். பல்லவர் காலத்தில் இக்கிரந்தம் வளர்க்கப் பெற்றமையால் பல்லவர் கிரந்தம் என்றும் பழங்கிரந்தம் என்றும்பெயர் பெறும். இவ்வெழுத்தின் தோற்றம் கி.பி. ஆறாம் நூற்றாண்டாகும்.

**கிரமவித்தன் :** (சமு) வேதத்தின் கிரமபாடத்தில் வல்ல பார்ப்பனரது பழைய பட்டப்பெயர். சிவபிராமணரும் வைணவ பிராமணரும் இப்பட்டப் பெயரினைப் பொதுவாகப் பெற்றிருந்தனர்.

"*இராயூர் விஷ்ணு திருவேங்கட கிரமவித்தன். யஜ்ஞநாராயண கிரமவித்தன். இராயூரான் னந்திக் கிரமவித்தன்*"

(தெ. கல். தொ. 3:1 கல். 31.)

"*ஸ்ரீமதுராந்தகச்சேரி ஆலங்கொன்றை திருவரகிரமவித்தன்*"

(தெ. கல். தொ. 5. கல். 1003.)

**கிரஹதக்ஷிணை :** (சம) கிரகங்கட்குரிய காணிக்கை. கிரக தோஷங்கட்குப் பரிகாரமாகச் செய்யும் காணிக்கை.

"*ஸூர்ய கிரஹணத்தின் கிரஹதக்ஷிணையாக உறியூர் பிறிநிலம் பூசைக்கும் திருப்பணிக்கும் விட்டேன்*".

(முதற்குலோத்துங்கன் கி. பி. 1087,

தெ. கல். தொ. 5. கல். 1379)

**கிரஹம் :** கோயில்.

*கிளிஞெனூர் திகைத்திறல்-விஷ்ணூ கிரஹம் எடுத்தது''*

(தெ. கல். தொ. 12, பகு. 1. கல். 47)

**கிராமசபை கூடும் இடம் :** (சமு) கிராம நிர்வாகத்திற்குரியதாக ஆண்டுதோறும் குடவோலைத் தேர்வின்வழியே தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினரடங்கிய கிராமசபைக் கூடும் இடம். கிராமத்திலுள்ள கோயில் திருமுற்றம், முகமண்டபம், மஹாமண்டபம், ஆகிய இடங்களில் ஒன்றில் கூடும். சில ஊர்களில் கிராம மகாசபை கூடுதற்கென்றே தனிமண்டபம் அமைக்கப்பட்டுள்ளதைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. சில ஊர்களில் நிழல்தரும் மரங்களின் கீழும் தோப்புக்களிலும் கிராமசபை கூடியுள்ளது.

''*விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்து சபையோம். எம்மூர் புவனி மாணிக்க விஷ்ணு கிரஹத்து முக மண்டபத்தேய் கூடியிருந்து*'' (தெ. கல். தொ. 3:1, கல். 7)

''*ஜயங்கொண்ட சோழ மண்டலத்து செங்காட்டுக் கோட்டத்து மாகணூர் நாட்டு மணிமங்கலமான ராஜசூளாமணிச் சதுர்வேதி மங்கலத்து மஹா ஸபையோம், இவ்வாட்டை கன்னி நாயற்று அமர பக்ஷத்து சதுர்தசியும் திங்கட்கிழமையும் பெற்ற உத்திரத்து நாள், எம்மூர் பிரமஸ்தானம் பெரிய மண்டபத்தே தர்ம்மம் செய்து கூட்டம் குறைவறக் கூடியிருந்து*''.

(தெ. கல். தொ. 3:1, கல். 30)

**கிராமகிழவர் :** (வ) கிராமப் பெருமக்கள். கிராம சமூகப் பெருமக்கள்.

''*தேவகன்மிகளும் கிராம கிழவர்களும்*''

(தெ. கல். தொ. 14, கல். 493)

**கிராமம் :** (சமு) மக்கள் அவ்வவர்க்கமைந்த முறைமையுடன் வாழும் சிற்றூர். நெல்விளையும் நிலங்கள் சூழ்ந்த சிற்றூர். (தமிழ்ப் புலவர் சரித்திரம்-ஆறுமுக நாவலர் பக்.28)

''*ஸ்ரீநாரணம் மணிக்கிராமத்தார்க்கும் சேனாமுகத்தார்க்கும்*''

(மூன்றாம் நந்திவர்மன்-சயாம் தேசத்துத் தமிழ்ச் சாசனம்)

**கிரைத்திரவியம் :** (பொ) கிரையத் திரவியம். பொருளின் விலைக்குரிய தொகை. (பணம்)

''*விற்று விலையாவணஞ் செய்து குடுத்து இன் நிலத்துக்கு விலை திரவ்யமும் இறை திரவ்யமும் அறக்கொண்டு இறையிலியாக விற்று விலையாவணஞ் செய்து குடுத்தோம்*''

(தெ கல். தொ. 3:1, 10)

**கிருதபிராயச்சித்தம் :** ஒழுக்கக் கேட்டிற்கு-நெய்யினால் செய்து கொள்ளும் கழுவாய் (பரிகாரம்).

*''கிருதப்ராயஸ்சித்தஞ்செய்து சுத்தராயினார்-வாரியத்துக் குட வோலை யெழுதிப்புக விடப் பெறாததாகவும்''*

(உத்தரமேரூர் கல்வெட்டு,முதல் பராந்தகன், கி.பி. 921)

**கிறமாகதமாய் :** (சமு) கிரமாகதமாய்: முறைமையால் உரிமையுடைய தாக.

*''பெருநான்கெல்லைக்குட்பட்ட நிலத்த..ற் பங்கு ௰௨ இப்பங்கு பன்னிரண்டில் எங்களுக்கு கிறமாகதமாய் வருகிற பங்கு ௬''*

(தெ.கல்.தொ.8, கல். 333)

**கிரன் இலக்குவணன் மரக்கால் :** (பொ) சிறு பழுவூர் திருவாலந்துறை கோயிலில் வழக்கிலிருந்த மரக்கால். (தெ. கல்.தொ.5,கல்.665)

**கீழ் முதல் :** (வ) முன்னரிருக்கும் முதலீட்டினோடு புதிதாகச்சேர்க்கப் பெறும் பொருள் அல்லது நிலம். பழைய நிவந்தத்தோடு புதிதாகச் சேர்க்கப்பட்ட நிலம்.

*''திருமழபாடி மகாதேவர்க்கு கீழ்முதல் அட்டிநநிலம்''*

(தெ.கல். தொ.XIX.கல்.55)

**கீழ் வணை :** (சமு) கிராம நிர்வாகத்தின் கீழ் சமுதாயப்பணி செய்யும் தொழிலாளர்கள்.

*''இந்த குணமேநகைபுரத்து ஏறினவியாபாரிகளும்,வெள்ளாளரும், சங்கரப்பாடியரும், பட்டனவரும் உள்ளிட்ட குடிகளும், தச்சர், கொல்லர், தட்டார், கோலியர் உள்ளிட்ட கீழ் வணைகளும்.''*

(தெ.கல்.தொ.4,கல்.223)

**கிழான் :** (சமு) ஊரிற்குத் தலைமையானவன். கல்வி கேள்விகளில் முதன்மை பெற்றவன். பெருநிலக்கிழான்.

*''இராசேந்திரசிங்கவளநாட்டு அம்பத்தூர் நாட்டு நுளப்பியாற்று கிழான பேராயிரமுடையாநான குண்டூர் தோணயக்கிரமவித்தன்''*

(தெ கல்.தொ.3:1.கல்.31.)

**குகாபோகம் :** (சம) குகை என்று கூறப்பெறும் சைவ மடங்கட்குரிய செலவினங்கட்கு மூலதனமாக அளிக்கப்படும் இறையிலி நிலம் அல்லது ஊர்.

*"கோயில் தெற்கில் திருமடை வளாகத்து திருஞான சம்பந்தன் குகைக்கு குகாசேஷமாக பூண்டியுடையான் உதையஞ்செய்தான் குடுத்த பிடாகை குலோத்துங்க சோழ நல்லூர்"*

(மூன்றாம் ராஜராஜதேவர் கி.பி. 1240)

(தெ. கல். தொ. 8, கல். 206)

**குகை :** (சம) மடம். சிவன் கோயில்களைச் சார்ந்த மடவளாகங்களில், நாளும் இறைவழிபாட்டின்போது சேவித்துநிற்கும் சைவ அடியார்கட்கும் தபசியார்க்கும் தங்கி உணவு பெறும் பொருட்டு அமைக்கப்பெறும் இருப்பிடம்.

*"ஸ்ரீ கைலாசமுடையார் திருமடை விளாகத்து திருஞான சம்பந்தன் குகை" "திருநெல்லிக்கா திருஞானசம்பந்தன் திருக்குகையில் இருக்கும் மறைஞான சம்பந்தனும் ஆழித்தேர் வித்தகரும்"*

(தெ. கல். தொ. 17, கல். 563, 564)

**குங்கிலியம் :** (சம) கோயில்களில் நிகழும் வழிபாட்டில் நறும்புகை எழும்புதற்குரியதாகத் தணலில் இடும் நறும்பொருள்.

*"திருப்புகைக்குக் குங்கிலியம் நிசதம் ஒருபலவரை"*

(முதல் இராசராசன், கி.பி. 994) (தெ. கல். தொ. 14, கல். 86)

**குசக்கலம் :** (சமு) குயவன் இடும் மண்கலம். (மண்பானை)

*"இப்பந்தலுக்குக் குசக்கலம் இடுவார்க்குத் திங்கள் கூக்கு நெல்லுஉ கலமும்"*

(தெ. கல். தொ. 3:1, கல். 4)

**குசக்காணம் :** (அ) குயவர் ஆற்றுப் படுகையிலும், களிப்பிடத்தும் மண் அகழ்ந்தெடுப்பதற்கு அரசு காசாகப் பெறும் வரி. காணம்- சங்ககாலம் முதற்கொண்டு தமிழகத்தில் வழக்கிலிருந்த பொன் நாணயம்.

*"காணம் இலியென கையுதிர்க் கோடலும்"*

(மணிமேகலை-சாதுவன் வரலாறு)

**குசமண்ணாழி :** குச மண் நாழி, குயவன் மண்ணால் செய்த நாழி அளவைப்படி.

**குடதிசை தன் நாள் உகந்து :** (அ) முதற்குலோத்துங்கன் தான் பிறந்த நட்சத்திரமாகிய பூச நாள் விழாவை மேற்குத் திசையி

லுள்ள சேர நாட்டில் நிகழ்த்தி மகிழ்ந்து. (முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)

**குடங்கொண்டு படி கடந்து புக்கார் :** (சம) அர்ச்சகர். திருக்கோயில் களில் வழிபாடு செய்யும் சிவாச்சாரியார்.

*"இத்தேவர் திருமுன்பே குடங்கொண்டு படி கடந்து புக்காரே உழக்கு பசு நெய்யால் ஒரு திரு நுந்தாவிளக்கு எரிப்பதாக"*

(தெ. கல். தொ. 8, கல். 642.)

**குடநகர் :** (அ) நாடு என்ற உட்பிரிவின் மேற்குப் புறம் அமைந்த நகர்.

*"ஜெயங்கொண்ட சோழமண்டலத்து காலியூர்க்கோட்டத்து காலியூர் நாட்டுக் குடநகர்"*

(தெ.கல்.தொ. 7, கல். 96)

**குடபுலம் :** மேற்குத் திசையிலுள்ள நாடு (சேர நாடு)

*"குன்றூர் இளையாவன் சாத்தனும் குடபுலத்துக் காடஞ்சாத்தனும்"*

(தெ.கல்.தொ. 17, கல். 520)

(முதல் பராந்தகன், கி.பி. 937)

**குடமலைநாடு :** (அ) மேற்கு மலைப்பகுதியிலமைந்த நாடு, குடகு நாடாகும். காவிரியானது தோன்றும் பகுதி. முதல் இராசராசன் இந்நாட்டை வென்றுள்ளான்.

*"குடமலைநாடும் கொல்லமும் கலிங்கமும்"*

(முதல் இராசராசன் மெய்க்கீர்த்தி)

**குடவோலை :** (சமு) சோழர்காலத்தில் குடத்தினுள் ஓலையிட்டுக் கிராம சபைத் தேர்தல் நிகழ்ந்ததால், அத்தேர்தல் "குடவோலை" என்று பெயர் பெற்றது. இக்குடவோலைத் தேர்தல் எவ்வாறு நிகழ்ந்ததென்பதனை செங்கற்பட்டு மாவட்டம், உத்தரமேரூரி லுள்ள இரண்டு கல்வெட்டுக்கள் விரிவாக உரைக்கின்றன.

**குடவோலைத் தேர்தல் முறை :** (அ) செங்கற்பட்டு மாவட்டம் உத்தரமேரூரிலுள்ள முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டு, குடவோலை (கிராமசபைத் தேர்தல்) முறைகளை மிகத் தெளி வாக அறிவிக்கின்றது. தேர்தலில் உறுப்பினராக நிற்பவர்க் குரிய தகுதிகளையும், தேர்தல் விதிமுறைகளையும் அக் கல் வெட்டில் அறுதியிட்டுக் கூறியுள்ளமை வியக்கத் தக்கதாகும்.

உறுப்பினராதற்கமைந்த தகுதிகள் :

1. கால்காணி நிலத்துக்கு மேல் அரைக்காணி நிலமுடையவன்.
2. தனக்கு உரிமையுடைய மனையிலமைந்த இல்லத்தில் வாழ்பவன்.
3. முப்பத்தைந்து வயதிற்கு மேல் எழுபத்தைந்து வயதிற்கு உட்பட்டவன்.
4. வேத சாத்திரமறிந்த பிராம்மணம் வல்லவன்.
5. வேதாகமவிருத்திகளை ஓதுவிக்கும் பயிற்சியுடையவன்.
6. அரைக்கால் காணி நிலமுடையானாயினும், நாலு பாஷ்யத்திலும் ஒரு பாஷ்யம் முழுமையாக அறிந்தவன்.
7. நிர்வாகக் செயல்திறம் மிக்கவன்.
8. ஒழுக்கமும் ஆசாரமும் உடையவன்.
9. பழியற்ற வழியில் பொருளீட்டிய தூய்மையும், மனத் தூய்மையும் உடையவன்.
10. மூவாண்டிற்குள் கிராமசபை வாரிய உறுப்பினனாக இல்லாதவன். இத்தகைய தகுதிகளைக் குறைவின்றிப் பெற்ற பெருமக்களையே குடும்பு மக்கள் தேர்ந்து அவர்களின் பெயர்களைத் தனித்தனி ஓலைகளில் எழுதி, அவ்வோலைகளைக் குடத்தினுள் இடுவர். குடும்பு என்பது இக்காலத்தில் ''*வட்டம்*'' ''*தொகுதி*'' என்பதனை ஒக்கும்.

உறுப்பினராகத் தகுதி அற்றவர் :

1. ஊர்ச்சபையிலமைந்த வாரியங்களில் முன்னரிருந்து கணக்குக் காட்டாது பிழைத்தவன்.
2. தேர்தலில் நிற்பவரின் சிற்றன்னை பெரிய தாய் ஆகியோரின் மக்கள்; அத்தை மாமன் மக்கள்; தாயோடு உடன் பிறந்தான்; இவர்கட்கும் தனக்கும் பிள்ளை கொடுத்த மாமன்; இவர்கள் மனைவியோடு உடன் பிறந்தாளை மணந்தவன்; உடன் பிறந்தாள் மக்கள்; தன் மருமகன்; தன் தகப்பன்; தன் மகன் ஆகிய உறவின் முறையார்கள்.
3. தானென்ற அகம்பாவத்திலும், பெரிய பழிக்குற்றத்திலும் முன்னர் செய்தபடி. ''*மகாபாதகம்*'' என்ற கிராமக் குற்றக் குறிப்பில் பெயரெழுதப்பட்டவன்.

4. சிற்றின்பத்தால் கெட்டவர்க்குப் பிராயச்சித்தம் செய்யும் ஆளாக உள்ளவன்.
5. பிடிவாத குணம் பெற்றிருப்பவன்.
6. பிறர் பொருளைக் கைப்பற்றி வாழ்பவன்.
7. கையூட்டுப் பெற்றவன் (கையூட்டு-லஞ்சம்)
8. முன்பு பரத்தையர் கூட்டுறவால் தூய்மையற்றவனாகவிருந்து நெய்யால் செய்யப்பெறும் பிராமண பிராயசித்தம் செய்து கொண்டவன்.
9. பழிகள் பல செய்து அவற்றிற்குக் கழுவாயாக பிராயச் சித்தம் செய்து கொண்டவன்.
10. கிராமதுரோகியாய் இருந்து தண்டனை செலுத்திப் பிராயச் சித்தம் பெற்றவன்.

ஆக, இத்தகைய குற்றங்கட்குட்பட்டாரை நீக்கிவிட்டு, தகுதி யுடையார் பெயர்களை மட்டும், குடும்பு மக்கள் குறித்துக் குடம் புகவிடுவர்.

**குடமும் ஓலையும் :** உத்தரமேரூரில் முப்பது குடும்பு அமைந் திருந்தது. ஒவ்வொரு குடும்பிலுள்ளவர்களும் தாமே கூட்டம் நடத்தி நிறைவேற்றுக் கழகத்தில் உறுப்பினராக இருத்தற்குரிய தகுதியுடையாரைத் தேர்ந்தெடுத்து அவர்களின் பெயர்களைத் தனித்தனி ஓலைத் துண்டுகளில் எழுதி, அப்பெயர் எழுதிய ஓலைகளை ஒன்றாகச் சேர்த்து அவை எக்குடும்பிற்கு உரியவை என்பது புலப்படுமாறு, அக்குடும்பின் பெயர் வரையப்பெற்ற வாயோலை ஒன்றைச் சேர்த்துக் கட்டி, ஒரு குடத்திலிட்டு வைப்பர். இவ்வாறே எல்லாக்குடும்புகட்கும் தேர்வோலை செய்து தனித்தனியே கட்டிக் குடத்திலிடுவர்.

**பொதுமக்கள் சபை :** உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்குக் குறிப்பிட்ட நாளில், மகாசபைக்குரிய பொதுமக்களாகிய ஊரி லுள்ள இளையர் முதல் முதியோர் வரை சபை நிரம்ப உட்புகக் கொண்டு, அன்று உள்ளூரில் இருந்த நம்பிமார் ஒருவரையும் ஒழியாமே மகாசபையிலே உள் மண்டபத்திலே இருத்திக்கொண்டு, சபையின் நடுவே ஓலைகட்டுகளிட்ட குடத்தினை வைப்பர். அது போது, அரசனின், ஆணைபெற்ற அதிகாரியொருவர் அச் சபைக்கு வந்திருந்து தேர்தலை முறையாக நிகழ்த்தி வைப்பார்.

**தேர்தலின் முதல்நிலை :** நம்பிமாரில் முதியராய் இருப்பாரொருவர், குடும்புகளின் ஓலைக்கட்டுகள் போடப்பட்டிருந்த குடங்களி லொன்றினை எல்லா மக்களும் காணும் வகையாக, இருகைகளா லும் மேல் நோக்கி எடுத்துக்கொண்டு நிற்பார்.

**உறுப்பினர் தேர்வு :** அதுபோது, பகற்போதிலேயே வினாத்தெரியாத பாலன் ஒருவனைக் கொண்டு, அக்குடத்திலிருந்து ஒரு குடும்பிற்குரிய ஓலைக்கட்டை எடுப்பித்து, அதனை அவிழ்த்து வேறொரு குடத்திலிட்டுக் குலுக்கி, அக்குடத்தில் ஓர் ஓலையை அப்பாலனைக் கொண்டே எடுக்கச் செய்து, அவ்வோலையை ஊர்க்கணக்கன் மத்யஸ்தன் கையிற் கொடுப்பர்.

அக்குடத்து ஓலையை மத்யஸ்தன் வாங்கும்போது, ஐந்து விரலாலும்அகலவைத்து, உள்ளங்கையிலே ஏற்றுக்கொள்ளுவான்.

**பெயர்ப்பதிவு :** சபையிலுள்ளோர் யாவரும் கேட்குமாறு மத்யஸ்தன் வாசித்த அவ்வோலையை, அம்மண்டபத்தே இருந்த நம்பியார் எல்லோரும் வாங்கி வாசிப்பார்கள். வாசிக்கப்பட்ட அப்பெயர் கிராமசபை உறுப்பினர் பட்டியலில் தீட்டப்பெறும். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பெற்றவர் அக்குடும்பிற்குரிய முறையில் நிறைவேற்றுக் கழகத்தின் உறுப்பினராக இடம் பெறுவர்.

**மகாசபையில் வாரிய அமைப்பு :** இவ்வாறு முப்பது குடும்பிலும் குடும்பிற்கு ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட முப்பது பேரிலும் முன்னர்த் தோட்டவாரியமும் ஏரிவாரியமும் செய்து அனுபவப் பட்டாரையும், கல்வி கேள்விகளில் சிறந்த முதியவர்களையும், வயதாலும் அனுபவத்தாலும் மிக்காரையும் கொண்டு சம்வத்ஸர வாரியம் (நீதிவிசாரணைக்குழு) அமைத்துக் கொள்வார்கள் இவ் வாரியத்தில் பன்னிருவர் இடம் பெறுவர்.

மிக்கு நின்றாருள் பன்னிருவரை, தோட்டவாரியமாக ஆக்கிக் கொள்வர். எஞ்சி நின்ற அறுவரையும் ஏரி வாரியமாகக் கொள் வார்கள்.

இவ்விரண்டு தரத்து வாரியமும் வாரியங்கள் செயல்படுதற்குரிய பணியாளரையும்தொழிலாளரையும் அன்றே கூட்டிக்கொள்ளுவர்.

**பதவிக் காலமும் நீக்கமும் :** இவ்வாறாக அமைந்து வாரியம் செய்கின்ற மூன்று திறத்து வாரியப் பெருமக்களும், முந்நூற்று அறுபது நாளும் நிரம்பப் பணி செய்து (ஓராண்டின் இறுதியில்) விலகுவர். வாரியம் செய்யும் உறுப்பினருள் ஒருவர் தவறு செய்வாராயின், அப்பொழுதே அவரை வாரியத்திலிருந்து நீக்கி விசாரணை செய்து, தண்டனையோ அபராதமோ அளித்து, கிராமக் குற்றப் பதிவிலும் அவரது பெயரைப் பதிவு செய்வர்.

இவ்வாறான வரையறைகளுடன் குடவோலைத் தேர்வு முறைகள் சோழராட்சியில் நிகழ்ந்துள்ளன என்பதனை, உத்தரமேரூர்க் கல்வெட்டு விளக்கமாகப் புலப்படுத்துகின்றது.

தஞ்சை மாவட்டம் திருச்சேய் நல்லூரில் உள்ள கல்வெட்டொன்று ஊர்ச்சபையார் நடந்து கொள்ள வேண்டிய முறைகளைப்பற்றி விரிவாகக் கூறுகின்றது.

பிறவாரியங்கள் : இவ்வாறாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட முப்பதின்மரைக் கொண்டு, சம்வத்சரவாரியம், தோட்டவாரியம், ஏரிவாரியம் ஆகிய தலைமையான வாரியங்கள் அமைத்துக் கொண்டபின்னர்

மேற்குறித்த முப்பது குடும்புகளிலிருந்து எஞ்சிநின்ற ஓலைக் கட்டுக்களை முறையே குடவோலைவாயிலாக மீண்டும் பன்னிரண்டு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் பெறுவர். அவர்களுள் அறுவர் பஞ்சவாரவாரியராகவும், அறுவர் பொன் வாரியராகவும் இருப்பர்.

இவ்வாறே கிராமத்தின் வளர்ச்சிக்கும் தேவைகட்குமேற்ப, கழனிவாரியம், கணக்குவாரியம், கலிங்குவாரியம், தடிவழிவாரியம், குடும்புவாரியம், நகரவாரியம் என்ற வாரியங்களும், முறையே வாரியத்திற்கு அறுவராக உறுப்பினர் அமைக்கப் பெறுதல் வழக்காகும். சிலவாரியங்கள் நால்வரைக் கொண்டதாகவும் அமைந்துள்ளதனைக்கல்வெட்டுக்களால்அறிய முடிகின்றது.

குடவோலைக் கல்வெட்டுக்கள் : இத்தகைய உயர்ந்த முறையில் தமிழகத்தில் குடவோலை வழியே தேர்தல் நிகழ்த்தப் பெற்று உறுப்பினர் வழியே தேர்தல் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் பெற்றதையும், வாரியங்கள் அமைக்கப் பெற்றதையும், கூறுவதுடன், உறுப்பினர்களின் பணிகளையும், நிர்வாகமுறைகளுடன் விதிகளையும், கிராம சபையாரின் பல்வேறுபட்ட செயல்களையும் சீர்திருத்தங்களையும் உத்தரமேரூர், திருநின்றவூர், தலைஞாயிறு, நன்னிலத்து அய்யம்பேட்டை, காமரசவல்லி, செம்பியன் மாதேவி, சேய்ஞலூர் ஆகிய ஊர்களிலுள்ள கல்வெட்டுக்கள் தெளிவுடன் விளக்குவனவாக அமைந்துள்ளன.

குடிஞைக்கல் : (வ) சோழராட்சியில் நாட்டுவழக்கில் வணிகத்துறைகளில் பொன்வெள்ளி எடையிடும் அளவைக்கல்.

*''வெள்ளிக்கலசம் ஒன்று நிறை குடிஞைக் கல்லால் நூற்று நாற்பத்தைங் கழஞ்சு''*

(தெ. கல். தொ. 5, கல். 514. முதல் இராசராசன்)

*''கனப்பெருமக்கள் வசமேய் தேவர்க்கு குடுத்த பொன் துளை இவ்வூர்க்கல்லால் நாற்பத்திரு கழஞ்சரை''*

(தெ. கல். தொ. 19, கல். 22)

குடிநீங்கா இறையிலி : (வ) குடியிருப்பு உரிமை எக்காலத்தும் நீங்காத இறைவரி இல்லாத நிலம்.

*"இன்னிலம் ஐவேலியும், குடிநீங்காயிறையிலி செய்து குடுத்தோம்"*

(தெ. கல். தொ. 17, கல். 598)

குடிநீங்காக் காராண்மை : (வே) நிலத்தில் குடியிருப்பதோடு பயிரிடும் உரிமையும், நிலையாகப் பெற்று, ஆண்டுதோறும் உரிமையாளருக்கு உரிய தானியங்களை முறைமைப்படி செலுத்து பவராகவும் இருப்பது குடி நீங்காத காராண்மையாகும். இவர்கள் அனுபோகமாக ஒற்றியும் கிரையமும் நிலத்தைச் செய்ய உரிமையுடையாராகவும் இருந்துள்ளனர்.

*"ஆட்டாண்டுதோறும் இரண்டாயிரத்தறுநூற்றுக்கல் நெல் அட்டு வார்களாகவும், இப்பரிசு இந்நிலம் விற்றும் ஒற்றிவைச்சும் கொள்ளப் பெறுவார்களாகவும், இப்பரிசு நீங்காக் காராண்மை யாக கல்மேல் வெட்டுவிச்சு"*

(தெ. கல். தொ. 14, கல். 154)

குடிநீங்காச்சாவாமூவாபேராடு : (வ) புரக்கும் இடையர் வாரிசு மாறாத நிலையில் எண்ணிக்கையில் என்றும் குறையாத அளவில் வைத்திருக்கும் ஆடுகள்.

*"இவ்வாடு நூற்று தொண்ணூற்றுஇரண்டுங் குடிநீங்காச் சாவா மூவாப் பேராடு ஆகக் கொண்டு"*

(தெ. கல். தொ. 5, கல். 517)

குடிநீங்காத்தேவதானம் : (வ) முன்னர் பயிரிட்டுப் பகுதி நெல் செலுத்தும் பழங்குடிவாரிசு நீங்காத உழவர்வாழும் கோயிலுக் குரிய இறையிலிநிலம்.

*"ஆகப்பாடகம் நாற்பத்திரண்டும் இவ் நாயனார்க்கு குடிநீங்காத் தேவதானமாக விட்டோம்"*

(தெ. கல். தொ. 7, கல். 402)

குடிப்பற்று : (வே) குடியிருப்பு நிலம், பற்று-உரிமையுடைய நிலம், நிலத்தைப் பயிரிடும் உரிமை பெற்றான், அந்நிலத்தொடு பகுதியிலேயே குடியிருப்பமைந்து வாழ்வதற்கு குடிப்பற்றாகும். (புதுக்கோட்டை கல்வெட்டு-எண். 195)

குடிமை : குடிமக்கள் அரசுக்குச் செலுத்தும் வரி.

*"இறை, குடிமை, அந்தராயம் நாடென்ற வரி"*

(புதுக். கல். எண் . 260)

குடுத்துமீட்டு : (வ) கடனுக்கு அடகாக இருந்த பொருளை அக்கடன் தொகையினைக் கொடுத்து மீட்டுப்பெற்று.

*"ஒற்றியிட்ட நிலத்தை-விசையரையன் முப்பதின் காடி நெல்லும் ஐங்கழஞ்சு பொன்னும் குடுத்து மீட்டு தனதாக்கி"*

(கல்வெட்டுத்துறை-தொகுதி-8, கல். 29)

குடும்பு : (சமு) ஊரின் உட்பிரிவு. வட்டம். தொகுதி. இத்தகைய குடும்புகளாக ஊரின் உட்பகுதிகள் பிரிக்கப்பட்டிருந்ததனை முத்தரையர் காலக் கல்வெட்டுகளும் உரைக்கின்றன. ஊரின் உட்பிரிவாகிய இக்குடும்புகளை நிர்வாகம் செய்ய ஊர்ச்சபையின் வாரியங்களுள் ஒன்று 'குடும்பு வாரியம்' என்ற பெயரால் செயற்படும்.

*"சந்திரலேகை சதுர்வேதி மங்கலத்து பெருங்குறிஸபையோம். இவ்வூர் ஐம்பத்து மூன்றாம் குடும்பில் பாரத பங்கு கோயிலாந் நாகனற்றி விற்றபங்கு-க"*

(தெ. கல். தொ. 6, கல். 12)

*"இவ்வாட்டை குடும்புவாரியப் பெருமக்களும்"*

(தெ. கல். தொ. 19, கல். 179)

குடைவித்த ஸ்ரீகோயில் : (கலை) பாறையில் குடையச் செய்த திருக்கோயில். குடைதளி.

குண்டிகை : (பொ) குடுவை உலோகத்தாலான சொப்பு. இது காணிக்கைக் காசு பெறும் கலமாகும். இக்காலத்தில் உண்டியல் என்பர். *"பருத்திக் குண்டிகை"* (நன்னூல் - பொதுப்பாயிரம்.)

*"இக்காசு இருபதினாயிரமும் குண்டிகையில் இவன் தண்டம் ஒடுக்கித் தரவு கொள்ளவும்"*

(தெ கல். தொ. XII கல். 254.)

குண்டில், குண்டு : (வே) பள்ளமான நிலம். நஞ்செய் நிலப்பரப்பில் தாழ்வான பகுதிக்குரிய பெயர். தொண்டை மண்டல வழக்கு, சோழ நாட்டார் தாக்கு என்பர்.

*"இறை இழிச்சி வைத்த நிலம் வாகைக் குண்டில் ஞா குழி"*
(தெ. கல். தொ. 3 1, கல். 45.)

**குணிலபுரம் :** (அ) இது மைசூர் மாவட்டத்திலுள்ள கோலார் ஆகும். இதன் திருத்தமான வடிவு, குவலாளபுரம் என்பதாகும். கங்க அரசர்களின் தலைநகரம். நன்னூல், சீவகசிந்தாமணி வெளி வந்த இடமும் இதுவேயாகும்.

**குத்துக்கால் :** (வ) 1. ஓர் அறச் செயல் முறைப்படி நிகழாது நின்றுபோதல், குத்துக்கால் படல் என்பதாகும். தடைபடல் என்றும் பொருள்பெறும். (நிலங்களின் எல்லைகளில் நிறுத்தும் கற்கம்பம்.)

''*இப்பரிசு செலுத்தாது குத்துக்காற்படில் இத்தேவர்க்கெய் இருபத் தைஞ்சு காசு தண்டமும் பட்டு*''

(திருச்செந்தூர் கல்வெட்டு. தொ. 14, கல். 16)

**குத்துவிளக்கு :** (பொ) பாதமும் தண்டும் அகலுமாக அமைந்த உலோக விளக்கு.

(குத்திட நிற்கும் விளக்கு)

''*தொண்டைமானார் வார்ப்பித்துக் குடுத்த திருக்குத்துவிளக்கு இரண்டில்*''

(தெ. கல். தொ. 7, கல். 93)

**குதம்பை :** (அலை) காதிலணியும் பொற்பூ. (தோடு)

''*மாத்தோடு பொன் போர்த்த குதம்பையும்*''

(தெ. கல். தொ. 5, கல். 679)

**குதிரைப் பந்தித் தேவை :** (அ) குதிரைகளைக் கட்டும் கொட்டடிப் பராமரிப்புக்காகப் பெறும் வரி.

**குந்தவை ஜிநாலயத்துத்தேவர் :** (சம) முதல் இராசராசனின் தமைக்கையாரும் வல்லவரையன் வந்தியத்தேவரின் தேவியாரு மாகிய குந்தவையாரின் பெயரால் எழுப்பப்பட்ட சமண தெய்வக் கோயிலிலெழுந்தருளியுள்ள தீர்த்தங்கரர்.

(தெ. கல். தொ. 2:2, கல். 43)

**குப்பம் :** (சமு) சிறு கிராமம்.

கொப்பம்-குப்பம். கோப்பு-கொப்பு அம். கோப்பு-குடியிருப்புத் தொகுப்பு. கட்டுக்கோப்பான மக்களின் குடியிருப்புகள் தொகுதி யாகவோ, திட்டாகவோ சேர்ந்த இடம்.

**கும்பஞாயறு :** (வ) கும்பஞாயிறு. மாசிமாதம். கும்ப இராசியில் கதிரவன் நிற்கும் திங்கள்.

**கும்மாயம் :** (பொ) சிறு பயிற்றுப் பருப்பிட்டுச் செய்யும் இனிப்புக் கலந்த பண்டம். நிவேத உணவுப் பண்டங்களுள் ஒன்றாகவும் வழக்கிலிருந்துளது.

*' கும்மாயத்துக்கு பயிற்றுப் பருப்பு உரி''*

*''கும்மாயத்துக்குச் சிறுபயிற்றுப்பருப்பு இருநாழி''*

(தெ. கல். தொ. 14, கல். 13,16)

*''கும்மாயம் உள்ளிட்டுக் கறி ஞாலும் நெய் ஆழாக்கும்''*

(தெ. கல். தொ. 19, கல். 22)

**குமிழி :** (வே) ஏரிகுளம் ஆகிய நீர்நிலைகளிலிருந்து பாசனத்திற்குரிய தாகக் கரைநிலத்தனடியே புதைந்து வருமாறு அமைக்கப்பட்ட மதகின் கட்டடப் புழை. இதன் வழியே நீர் குமிழ்த்து வெளிப்படு தலினால் குமிழி என்று அதன் வெளிவாய்ப்புறம் பெயர்பெற்றது.

**குமுதப்படை :** (கலை) கருங்கற்களால் கோயில் அமைக்கப்பெறும் கட்டடப்பகுதிகளுள், அடிப்படைத் தளவரிசை மட்டத்தின் மேல், கீழ் நோக்கிய இதழ்களாக அமைக்கப்பெறுவது தாமரை இதழ் வரியாகும். அதற்கு மேல் உள்பத்தியாக அமைவது கண்டம். கண்டத்திற்கு மேல் நோக்கிய இதழ்களாகத் தொடரும் சிற்ப வரியே குமுதப்படை என்பதாகும்.

*''இனாயனார் கோயில் திருஅக்கிய மண்டபம் முன்பு திருக்கற்செய்து நின்ற குமுதப்படை மேல-கல்லடிப்பிக்கவும்''*

(தெ. கல். தொ. 17, கல் 561)

**குரத்திகள் :** (சம) சமணப் பெண் துறவியர். சமணப்பெண் ஆசிரியை.

*''ஸ்ரீ வெண்பைக்குடி தச்சந் சங்கக் குரத்திகள் மாணாக்கியார் சிரி விசையக் குரத்தியார்''*

*''ஸ்ரீதிருமலைக் குரத்திகள் மாணாக்கன்''*

(கழுகுமலைக் கல்வெட்டுகள்)

**குரவடிகள் :** (சம) சமண ஆசிரியத்துறவியர்.

*''ஸ்ரீ திருநறுங் கொண்ட பல தேவக்குரவடிகள் மாணாக்கர் கனக வீர அடிகள்''*

(கழுகுமலைக் கல்வெட்டு)

குருத்தானம் : (சம) கோயில்களில் அர்ச்சனை செய்யும் குருக்கள் பதவி.

*''குருக்கள் வரந்தரும் பெருமாளுக்கு குருஸ்தானமாக''*

(தெ. கல். தொ. 12, கல்.222)

குருமுத்து : (பொ) சிவந்த புள்ளிகளுடன் விளைந்ததாக இருக்கும் முத்து. முத்திற்கமைந்த குற்றங்களுள் இது ஒன்றாம்.

குலங்கிழார்கள் : (சம) கோயில் பணிகளை நடத்தும் பொறுப்பாளர்கள். குலம்-கோயில் அர்ச்சகர்கள்.

*''திருவக்கரை மகாதேவர் கோயில் காணி உடைய குலங்கிழவன் பற்பநாபந் திருவேங்கடவன்''*

(தெ. கல். தொ. XVII. கல்.206.)

*''திருவல்லிக்கேணி குலங்கிழார்கள்''*

(கல்வெட்டு வெளியீட்டுத் தொகுதி 8, கல். 29)

குலதனம் : (பொ) மேலான செல்வம். மதிப்பமைந்த செல்வம்.

*''பலதனத்தொடு நிறைகுலத்தனக்குவையும்''*

(குவை-குவியல்) (முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

குலதிலகம் : (வ) நெற்றிப்பொட்டுப்போன்று பிறந்த குலத்தில் சிறந்திருத்தல்.

*''பல்லவகுலதிலக - தந்திவர்மபல்லவன்''*

(இ. தொ, தொ. 8, கல். 29)

குவளாலபுரம் : (அ) கோலார் (மைசூர் நாட்டிலுள்ள ஊர்). கங்க நாட்டின் தலைநகர்.

குழி : (வே) நில அளவை. பன்னிரண்டடிசதுரப் பரப்புடைய நிலம் ஒரு குழியாகும் நூறு குழி கொண்டது ஒரு மா-நிலம். இக் குழியளவை நாடுகள்தோறும் நிலத்தின் தரத்திற்கேற்ப மாறுபட்டுள்ளது

*''இந்நான்கெல்லைக்கு முட்பட்ட புன்செய் குழி-300''*

(தெ. கல். தொ. 7, கல். 141)

*''பதினாறு சாண்கோலால் நூறு குழி கொண்டது ஒரு மாவாக நிலம் அரையேய் நான்மா''*

(முதல் இராசேந்திரன். தெ. கல். தொ. 8, கல். 316)

**குழிச்செய் :** (வே) நீர்பாசனமுள்ள நிலம், பள்ளமான நிலம், தாக்கு நிலம்.

**குழிவரியேற்றி :** (வே) குழிக்கு இவ்வளவு வரியென்று கணக்கில் பதிந்து.

*"நிலங்கள் குழிவரியேற்றி இறை இறுப்போம்"*

(தெ. கல். தொ. 3, பகு. 1, கல். 7)

**குளப்பரப்பு :** (வே) குளத்தினைச் சூழ்ந்து கரையாகப் படர்ந்துள்ள தரைப்பகுதி.

*"குளம்தான வேண்டுமோறு, கல்லிக்கலை நீளம் அட்டப்பெறுவதாக வும்-குளத்தை தான் விரும்பியபடி, ஆழமாகத் தோண்டி, குளத்தின் கரையை நீளமாக்கிக் கொள்ளக் கடவா".*

(தெ. கல். தொ. 3:3. கல். 106)மதுரை-ஆனைமலைக் கல்வெட்டு

*"இவ்வூர் நான்கு எல்லைக்குட்பட்ட நன்செய் புன்செய் குளம் குளப்பரப்பு மனைதிடல் முதலாகவுள்ள சமத்த பிராப்திகள்"*

(தெ. கல். தொ. 8. கல்.210.)

**குளவடை :** (வே) ஏரி, குளம் ஆகியவற்றைப் பாசனத்திற்கும், மக்களுக்கும் பயன்படுத்திக் கொள்ளுதற்குச் செலுத்தும் பொது வரி.

**குளவடைக்கடமை :** (அ) ஏரி குளங்களைப் பராமரிப்பதற்கு உரிய தாகப் பெறும் வரி.

**குளிர்ந்த நீர் :** (பொ) குணமமைந்த முத்துக்களுள் ஒருவகை தெளிந்த நீரின் பளிங்கு தோற்றமுள்ள முத்து.

*"குளிர்ந்த நீரும் சிவந்த நீரும் உடைய முத்திற்கோத்த முத்து".*

(தெ. கல். தொ. 2, கல். 3)

**குற்றுடைவாள் :** திருமேனிகளின் இடைப்பட்டிகையில் செருகி ஒப்பனை செய்வதற்குரியதாகப் பொன்னால் செய்யப்பெறும் உடைவாள்.

*"குற்றுடைவாள் ஆகும் கண்டமும் பொன்கட்டிற்று ஒன்று"*

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

**குற்றேத்தப் :** (வே) ஆறு, பெருங்கால், குளம், ஏரி ஆகியவற்றின் கரையில் குத்திட்டு நிறுத்திய மரத்தின்வழி நீர் இறைக்க அமைக்கப்பெறும் ஏற்றம்.

*''இவ்வாய்க்கால்கள் அன்னியர் குறங்கறுத்துக் குத்தவும் விலங் கடைக்கவும் குற்றேத்தம் பண்ணவும்-பெறாதாகவும்''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்.)

**குறங்கறுத்தல் :** (வே) பாசனக் கால்வாயின் பக்கக் கரையிடத்து நீர்பாய வழியறுத்தல். குறங்கு-கால்வாயின் பக்கக்கரை.

*''இவ்வாய்க்கால்கள் அன்னியர் குறங்கறுத்துக் குத்தவும்-பெறாத தாகவும''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்-முதல் இராசராசன்.)

**குறத்திகள் :** (ச) (குரத்திகள்) சமணப்பெண் துறவியர். இவர்கள் ஆசிரியத் தகுதி பெற்றாராக இருப்பர். இவர்களிடம், சமண சாத்திரங்களையும் தர்மோபதேசங்களையும் கேட்டறியும் மாண வரும் மாணாக்கியரும் உண்டு என்பதைக் கழுகுமலைக் கல் வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

*''ஸ்ரீ திருமலைக்குறத்திகள் மாணாக்கன் எனாதி குத்தனஞ்சாத்திச் செய்வித்த படிமம''* (தெ. கல். தொ. 5, கல். 370)

*''ஸ்ரீ மம்மைக் குரத்திகள் மாணாக்கிகள் அரட்ட நேமி குரத்திகள் செயல்''*

(தெ. கல் . தொ. 5, கல். 371)

**குறுஞ்செய் :** (வே) குறுகிய நன்செய் நிலம். புன்செய்நிலத்தின் ஊடே வெட்டி அமைக்கப்படும் நன்செய்நிலம்.

**குறி :** (அ) குறித்து அமைக்கப்பட்ட நிர்வாகம். ஊராட்சி. ஊர்ச் சபை. குறித்த இடத்தில், குறித்த நாளில் குறித்த காலத்தில், கிராமம் குறித்த செயல்களைச் செயல்படுத்தும் குறிப்புடைய குழுவாதலின், ''*குறி*'' என்னும் குறிப்புப்பெயர் பெற்றதெனலாம்.
*''குறியுள்ளிருந்து பணிகேட்டு எழுதினேன்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 10)

*''ஊர்க்கீழ் இறையிலி செய்து குடுத்தோம் பெருங்குறி மஹா சபையோம்''*

(தெ. கல். தொ. 19, கல். 141)

*''குறியுள்ளிருந்து குறிகேட்டு எழுதினேன்''*

(தெ. கல். தொ. 19, கல். 141)

கல்வெட்டுக்களில் மிகுதியாகப் பயின்று வரும் '*குறி*' என்னும் சொல், கிராமம் அல்லது ஊர் நிர்வாகம் என்ற அளவில்

**பொருள் தருவதாயினும் குறிப்பாக ஊர்ச்சபையினையே குறிக்கும்.** குறி என்பது ஊர் நிர்வாக சபை. பெருங்குறி-**என்பது** பெரிய நிர்வாகமாகப் பலவாரியங்களுடன் அமைந்த பேரூராட்சி மன்றம் (சபை) என்பதாகும்.

**குறுகூலி :** (சம) நெல்லைக்குற்றி அரிசியாக்குதற்குரிய கூலி. இப்பணியுடன், அந்தணர்க்கு உத்தமாக்கிரம் நிகழ்ந்த இடத்தில் எச்சில் இலை எடுப்பதற்கும் சேர்த்துத்தரும் கூலியாகவும் அமைகின்றது.

*"குறுகூலி நெல் நாடுரியும்"*

*"அரிசி அரித்து எச்சிலெடுப்பானுக்கும் குறுகூலி அடங்க ஒருவனுக்கு நித்த பதினாழி நெல்"*

(தெ. கல். தொ. 5, கல். 642, 693)

**குறுணி :** (வ) முகத்தளவையில் எட்டு நாழி கொண்டது ஒரு குறுணி அளவையாகும். (குறுணி. மரக்கால்)

*"நெல்லு ஐங்குறுணி உரியும்"*

(தெ. கல். தொ. 3 : 2, பக்.187) (8நாழி 1 குறுணி. 12 - குறுணி 1 கலம்)

**குறுப்பெறிதல் :** (அ) காவலோடு இருந்த பகைவரின் சிற்றூறிரினை (அரணை) அழித்தல். தொல்லை தரும் பகைக்குழுவினை அழித்தல்.

*"காவேரிக்கு வடகரையில் சஞ்சனூரகத்திலே விட்டுக்கொடு இருந்த குறும்பெறிந்து நிரைகொண்ட ஆடும் மாடும் எருமையும் கிடாவும்"*

(முதற்குலோத்துங்கன் கி.பி. 1073, தெ. கல்.தொ. 8, கல். 284)

*"விரைபரி கடவி வில்லுடை மறவர், குரையழ னடப்பக் குறும் பெறிந்தன்று"*

(புற. வெ. மாலை, வெட்சி- ஊர்கொலை)

**குறுமடல் :** (ச) சிறிய திருநீற்று மடல். சிவன் கோயில் வழிபாட்டில் இடம் பெறும் திருப்பரிகலங்களுள் திருநீற்றுக்குரிய கலம்.

*"குறுமடல் ஒன்று வெள்ளி நூற்றுக் கழஞ்சரை"*

(தெ. கல். தொ. 2, கல். 91)

**குறுமுத்து :** (பொ) பிறப்பிலேயே வடிவில் சிறியதாக அமைந்த முத்து.

*"ஸ்ரீ ராஜராஜதேவர் ஸ்ரீபாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுத ஒப்புமுத்தும் குறுமுத்தும்"* (தெ. கல். தொ. 2, கல். 59)

**குன்றக்கூற்றம்:** திருச்சிராப்பள்ளி மாவட்டம் உடையார் பாளையம் வட்டப்பகுதியாகும். குன்றம் என்னும் ஊரைத் தலைநகரமாகக் கொண்டுள்ள கூற்றமாகும். இது நடுநாட்டின் தென் எல்லைப் பகுதியாகும்

**குன்றகத்தலை அறுத்துப் பிடலிகை மேல்வைத்தான் :** (வ) தனது மேலான பெரிய தலையைத் தானே அறுத்துப் பலிபீடத்தின் மேல் வைத்துப் பிடாரிக்கு நவகண்டப்பலி கொடுத்தான். செஞ்சோற்றுக்கடன் தப்பாமல் தன் அரசனுக்கு வெற்றிவேண்டி வீரர் தன்னைத்தானே பலியிடல். இவ்வீரச் செயலைப் புறப்பொருள் வெண்பாமாலை-வாகையுள்-அவிப்பலி என்று சிறப்பித்துக்கூறும். தமிழகத்தில் வடஆற்காடு மாவட்டத்திலுள்ள செங்கம் நடுகற் பொறிப்பு இதனை நன்கு புலப்படுத்துகின்றது.

*"ஸ்ரீகம்ப பருமற்கு யாண்டு இருபதாவது-படாரிக்கு நவகண்டங் குடுத்து கன்றகத்தலை அறுத்துப் பிடலிகைமேல் வைத்தானுக்கு திருவான்மூர் ஊரார் வைத்த பரிசாவது"*

(தெ. கல். தொ. 12, கல். 106) (செங்கம் நடுகல்)

*"மருவூர் மருங்கின் மறங்கொள்வீரரும் பட்டின மருங்கிற் படைகெழு மாக்களும் முந்தச் சென்று முழுப்பலி பீடிகை வெந்திறல் மன்னற்கு உற்றதை ஒழிக்கெனப் பலிக் கொடை புரிந்தோர்"*

(சிலம்பு:- இந்திரவிழவூரெடுத்த காதை-வரி 76-80.)

*"நீண்ட பலிபீடத்திலறுத்து வைத்த நெறிக்குஞ்சி"*

(கலிங்கத்துப்பரணி-கோயில்-16)

**கூடல் சங்கமம் :** (அ) துங்கபத்திரை நதியும் கிருஷ்ணாநதியும் கூடும் இடம் சாளுக்கிய நாட்டின் தென்பகுதி. விசயராசேந்திர சோழனும் சாளுக்கிய மன்னன் ஆகவமல்லனும் போரிட்ட இடங்களுள் ஒன்று.

*"கூடல் சங்கமத்து ஆகவமல்லன் மகனாகிய விக்கலன் சிங்களன் என்றிவர் தம்மொடும் எண்ணில் சாமந்தரைவென்று"*

(தெ. கல். தொ. 3:1, பக். 33)

**கூத்தக்காணி :** (கலை) கோயில் திருவிழா நாளில் கூத்தாடும் குழுவினர்க்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம். திருநாளுக்குக் கூத்தாடுகைக்குக் காணியாக-நிலம். (புதுக் கல்-139.)

**கூபகம் :** கொல்லத்தின் பழையபெயர் (கேரள நாட்டிலுள்ள தென் திருவாங்கூர்) கூபர்கோன். வேணாட்டின் தலைநகர்-கொல்லம்.

**கூற்றிலக்கை :** (சமு) ஊர் பொதுவிடத்தில் செயல் நிகழ்த்துவதற் குரியதாக இடங் கொள்ளுகைக்குச் செலுத்தும் காணிக்கைவரி.

**கூறீடு :** (பொ)பாகுபடுத்திப்பிரித்து. பங்கீடு. பங்கீடுசெய்தபடி-நிலம்.

*"அரியலூர்ப் பதிற்று வேலியில் நான்மா கூறிட்டில் அளந்து காற் செய்விற்றுக் குடுத்ததற்கு"*

(தெ. கல். தொ. 19, கல். 131)

**கூறுபடியான ஊர்கள் :** (அ) பாடி காவலுக்குரியதான பங்குப்படி பிரிக்கப்பட்ட ஊர்கள். காவல் உரிமைப் பங்குப்படி பிரிக்கப்பட்ட ஊர்கள்.

*''குலோத்துங்கச் சோழகச் சிராயனேன்-என்கூறுபடியான ஊர் களில் இததேவர் தேவதானம்''*

(தெ. கல். தொ. 8, கல். 319)

**கெங்கையிடைக் குமரியிடைச் செய்தார் :** (வ) கங்கையாற்றுக்கும் குமரித்துறைக்கும் இடையிலுள்ள நிலம் தெய்வத்தன்மை வாய்ந் தது. இத்தகைய புண்ணிய பூமியிற் செய்த தீவினை மிக்க துன்பத் தை விளைவிப்பதாதலின் மிகக்கொடிய பாவமாகும் என்பது தோன்றக் கல்வெட்டுக்களில் வரும் அறச்செயலுக்குரிய காப்புரை யில் இத்தொடர் இடம்பெறும்.

*''இத்தர்மத்துக்கு விரோதஞ் செய்தார் கெங்கையிடைக் குமரி யிடைச் செய்தார் செய்த பாவங்கொள்வார்''*

(தெ. கல். தொ. 3.1, பக்-95, கி.பி. 9-நூற்.)

**கெடுபாதை :** கேடுடையபாதை. கள்வரால் தீங்குநேரும் வழிக்காவ லுக்கு அரசு பெறும்வரி.

**கெண்டி ;** (ச) பொன்னின் கெண்டி. உடற்பகுதியில் தூம்புக்குழ லுடன் அமைக்கப்பெறும் குவளை. இறைவழிபாட்டில் ஆகம விதிப்படி அர்க்கநீர் வார்க்கப் பயன்படுத்துவது.

*''ஸ்ரீராஜராஜதேவர் குடுத்த-பொன்னின் கெண்டி ஒன்று''*

(தெ. கல். தொ. 2 கல். 1)

**கேரளாந்தக நாராய நாழி :** (பொ) பாண்டிநாட்டு திருச்சுழியல் சுந்தரபாண்டிய ஈசுவரத்தில் இருந்த நெய் அளக்கும் நாழி அளவை.

**கேவணம் :** (கலை) பொன்னணிகளில் இரத்தினக் கற்களைப் பதிப்பதற்குரியதாகத் தனித்தனியே செய்து பற்றவைக்கப்பெறும் பொற்குழிப்புகள் (உம்முசம்)

*"திருவடிக்காறை பொன்னின் பட்டை மேற் குண்டும் கேவணமும் வைத்து விளக்கிற்று"*

(தெ. கல். தொ. 2 : 2, கல். 51)

*"மத்தகமணியொடு வயிரங்கட்டிய பத்திக்கேவணப் பசும்பொற் குடைச் சூற் சித்திரச் சிலம்பு"*

(சிலம்பு, காதை-16, வரி-117-118)

**கேள்விமுதலிகள் :** (அ) அரசன் கூறுவதைக் கேட்கும் அதிகாரி. திருவாய்க் கேழ்வி.

**கைக்காறை :** (கலை) கைகளிலணியப்பெறும் பொன் வளைவகைகளுள் ஒன்று. இது பொன்னாலும் மணியாலும் வேலைப்பாடுடையதாகச் செய்யப்பெறும் அணிகலன். கைக்கு ஏற்ப அணியப் பெறுவது கைக்காறை என்றும் காலுக்கேற்ப அணியப்பெறுவது அடிக்காறை என்றும் பெயர்பெறும்.

*"தக்கணமேருவிடங்கர்க்குக் குடுத்தன-ஒப்பன் திருக் கைக்காறை ஒன்று-ஒப்பன்-திருவடிக்காறை ஓரணை"*

(தெ. கல். தொ. 2; கல். 1)

**கைக்கோட்சேனாபதி :** (அ) கைக்கோள் திறனால் போரிடும் படைக்குத் தலைவன். பாண்டியராட்சியில் இப்படை தனிச் சிறப்புடன் இருந்தது.

*"திருநெல்வேலி கைக்கோட் சேனாபதிகளோம்"*

(தெ. கல். தொ. 5, கல். 417)

**கைக்கோளப்படை :** (அ) முதல் இராசராசன் ஆட்சியில், சோழர் படையுள் சிறந்த படைப் பிரிவாக அமைந்திருந்த படை. இப்படை நான்கு உட்பிரிவுகளோடு அமைந்திருந்தது.

*"ஸ்ரீ ராஜராஜ தேவர் கைக்கோளப்படை, பிராந்தகந் தெரிஞ்ச கைக்கோளரும் ரூத்திர சோழந் தெரிஞ்ச கைக்கோளரும் பாண்டிய குலாசநித் தெரிஞ்ச கைக்கோளரும்"*

(தெ. கல். தொ. 4, கல். 391)

**கைச்செல்ல அறக்கொண்டு, விலைக்கு அறவிற்று, பொருள் அறக்கொண்டு :** (வே) நிலக்கிரையம் பெறுபவன், சாசனம் பதிவாகும் ஆவணக்களரியில், அதிகாரிக்கு நேரில், விலைத் தொகையை விற்பவன் கையில் கொடுக்க, முழுத் தொகையையும் கைக் கொண்டு, நில விலை யோலையில் நிறைவாக எழுதி விற்றுக் கொடுத்து, அதற்குரிய பொருளை முழுமையாகப் பெறுதல்''

(தெ. கல். தொ. 5, கல். 518)

**கைச்சோலம் :** (சம) திருக்கோயில்களில் வழிபாட்டிற்குரிய பாத்திரங் களுள் ஒருவகை.

*''வெள்ளிச் சட்டுவமொன்று-கைச்சோலம் ஒன்று''*

(தெ. கல். தொ. 5, கல். 521)

**கைத்தரவு :** (வே) கைச்சாற்று. பொருள் வரவு செய்ததற்குப் பெற்றாரின் கைவழிப்பெறும் சான்றுச்சீட்டு, வரவுவைத்தஇரசீது.

*''கார்தோறும் குடுத்து, இவர் கையால் தரவு கொள்வோமாகவும்''*

(தெ. கல். தொ. 5, கல். 415)

**கைத்தீட்டு :** (வ) நேரில் கையெழுத்திட்டு எழுதிக் கொடுத்த உறுதிச் சீட்டு.

*''மதுராந்தக வளநாட்டு பெண்ணை வடகரைத் திருவண்ணாமலை உடையார் தேவகன்மிகளுக்குத் திருவண்ணாமலை வியாபாரி வயிரி அரயனும், அடைக்கலவன் படியனும்-உள்ளிட்ட நகரத்தோம் ஒட்டி கைத்தீட்டுக் கொடுத்த பரிசாவது''*

(முதல் இராசேந்திரன், கி. பி. 1049. தெ. கல். தொ. 8, கல். 68)

**கைப்பிழைபாடு :** கைத்தவறான குற்றம், கவனக்குறைவால் நிகழ்ந்த குற்றச்செயல்.

*''நாட்டார் வேட்டைக்குப் போன இடத்திலே பள்ளி உழுக்கை நாடாழ்வான் பச்சைப்பள்ளியைக் கைப்பிழைபாடே யெய்ய''*

(தெ. கல். தொ. XVII, கல்.200.)

*''சம்புபுரத்திற்கும் பள்ளிசெல்வன் இவ்வூரிருக்கும் பள்ளி வேணாட் டரையனை கைப்பிழையாலெய்து செத்தமையில்-கைப்பிழை புகுந்தது இதக்கு தாணாண்டார் கோயிலிலே அரைவிளக்கு வைக்கச் சொல்ல''*

(தெ. கல். தொ. 7, கல். 68.)

**கைய்ம்மாட்டாங்கானமைக்கு :** (வ) கையெழுத்து இடுவதற்கு ஆகமாட்டாதவனாக ஆனமைக்கு. சான்றுக் கையெழுத்து இடுதற்கியலாதவர்கட்கு இணைப்பாளராக மற்றொருவர் கையெழுத்திடுதல் மரபாகும்.

*''இது பற்றமுடையான் கைய்ம்மாட்டாங்கானமைக்கு இவை பற்றமுடையான் இவதாண்டான் எழுத்து''*

(தெ. கல். தொ. 5, கல். 985)

**கையாறு :** (வே) சிறிய ஆறு, சிற்றாறு.

*''அண்ணா நாட்டு எல்லையில் திருந்தி கையாற்றை அடைத்து ஏரியும் வெட்டி தூம்பும் இட்டு''*

(தெ. கல். தொ. 8, கல். 83)

**கையிலே கையறக் கொண்டு :** (வ) கையில் முழுத் தொகையினையும் பெற்றுக்கொண்டு (கையற பாக்கி இல்லாமல்).

*''விலைப்பொருள் இந்நாளிலே கைய்யிலே கைய்யறக்கொண்டு''*

(தெ. கல். தொ. 5, கல். 433)

**கையுற்று :** கைக்கொண்டு, கையுறப் பெற்று, பகுதிப்படுத்திக் கொண்டு.

*''நீங்கலாக நின்ற-பலமரங்களும் ஆடுபத்தும் பிடிலிகைவாரி அரைக் கால்ப் பொன்னுக்கு கீழ்ப்பட்ட பொன்னும் இக்கோயில் சிவ பிராமணர்கள் கையுற்று தாங்கள் அநுபவித்து.''*

(தெ கல். தொ. 7, கல். 801)

**கொங்கணர் :** கொங்கண நாட்டினர், கன்னர தேசத்தவர். விக்கிரம சோழன் கைப்பற்றிய நாடு.

*''கொங்கர் ஒதுங்க கொங்கணர் சாய''*

(விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தி)

**கொங்கிற் பொன் :** (பொ) கொங்கு நாட்டில் கிடைக்கும் மாற்றுயர்ந்த பொன் (பொற்காசு).

*''கொங்கிற் பன்னு துலைப்பசும் பொன்''*

(துலை-துலாம் நிறை அளவு) (பெரியபுராணம். இடங்கழி-செய். 3)

**கொங்குரை :** (பொ) கொங்கு நாட்டில் கிடைக்கும் உரையும் மாற்றும் உயர்ந்த பொன் கொங்குரை எனப்பட்டது. (மதுரைக் கலம்பகம். செ. 74)

**கொட்டகாரம் :** (பொ) நாட்டுப்பண்டாரங்கள் என்று குறிப்பிடப் படும் நெற்களஞ்சியம். அரசன் எழுந்தருளும் போது ஊர்களில் தங்குவதற்குரியதாக அமைக்கப் பெறும் சிறப்பிடம்.

*"இந்நாட்டு முதலான நெல்லிலே இருபதினாயிரக் கல்நெல்லுக்குச் செலவுகொண்டு பதினாயிரக் கல அரிசி அரைமனைக் கொட்டகா ரத்தே எடுத்து அளக்கக் கடவார்களாக"*

(தெ. கல். தொ. 4, கல். 435.)

*"ஊரிருக்கையும், கொட்டகாரமும் மாதேவர் இருந்த திடலும்"*

(தெ. கல். தொ.2, கல். 5.)

**கொட்டிமத்தளம் :** (கலை) தஞ்சைப் பெரிய கோயிலில், முதல் இராசராசன் திருப்பதியம் பாடுதற்கு அமைத்த நாற்பத்தெண் மர் தேவாரம் பாடும்போதும், காந்தர்விகள், காந்தர்வர்கள் எனப்பட்ட தமிழிசைப் பாடகர்கள் பாடும்போதும் பின்னணி வாத்தியங்களுள் ஒன்றாக வாசிக்கப்பட்ட மத்தளம். இம் மத்த ளத்துடன் சுத்தமத்தளமும் வாசிப்பதில் தனித்தன்மை பெற்ற வழியினர் "பாரசைவர்" எனப்படுவோராவர்

1. திருப்பதியம் விண்ணப்பம் செய்யும்போது கொட்டிமத்தளம் வாசிக்கும் குணப்புகழ் மருதனான சிகாசிவன்.
2. தமிழ்பாடும்போது : *"கொட்டிமத்தளம் ஒன்றுக்கு காந்தர்வ தாசனுக்குப் பங்கு ஒன்று"*

(தெ. கல். தொ. 2, கல். 65, 66)

**கொட்பூ :** (கலை) மேற்காதில் அணியப்பெறும் காதணி பூவடிவில் திருகாணியோடு செய்யப்படும் அணி.

**கொடும்பை :** (அ) (ஊருப்பெயர்) பாண்டிய நாட்டிலுள்ள கொடும் பாளூர். சங்க காலம் முதற்கொண்டு வளர்ச்சி பெற்ற வேளிர் குல மன்னரின் ஆட்சி நிகழ்ந்த இடம்.

*"கொடி மாடத்தென் கொடும்பை"*

(செந்தலை கல்வெட்டுப்பாடல். கி பி.9. நூற்.)

*"நெடும்பேர் அத்தம் நீந்திச் சென்று கொடும்பை நெடுங்குளக் கோட்டகம் புக்கால்"*

(சிலம்பு-காடுகாண்காதை-வரி. 70-71.)

**கொடுவந்து :** (வ) கொண்டு வந்து.

*"கோயிலிலே கொடுவந்து அளக்கக் கடவேனாக"*

(தெ. கல். தொ. 7, கல். 89)

**கொண்டு கடவோம் :** (வ) கைக்கொண்டு செலுத்துவோம். நாங்கள் கைக்கொண்டு இத்தர்மத்தினைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

*"இப்பொன் கொண்டு கடவோம்"*

(தெ. கல். தொ 12, கல். 71)

**கொத்தம்பரி :** (பொ) கொத்துமல்லி. குழம்புணவின் கூட்டுப் பொருள்களுள் ஒன்றாகும் தானியம்.

**கொத்து :** (வ) சுற்றமும் உற்றாருமாக அணிந்த பணியாள் தொகுதி (குழு) குடும்பத்தலைமையானவரைச் சார்ந்த உறவினர் குழு. இவ்வாறான சுற்றத்தினர் ஒன்றாகப் பணியேற்ற நிலையில் கொத்து என்று குறிக்கப்பெற்றுள்ளனர். குடும்பமாக அமைந்த பணியாளர் தொகுதி எனினும் அமையும்.

*"கோயில் தானத்தோம் கோயில் பெண்டுகள் மக்களும் புத்திர புத்திரரும்-இவர்கள் பெறும்படி இக்கோயிலுக்கு முன்னாக நாள் முறைமை மணிமங்கல மாணிக்கத்தின் கொத்து வாணராயனும் அபிமான பூஷணமான அவதரையனும்"*

(தெ. கல். தொ. 6, கல். 254.)

*"ஆகப்பேர் நூற்றுவர்க்கு கொற்றுக்கு நாள் ஒன்றுக்கு நெல்லு பதினேழு கலனே குறுணியும்"*

(தெ. கல். தொ. 8, கல். 55)

*"நம் அடியான் காளத்தியப்பனும் நம் அர்சகர்களும் நம் வீட்டில் காரியம் செய்வார் கறணிகர் உட்பட்ட அனைத்து கொத்துங் கூடி"*

**கொந்தவர் :** (அ) கட்டுப்கோப்பான கடையினர்.

*"இராசாரசதேவர் படைவில்லாள் கொந்தவரில்"*

(கல்வெட்டு அறிக்கை-எண். 92/1895)

**கொந்தளவரைசர் :** (குந்தளஅரசர்) மேலைச்சளுக்கிய அரசர். (குந்தளர்-குந்தளநாடு)

*"கொந்தளவரசர் தந்தள மீரிய"* (முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)

கொல்லம் : சேரநாட்டில் சிறந்த நகரங்களில் ஒன்றாகும். கொல்லம் என்று வழங்கப்பெறும் நகரமாகும். இந்நகரை இராசராசன் கைப்பற்றியுள்ளான்.

*"குடமலைநாடும் கொல்லமும் கலிங்கமும்"* (முதல் இராசராசன் மெய்க்கீர்த்தி)

கொல்லை நிலம் : (வே) புதரடைந்து நின்ற மேட்டு நிலம். இதனை நஞ்சையாகவும் திருத்துவர்.

*"கொல்லைநிலங்கொண்டு திருத்தியது"*

(திருவொற்றியூர் கல்வெட்டு)

*"கொல்லைத்தறைகாடுவெட்டி கட்டைப்பறித்து மேடும் பள்ளமும் திருத்தி நீர் நிலமாக"*

(தெ. கல். தொ. 7, கல். 97)

கொழுக்குத்து : (வே) எல்லையைக்குறிப்பதற்கு பூமியில் நாட்டப் பட்டிருக்கும் குத்துக்கல் (காழ்மரககால்)

கொள்பொந்றி : (கலை) கொள்பொன்றி கொள்ளுப்பொன்றி, உலோகத் திருமேனிகட்குக் காதணியாகச் சாத்தும் பொன் அணிகலன். கொள்ளுச் செடியில் பூக்கும் பூப் போன்ற வடிவில் செய்யப்பெறும் காதணிப் பொற்பூ.

*"திருக்காதில் சாத்தும் கொள் பொந்றிநால்"*

(தெ. கல். தொ. 5, கல். 644)

கொற்று : (வ) தொழிலாளர் பலர் அமைந்த கூட்டம் (தொகுதியர், கூட்டாளர், தொழில் குழு). ஒரு தொழிலுக்கமைந்த பலர் சேர்ந்த குழுவே கொற்று எனப்பட்டது. ஒருசிலர் சேர்ந்து செய்யும் ஊழியமும் கொற்றெனவே கூறப்பெறும். கொற்றும் கொத்தும் கல்வெட்டுக்களில் மயங்கக் கூறப்பெறினும் வேறுபட்டபொருள் கொண்டனவேயாகும். கொத்திற்கும் கொற்றிற்கும் அமைந் தாருள் தனியாள் பெறும் கூலி அளவு இலக்கை என்பதாம். ஓராளின் உணவுக்கும் உடைக்கும் இலக்காக அளிக்கப்பெறும் ஊதியமாதலின் 'இலக்கை' எனப் பெயர் பெற்றுள்ளது.

இவ்விலக்கை, கொடுக்கப்பெற்ற வேலையின் தகுதிக்கேற்பத் தொகுதியாக அமைந்த பணியாளர்களில் ஆள் ஒன்றிற்கு நாள் உணவிற்குரிய நெல்லும் ஆண்டொன்றின் தேவைக்குரியதான ஆடைகளின் விலைக்குரிய காசும் அளிக்கப்பெற்ற இலக்கினைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. கொற்று-தொழிலையும்

உணர்த்தும். கூட்டம் என்ற பொருளையும் தரும். கூட்டுப்பணி அல்லது தொழில் கூட்டு என்றும் கூறலாகும்.

''இத்திருநந்தவனம் செய்யவேண்டும்பேராய் நிச்சயித்த நாயகம் பேர் ஐஞ்சும் பேர தொண்ணூற்றைஞ்சும் ஆகப்பேர் நூறு. இதில் நாயகம் பேர் ஐவர்க்கு கொற்றுக்கு நாள் ஒன்றுக்கு பேர் ஒன்றுக்கு முக்குறுணியாக நெல்லு கலனே முக்குறுணியும புடவை முதல் ஆட்டைக்கு பேரால் மூன்றாகக் காசு பதினைஞ்சும்''

பேர் தொண்ணூற்றைவர்க்கு கொற்றுக்கு நாள் ஒன்றுக்கு பேர் ஒன்றுக்கு நெல்லு பதக்காக, புடவை முதல் ஆட்டைக்கு பேரால் காசு இரண்டாக காசு நூற்றுத்தொண்ணூறும''

(தெ. கல். தொ. 8, கல். 55 )

''திருநந்தவனப்புறமாக விலை கொண்ட நிலத்து-ஊர்படி நிலம் ஏழுமாவும் கொற்றுக்கு உடலாகவும்''

''திருநந்தவனத்துக்கும் திருநந்தவனப்புறமாக கொற்றுக்கும் விலை கொண்ட நிலம்''

(தெ. கல். தொ. 12, கல். 151 )

''தோப்புக்கு இடநிச்சயித்த ஆள் பதிநாலுக்கும்-இவ்வுடலிலே இவர்களுக்கு இடநிச்சயித்த இலக்கை சதிரப்படியால் உள்ள நெல்லும் காசும்''

(தெ. கல். தொ. 12. கல்- 206.)

''தட்டழி கொட்டடிகளுக்குக் கொற்று நெல்லு திங்கள் நாற்கலனேய் பதின்குறுணி''

(தெ. கல். தொ. 14, கல். 16.)

கொற்றிலக்கை : (அ) கொற்று+இலக்கை. இவ்விரு சொற்றொடர் இரண்டு பொருளில் கல்வெட்டுக்களில் ஏற்ற இடங்களில் கூறப் பட்டுள்ளது.

(1) உருபும் பயனும் பெறுதற்கமைந்த தொகைநிலையில், கொற் றுக்கு உரிய ஊதியமாகும் இலக்கை என்றும், பலர் கூடிச்செய்த பணியில் ஆள் ஒன்றிற்கமைந்த ஊதியம் என்றும் பொருள் தருவதோடு,

(2) ஒரு துறைக்கமைந்த பல அதிகாரிகளின் பணியாகிய கொற் றுக்கு, அதிகாரி ஒருவர்க்கு அமைந்த ஊதியமாகப் பெறுதற்கு அரசால் அனுமதிக்கப்பட்ட ஊர்களின் வரி ஆயம் கடமை முத லிய வருவாய்களும் கொற்றிலக்கை என்ற பெயரால் கூறப் பெறும்.

இவ்வாறாக, ஊழியத்தின் நாள் ஊதியமாகவும், அதிகாரிகள் பெறுதற்கமைந்த வரியின் பெயராகவும் கொற்றிலக்கை இடம் பெற்றுள்ளமையினைக் கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன.

1. *திருநந்தவனக்குடிகளுக்கு இலக்கைக்கும் கொற்றுக்கும் உடலான நிலம் இருபத்தஞ்சுமா''*

(தெ. கல். தொ. 8, கல். 56)

*''குலோத்துங்கசோழன் திருக்கோசாலை அனுக்கன் சுரவிகளுக்கு முதலாக விட்ட பசு நானூற்றொருபதினால்-முன்பிலாண்டுகளும் நெய்ஒட்டுக்கொண்டு வரும்படியே பசு நூற்றைப்பதுக்கு பேர் ஒன்றாக வந்த பேர் முதல் கொள்ளவும். இப்பேர்க்கு கொற்றுக்கு பேர் ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு பதக்காக வந்த நெல்லும் புடவை முதல் ஆட்டைக்குப் பேரால் ஒன்றரையாக வந்த காசுக்கு பதினைங்கலப் பிடியால் வந்த நெல்லும்''*

(தெ. கல். தொ. 8, கல். 54.)

*''கோயில் அதிகாரி கொற்றிலக்கையும்''*

*''அதிகாரிப் பேறான கொற்றிலக்கையும்''* (நாயக்கர் காலம்)

(தெ. கல். தொ. 17, கல். 269, 532)

*''அதிகாரிப் பேறான கொற்றிலக்கையும்''*

(தெ. கல். தொ. 17, கல். 269, 532)

**கோஇல் :** திருக்கோயில். இறைவன் திருமேனி எழுந்தருளப்பெறும் அகம். கற்றளி.

**கோசாலை :** (ச) இறைவன் நிவேதனத்திற்குரிய பால் பெறுதற்குரியதாக கோயில்களில் வளர்க்கப் பெறும் பசுக்களுக்கமைந்த கொட்டில். இதனைச் சுரபிச் சாலை, பசுமடம் என்றும் கூறுவர்.

*''திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார் கோயிலுக்கும் பால் அமுது செய்தருளவும், பாற் போனகப் பாலுக்கும் குலோத்துங்க சோழன் திருக்கோசாலையிடையற்கு விட்ட பசு நானூற்றொருபதினால்''*

(தெ. கல். தொ. 8, கல். 54)

**கோச்செய்வது செய்து :** அரசன் இட்ட கட்டளைப்படி அதிகாரஞ் செய்து.

*''அரசன் தன் ஆணைவழிச் செய்யும் செயல்போலச் செய்து''*

"இத்தர்மத்துள்ளார் யாவரேனும் கோச் செய்வது செய்வது செலுத்த வொட்டிக்குதேத்தோம்"

(கல்வெட்டுத்துறை அறிக்கை-தொ. 8, கல் 29)

"கோச் செய்து குமைக்கவாற்றேக" (அப்பர்) என்பது தேவாரம்

**கோட்டம் :** (அ) பல்லவர் ஆட்சியிலும், சோழபாண்டியர் ஆட்சியிலும் தொண்டை மண்டலத்தின் உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்த நிலப்பாகுபாடே கோட்டம் என்று பெயர்பெறும். கோட்டம் என்பது இக்கால மாவட்டப் பிரிவினை ஒக்கும்.

"ஜெயங்கொண்ட சோழமண்டலத்து காலியூர் கோட்டத்து தனியூர் உத்தரமேலூர்"

(தெ. கல். தொ. 12, கல்.96)

**கோட்டாறு :** குமரிமுனைக்கு வடக்கில் நாஞ்சில் நாட்டிலுள்ள ஊர். தாலமி இதனைக் கோட்டியரா என்று குறிப்பிடுவர்.

"குறுகலர் குலைய கோட்டாறு உட்பட" (முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)

**கோத்துக்கொண்டு :** (வ) சேர்த்துக்கொண்டு. ஒன்றாகச் சேர்த்துக் கொண்டு.

**கோத்தொட்டுண்ணைப் பாலது :** (அ) அரசன் உரிமையுடன் பெற்று அனுபவித்தற்குரியதான இறைவரி கடமை முதலிய வரி வகைகள்.

"ஊராட்சியும் வட்டி நாழியும்-உள்ளிட்டுக் கோத்தொட்டுண்ணைப் பால தெவ்வகைப் பட்டதும் கோக்கொள்ளாதேய் பள்ளிச் சந்தத்துக் கேய் பெறுவதாகவும்"

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**கோப்பிரசாரபூமி :** (அ) அரசு ஆணைவழி விளம்பரப்படுத்திய நிலம். திருக்கோயில்களுக்கு அரசன் அளித்த பூமியாக அரசுவழி விளம்பரம் செய்யப்பட்ட இறையிலி நிலம்.

"ஆக இந்நாற்பால் எல்லைக்கும் உட்பட்ட இருபத்தஞ்சு பாடகமும் கோப்பிரசார பூமியாய எல்லோமுக்கும் சாதாரணம் ஆதலால்"

(விக்கிரமசோழன்-கி.பி.=1126, தெ. கல். தொ. 5, கல். 993)

**கோமுறைபாடு :** (அ) அரசு விதித்துள்ள இறை, வரி முதலிய கட்டுப்பாடுகள்.

*"இந்நான்கெல்லைக்கு உட்பட்ட நஞ்செய் புஞ்செய் பட்டடை கொடித்தோட்டம் மாவடை மாவடை மற்றும் நாங்கொள்ளும் கோமுறை பாடுகளும் மற்றும் எப்பேற்பட்ட சுவந்திரவங்களும்"*

(தெ. கல். தொ. 5, கல். 763)

**கோயில்கணக்குக்காணி :** (ச) கோயிலுக்குரிய நிவந்தங்களாகிய நிலபுலன் வருவாய்களையும், நாள் வழிபாட்டுச் செலவினங்களை யும், பிற சிறப்பு வருவாய்களையும் திருநாள் போன்ற சிறப்புச் செலவினங்களையும், அணிகலன்கள், உடைமைகள் ஆகியவற்றை யும் முறையாக கணக்கிலிட்டுக் கணக்கெழுதி வரும் கோயில் கணக்கனுக்குரிய உரிமை இறையிலிநிலம்.

*"திருவூறலுடையார் கோயில் கணக்கு காணிஉடைய பெருந் தூறுடையான்"*

(தெ. கல். தொ. 5, கல். 1380)

**கோயில் குடிமை :** (ச) கோயிலுக்குரிய பணியாளர், கோயிலுக்குரிய நிலபுலன்களில் வீடுகட்டிக்கொண்டு வாழும் உரிமை.

*"கோயில் உரிமை- உள்ளிட்டன தவிர்வதாகவும்"*

(சிதம்பரம் கல்வெட்டு. தெ. கல். தொ. 8, கல். 44)

**கோயில்தானத்தார் :** (சம) திருக்கோயில்கட்குரிய வழிபாடுகள், திருவிழாக்கள், திருப்பணிகள் ஆகியவற்றைப் பொறுப்புடன் நிகழ்த்துவதற்கு ஊர்ச்சபையாரால்அமைக்கப்பெறும்பெருமக்கள்.

*"உடையார் திருச்சோபுரமுடைய நாயனார் கோயில் தானத் தார்க்கு அருளிச் செயல்படி-இம்முதல் தண்டிக்கொண்டு பூசையும் திருப்பணியும் தாழ்வுபடாமல் சந்திராதித்தவல் செல்வதாக"*

(தெ. கல். தொ. 17, கல். 130)

**கோயில்பெண்டுகள் :** திருக்கோயில்களில் பணி செய்யும் மகளிர். பெரும்பான்மையும் இவர்கள் தேவரடிமை எனப்படும் குடும்பத் தினராகவே இருப்பதைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

*"தன்மீஸ்வரமுடைய நாயனார் கோயில் தானத்தோம் கோயில் பெண்டுகள், மக்களும், புத்திர புத்திரரும்"*

(தெ. கல். தொ. 6, கல். 254)

**கோயிற்கணக்கு:** (ச) கோயிலுக்குரிய வருவாய்களையும் செலவி னங்களையும் நாளும் கணக்கிலெழுதிவருபவன். இவனுக்குரிய

வருவாயாக கோயில் நிலத்தில் ஒரு பகுதி காணியாட்சி செய்யப் பெறும்.

*''இக்கோயிற் கணக்கக்காணியுடைய நெற்குப்பை உடையான்''*

(தெ. கல். தொ. 5, கல் 645)

***''இத்தேவர் தேவகந்மக் கணக்கு. அரையன் மதுராந்தகனான சோழப் பெருங்காவிதி''***

(தெ. கல். தொ. 5, கல். 652)

**கோயிற்றமர் :** (சம) கோயிலுக்குரிய வழிபாடு, வரவு செலவுக்கணக்கு கண்காணிப்பு, தணிக்கை ஆய்வு, ஆகிய அனைத்து நிர்வாகங் களையும் நிகழ்த்திவரும் அர்ச்சகர், ஸ்ரீகார்யம் செய்வார், கண் காணிநாயகர், கனப்பெருமக்கள் ஆகியோர். இவருள் கைமாறு கருதாமல் கோயில் நிர்வாகத்தினையும் நிலன் புலன் உடைமை களையும் பாதுகாத்துச் செயல புரியும் ஊர்க்கணப்பெருமக்களே சிறப்பாகக் குறிக்கப் பெறுவர்.

*''அடுத்த ஆண்டைச் செலவு கோயிற்றமர் தவிராமையாலும்''*

(தெ. கல். தொ. 8, கல். 97)

**கோராசராசகேசரிவர்மர் :** (அ) இது முதலாம் இராசராசனுக்குரிய பட்டப் பெயர்.

*''கோராசராச கேசரி வர்மரான உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 15)

**கோல் :** (பொ) துலாக்கோல். எடைமிகுந்த பொருள்களை நிறுக்கும் பெருந்தராசு. இக்கோல் அக்காலத்தில் அரசு அமைத்த மூலத் துலாக்கோலாக வெள்ளியாலும் செய்யப்பட்டிருந்தது.

*''இவ்வூர் வெள்ளிக்கோல் காஞ்சிபுரத்து நின்றானொடொக்கும் கோலால் எடுக்க போந்த நிறை செப்புத் தளிகை தொண்ணூற்றுப் பலமும், ஸ்ரீ பலித்தாலம் நூற்றுப் பலமும்''*

(முதல் இராசராசன்-கி.பி. 996, கல்வெட்டு அறிக்கை எண், 199/1901)

**கோவிந்த விண்ணகர் நின்றருளிய பரமஸ்வாமிகளுக்கு :** கோவிந்த விண்ணகர் என்னும் திருக்கோயில் நின்ற திருக்கோலமாக எழுந் தருளியுள்ள திருமாலவர்கட்கு (பரமசுவாமி-இங்கு திருமாலைக் குறிக்கும்) (திருவாடி பெருமாள் கோயில் கல்வெட்டு, தெ. கல். தொ. 8, கல். 302. முதற்குலோத்துங்கன் கி.பி. 1110)

**கோவினுக்கவிப்பதுளாது :** (அ) இத்தொடர், "கோவினுக்களிப்பதிலாது" என்றிருப்பின் பொருள் செம்மையாகும்.

*"அரசனுக்கு இறைவரி ஆகியவற்றை வசூலித்து அளிப்பது இல்லாமல்" "விலைகொண்ட காற்செய்யும், எவ்வகைப்பட்ட இறை இதனால் வந்ததெல்லாம் கோவினுக்கவிப்பதுளாது சவையுஞ் சாத்தனுமிவன் வழியிலாரும் பெறக்கடவதாகவும்"*

(தெ. கல். தொ. 12, கல். 63)

**கோழிமன் :** (அ) உறையூர்க்கு அரசன். சோழன்.

*"கோழிமன் தொடுகழல் வீரசோழன்"*

(விசயராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

**கௌசலர் :** (அ) கோசலர். கோசல நாட்டினர். கங்கைக்கரையிலுள்ள நாடுகளுள் ஒன்று.

*"பூசுரர் சேருநற் கோசல நாட்டினர்"* (முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**ஸ்ரீகார்யக் கண் காணி :** (அ) நாட்டிலுள்ள திருக்கோயில்களின் காரியங்களைச் செய்து வரும் அதிகாரிகளையும் அவர்களது கணக்கினையும் அரசின் ஆணையின்படி தணிக்கை செய்யும் மேலதிகாரி.

**ஸ்ரீகார்யக்கண்காணி நாயகம் :** (அ) கோயிற் காரியங்களை ஒழுங்காக நடத்துவிக்கும் அதிகாரி ஸ்ரீகார்யம்; ஸ்ரீகார்யம் தவறாமல் நிகழ்வதை ஆராய்பவன் ஸ்ரீகார்யக் கண்காணி; இவர்கள் இருவர் செயலும் குறையின்றி முறையாக நிகழ ஆராய்ந்து தணிக்கை செய்யும் தலைமை அதிகாரி நாயகம். எனவே கோயிற் காரியங்களின் நிர்வாகத் தலைமைத்துறை அதிகாரி "*ஸ்ரீகார்யக் கண்காணி நாயகம்*" என்று பெயர் பெற்றார்.

முதல் இராசராசன் காலத்தில், தஞ்சைப்பெரிய கோயிலுக்கு இருந்த ஸ்ரீகார்யக்கண்காணி நாயகம்.

*"பாண்டிநாடான ராஜராஜ மண்டலத்துத் திருக்கானப் பேர் கூற்றத்துப் பாளூர்ப்பாளூர்கிழவன் அரவணையான் மாலரி கேசவன்,"* என்பவனாவன்.

(தெ. கல். தொ. 2:2. கல். 36)

**ஸ்ரீகார்யம் :** (ச) தெய்வத்திற்கான பணி. கோயிலுக்குரிய நாள் வழிபாடு, விழாக்கள், சிறப்பு நிகழ்ச்சிகள் முதலிய எல்லா காரியங்களையும் செயற்படுத்தும் அதிகாரி.

*''உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்கு ஸ்ரீகார்யஞ் செய்கின்ற பொய்கைநாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்தவேளான்''*

**ஸ்ரீகோயில்வாரியம்:** (சமு) கோயில்காரியங்கள் குறையின்றி நிகழ்ந்து வருகின்றனவா என்பதனைக் கண்காணிக்கும் குழுவினர். இவர்கள் கிராம சபையின் உட்பிரிவினராக இருப்பர்.

*''திருக்குட முக்கில் மூலப்பருடையார்க்காக ஸ்ரீகோயில் வாரியம் செய்கின்ற கவிணியன வாஸுதேவன் சேந்தனும், காஸ்யபன் இராமதேவ நாராயணனும்''* (திருநாகீஸ்வரம் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 6, கல். 33)

**கோழிப்** போரில் ஊத்தை அட்டாமல்: (அ) உறையூரில் நிகழ்ந்த போரில் (சேவற்கோழிப் போரில்) குறைவு ஏற்படாமல்.

இத்தொடர் முதல் இராசராசன் காலத்தில் தஞ்சைப் பெரிய கோயிலில் பொறிக்கப்பெற்றுள்ள நெடிய கல்வெட்டுக்களில், திருவிளக்கு, நிவந்தச் செய்திகள் நிரம்பிய கல்வெட்டொன்றில் முப்பத்தேழு இடங்களில் குறிக்கப்பட்டிருப்பதாகும்.

இத்தொடரால் பெறப்படும் கோழிப்போர் யாதென்பதனைத் தெளிதற்கு ஏற்புடைய சான்றுகள் கிடைக்கவில்லை.

இராசராசன் மேலைச் சாளுக்கிய அரசன் சத்தியாசிரயனோடு நேருக்கு நேர் வாட்போர் புரிந்து வெற்றி பெற்றுள்ளமையைக் கரந்தைச் செப்பேடுகளின் மன்னர் மரபுப் புகழ்ச்சியுரை (பிரசஸ்தி ஏடு 2. பக். 1) கூறுகின்றது.

சத்தியாசிரயனை வென்று கைப்பற்றி வந்த பெரும் பொருளைக் கொண்டு பொற்பூக்கள் செய்து இராசராசேச்சர பரமசுவாமிக்கு ஸ்ரீபாத புஷ்பமாக இட்டு வழிபட்டுள்ளான் என்பதனைக் கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன.

(தெ. கல். தொ. II பக்கம் 7.) எனவே,

இராசராசேச்சரம் எடுத்த சிவபாதசேகரனாகிய இராசராசன் நிகழ்த்திய சேவற்கோழிச் சண்டையில் குறைவு ஏற்படாமல

வெற்றி பெறுதற்குப் பெருந்தரத்தார்களும் அரசியல் உயர் அதிகாரிகளும் முப்பத்தேழு திருவிளக்கு நிவந்தங்கள் செய்துள் ளார்கள் என்று கூறுவதாயின் பொருந்தியதாக இல்லை.

மேலைச் சாளுக்கிய மன்னன் சத்தியாசிரயனை நேரில் போரிட்டு வென்ற இராசராசனால், பாண்டியநாட்டுப் போரில் தோல்வியடைந்து, கோனாட்டுக் குன்றகங்களில் மறைந்திருந்து, சோழ நாட்டின் எல்லைப் பகுதியாகிய கோழி என்றும் கூறப் பெறும் உறையூரில் குறும்பு செய்த பகைவரை, இராசராசன் நேருக்கு நேர் போரிட்டு அழிக்கச் சென்றபோது, அப்போரில் தமது ஆருயிர் போன்ற மன்னனுக்குக் கோழிப்போரில் குறைவு ஏற்படாமல் வெற்றியுண்டாக வேண்டி, பொறுப்பமைந்த சிந்த னையுடன் பெருந்தரத்து அதிகாரிகளும், பிறரும் இராசராசேச் சரத்துப் பரமசுவாமிக்கு திருவிளக்கு நிவந்தங்கள் பலவாகச் செய்துள்ளனர் என்று வரலாற்று நோக்குடன் கூறுதற்கு இயலுகின்றது.

*''உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் குடுத்த கால்மாட்டிலுங் குடுத்தார் குடுத்த கால்மாட்டிலுங் காசும் அக்கமுங் குடுத்து முதலான கால் மாட்டிலுந் திருவிளக்குக்கு ஆடுத்தபடி கல்லில் வெட்டின''*

*''பெருந்தரம் மாராயன் ராஜராஜந் தன்னை உடையார் ஸ்ரீ ராஜ ராஜதேவர் கோழிப்போரில் ஊத்தை அட்டாமல் என்று கடவ திரு விளக்குக்கு வைத்த காசில் குடுத்த காசு எட்டினால் காசு ஒன்றி னுக்கு ஆடு மூன்றாக ஆடு இருபத்துநாலும்''*

*''வில்லவன் மூவேந்தவேளான் தன்னை உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் கோழிப்போரில் ஊத்தை அட்டாமல் என்று கடவ திரு விளக்குக்கு வைத்தகாசில்''*

*''சேநாபதி குரவன் உலகளந்தானான ராஜராஜமஹாராஜந் தன்னை உடையார் ஸ்ரீராஜராஜதேவர் கோழிப்போரில ஊத்தை அட்டாமல் என்று கடவ திருவிளக்குக்கு தந்த பசு''*

(தெ. கல் தொ. 2, கல். 64, 95.)

*''மனு வம்சத்திற்குக் கொடி போன்றவனும், மனுக்கு ஒப்பானவ னுமான இராசராசன் ஒரே குதிரையுடன் வலிமை பொருந்திய சத்தியாசிரயனை இரத்த ஆறுகள் சூழ்ந்த போர் முனையி னின்றும் ஒரே நொடியில் ஓடச்செய்து, அவனது தோல்வலியால் ஈட்டப்பட்ட மதம் பொருந்திய யானைகள், குதிரைகள் இரத்தினங்கள், பெண்கள், குடைத்தொகுதிகள், கொடிகள் இவை யாவற்றையும் பறித்துக் கொண்டான்''*

(கரந்தைச் செப்பேடுகள். ஏடு. 2. பக்-க. வடமொழிப்பாடல்-35.)

*"ஸத்யாச்ரயனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீ பாதபுஷ்பமாக அட்டித் திருவடிதொழுதனர் திரு பொற்பூ ஒன்று பொன் ஒன்பதின் கழஞ்சேய் முக்காலே நாலு மஞ்சாடியுங் குன்றியாக பன்னிரண்டு னாற் பொன் நூற்று ஒரு பத்து ஒன்பதின் கழஞ்சரையே நாலு மஞ்சாடி"*

(தெ. கல். தொ. 2. கல்-1.)

**ஹிரண்யகருப்பம் :** (சம) இரணியகருப்பம் இரணியம் - பொன். பொன்னால் செய்த தாமரைமொட்டு போன்ற கும்பம் பசு ஆகியவற்றின் உள்ளிருந்து செய்யும் அறச்செயல் இப்பெயர் பெறும்.

*'நிருபதுங்க மஹாராஜர் தேவியார் வீரமகாதேவியார் ஹிரண்ய கற்ப துலாபாரம புக்கபொனன்ன்..."*

(தெ. கல். தொ. 12. கல்-74.)

முதல் இராசராசன் தனது ஆட்சியாண்டு 29-ல் திருவியலூர்க் கோயிலில் துலாபாரம் புகுந்தபோது, பட்டத்தரசியார் உலோக மாதேவியார் இரணிய கருப்பம் புகுந்துள்ளமையினைக் அக் கோயிற் கல்வெட்டுச் செய்திகள் புலப்படுத்துகின்றன.

(கல்வெட்டுத்துறை ஆண்டறிக்கை எண்-42 / 1907.)

அறவிளக்கம் : பொன்னால் ஓர் ஆள் புகுந்து நிற்கும் அளவில், தாமரை மொட்டு போன்ற வடிவில் குர்பம் அமைத்து, அதைத் தான விதிப்படி வேள்வியாசிரியனும் நான்மறையாளரும் வேள்வி முதலியன செய்யும் கிரியைகள் நிகழ்த்த, தானம் செய்பவர் அதனுள் இருந்து வெளியே வருதல் வேண்டும். பின்னர் வேள்வி யாசிரியனுக்குத் தானமாக அப்பொற் கும்பத்தையும் விளைநிலங்களையும் கொடுப்பதோடு வேதியர்கட்கு இறையிலி நிலங்களையும் பொற்காசுகளையும் தானம் செய்வர். இத் தானமே இரணிய கருப்ப தானம் என்பர்.

இத்தானம் மற்றொரு வகையாகவும் நிகழ்த்தப் பெறும். பொன்னால் செய்யப்பெற்ற பசுவின் வயிற்றினுள் இருந்து, வேள்வியாசிரியன் கிரியைகள் நிகழ்த்தி பின்னர், அப்பசுவி லிருந்து வெளியே வந்து, அப்பொற்பசுவுடன் பொன்னும் நிலமும் வேதியர்க்குத் தானம் செய்தல்.

**சக்கத்து :** (பெ) முத்தின் வகைகளுள் ஒன்று. நடுவிடம் உயர்ந்து இருபுறமும் சரிந்த பாங்கில் சிராய்ப்பு போன்ற தோற்றமுடன் உருவான முத்து. சப்பத்தி இதனின் வேறாகும்.

*''ஒப்பு முத்துங் குறுமுத்தும் - கறடுஞ்சப்பத்தியும் சக்கத்தும் குளிர்ந்த நீரும்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

**சக்கரக்கோட்டம் :** (அ) விசாகப்பட்டினம் மாவட்டத்திலுள்ள, மத்திய மாவட்டத்தைச் சேர்ந்த சமஸ்தானத்தின் தலைநகரான இராசபுரத்திற்கு எட்டுக்கல் தொலைவில் உள்ள *''சித்திர கூடம்''* (சித்திர கோடா) என்னும் ஊராகும். முதல் இராசேந்திரனால் வெல்லப்பட்ட ஊர்.

*''விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமும்''*

(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**சக்கரநடாத்தி :** (அ) அரசன் தனது ஆணையாகிய சக்கரத்தைச் செலுத்தி. சக்கரம்-அரசனது ஆணை.

*''திக்கனைத்தும தன் சக்கரம் நடாத்தி விசயாபிடேகம் பண்ணி''*

(தெ. கல்.தொ. 3:1, பக்.71, முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி

**சக்கரவகு படை :** (அ) சக்கர வளைவில் வந்த படை (சக்கர வியூகம்) (செங்கம் நடுகற்கள், பல்லவர், கி பி. 7-ஆம் நூற்.)

**சகடை கொட்டிகள் :** (சம) தம்பட்டம் அடிப்பவர்கள். கோயில் விழாக்களில்தம்பட்டம் (பறை) அடிப்பவர்கள் உவச்சர்க்கு உட்பட்டவர். ராவர் இவர்கள் உவச்சு என்ற பெயரால் காணியாட்சி பெறுவர்.

*''உவச்சுக்கு உட்படும்-மேற்படி சகடை கொட்டிகளில் சாத்தன் அம்பலத்துககு தன்னேற்றம் ஆள் பதினோறாவர்க்குப் பேரால் பங்கு அரை''*

(தெ. கல். தொ. 2, கல். 66)

**சகாத்தம் :** (அ) சகாப்தம். சாலிவாகன சகாப்தம் என்னும் பெயரால் தொடரும் ஆண்டுகள். சகரயாண்டு எனவும் குறிக்கப்பெறும். இவ்வாண்டினை அறிய கி.பி. ஆண்டுடன் 78 ஆண்டுகள் கூட்ட, சகாப்த ஆண்டாகும். கி.பி. ஆண்டு 1020 ஆயின் 1020 + 78 = சகாப்தம் 1098 ஆகும். சோழமன்னர்களின் கல்வெட்டுக்களில் சகாப்த ஆண்டு குறிக்கப்பட்டுள்ளது.

*"சகாப்தம் தொள்ளாயிரத்து தொன்னூற்றொன்று பெற்ற சௌம்ய ஸம்வத் சரத்து"*

(வீரராசேந்திரன்-தெ. கல். தொ. 17, கல். 301.)

*"சகாயாண்டு ஆயிரத்தொரு நூற்றொருபத் தொன்பதால்"*

(குலோத்துங்கன்-தெ. கல். தொ. 5 கல். 496)

**சங்கரப் பாடியார் :** (சமு) எண்ணெய் வாணியர். சங்கரபாடியார், சங்கரன் பாடியார், சங்கரபாடியார் என்றெலாம் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெறும் இவர்கள் தமிழகத்தில் வாழ்ந்த வணிகக் குழுவினருள் எண்ணெய் வியாபாரிகளின் சிறப்புப் பெயர்களாகும். இவர்கள் எண்ணெய் வாணியர் என்னும் இனத்தவராவர். இவர்கட்கு *'மாயிலட்டி'* என்ற பட்டம் இருந்துள்ளதை *"சங்கரப்பாடியான கண்ணன் கீரனான குன்றை மாயிலட்டி"* என்னும் கல்வெட்டுத் தொடரால் அறிய முடிகின்றது. இவர்கள் சோழிய வாணியர் என்னும் மரபினராகவும் சைவநெறியுடன் சிவத்தொண்டு புரியும் இயல்பினராகவும் இருந்துள்ளனர். தமிழகத்தில் தொகுதியினராக வாழ்ந்திருந்த வணிகருள் ஒரு பிரிவினராகவும் இருந்துள்ளனர். இவற்றை, *"திருமணஞ்சேரி பரமசுவாமிக்கு சோழிய வாணியரான முண்டரங்கநாகிய திருமணஞ்சேரி நாற்பத்தெண்ணாயிர பன்மாயேஸ்வர மாயிலட்டியார் பன்மாஹேஸ்வர ரக்ஷை"* என்னும் கல்வெட்டுத்தொடர் தெளிவாகப் புலப்படுத்துகின்றது.

(தெ. கல் தொ. 19, கல். 99)

சோழராட்சியில் இவ்வாணியருள் சிலர் மிக்க செல்வம் படைத்தாராகவும், அரசியலில் கரணத்தான், ஸ்ரீகார்யம் ஆகிய பதவிகளைப் பெற்றாராகவும், திருக்கோயில்களுக்குத் திருவிளக்கு நிவந்தம் பல செய்தாராகவும் இருந்துள்ளனர். பெரியபுராணம்-கலியநாயனார் வரலாற்றில், எண்ணெய்களை உண்டாக்கும் தொழில் புரியும் மரபில், செக்கின் வலம்பை மரம் சுழன்று வருங்கால் எழும் ஒலியாகிய பாடல் நிகழும் தெருவில் நாயனார் வாழ்ந்தார் என்று கூறப்பட்டுள்ளது.

*"தயிலவினைத் தொழில் மரபில் சக்கரப்பாடித் தெருவு"*

(கலியநாயனார், பாடல்—5)

இதனைக்கொண்டு சக்கரப்பாடி என்னுந்தொடரே சங்கரப்பாடியெனத் திரிந்து அத்தொழிலுடையார் சங்கரப்பாடியார் எனப் பெயர் பெற்றனர் என்று கூறப்பெறுகின்றது. கல்வெட்டுக்களில்

"சங்கரன் பாடியார்" "சங்கரபாடியசர்" என்ற வழக்கும் பயின்று வருவது நோக்கத்தக்கதாகும்.

"திருநெல்வேலிச் சுத்தவல்லிப் பெருந்தெருவிற் சங்கரன் பாடியார் எண்ணெய் அளப்பாராக"

(தெ. கல். தொ. 5, கல். 417)

"திருநெல்வேலி இல் சுத்தவல்லிப் பெருந்தெருவில் வாணிபரோம்"

(தெ. கல். தொ. 5, கல். 425)

'திருக்கோயிலூர் சபையோம் நகரந்திருக்கோயிலூர் சங்கர பாடியோம்"

(தெ. கல். தொ. 7, கல். 864)

"சங்கரப்பாடியான் கண்டன் மறவனான சோழேந்திர சிங்க மாயிலட்டி"

(தெ. கல். தொ. 3, கல். 19)

"ஆமூர்க் கோட்டத்து மாமல்லபுரமாகிய சன்னாதபுரத்துச் சங்கர பாடியான் கொள்ளம் பாக்கிழான் மாதேவன் எட்டிவைத்த திரு நொந்தாவிளக்கொன்று"

(தெ. கல். தொ. 5, கல். 464)

**சங்கிரமம்:** (சம) காலச்சேர்க்கை. மேடம் முதலாக, மீனம் வரையில் தொடரும் இராசிகளில் சூரியன் செல்லும் முதற்காலம். இது சித்திரைத் திங்கள் முதலாகப் பங்குனி வரையில் பன்னிரண்டு முதல் நாளாக அமையும். இதனை மாதப்பிறப்பு நாள் என்றும் கூறலாம்.

"ஸங்கிரமம் ஒன்றுக்கு ஆடியருளுந்திருமஞ்சன நீரிலுந் தண்ணீர் மீதிலும் இடப்பெருஞ் சண்பக மொட்டு ஆழாக்காக ஸங்கிரமம் பன்னிரண்டுக்கு பெருஞ்சண்பக மொட்டு நாழி உரியும்"

(முதல் இராசராசன், கி.பி. 1014 தெ. கல். தொ. 2:2, கல். 24)

"உத்தராயன சங்கிரமம் ஒன்றுக்கு"

(தெ. கல். தொ. 17, கல். 296)

**சங்கிராந்திதோறும்:** (சம) சூரியன் ஒரு இராசியிலிருந்து அடுத்த இராசியுள் செல்லும் காலம் அமைந்த நாள் ஒவ்வொரு திங்களின் முதல் நாளாகும். அம் முதல் நாளே சங்கிராந்தி என்று பெயர் பெறும். இவ்வாறு ஓராண்டிற்குப் பன்னிரண்டு திங்கட்கும்

பன்னிரண்டு சங்கிராந்தி வரப் பெறும். தமிழ்த்திங்கள், தை மாதம் முதல் நாள் தைப்பொங்கல் நாள் திருநாளாகும். இந்நாள் சிறந்த சங்கிராந்தியாகும். மற்றைய மாதங்களின் முதல் நாளாகும் மாதப்பிறப்பு நாள் பொதுவான சங்கிராந்தி நாளாகும்.

*''கார்த்திகை திங்கள் தோறும் சங்கிராந்திக்கு தூல நாழியால் நாழி நெய் ஆடி அருளுவதற்கு வைச்ச நிலம்''*

(தெ. கல். தொ. 8, கல். 565)

**சங்கிராமம்:** (அ) பர்மாவின தலைநகர். பௌத்த சங்கம் திகழ்ந்த இடம். முதல் இராசேந்திரசோழன் கடல் கடந்து கைப்பற்றிய நாடுகளில் இதுவுமொன்று.

*''அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்தி, சங்கிராம விசையோத்துங்கவர்மனாகிய கடாரத்தரைசனை வாகயம பொருகடல் கும்பக்கரியொடும அகப்படுத்தி''*

(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**சட்டிச்சோறு:** (சம) கோயில் பணியாளர்க்கும் சிவனடியார்க்கும் சட்டி அளவிட்டுக் கொடுக்கும் சோறு. ஒரு சட்டிச் சோறு இருநாழி அரிசி சமைத்த சோற்றின் அளவுடையதாகும்.

*'இந்நாயனார் கோயிலில், எநநொபாதி காணி காணியில் நித்த மிருநாழி யரிசி சோறு இரண்டு சட்டியிட்டு வருவேனாகவும்''*

(விக்கிரமசோழன், கி.பி. 1147, தெ. கல். தொ. 5, கல். 226)

*''இக்கோயிலில் உச்சியம்போதொரு சந்திக்கு வந்த அடியாரில் ஒரு மஹேஸ்வரர்க்கு அமுது செய்ய ஒரு சட்டிச்சோறு இருநாழி அரிசியால் அமுது செயவிக்கக் கடவோமாக''*

(தெ. கல். தொ. 8, கல். 622)

*''ஸ்ரீமஹேஸ்வரர்க்கு சட்டிச்சோறு ஆயிரம் கொடுக்கவும்''*

(இராசேந்திரன் 2, தெ. கல். தொ. 4, கல். 223)

**சடங்கவி:** (சம) பிராமணர்கட்கமைந்த பட்டப்பெயர்.

*''கிராஞ்சி குமரடிச் சடங்கவிக்கு அய்யாயிரம் குழியும்''*

(தெ. கல். தொ. 7, கல். 33)

**சண்டேஸ்வரர் கைவழி:** (சம) சிவன் கோயிலுக்குரிய நிலத்தை விற்பதாயினும், கோயிலுக்கு நிலம் பெறுவதாயினும், கோயில்

பண்டாரத்திலிருந்து பொற்காசுகளைக் கடன் கொடுப்பதாயினும் கோயில் சண்டேசுவரர் கைவழியே கொடுப்பதாகவும் பெறுவதாகவும் கோயில் நிர்வாகத்தினரோ ஊர்ச்சபையாரோ சொல்லிச்செய்வதும் கல்வெட்டுக்களில் அவ்வாறே பொறிப்பதும் வழக்காகும்.

''*மூலப்பிருத்தரான ஸ்ரீ சண்டேஸ்வரதேவர், ஸ்ரீ ஹஸ்தத்தால் இப்பொன் முக்கழஞ்சும் கைக்கொண்டு தேவதானம் திருநாமத்துக் காணியாக விற்றுக் குடுத்த நிலம்*''

(தெ. கல். தொ. 3:1, கல். 26)

''*உறையூர் கூற்றத்து திருப்பராய்த்துறை சண்டேஸ்வரப் பெருமாளுக்கு விற்றுக்குடுத்த நிலம்*''

(தெ கல். தொ. 8, கல். 564)

''*ராஜராஜிஸ்வரமுடையார் சண்டேஸ்வரதேவர்க்கு விற்றுக் குடுத்த நிலவிலையாவணம்*''

(தெ. கல். தொ. 3:1. கல்-54.)

''*சண்டேஸ்வரதேவர் பக்கல் நாங்கள் கொண்ட காசு-உ௰*''

(தெ. கல். தொ. 5. கல்-993.)

''*திருவெண்காடுடைய நாயனார் கோயில் ஆதிசண்டேஸ்வர தேவற்கு தாராபூர்வமாக சிலாலேகை பண்ணிக்குடுத்தபடி வடபிடாகைப்பற்று கருங்குழி*''

(தெ. கல். தொ. 5. கல்-998)

(கருங்குழி-தொண்டை நாட்டில் மதுராந்தகத்தின் வடபாலுள்ள சிற்றூர்.)

''*கோயிலில் சண்டேஸ்வரப்பிள்ளையார் சிவநாமத்தால் விற்றுக் கொடுத்தநிலம்*''

(தெ. கல். தொ. 5. கல்-300)

''*இந்நிலம் சண்டேஸ்வரதேவர் திருநாமத்தால் விலைகொள்ள*'' (புதுக்-கல்-90.)

''*இறையிலிச்சிக் குடுத்த நிலமாவது*''

(இறைகரத்தூட்டாச-பெருமான் கைவழி ஏற்றுக் கொண்டதாக)

(தெ. கல். தொ. 3.1, கல். 28)

**சண்பங்காறை :** (கலை) சண்பகப்பூவின் வடிவிலமைக்கப்பட்ட பொற் பூக்கள் கோத்த காறை என்னும் பெயர் அமைந்த கழுத்தணிகலன்.

**சண்பை :** (சம) திருக்குற்றாலம், திருநெல்வேலி மாவட்டம், தென் காசி வட்டத்தில் உள்ள சண்பகவனமெனும் திருக்குற்றாலமாகும்.

**சத்திமுற்றம் :** (சம) திருச்சத்திமுற்றம். சோழநாட்டில் தேவாரப் பாடல் பெற்ற தென்கரைத் தலங்களுள் பட்டீச்சுரத்தின் மேல் பாலுள்ள திருச்சத்திமுற்றம் என்னும் தலமாகும்.

*"பிராமணன் சத்திமுற்றத் தேவன"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 57)

**சதிரம் :** (பே) சதுரம். நில அளவைகளுள் நெல் விளையும் நிலங்களைச் சதுரம் என்ற அளவிலும் அளந்துள்ளனர். ஒரு சதுரம் என்பது 4½ மா பரப்பளவுடையதாகவும் கூறப் பெற்றுள்ளது. இந்நிலம் ஒரு கண்ணிக் காலின் பாசனம் பெறுவதாகவும் இருக்கும்.

*"திருக்குளத்துக்கும் திருமடை விளாகத்துக்கும் சதிரம் நான்மா வரைப்படி இட்ட ஐய்வேலியும்"*

(தெ. கல். தொ. 7, கல். 816)

*"கண்ணாறு சதுரம் கட்டி நன்செய் புன்செய் தோட்டக் கூறு திருத்திப் பயிர் செய்தும்"*

(தெ. கல். தொ. 5, கல். 411)

*"இரவிகுலசூளாமணிவதிக்கு கிழக்கு அரிஞ்சிகை வாய்க்காலுக்கு வடக்கு ரு-ஆம் கண்ணாற்று ௯-ஆம் சதிரத்து மேற்கடைய நிலம்"*

(தெ. கல். தொ. V, கல். 641)

**ஸ்ரீசந்தம் :** (கலை) மார்பணிகளுள் வடிவில் பெரியதாகவும் நகாசு வேலைப்பாட்டுடன் இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்டதுமான அழகிய அணி. பெருமபதக்கமென்றும் பெயர் பெறும்.

*"உடையார் பண்டாரத்துப் பொன் கொடு செய்த ஸ்ரீசந்தம் ஒன்று"*

(தெ. கல். தொ. 2, கல். 3)

**சத்தக்கூலி :** (வ) பொதிமாட்டுக்கூலி. நெல் முதலிய பொருள்களை ஓரிடத்திலிருந்து காளை மாடுகளின் மீது சுமத்தி எடுத்துச் செல்லுதற்கு மாட்டுக்குரியவன் பெறும் கூலி சத்தக்கூலியாகும். இக் காலத்தில் வண்டிச்சத்தம் என்பர்.

*''நிசதம் பதின்கலமாக ஏழு நாளைக்கு எழுபதின் கலம் சத்தக் கூலியுட்பட''*

(தெ. கல். தொ. 19, கல். 194)

**சத்தவிடங்கத்தலம்:** (சம) உளியால் பொளிந்து உருவாக்கப் பெறாமல் இயற்கையாகவே அமைந்த சிவலிங்கங்கள் உள்ள சிவத் தலங்கள் ஏழு. அவையே சத்தவிடங்கத் தலமாகும். அவை, திருவாரூர், நாகப்பட்டினம், திருநள்ளாறு, திருமறைக்காடு, திருக்காறாயில், திருவாய்மூர், திருக்கோளிலி ஆகிய தலங்களாகும்.

*''திருவாதிரை நாள் உள்பட இந்தப் பதினான்கு நாளிலும்-சோதி விடங்கர் திருச்சாந்து சாத்தி திருவீதிக்கு எழுந்தருளி''*

(தெ கல். தொ. 8, கல். 377)

*'' உடையார் ராஜராஜீஸ்வரம் தக்ஷிணாமேரு விடங்கர்க்கும்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 26)

**சத்துரு பயங்கரன் மூலப்பத்திரன்:** (அ) இவைகள் யானைகளின் பெயர்கள். சாளுக்கியப் பேரரசன் ஆகவமல்லனின் பட்டத்து யானைகள். இரண்டாம் இராசேந்திரன் போர்க்களத்தில் இவற்றைக் கைப்பற்றியுள்ளான்.

*''செருக்களத்து அவன்விடு சத்துரு பயங்கரன், மூலபத்திரன் சாதி பகட்டரைச் சநேகமும்- மினையன பிறவும் முனைவயிற் கொண்டு''* (இராசேந்திரன் 2-மெய்க்கீர்த்தி)

**சதுக்கத்தார்:** (சமு) குறிப்பிட்ட நிலப் பேரெல்லைக்குள் அடங்கிய கிராமங்களில் வாழ்பவர். (ஐந்து வட்டத்தார், ஏழு வட்டத்தார்)

*''வீரவல்லி சோலைபிரான் கிரமவித்தனுள்ளிட்ட சதுக்கத்தார்க்குட் பட்ட ஐஞ்சாம் பாடகம்''*

(தெ. கல். தொ. 19, கல். 222)

**சதுர்வேதிபட்டர்கள்:** (சமு) நான்கு வேதங்களையும் முறையாகக் கற்றுச் சொல்லும் அந்தணர்கள்.

*''ஆயிரத்தெண்பது சதுர்வேதி பட்டர்கட்கு பிர்மதேய இறையிலியாக''*

(கரத்தைச் செப்பேடுகள்)

**சதுர்வேதிமங்கலம்:** (சமு) நான்மறையிலும் ஆறு அங்கங்களிலும் வல்ல பிராமணர்களின் வாழ்தற்கேற்ற வண்ணம் அரசர்களால்

இறையிலியாகக் கொடுக்கப்பட்ட தனியூரோ, சிலவூர்கள் சேர்ந்த பகுதியோ சதுர்வேதி மங்கலம் எனப்படும்.

இதற்கமைந்த ஊர்ச்சபையின் உறுப்பினர் யாவரும் பிராமணர்களாகவே இருப்பர். சதுர்வேதி மங்கலங்கள், இறையிலியாகத் தானம் செய்த அரசன் பெயராலும் அரசுவழி அரசியர் பெயராலும் அமைக்கப்பட்டிருப்பதைச் செப்பேடுகளும் கல்வெட்டுகளும் கூறுகின்றன.

சதுர்வேதி பட்டர்களுக்கு வாழ இடமும் வருவாயாக நிலமும் தானமாக அளிக்கப் பெற்றிருப்பதுடன், அவர்களின் வேதாகம நிருத்திக்கும் வேதபாடசாலைகட்கும் தனித்தனியே நிலதானம் செய்யப்பட்டிருப்பதைக் கரந்தைச் செப்பேடுகள் குறிக்கின்றன.

மதுராந்தகன், *"தனது தாயின் பெயரால் காவிரியின் சுவையுள்ள நீர்ப்பெருக்கின் சாரத்தைப் பெற்ற"*

*"திரிபுவனமாதேவி" என்னும் பெயருள்ள அக்ரஹாரத்தை ஐம்பத்தொரு க்ராமங்களோடு கூடினதாகச் செய்தான்"*.

மதுராந்தகன், *"நாளும் விழாக்கள் நிறைந்த தனது நாட்டில், நிலைத்த செல்வம் படைத்த பல ஆசிரமங்களை அந்தணச் சிரேஷ்டர்களுக்கு அன்புடன் கொடுத்தான்"*

(கரந்தைச் செப்பேடுகள்-மன்னர் மரபுப் புகழ்ச்சி (பிரசஸ்தி) செய்யுள்-67, 68)

ஆயிரத்தெண்பதுசதுர்வேதி பட்டர்கட்கு பிர்மதேசஇறையிலியாக

*"நித்தவிநோத வளநாட்டு வீரசோழ வளநாட்டு திரிபுவனமா தேவிச் சதுர்வேதி மங்கலமென்னும் பெயரால், யாண்டு எட்டாவது முதல் பிர்மதேசமாக இறையிலி செய்து"*

(*கரந்தைச்செப்பேடுகள்.* ஏடு. 10)

*"ஐயங்கொண்ட சோழ மண்டலத்து காலியூர் கோட்டத்துத் தனியூர் உக்கலாகிய ஸ்ரீ விக்கிரமாபரண சதுர்வேதி மங்கலம்"*

(தெ. கல். தொ. 3 1, கல்.4)

சந்தானத்தார் : (சமு) மகன் வழிப் பரம்பரையினர். இறைநெறியாளரின் வழித்தோன்றல்கள் சந்ததியினர்.

*"நாங்களும் எங்கள் சந்தானத்தாரும் சந்திராதித்தவரை ஒரு சந்தி விளக்கு எரிக்கக்கடவோமாக"*

(தெ. கல். தொ. 7, கல். 44)

**சந்தியாதீபம்:** (சம) மாலைக்காலத்தில் திருக்கோயில்களில் எரியவிடும் விளக்கு. (சந்தி-மாலைப்பொழுது)

*"சந்தியாதீபம் ஐஞ்சினுக்கு நிசதம் நெய் உழக்காக"*

(தெ. கல். தொ. 5. கல். 724)

**சந்தி:** (சம) பகுதிப்பொழுது. திருக்கோயில்களில் வழிபாடு நிகழும் காலங்கள். $7\frac{1}{2}$ நாழிகை-ஒரு சந்தி காலமாகும். ஒரு நாள் 60-நாழிகைக்கு 12 சந்தியாகக் கொள்ளும் வழக்கும் உள்ளது.

திருக்கோயில்களில் ஆறு சந்தி, அதாவது-ஆறு காலம் வழிபாடு நிகழ்வதும் சிறப்புடையது ஆகும். இச்சந்தி வழிபாட்டினை நிவந்தம் செய்தார் பெயராலும் குறித்தல் உண்டு.

*"நம்பேரால் கட்டின விக்கிரமபாண்டியன் சந்திக்கும்"*

(தெ. கல். தொ. 17, கல். 202)

*"அந்தியம்போது ஏற்றியபொழுது அமுது செய்தருளுர்தனையுஞ் செல்ல ஒரு சந்திவிளக்கு எரிக்கக் கடவோமாகவும்"*

(தெ. கல் தொ. 7 கல். 43)

*"சிறுகாலை சந்தி ஒருதிருமாலை சார்ந்த சம்மதித்துக் கைக் கொண்ட காசு முக்காலே ஒருமாவும்"*

*"மத்யாக சந்திக்கு ஐஞ்சு திருமஞ்சனக்குடம் நாங்களே கொண்டு திருமஞ்சனமெடுத்து அபிஷேகம் பண்ண சம்மதித்துக் கைக் கொண்ட காசு ஒன்று"*

(தெ. கல். தொ. 8 கல். 27 முதல் இராசராசன், கி.பி 990

**சந்திராதித்தவல் :** (வ) சந்திரசூரியர் உள்ளகால அளவும் நிகழ்வதாக.

அறமாகச் செய்யப்பட்ட நிவந்தம் அழிவுபெறாமல் எக்காலத்தும் நிகழவேண்டுமென்னும் குறிப்புடன் காப்புரைத் தொடராகச் சாசனங்களில் குறிக்கப்பெறும் கருத்துரை.

*"கண்டராதித்த பல்லவரையன் ஒரு நொந்தாவிளக்கு சந்திராதித்தவல் வைத்த ஆடு தொண்ணூறு"*

(தெ. கல் தொ. 7, கல். 894)

*"நற்காலம் வற்கால மெல்லாங்கலந்து சந்திராதித்தவல் பிரமாணமிப்பணி முட்டாமைச் செலுத்துவதாக"*

(தெ. கல். தொ. 8, கல். 10)

**சந்துவிக்கிரஹம் :** (அ) பகை தணிவிக்கும் திறமை. இச்சதுரப்பாடுடைய அதிகாரி சந்துவிக்கிரஹம் என்ற விருதினைப் பெறுவர்.

*"ஒண்டிறற் சத்தியணனையுஞ் சந்து விக்ரஹப் பத்தியண்ணன் தன்னையும்"*

(வீரராசேந்திரன் மெய்க்கீர்த்தி - தெ. கல். தொ. 3:1. கல். 30.)

**சந்துவிக்கிரஹப்பேறு :** (அ) அரசு பெறும் வரிகளுள் ஒன்று. பகையை விசாரித்துச் சமாதானம் செய்வதும், பகை முற்றில் குற்றமுடையாரைத் தண்டித்து அடக்கலும் ஆகிய செயல்புரியும் அரச ஆணைக்குப் பெறும் வரி.

சந்து விக்கிரப்பொன் என்றும், இவ்வரி பெயர் பெறும். சநது- உடன்பாடு, விக்ரஹம்-துணிவு, சதுரப்பாடு, தண்டனை.

*"பிஞ்சு பிலி, சந்து விக்கிரகப்பேறும், பொன்வரியும்"*

(தெ. கல். தொ. 5, கல். 441) (தொ. 7, கல். 57)

**சந்தேசதேசப் பிரமாணம் :** (மொ) குறிப்பிட்ட பூமியின் பரப்பளவுத் திட்டம். கண்ணோட்ட நில மதிப்பீடு.

*"நாஞ்சில் நாட்டு அதியனூரும் இனைநாட்டுப் பெருங்குடி மனை யுட்பட பணைகுடி நீங்கலாக மூன்றுங்கூடின் மலையிற் சந்தேச தேசப் பிரமாணம்"*

(கன்னியாகுமரி கோயில் கல்வெட்டு)

**சப்தஸரி :** (கலை) ஏழு வரிசைக் கோவையாகவும் கோவைக்கொரு பதக்கமாகவும் ஒன்றன் கீழ் ஒன்றாகத் தொங்கும் பாங்கிலும் அமைந்த பதக்கமாலை.

**சப்படி :** (கலை) நவரத்தினங்களில் வைரவகையுள் ஒன்று. தட்டையான வடிவிலமைந்த வைரம்.

*"பொன்னின் நாணிற்கோத்த மாணிக்சத்தின் திரு ஒன்றிற் கட்டின வயிரம் சப்படியும் உருளையும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 42)

**சப்பத்தி :** (பொ) முத்து வகையுள் ஒன்று. ஒருபுறம் அகன்று மறுபுறம் குளிந்த வடிவில் சிறிது தட்டையாக அமைந்த முத்து.

*"படம் ஒன்றிற் கோத்த முத்து கறடும் இரட்டையும் சப்பத்தியும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 43)

**சபாவினியோகம்** : (சமு) கிராமசபையார், சபைவழிச் செய்யும் கிராமப் பொதுச் செலவினங்கள். இதற்குரிய வருவாயாக மக்களிடம் சபாவினியோக வரி என்ற பெயரால் வரிவிதித்துப் பெறுவர்.

*''திருமாலிருஞ்சோலை யாழ்வார் கோயிலில் கூட்டங் குறைவறக் கூடியிருந்து எங்களுக்கு விநியோகக் குறைப்படுத்த ஸபாவினி யோகத்துக்கு வேறுதிரவியமில்லாமையால், எங்களூரிலே சிறிது நிலம் விற்றாகிலும், அதேத விநியோகமும் விநியோகிக்க வேண்டினமையால்''*

(தெ. கல். தொ. 8, கல். 305)

*''ஸபாவிநியோகம் வரிக்கொள்ளுமிடத்து மடக்கு ஒருமாவுக்கு கார் நாற்பதும்; பசானம் எண்பதும் வரிக்கொண்டு இறுக்கக் கடவோமாகவும்''*

(தெ. கல். தொ. 6, கல் 48)

**சபைகூடும் இடம்** : (சம) ஊர்ச்சபை கூடும் இடம். ஊரம்பலம். கோயில் திருமுற்றம் தர்மாசனம் எனும் தனி மண்டபம் மேடை ஆகிய இடங்களில் ஊர்ச்சபை கூடுதல் வழக்காகும்.

*''உத்திரமேரூர் சதிர்வேதிமங்கலத்துப் பெருங்குறி சபையோம். எம் மூர் பேரம்பலத்து முன்பிற் தெற்றியிலே பகற்கூடியிருந்து எம்மிற் செய்த பரிசாவது''*

(தெ. கல். தொ. 6, கல். 362)

*''புள்ள மங்கலத்து மகாசபையோம்—பறையறைந்து திருவாலந் துறை முன்பில் வாசல் மாடத்தே கூடியிருந்து''*

(தெ. கல். தொ. 19, கல். 63)

*''மகாசபை – இவ்வூர் பெரிய தளி அபிஷேகமண்டபத்தே கூடி யிருக்க''*

(தெ. கல். தொ. 3.3, கல். 156)

*''இராசசூளாமணி சதுர்வேதிமங்கலத்து மஹாசபையோம் எம்மூர் பிரம்ஹஸ்தானத்து—கூட்டம் குறைவறக் கூடியிருந்து''*

(தெ. கல். தொ. 2:1, கல். 28)

*''இவ்வாட்டை மிதுனநாயற்றுச் சனிக்கிழமை பெற்ற சித்திரை நான்று பகல் தயாபரனம்பலத்தே ஸபையோம் கூடி இருந்து''*

(தெ. கல். தொ. 19, கல். 222)

''காமரசவல்லிச் சதுர்வேதிமங்கலத்து பெருங்குறி பெருமக்களோம் இவ்வாட்டை தனுநாயற்று வியாழக்கிழமை பெற்ற கார்த்திகை நான்று தட்டழி கொட்டி பெருங்குறி சாற்றி மண்டபத்தே கூடி'

(தெ. கல். தொ. 19, கல். 231)

சப்சர்க்கப்பதிதர் : (வ) சிற்றினச் சேர்க்கையால் நிலையில் தாழ்ந்தவர்.

''சம்சர்க்கப்பதிதரை ப்ராயஸ்சித்தம் செய்யுமளவும் குடவோலை இடாததாகவும்''

(உத்திரமேரூர் கல்வெட்டு - முதல் பராந்தகன் கி.பி. 921)

சம்வத்சரம் : (வ) ஆண்டு. தொடரும் ஆண்டுகளில் ஒன்று.

''அவ்வவர் சம்வத்சரங்களில் கிராமகார்யம் திருத்தும் பெருமக்கள் இத்தர்மம் கடைக்காண்பதாகவும்''

(தெ. கல். தொ. 3:1, கல். 14)

சம்வத்சரவாரிய பெருமக்கள் : (சமு) ஆண்டு தோறும் குடவோலை முறையால் தேர்ந்தெடுக்கப்பட்ட கிராம நிர்வாக சபைக்குரிய தலைமையான துறையின் உறுப்பினர். நியாயம் விசாரித்துத் தீர்ப்புக் கூறுவது இச்சபையினரின் சிறந்த பணியாகும். கிராமம் அல்லது ஊர் நிர்வாக சபையின் உட்பிரிவாகிய வாரியங்களுள் சம்வத்சரம்—ஆண்டு, வாரியப்பெருமக்கள் — ஊராளும் சபைக்குட் பட்ட குழு. வாரியம் - கிராம சபையுள் அமைந்த துறை.

''படுவூர் கோட்டத்து காவிரிப்பாக்கமாகிய அமநிநாராயண சதுர் வேதி மங்கலத்துள் இவ்வாட்டை ஸம்வத்சரவாரிய பெருமக்களும் தோட்டவாரிய பெருமக்களும் - உள்ளிட்ட மஹாசபையோம்''

(தெ. கல். தொ. 3:3, கல். 156)

சமத்த பிராப்திகள் : (வ) எல்லாவகையான வருவாய்கட்குரிய போகங்கள். நிலபுலன்கள் மாடு மனைகள்.

''இவ்வூர் நான்கு எல்லைக்குட்பட்ட நன்செய் புன்செய் ஊளம் ஊளப் பரப்பு மனைதிடல் தோட்டம் முதலாக உள்ள சமத்த பிறாத்தி களும்''

(தெ. கல். தொ. 8, கல். 210)

சமரயீரு : (அ) போரில் புறங்காட்டி ஓடல்.

''கடுமுரட் சாங்கமய்யனுமுதலினர், சமரபீரு வெய்த்து தூடைய''

(முதல் இராதிராசன் - மெய்க்கீர்த்தி)

**சமுதாயக்கணக்கு :** (வ) ஊர்மக்கட்கு உரிமையாக அமைந்த நில புலன்களுடன் கோயில்கட்குரிய கணக்கினையும் உரிமையாள், நிலத்தின் தரம், அளவு, வருவாய், இறை, வரி என்ற வகைமுறையில் முறையாக எழுதும் கணக்கன்.

"*சாமுதாய கணக்கு*" என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப் பட்டுள்ளன.

"*திருமழபாடி உடையார் கோயிலுக்த நாயனார் நினைப்பிட் டருளின சமுதாயக கணக்குகாணியுடையநெற்குப்பையுடையான்*"

(தெ. கல். தொ. 5, கல். 658)

**சமுதாயப்பிராத்தி :** (சமு) சமுதாயப் பிராப்தா, ஊர்மக்கள் அவ்வவர்க்கு அமைந்தஅளவில்அனுபவித்து வரும் நிலபுலவருவாய்கள், அவற்றிற்கமைந்த இறைவரிகள் ஆகிய விளக்கங்களை ஊர்க் கணக்கில் அடங்கியதாக எழுதுதல்.

**சமைந்த :** (வ) உடன்பட்ட. நிர்வாகம் செய்ய அமைக்கப்பெற்ற. திட்டப்படி அமைந்த.

"*ஊருக்குச் சமைந்த வாரியத்தார்*"

"*குடநகர் ஊருக்குச் சமைந்து பெருந்துறை உடையார்களோம்*"

(தெ. கல். தொ. 7, கல். 96)

"*இவை நாட்டுக்கு சமைந்த நாட்டுக்கணக்கு*"

(தெ. கல். தொ 7, கல், 106)

**சமைந்தஅடைப்பு :** (வ) தகுதிவாய்ந்த சான்று. சாசனங்களில் சான்றாகக் கையொப்பமிடுதற்குத் தகுதியுடையாராகச் சபையோரால் குறிக்கப்பட்ட ஊர்ப்பெருமக்கள்.

"*இவ்வூர்க்கு சமைந்த அடைப்பு கவுணியந் திருமாலிருஞ் சோலை ஸ்ரீ கிருஷ்ணபட்டனும் ஆக இவ்வனையோம்*"

(தெ. கல். தொ. 8, கல். 290)

**சமைந்த வியாபாரிகள் :** (வா) வணிக உரிமை செய்யப்பட்ட வியாபாரிகள். இவ்வாறே ஊர்ச்சபைக்கு அமைந்த பெருமக்களும் சுட்டப்பெறுவர்.

"*உலகளந்த சோழபுரத்துச் சமைந்த வியாபாரிகள்*"

(தெ. கல். தொ. 5, கல். 465)

சமைப்பித்தான் : (மொ) புதிதாகச் செய்தமைத்தான்.

*''ஸ்ரீ ராஜராஜதேவர் திருநாமத்தால் கிணறுந் தொட்டியும் சமைப்பித்தான்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 4)

சயங்கொண்ட சோழமண்டலம் : (அ) தொண்டை மண்டலத்தை முதல் இராசராசன் வென்ற பிறகு அதற்கு அவன் வைத்த பெயர். ''சயங்கொண்ட சோழன்'' என்பது முதல் இராசராசனின் விருதுப் பெயர்களுள் ஒன்றாகும்.

*''சயங்கொண்ட சோழமண்டலத்துக் காலியூர்க் கோட்டத்துத் தனியூர் ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலம்''*

(தெ. கல். தொ. 8:1, கல். 4.)

சயமாது : (சம) வெற்றித் திருமகள். கொற்றவை.

*' ஸ்வஸ்தி புகழ்மாது விளங்கச் சயமாது விரும்ப''*

(முதற் குலோத்துங்கன்-மெய்க்கீர்த்தி)

சயிஞை : (வ) கையினால் சைகை செய்துகாட்டும் தன்மை நிலை. இதனை, சம்ஞ்ஞை என்னும் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. இந்நிலையெய்திய முதியோர் ஆவண சாசனங்களில் கையொப்பமிட வேண்டியதாயின், தன் அனுமதியினைச் சைகையால் தெரிவிக்க, அவர்க்குப் பதிலாக பிறரொருவர் கையெழுத்திடுதல் பண்டைக்கால ஆவணக்களரி வழக்காகும். தற்குறிக்கு மாட்டெறிதல் வேறாகும்.

*''பங்குக்கு முதுகண்ணான வைகாவுடையானும் கூற்றுடையானும் ஸம்ஞ்ஞையானமைக்கு நாராயணன் சுந்தரத்தோளுடையான் எழுத்து''*

(தெ. கல். தொ. 8, கல். 205,340)

*''இது பேராயிரமுடையான் ஸயிஞை ஆனமைக்கு, இவை கிழற்றூர அரசன் எழுத்து''*

சரடு : (கலை) செப்புக் கம்பியால் பின்னப்படும் கொடி. பொன்னணிகளின் திண்மைக்காக உள்ளீட்டில் பொருத்தப்படுவதற்கு செப்புக் கம்பியால் பின்னலிட்டுச் செய்யப்பெறும் கொடி இது அணிகலன்களின் அமைப்புக்கேற்ப தட்டைக் கொடியாகவும் திரட்சிக் கொடியாகவும் அமைக்கப் பெறுவது கம்மத் தொழில் நிலையாகும்.

*''திருவடிக்காறை— அரக்கு உட்பட செப்பாணிகளுங் சரடும் நீக்கி நிறை—''*

*''கோத்த சரடு நீக்கி''*

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

**சரடும் சட்டமும் செப்பாணிகளும் நீக்கி :** (கலை) பொன்னாலான அணிகலன்களின் அமைப்பிற்குரியதாகவும் உள்ளீடாகவும் அமைக்கப்பட்ட செப்புச் சரடும், செப்புச் சட்டமும். செப்பாணி களும் ஆகியவற்றை நீக்கி, பொன்னை மட்டும் எடையிடுதல் அக் கால வழக்காகும்.

*''பொன்னும் ரத்னங்களும் கொண்டு செய்து முதலான ரத்னத்தின் திருவாபரணங்கள் சரடும் சட்டமும் செப்பாணிகளும் நீக்கி – நிறை எடுத்து கல்லில் வெட்டினபடி''*

(தெ. கல். தொ. 2, கல். 59,93)

**சரணத்தார் :** (சமு) வேதாகமங்களை அவ்வவற்றிற்கமைந்த பதங் களுடன், ஒலித்திறனமைய ஓதும் பிராமணர்கள். வேதாகம சாலையிற் பயிலும் பிராமணர்.

*''இச்சாலைக்குப் பெய்த கலத்தில் பவிழிய சரணத்தார் உடைய கலம் நாற்பத்தைந்து''*

(பார்த்திப சேகரபுரச் செப்பேடு)

**சருக்கிருந்த ஊர் :** (மொ) தங்கியிருந்த ஊர். உறவினரைப் பிரிந் திருந்த ஊர்.

*''வாணகோ அரைசருமருமக்கள் பொற்றொக்கையார் சருக்கிருந்த ஊர்''*

(செங்கம் நடுகற்கல்—கி.பி. 7-ஆம் நூற்,)

**சலாகை :** (அ) சிறு நாணயம். சோழர் ஆட்சியிலும், பாண்டியர் ஆட்சியிலும், ஒரு காசின் கீழ் நாணயமாக வழக்கிலிருந்தது. இதன் ஒருபுறம் ''இயக்கி'' என்னும் பெண் தெய்வத்தின் வடிவம் அமர்ந்த பாங்கில் பொறிக்கப்பட்டிருக்கும். அதனால் இக்காசிற்கு ''சிரி இயக்கி சலாகை'' என்றும் பெயர்.

*''இவர் பக்கல் நாங்கள் கைக்கொண்ட சிரியக்கி பழஞ்சலாகை அச்சு பத்தும் கைக்கொண்டு இவ்வமுது படி செலுத்துவோமாக''*

(விக்கிரமசோழன்- தெ. கல். தொ. 4, கல். 387)

சவி-மூன்று வடம் : (கலை) இடுப்பிலணியும் பட்டிகை போன்ற அணிகலன்களின் முகப்புப் பகுதியில் வளைவாகவும் வரிசையாகவும் தொங்கும் பாங்கில் அழகுடன் பொற்பூக்களால் அமைக்கப்படும் ஒப்பனையாகும். சவி-புடைப்புத் தோற்றமாகச் செய்யும் அணிகலவுறுப்பு.

*''இடைப்பட்டிகை ஒன்றில்-சவி மூன்று வடம் உடையன எட்டும்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

சன்னவடம் : (கலை) மெல்லிய சரடுகளால் திரிக்கப்பட்ட நீண்ட பொன் மாலை. சன்னம் - பொற்கொல்லரின் தொழில் வழி குறிக்கும் சொல். மெல்லிய என்றும், பொடி என்றும் கூறுவர். ''சன்னம் வைத்து ஊதினான்'' - வழக்கு.

சாக்கை : (கலை) சாக்கையென்னும் கூத்தினை ஆடுபவன். தஞ்சைப் பெரியகோயிலில், முதல் இராசராசன் ஆட்சியில் இக்கூத்து நிகழ்ந்துள்ளது. சாக்கையன் ஆரியம் தமிழ் என்ற இருவகைக் கூத்தும் ஆடும் திறன் பெற்றவனாவன்.

*''மறைக்காட்டுக் கணவதியான திருவெள்ளறைச் சாக்கைக்குப் பங்கு ஒன்றரையும்''*

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 2, கல். 66)

சாக்கைக்கூத்து : (கலை) தமிழகத்தில் நிலவிய கூத்து வகையிலொன்று. ஆடவரால் ஆடப்பெறுவது. இக்கூத்தாடுபவர் சாக்கையர் என்று பெயர் பெறுவர். சாக்கைக் கூத்தர் ஆரியக் கூத்தும் ஆடும் திறமை பெற்றிருந்தனர். தமிழகத்துச் சிவன் கோயில்களில் இக்கூத்து ஆடப்பெறுதல் வழக்கு. இக்கூத்து மூன்று பகுதியால் ஏழு அங்கமுடையதாக ஆடப்பெறும். திருவிடைமருதூர்க் கல்வெட்டு இக்கருத்தினைப் புலப்படுத்துகின்றது.

*''சிறுபழுவூர் திருவாலந்துறைத் தேவதான நிலம் திருவாலந்துறை நல்லூரிலே அப்பிகை அஸ்வதி திருவிழாவிற்கு வந்து சாக்கைக் கூத்து ஆடக்கடவ அடலையூர சாக்கைக்கு மூன்றங்கம் ஆட நிவந்தம்''*

(தெ. கல். தொ. 19, கல். 171)

*''ஆரியக் கூத்தாட - திருவெள்ளறைச் சாக்கைக்கு - இந்தக் கூத்துதுடங்க் மூன்று கூத்தாடுவதாகவும் ஆக இந்தக் கூத்து ஏழு அங்கமும் ஆடுவதாகவும்''* (கல்வெட்டுத் துறை அறிக்கை எண்- 154/1895)

**சாகசியர்** : பிடிவாதகுணம் படைத்தவர். ஏமாற்றும் குணமுடையவர். சாகஸ்யராயிருப்பாரையும் குடவோலை எழுதிப் புகவிடப் பெறாத வராகவும். (உத்தரமேரூர் கல்வெட்டு, முதல் பராந்தகன், கி.பி. 921)

**சாகை** : (மொ) இறப்பு. சாகையில்- இறக்கும் காலத்தில் (சாகை? இருப்பிடம்) வேத-வியாகரண சூத்திரங்களைச் சொல்லும் முறைமைகட்கமைந்த வகைகளுள் ஒன்று.

*''இவ்விரகன் வீரப்பல்லவரையன் சாகையில் எனக்குத் தந்தருள'' ''பிரவேசம் செய்யும் பரீக்ஷை வ்யாகரண மீமாயப் புரோஹிதம்- ஐவர் சட்டரைக்கொண்டு பஞ்சக்கஞ்சான் புகவுபெறுவான் வாரம் ஓதும் பரிசு - சூத்திரத்திலும சூத்திராணத்திலுந் துருச் சொல்லி ஒன்பது புகவினில் இரண்டு கிரமவாரம் அடுத்தோதுவது சாகையிலும் கற்பத்திலும் துருச்சொல்லி அடுத்தோதுவது.''*
(பார்த்திபசேகரபுரச் செப்பேடுகள்)

**சாசனங்கள் அமையும் திறன்** : (வ) கிராமசபையாரோ, பிறரோ செய்யும் அறநிலைகள். கட்டளைகள் செப்புப் பட்டயமாகவும் கல்வெட்டாகவும் ஊர் ஆவணக்களரியில் ஓலைப்பத்திரமாகவும் செய்யப்பெறும்.

*''செம்பிலும் கல்லிலும் ஓலையிலுமுள்ள இலெக்யங்களில் உள்ளநவொன்றும் கடவோம்''*

(இலக்கியங்கள்-எழுதும் வாசக முறைகள்)

இலக்கியங்கள்—தர்மசாசன விதிப்படி எழுதப்பட்ட செய்திகள்.

(தெ. கல். தொ. 6, கல். 351)

**சாசனமங்கலம்** : (அ) அரசன் செய்யும் அறச்செயலைச் சாசனப் பத்திரமாக எழுதுபவனுக்கு அளிக்கப்பெறும் காணிக்கை. சாசன மங்கலம் என்றும் பெயர் பெறும்.

*''நீர் நிலன் மூவேலியும்—குடியிருக்க முருகூர் —பத்துமாவும், தஷிணையாக மன்னு ஸாஸன மங்கலமென வேற்ற பேருடை ஏக போக பிர்மதேயமாய்''* (சிவகாசிச் செப்பேடுகள்)

**சாணுயிரம் முழுமாயிரம் கோயில்** : (சம) தகடூரிலுள்ள சிவன் கோயிலின் பெயர்.

*''நிகரிலி சோழமண்டலத்து கங்க நாட்டு தகடூர் நாட்டுத் தகடூரில் சாணுயிரமுழுமாயிரம் உட்பட்ட கோயில்''*
(தெ. கல். தொ. 7 கல். 533, 534)

**சாத்தகணத்தார் :** (சமு) ஐயனார் கோயில் நிர்வாகத்தினர்.

*''எமமூர சாத்த கணத்தாரும் அம்பலத்தில் வடக்கில் மஹா ஸாஸ்தாவின் கோயிலிலே இருந்து பணித்த எழுத்து''*

*''இத்தன்மம் சாத்தகணத்தாரேய் ரக்ஷிப்பாராகவும்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 6)

**சாத்து :** (வா) பொதிமாடுகளின் மீதும், வண்டிகளிலும் விற்பனைச் சரக்குகளை ஏற்றிக் கொண்டு வணிகர் கூட்டங்கள் கூட்டமாகச் செல்லுவர். அவ்வணிகர் கூட்டம் வாணிகச்சாத்து என்று பெயர் பெறும்.

*'மதுரைச் சீவல்லபன் மடிகைப் பூதமங்கலம் உடையான் மாசாத்து வணிகன் சொக்கன்''*

(தெ. கல். தொ.V. கல்-434)

**சாத்தும் குதம்பை :** (கலை) கோயில்களில் திருமேனிகளின் காதிற்குப் பொலிவாக அணிவிக்கும் வேலைப்பாடமைந்த பொற்றகடு. (குதம்பை-காதணி)

*''சாத்தும் குதம்பையொன்று பொன் இருகழஞ்சு''*

(தெ. கல். தொ. 3:1, கல். 521)

**சாதனம் :** (வ) இறையிலி நிலவுரிமைக்கு ஆதரவான எழுத்துச் சான்று.

*''இறையிலியாக வரியிலும் கழித்தோம். இப்படிக்கு இந்த ஓலையே சாதனமாகக் கொண்டு செல்வதாக''*

(தெ. கல். தொ. 17, கல். 127)

**சாதிபகட்டரைசு :** (அ) உயர்ந்த சாதி எனும் அரச இலக்கணத்துடன் அமைந்த யானைகள். பகட்டரசு-களிற்றரசு. இவ்வானைகளின் சிறப்பியல்களுக்கேற்ப யானை சாத்திரத்தில் பெயர் சூட்டப்பட்டுள்ளன. அத்தகைய உயர்சாதி யானைகள் சாளுக்கிய மன்னன் ஆகவமல்லனின் படையில் இடம் பெற்றிருந்ததனை இரண்டாம் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி புலப்படுத்துகின்றது.

*''செருக்களத்து அவன்விடு, சத்துரு பயங்கரன், கரபத்திரன், மூல பத்திரசாதி பகட்டரை சநேகமும்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 29)

**சாந்திக்கூத்து :** (கலை) தமிழகத்தில் வழக்கிலிருந்த கூத்து வகையுள் ஒன்று. உலக மக்களின் அமைதி வேண்டி யாடப்படுங்கூத்து. இக்கூத்து ஒன்பது வகையுடையது என்பதும், திருக்கோயில்களில் நிகழும் திருவிழாக் காலங்களில் ஆடவல்ல மகளிர் ஆடிவந்தன ரென்பதும கல்வெட்டுக்களால் அறியப்பெறுகின்றது.

*"சித்திரைத் திருநாளுக்குக் கூத்தாடுகைக்கு சாந்திக் கூத்தாடுகிற ஏழுநாட்டு நங்கைக்கு கூத்தாடுகைக்கு விட்ட நிலம்—ஐந்நிலம் கொண்டு இத்திருநாளுக்கு ஆடக்கடவ கூத்து ஒன்பது ஆடுவாளா கவும்".*

(விக்கிரமசோழன், கி.பி. 1134. புதுக். கல். 128)

*"சாந்திக் கூத்தே தலைவனின்பம் ஏந்தி நின்றாடியவரிருநடமவை, சொக்கம் மெய்யே யவிநய நாடகம் என்றிப் பாற்படூஉ மென் மனார் புலவர்"*

(சிலம்பு : அரங்கேற்றுக்காதை—வரி 12க்கு உரை விளக்கம்) ஆடவரும் இக்கூத்தினை ஆடியுள்ளன ரென்பதனை, *"சாந்திக் கூத்தன அரயன் ஒன்றாயிரம்"* என்னும் கல்வெட்டுப் பகுதி உணர்த்துகின்றது. (புதுக்.கல்.275)

**சாமந்தர் :** (அ) சேனைத்தலைவர் வீரராசேந்திரன் வென்றசாளுக்கிய சேனைத்தலைவர்.

*"ஆகவமல்லன் மக்களாகிய விக்கலன் சிங்கணன் என்றிவர் தம் மொடு மெண்ணில் சாமந்தரை வென்றடு தூசிமுனைவிட்டு"*

(வீரராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**சாமரை :** (பொ) வெண்சாமரை. கவரிமான் மயிர்க்கற்றை. திருக்கோயிலில் இறைவழிபாட்டின்போதும், அரசனுடைய நாளோலக்கத்திலும் எடுத்து அசைத்து விசிறப்பெறும் சின்னம்.

*"இவரே வைத்த வெண்சாமரை—ஒன்று"*

(தெ. கல். தொ. 19, கல். 75)

**சார்த்திக்கொடுத்தன :** (மொ) ஒன்றாக மதிப்பீடு செய்து கொடுத்தன. சேர்த்துக் கொடுத்தன.

*"பசுவின் கன்றும் எருதும் பசுச் சார்த்திக்குடுத்தன பசுவாகவும் ஆட்டுக் குட்டியும் கிடாயும் ஆடு சார்த்திக் குடுத்தன ஆடாகவும்"*

(தெ. கல். தொ. 2, கல். 63)

**சாரிகை-வரி :** (அ) வழிச்சாரிகையாக அங்காடிகள் சுமந்துவரும் விற்பனைப் பொருள்கள் மீது விதிக்கப்பெறும் வரி. இது மகண்மை என்ற பெயராலும் வசூலிக்கப் பெறுவதாகும்.

(தெ. கல். தொ. 8, கல். 469)

*''முன்னாள் வழிச்சாரிகையில் வைத்துக் குடுத்த மகண்மையும்''*

(தெ. கல். தொ. 17, கல். 142)

**சாலகம் :** (பொ) பலகணி. சாலேகம் கோயில் கருவறைமுகமண்டபத்திலும், பெருமண்டபத்திலும் ஒளியும் வளியும் உட்செல்லத் துறைகள் பல அமையுமாறு சிற்ப வேலைப்பாட்டினால் அழகூட்டிச் செய்யப்பெறும் சிற்பப் பலகணி. (கல் சன்னல்)

*''இத்திருச்சாலகம் கஞ்சமலைப்பெரிய பிள்ளை தன்மம்''*

(தெ. கல். தொ. 4, கல். 146)

*''சாலேகம் சார நட''* (முத்தொள்ளாயிரம்)

**சாலாபத்தியன் :** (சம) அறச்சாலைகள் நிகழ்வதற்குரிய மூலப்பொருளாக வைக்கப்பட்ட நிலங்களையும் பொற்காசினையும் காத்து அறச்செயலை நிகழ்த்திவரும் உரிமைபெற்றவன்.

*''அருமொழிதேவவளநாட்டுத் தக்களூர் நாட்டு அதிராஜ மங்கலத்து சாலாபத்தியன் அனந்தமாதேவன்''*

(தெ. கல். தொ. 17, கல். 313)

**சாலாபோகம் :** (ச) கல்விச் சாலைகட்கும் அறச்சாலைகட்கும் அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

*''குமரி ராஜராஜன் சாலையின் சாலாபோகம் நாஞ்சில் நாட்டு மணற்குடி ஊரோம் கைத்தீட்டு''*

(திருவாங்கூர் கல்வெட்டுத்தொகுதி, 1, பக். 242)

*''இந்நிலம் சாலா போகமாக குடுத்து''*

(தெ. கல். தொ. 8, கல். 613)

**சாலியர் காணம் :** (அ) நூலிற்குச் சாயமிடும் சாலியக் குடியினர் அத்தொழிலுக்குரியதாகக் காசாகச் செலுத்தும் வரி. இவ்வரி, *''சாலியத்தறி''* என்றும் கூறப்படும்.

**சாலை :** (ச) உணவு அறச்சாலை, கல்விச் சாலை.

''திருவிடை மருதுடையார் சாலை உண்ணும் பிராம்ஹணர்க்கு இவனிட்டதாலம் யஅ''

(தெ. கல் தொ. 5, கல். 714)

''காந்தளூர் மர்யாதியால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்கு (வடமொழிக்கல்வி மாணவர்க்கு) சாலையும் செய்தான் ஸ்ரீ கோக் கருந்தடக்கன்''. (பார்த்திபசேகரபுரச் செப்பேடுகள்)

சாலையூட்டாக : (ச) உணவு அறச்சாலை நிகழ்வதற்குரிய மூல தனமாக.

''திருமேற்றளி மாதேவர்க்கு மாசி மகத்துக்கு சாலையூட்டாக சாத்தம் படாரி வைத்த பொன்-ரு'' (புதுக். கல். 77)

சாவாமூவாச் செவ்வரி ஆடு : (வ) என்றும் முதலீடாக வைத்த எண்ணிக்கைக் கணக்கில் குறையாமலிருக்கும் பெரிய செவ்வரி ஆடுகள். (செவ்வரி-செம்மறி)

''நெய் தொண்ணூற்று நாழிக்கு விட்ட சாவாமூவா செவ்வரி ஆடு பொலிதகர் சயிக''

(தெ. கல். தொ. 5, கல். 646)

சாவாமூவாப்பசு : (வ) என்றும் எண்ணிக்கையில் குறையாமல் ஈடு செய்து காக்கும் பசுநிரை.

''திருவிறையான் கோயில் மஹாதேவர்க்கு விட்ட சாவாமூவாப் பசு பதிநாறு''

(முதற்குலோத்துங்கன், கி.பி. 1092, தெ. கல். தொ. 7, கல். 849)

சாவாமூவா வாழ் மாடாக : (வ) கோயில்களில் திருவிளக்கு நிவந்த மாக அளிக்கப்பட்ட பசுக்களை, நெய்யளப்பதற்குப் பெற்ற இடையர், பெற்ற பசுக்கள் எண்ணிக்கையில் என்றும் குறை யாமல் வைத்திருக்க வேண்டுமென்னும் ஒப்பந்தக் குறிப்பே சாவாமூவா வாழ்மாடாகும். இவ்வாறு இடையர் அமைத்துக் கொள்ளுதற்குரிய செயல், மூப்புடைந்த பசுக்களுக்கும் இறந்த பசுக்களுக்கும் ஈடாக தமக்கு உரிமையான கன்றினங்களில் பருவமடைந்தகன்றுகளை எண்ணிக்கை குறையாமல் அவற்றிற்கு ஈடுசெய்து வைத்தலேயாகும்.

(தெ. கல். தொ. 6, கல். 513)

சாவேறு : (அ) சாவிற்கு அஞ்சாத காளைபோன்ற வீரர்கள். அரசன் மாண்டால் உடன் உயிர்துறக்கும் வீரர்கள். சாவினைப் பொருட் படுத்தாமல் பகைவர் அணியினுட்புகுந்து போரிடும் வீரர். இத் தகைய வீரர்களடங்கிய படை சேரநாட்டுப் படையில் ஒரு பிரி வாக இருந்தது.

*''குடமலை நாட்டுள். சாவேறெல்லாம் இருவிசும்பேற''*

(முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)

**சிகையான காசு :** கூடி நின்ற காசு. ஒரு தொகையாகத் தங்கி நின்ற காசு.

*''கணக்கு கெட்டு, இப்பெயரால் சிகையான காசு தண்ட''*

(வரி வசூலாகாமல் கணக்கு கெட்டு, கொடுக்க வேண்டியவன் பெயரால் தொகுதியாக நின்ற வரிக்காசினை வசூலிக்க)

(தெ. கல் தொ. 12, கல். 199)

**சிங்கலம் :** (கங்கநாட்டிற்குக் கீழ் திசையிலிருந்த நாடு. வீர ராசேந்திரன் வெற்றி பெற்ற நாடுகளுள் ஒன்று.

*''சேரனை சிறை கொண்டு சிங்கணதேசம் அடிப்படுத்து''*

(தெ. கல். தொ. 17, கல். 301)

**சிங்கபுர நாடு :** (தென்னாற்காடு மாவட்டம், செஞ்சி வட்டத்தில் தொண்டூர் அருவாகூர் ஆகிய ஊர்களைத் தன்னகத்துக் கொண்ட நாடு.

**சிங்கம் வைச்ச விளக்கு :** (கலை) சிங்க உருவம் தலைப்பில் கொண்ட விளக்கு. இவ்விளக்கு பாண்டிநாட்டு இளங்கோய்க் குடி கோயிலில் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் சாத்தன் அந்தரி என்பானால் செய்தமைக்கப்பட்டதாகும்.

(தெ. கல். தொ. 14, கல். 38)

**சிங்கவிண்ண பருமற்கு :** (மொ) சிம்ம விஷ்ணு வர்மபல்லவ னுக்கு.

(செங்கம் நடுகல்—வட்டெழுத்து. கி.பி. 6, நூற்.)

**சித்தாயப் பஞ்சவாரம் :** (சமு) சித்தாயம் என்ற வரிப்பெயரால் காசாகப் பெறும் பஞ்சவாரம். இதனை ஊர்ச்சபைக்கு உட்பட்ட பஞ்சவாரவாரியத்தாரே வசூலிப்பர்.

*''இக்காசு நூறுங்கொண்டு நாங்களேயென்றும் ஸந்தராதித்தவர் ஸித்தாயப் பஞ்சவாரம் உட்படச் சில்வரியும் பெருவரியும் எல்லாம் இறுக்க இத்தேவரிறையிலி அனுபவிக்கக் கடவதாக விற்றுக் குடுத்த நிலமாவது''*

(தெ. கல். தொ. 7, கல். 842)

சித்திரமேழி பெரிய நாட்டார் : (வா) சித்தரிக்கப்பட்ட கலப்பை யினை இலச்சினையாகக் கொண்ட பெரிய நாடெனும் தொண்டை மண்டலத்து வேளாண் வாணிகச் சபையார். இவர்கள் பல்லவர் ஆட்சிக்காலம் முதலாக நடுநாட்டிலமைந்த திட்டைக் குடியான வித்யாரண்யபுரத்தினைத் தலைமையிடமாகக் கொண்டு தமிழகமெங்கும் நிலவிய வாணிகச் சபையோராவர். இவர்கள் உணவுப் பொருள்களுக்கான பயிர்வகைகளை உற்பத்தி செய்து நாடெங்கும் எடுத்துச் சென்று விற்பனை செய்யும் வணிகராக இருந்திருப்பதுடன, இச்சபையின் உறுப்பினர்களாகிய திசைவிளங்கு திறலாயிரத்தைஞ் ஞூற்றுவராய பதினெண்பூமி நானா தேசியராகிய வணிகர்கள், செட்டிகள், வளஞ்சியர் ஆகி யோரின் கூட்டு வாணிபத்தினால் பொன்வாணிகராகவும் இரத்தின வாணிகராகவும் இருந்துள்ளனர்.

இவர்கள் மேற்கொண்ட இலச்சினை சித்தரிக்கப்பட்ட கலப்பையும் மேழிததோரணமுமாகும். துலாக்கோலினையும் பூமி தேவியையும் தெய்வமாகக் கொண்டதோடு திருமால் வழிபாட்டின ராகவும் இருந்துள்ளனர்.

இவர்கள் அறுபத்து நான்கு கிளையுடையவராக இருந்திருப் பதுடன் இவர்களின் வாணிபமும் செல்வாக்கும் அமைந்திருந்த நாடுகள் தொண்ணூற்று இரண்டு என்று கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

இவர்களது தலைமை நகரமான, விருதராச பயங்கரவள நாட்டுத் திட்டைக் குடியான திருச்சிற்றம்பலச் சதுர்வேதி மங்க லத்தில் "சித்திரமேழிவிண்ணகர்" என்ற கோயிலைக்கட்டி யிருப்பதுடன் அத்திருமால் கோயிலுக்குத் திருவிடையாட்டமாக நிலபுலன்களும் நிவந்தமாக அளித்துள்ளனர்.

இவ்வணிகக் குழுவினர் தமிழகமெங்கும் பரவி நின்று வாணி பத்தை வளர்த்திருப்பதுடன் பல அறச் செயல்களையும் ஆங் காங்கேசெய்திருப்பதனைக் கல்வெட்டுக்கள் புலப்படுத்துகின்றன.

*"உத்தமநீதி உயர்பெருங்கீர்த்தி முத்தமிழ் மானல முழுமையு நிரந்த சித்திரமேழி பெரிய நாட்டோம்"*

(தெ. கல். தொ. 8. கல். 198, 275.)

என்பது இவர்கட்கமைந்த விருது மொழிகளாம்.

சித்திரயாளி : (அ) சித்திரக்காரப்புலி. வண்ணச் சித்திரம் எழுது

வதில் வல்லாருக்கு முதல் இராசராசன் அளித்த சிறப்புப் பட்டமாகும்.

*''வண்ணக்கண் ஐய்யாறனாகிய சித்திரயாளி''*

(தெ. கல். தொ. 17, கல். 238)

**சித்திரை நான்று :** (மொ) சித்திரை விண்மீன் கூடிய நாளில். (நான்று-நாள். ஞான்று நான்று என ஞகரத்துக்கு நகரம் போலியாய் வந்தது)

*''இவாட்டை மிதுனநாயற்றுச் சனிக்கிழமை பெற்ற சித்திரை நான்று பகல் சபையோம கூடி இருந்து''*

(தெ. கல். தொ. 19, கல். 222)

**சித்திரைக் குறுவை :** (வே) சித்திரை மாதத்தில் விளையும் குறுவை நெற்பயிர். இக் குறுவைப்பயிர் கோடைக்குறுவை என்றும் பெயர் பெறும்.

*''சித்திரைக் குறுவை, ஆடிக்குறுவை, அய்பிகை வரகு விளைந்த நிலத்துக்கு ஒன்றுபாதி பயிர்க் கொள்வார்களாகவும்''*
(காளையார் கோயில் கல்வெட்டு) (தெ. கல். தொ. 8, கல். 170)
*''கோடைகாலத்து குறுவை வரகு தினை பயிர்நின்ற நிலத்துக்கு கடமையில் நாலின் ஒன்று இறுப்பாராகவும்''*

(தெ. கல். தொ. 8. கல்-411.)

**சிதப்புகள் :** (மொ) சிதைவுச் செயல்கள், அழிவுகள்.
(புதுக். கல்வெட்டு எண்-176)

**சிதாரி-(சீதாரி) :** (பொ) குளிர்ந்த நறும்புகை. திருக்கோயில்களில் வழிபாட்டின்போது தணலில் தூவி நறும்புகை எழுப்பும் சந்தனத் துகள். அகிற்கட்டை என்றும் கூறுவர்.

*''திருமெய்ப் பூச்சுக்கும் சீதாரிக்குமாக நிசதம் சந்தனம் முப்பலமாக ஆண்டுவரை சந்தனம் ஆயிரத்து எண்பதிந் பலத்துக்கு''*
(திருவையாறு ஓலோகமாதேவிச்சரக் கல்வெட்டு)

*''சீதாரி போதுக்கு கழஞ்சாக மூன்று போதைக்கும் முக்கழஞ்சுக்கு நெல்லு முந்நாழியும்''*

(தெ. கல். தொ. 8, கல். 235)

**சிதிலஞ் செய்தான் :** (பொ) அழிவு செய்தான். சிதைவு செய்தான்.

*"இத்தர்மத்து சிதிலஞ் செய்தான்"*

(தெ. கல். தொ. 6, கல். 348)

**சிரையூர் :** (அ) (சிறையூர்) பேரூரின் எல்லையோடு தொடர்ந்திருக்கும் ஊரொடு இணைந்த சிற்றூர்.

*"இவ்வூர் வடபிடாகை சிரையூர் இருக்கும் வெள்ளாளன்"*

(தெ. கல். தொ. 17, கல். 197)

**சில்லந்தராயம் :** (அ) சிறிய அந்தராயம் என்னும் குறைந்த அளவுடைய வரி. இவ்வரி தற்காலிகமாக பக்களால் நிகழ்த்தப்பெறும் செயல்களுக்குரியதாகவோ, பயிர்கட்குரியதாகவோ, அரசோ, ஊர்ச்சபையோ விதிக்கும் சிறு வரியாதலின் இப்பெயர் பெற்றது.

*"ராஜமாத்தாண்டச் சருப்பேதி மங்கலத்து ஸபையோம். இந்நிலத்துக்கு வேலிக்காசு உட்பட்ட சில்லந்தராயம் காட்டவுஞ்சொல்லவும் பெறாதோமாகவும்"*

(தெ. கல். தொ. 5, கல். 1381)

**சில்லிறை :** (அ) அரசுபெறும் இறைக்கு உட்பட்ட சிறிய வரி, சில்லிறை என்று கூறப்பெறும். அரசு பெறும் மிகச்சிறிய அளவிலமைந்த வரிகள்.

*"எச்சோறு, கூற்றரிசி, வெட்டிமுட்டையாள் உள்ளிட்ட எப்பேற்பட்ட சில்லிறைகளுக்கும்"*

(தெ. கல். தொ.8, கல். 351)

*"ஒன்றே அரையேமா அரைக்காணிக் கீழரைக்குஞ் சில்லிறை"*

(தெ. கல். தொ. 7, கல். 944)

**சிலடை :** (அ) (சில் அடை). சிறுகுறிப்பு. சிறுகணக்கு. இக்காலத்தில் சிட்டை என்பர். சிறு குறிப்பாகச் சேர்த்து எழுதும் ஊர்க்கணக்கு.

*"சிலடையில் செய்து வருகிறபடி கல்லில் வெட்டுவிச்சோம்"*

(முதல் இராசராசன், கி.பி. 1007) (புதுக். கல். 85)

**சிலாலேகை :** (வ) கற்பொறிப்பு. கல்வெட்டு.

*"ஆக தேவர் நிலம் குழி இரண்டாயிரத்திருநூறும் - இறையிழிச்சி சிலாலேகை செய்து குடுத்தோம்"*

(தெ. கல். தொ. 3:1, கல். 28)

*"திருமண்டபமிழிச்சியெடுப்பதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி"*

(தெ. கல். தொ. 3:1, கல். 43)

**சிவந்த நீர் :** (பொ) முத்தின் ஒருவகை. சிவந்த நீரோட்டமுடையதாக அமைந்த முத்து.

*"முத்து வட்டமும் அனுவட்டமும் - சிவந்த நீரும் குளிர்ந்த நீரும்"*

(தெ. கல். தொ. 2:1, கல். 7)

**சிவபிராமணன் :** (சமு) ஆதிசைவராய அந்தணர். சிவன் கோயில் அர்ச்சகர். இவர்கள் தேவதானமாகவும், காணியாட்சியாகவும் நிலம் பெற்ற வாழ்க்கையுடையவராக இருப்பர்.

*"சிவ பிராமணன் கவுசியன் ஆண்டபிள்ளை அரியநாக சைய்வ கலாலையச் சக்கரவர்த்தி"*

(தெ. கல். தொ 5, கல். 263)

*"இக்கோயில் காணியுடைய சிவபிராமணன் அவிநாசி வீரப் பெருமான் குடங்கொண்டு கோயில் புகுவார்"*

(வீரராசேந்திரன் - தெ. கல். தொ. 5, கல். 272)

**சிவயுண்ணவர்கள் :** (சமு) சிவன் கோயில்களில் நிகழும் இறைவன் வீதியுலாவின் போது. பல்லக்கு விமானம் ஆகியவற்றைச் சுமந்து வரும் திருப்பணி செய்பவர்கள்.

*"திருக்கோயில் எம்பெருமான் அமாவஸிகோறும் எழுந்தருள திரு வீதி திருப்பணி செய்யும் சிவயுண்ணவர்கள் பேர் முப்பதின்மர் அமுது செய்யவும்"*

(தெ. கல். தொ. 8, கல். 294)

**சிவயோகிகள் :** (சமு) சிவன் கோயில்களில் நாளும் நிகழும் வழிபாட்டின்போது, இறைவனைப் போற்றிச் சேவிக்கும் அடியார்கள். இவர்கட்கு கோயில் பிரசாதமும் தங்குவதற்குக் கோயில் புறத்தே மடமும் வழங்கப்பெறுதல் மரபாகும்.

*"ஒரு திருவிழாவில் உடையாரை பதின்மர் சிவயோகிகள் சேவித்து வந்தால், சேவித்துவந்த சிவயோகிகள் பதின்மரும் உடையார் சாலைபிலே உண்ணக்கடவர்"*

(முதல் இராசராசன், கி.பி. 1014, தெ கல். தொ. 2:2, கல். 28)

**சிற்றம்பலத்துக் கோல் :** (வே) முதல் இராசராசன் ஆட்சியில் தொண்டை மண்டலத்தில் நில அளவைக்குரியதாக அரசுவழி அமைக்கப்பட்ட கோலின் பெயர். (உக்கல் கல்வெட்டு)

**சிறகு :** (வ) பக்கம். வாய்க்கால், ஆறு, தெரு, இவைகளை எல்லையாகக் காணும்போது, *இதன் வடசிறகு இதன தென் சிறகு*" என்று கூறுவது சாசன வழக்காகும்.

"*தெற்குத் தளிச்சேரித் தென்சிறகு,*" "*இத்தளிச் சேரி வடசிறகு*"

(தெ. கல். தொ. 2, கல். 66)

"*கீழைத்தெருவில் கீழ் சிறகில் வடக்கடைய மனை*"

(தெ. கல். தொ. 7, கல். 49)

**சிறுகாட்டிச் சந்தி :** (சம) திருக்கோயில்களில் வைகறைப் பொழுதில் நிகழும் வழிபாடு. ஆறுகால பூசை ஆகம நியதியாக அமைய அவற்றிற்கு இடைக்காலத்திலொன்றில் நிவந்தக்காரரின் விருப்பமாக அமைத்துக்கொள்ளும் சிறுவழிபாட்டுக்காலம்.

(சிறுகாட்டி-சிறுவழிபாட்டின் பொழுது)

"*திருநலக்குன்றத்துப் பரமேஸ்வரர்க்கு சிறுகாட்டிச் சந்தி பாலாடி அருள*"

(புதுக். கல். 22, முதல் இராசராசன்-கி.பி. 988)

**சிறுகாலை :** (சம) வைகறைப் பொழுது

"*வண்துவராபதிஎம்பெருமானுக்கு சிறுகாலை ஸந்திக்கு முன்பாகத் திருமந்திர போனகம் நானாழிஅரிசியால் அமுது செய்தருளுகைக்கு*"

(தெ. கல், தொ. 3:1, கல். 35)

"*பிச்ச தேவர்க்குச் சிறுகாலைக்கும் போனகப்பழவரிசி இருநாழியும்*"

(முதல் இராசராசன்—தெ. கல். தொ. 2:2, கல். 35)

"*சிற்றஞ்சிறுகாலை*" - நாச்சியார் திருமொழி

**சிறுதனத்துப் பெருந்தரம் :** (அ) முதல் இராசராசன் ஆட்சியில், அரசியல் சுற்றமாக அமைந்த அதிகாரிகளுள் சிறப்பாகப் பெருந்தனத்தார், சிறுதனத்தார் என்ற நாட்டுப் பெருங்குடி மக்கள்

இடம் பெற்றிருந்தனர். அவருள் - சிறுதனத்தாருள் மேல் நிலை பெற்றார் பெருந்தரம் எனப் பெயர் பெறுவர்.

*"ஸ்ரீராஜராஜதேவர் சிறுதனத்துப் பெருந்தரங் கோவன் அண்ணா மலையான கேரளாந்தக விழுப்பரையன்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 47)

**சிறுதனம் :** (அ) சோழர் ஆட்சியில் இடம்பெற்ற அரசியல் அதிகாரிகளில் ஒரு தகுதியினர். முதல் இராசராசன் காலத்தில் அமைந்த அரசியல் சுற்றக்குழுவினுள் சிறந்த இடம் பெற்றிருந்தனர். நாட்டில் நிலையாக வரும் பெருஞ் செல்வருள் இரண்டாவது தரத்தினரே 'சிறுதனம்' என்று குறிக்கப்பெற்றனர்.

*"உடையார் ஸ்ரீராஜராஜதேவர் சிறுதனத்துப் பெருந்தரம் கோவன் அண்ணாமலையான கேரளாந்தக விழுப்பரையன்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 47)

**சிறுதூக்கம் :** (கலை) சிறிதாக அசைந்தாடும் வைரமணித் தொங்கல். தூக்கம்-வளையத்தலைப்புடன் தொங்கும் பகுதி.

*"திருப்பட்டிகை முகம் ஒன்றில்-சவியினுள்ளால் சிறுதூக்கம் மூன்றே நாலித்தலையில் விடங்குடையன எட்டில்கட்டின பொத்தி எட்டும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

**சிறுபழுவூர் :** திருச்சிராப்பள்ளி மாவட்டம், உடையார் பாளையம் வட்டத்தில், தேவாரம் பெற்ற தலமாகிய பழுவூரே இச் சிறுபழுவூராகும். இக்காலம் இதனைக் கீழப்பழுவூர் என்பர். இவ்வூருக்கு மேற்கே ஒருகல் தொலைவில் மேலப்பழுவூர், பெரும் பழுவூர் என்னும் ஊர் உள்ளது. இவ்வூரில் மறவனீச்சரம் உள்ளது. சிறுபழுவூர்-இறைவன் ஆலமரத்தைத் தலவிருட்சமாகக் கொண்டதால் பழுவூர் என்னும் ஊர்ப் பெயருள் ஆலந்துறை என்ற கோயிற் பெயரும் பெற்றுள்ளது. இவ்வூர் கல்வெட்டுக்களில் சோழமன்னர்கட்கும் பெண் கொடுத்த பழுவேட்டரையரைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

**சிறுபாடிகாவல் :** (அ) சிற்றூர்கட்கமைந்த விளைநிலங்களைப் பாது காப்பதற்கு கிராமசபையார் நெல்லாகப் பெறும் ஆயம். (வரி)

**சிறுமுறி :** (அ) பற்று இரசீது, சிறிய கட்டளைக் குறிப்பு ஓலை. இதுவே திருமுகத் தேவையாள் தனக்குரிய வரியாகும், நெல்லைப் பெற்றுக் கொண்டமைக்கு நில உரிமையாளர் பயிரிட்டு நெல்லளப் பாரிடம் கொடுக்கும் பற்றுச் சீட்டு.

*"மக்கட் சேவகர் கொண்டு சிறுமுறியெடுத்துத் தேவை செய்விக்கவும்"*

(தெ. கல். தொ. 6, கல். 50)

*"திருவாய்மொழிந்தருளினபடிக்கு சிறுமுறி"*

(தெ. கல். தொ. 8, கல். 359)

**சிறை, தளை, சங்கிலி :** (அ) சிறையிடுதல், காலிலும், கையிலும் இடுக்கிப் பிணித்தல், விலங்கிடுதல்.

*"இடைய நேறன் சாத்தனைக் கொண்டு, நெய்யட்டுவிப்பதாகவும், இவன் சாவினும் போகினும் சிறை தளை சங்கிலி புகினும் இவ்வனவோமுசுபு நின்றோமே சந்திராதித்தவல் திருவிளக்கெரிக்க புணைப்பட்டோம்"*

(தெ. கல். தொ. 3:1, கல். 18)

**சின்னங்கள் :** (அ) அடையாள விருதுகள். அரசர்க்கும் தெய்வங்கட்கும் உரிய இலச்சினைகள் பொறிக்கப்பட்ட கருவிகள். இவை, இசைக்கருவிகளாகவும் இருப்பதனைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. வாதில் வென்றார்க்குரிய ஊதும் காளமும் எடுத்துப் பிடிக்கும் வெற்றிச் சின்னங்களும் சின்னமென்றே கூறப் பெறும்.

*"ஸ்ரீ ராஜராஜதேவர் தம்பண்டாரங்களிலும் சேரமானையும் பாண்டியர்களையும் மலைநாட்டு எறிந்து கொண்ட பண்டாரங்களிலும் குடுத்த பொன்னின் சின்னங்களும் பொன்னின் திரு ஆபரணங்களும்"*

*"ஈச்சோப்பிக்கைய் ஒன்று பொன் முப்பத்து நாற்கழஞ்சு"*

*"காளம் ஒன்று பொன் இருநாற்றுத் தொண்ணூற்று நாற்கழஞ்சரை"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

*"பார்குலவு தனிக் காளஞ் சின்னம் எல்லாம் பரசமயக் கோளரி வந்தான் என்றூத"*

*"புத்த நந்தி - வெற்றிபுஷன சின்னங்கள் வாதில் எம்மை வென் றன்றோ பிடிப்பதெென வெகுண்டு சொன்னான்"*

(பெரியபுராணம் - சம்பந்தர் - பாடல் - 904, 906)

**சின்னம் :** (அ) திரமம் என்ற நாணயத்தின் உள் பின்ன மதிப்பமைந்த சிறு நாணயம். தில அளவையில், மிகச் சிறிய நுண்ணிய அளவும் சின்னம் என்றே பெயர்பெறும்.

(ஒரு பைசா என்பதுபோல) (12 சின்னம் - 1 திரமம்)

*"அன்றாடு நற்புதுக்காசு நாலுக்கு ஆட்டுப் பொலியும் சிந்நம்ஆறு"*

(சின்னம்) (ஆட்டு-ஆண்டு; பொலியும் - வட்டியாகும்)

(தெ. கல். தொ. 8, கல். 41)

*"நிலம் முக்காலே சின்னம்"*

(தெ. கல். தொ, 19, கல். 214)

**சினப்புலி செய்து :** (அ) சினத்தோடு எழுந்துள்ள இலச்சினை எழுதிய கொடியும் சின்னங்களும் கூடிய சோழர்சேனையைச் செலுத்தி. செய்து சினப்புலி பகைவர்மேற் பாய்வதைப் போல பகைவர் நாட்டின் மீது தனது புலி இலச்சினைஎழுதிய கொடி யோடு கூடிய படையைச் செல்லச் செய்து.

(வீரராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**சீபாததூளி :** (வ) அறவொழுக்கத்தால் சிறந்த மக்களின் பாதங்கள் சிதறும் மண் துகள். காப்புரையில் தன் பணிவினைத் தெரிவிக்கப் பயன்படுத்தும் சொல்.

*"இத்தந்மம் இரக்ஷிப்பாந் சீபாததூளி உள்ளாரில் நல்லானெற் எந்தலைமேலன"*

(தெ. கல். தொ. 7, கல். 397)

**சீயகங்கர் :** (அ) சிங்கங்கள் வாழும் கங்கநாட்டு மக்கள். தமிழிலக்கண நூலாகிய நன்னூலினைப் பவணந்தி முனிவரைக் கொண்டு எழுதச் செய்த சீயகங்கன் என்னும் கங்க அரசன். இவனுக்குரிய விருதுப் பெயர்கள் பலவுள. இம்மன்னன் கி.பி. 1260 வரையில் ஆட்சி செய்துள்ளானென்பதைக் கோப்பெருஞ்சிங்கன், சித்தூர்-மேற்பாடிக்கல்வெட்டு உணர்த்துகின்றது.

*"சகலபுவநச்சக்கிரவர்த்திகள் கோப்பெருஞ்சிங்க தேவர்க்கு யாண்டு ௰எ - வது ஸ்ரீ மற்குவளாலபுர பரமேஸ்வரன் கங்க*

*குலோற்பவன் காவேரி வல்லவன் நந்திசிரிநாதன் சீயகங்கர் ஓலை அமராபரணன் சீயகங்கன் விட்டேன்''*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 202)

**சீர்த்தனம் :** (சமு) (சீதனப்) பெண்ணுக்குக் கொடுக்கும் சீர்வரிசைச் செல்வம். இம்முறையே திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள அம்மனுக்கும் அறவழியே சீர்தனமாக நிலமும் பொருளும் நிவந்தமாக அளிப்பது வழக்காகும்.

*'செய்யூரான ஜயங்கொண்ட சோழநல்லூர் புற்றிடங் கொண்டருளின மகாதேவர் திருப்பள்ளியறை நாச்சியார்க்குச் சீர்த்தன மாகக் குடுத்த நிலம''*

(தெ. கல். தொ. 8 கல். 30)

**சீவன சேஷம் :** (வ) வாழ்வதற்குரிய வருவாய். வாழ்வதற்குரிய பொருளாக. குறிப்பிட்ட காரியங்களைச் செய்தற்பொருட்டு அவற்றைச் செய்து வருவோர்க்குக் கொடுக்கப்பட்ட நிலம். சீவிதம் என்பதும் இதுவேயாகும்.

*''திருமடை சீவனசேஷமாக, தென்கரை ஆந்தனூரான வீரசோழ நல்லூர் குடுத்து''.*

(தெ. கல். தொ. 3 : 1, கல். 26)

**சீவிதம் :** (வ) வாழ்க்கைக்குரிய வருவாய்.

*''இவ்வூர் ஜீவிதமுடைய ஸேநாபதிகள் ஜயங்கொண்ட சோழ பிரம்மாதிராஜர்''*

(தெ. கல். தொ. 3 : 1, கல். 30.)

**சுகந்தி :** (பொ) மாணிக்க வகையுள் சிறந்ததொன்றாம். அணி வார்க்கு நற்சுகமளிக்கும் குணம் பெற்றிருப்பதால் சுகந்தி என்ற பெயர் அமையலாயிற்று.

*''ஸ்ரீ பாஹுவளையும் ஒன்றிற் கட்டின மாணிக்கம் ஒன்றும் ஸுகந்தி ஒன்றும், குருவிந்தம் மூன்று''*

(தெ. கல். தொ. 2, கல். 93)

**சுட்டி :** (கலை) புருவமத்திக்கு மேல் தொங்கலாக நெற்றியில் அணி விக்கும் பொன்னாலும் இரத்தினங்களாலும் செய்யப்பட்ட அசையும் மணிகளோடு கூடிய சிறுபதக்கம்.

**சுப்பிரம் :** (பொ) குறையுள்ள முத்தின் வகையில் ஒன்று. இது, வெண்ணிறப் புள்ளிகளுடன் பிறப்பிலேயே அமைந்திருப்பதாகும்.

**சுபமஸ்து :** (வ) நன்மை நிலைபெறுக. நன்மை உண்டாகுக. கல்வெட்டுகளின் தலைப்பிலமையும் இம்மங்கலச் சொல், கி.பி. 12-ஆம் நூற்றாண்டு முதலாக வழக்கில் உள்ளது.

**சுரசாரம்பி :** (சமு) வைணவ பிராமணருள் ஒருசாராருக்குரிய குடிப் பெயர்.

"*இவை சுரசாரம்பி சிங்கப்பிரான் பட்டன் எழுத்து*"

**சுரபிஇடையர் :** (சமு) கோவலர். மாட்டிடையர். இவர்கள் பசு இனமாடுகளை மேய்த்துக் காத்துப் பயன்பெறுபவராவர்.

"*இக்கோயில் (சுரபி இடையற்குனாயகம் கைக்கொண்ட பால்பசு பத்தும்*"

(தெ. கல். தொ. கல். 822)

**சுரபியில் :** (மொ) (சுரபி-பால்பசு) பசுப்பண்ணையில் (பால்வள நிறுவனத்தில்) சுரபிகள் காக்கப்படும் இடம்-பொருளாகு பெயராக அமைந்துள்ளது.

"*ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் சுரபியில் அடுத்த பசு பன்னிரண்டினால்*" (அடுத்த-சேர்த்த, கூடிய)

"*மேற்படியார் ஸுரபியில் குடுத்த பசு ஒன்பதினால்*"

(தெ. கல். தொ. 2, த. பெ. கோ. கல். )

**சுரபிமன்றாடி :** (சமு) பசுக்களைப் பாதுகாப்பவர். மாட்டிடையர். இவர்கள், "*சுரபித்திருமேனி*" என்றும் குறிக்கப் பெறுவர்.

"*இந்நாயனார் சுரபி மன்றாடிகளில் கலையன் சூற்றி திருவகம் படிக் கோன் கைக்கொண்டு நாளொன்றுக்கு அளக்கும்பால்*"
"*இந்நாயனார் சுரபி மன்றாடிகளில் செல்வன் திருச்சிற்றம் பலக் கோந் கைக்கொண்டு-அளக்கும் பால்*"

"*இவ்வூர் மன்றாடிக் குடிமக்களில் சென்னிக்கோன்*"

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 194, 195, 198)

"*உடையார் திருவண்ணாமலை உடைய நாயனார் பாலாடி அருள சுரபித் திருமேனி வசம் நடை உரு பசு-ஈயிரு குடுத்தோம்*"

(தெ. கல். தொ. 8, கல், 73)

**சுரி :** (கலை) பொன்னணிகளில் அமைக்கப்பெறும் பகுதி. திருகாணி. பொன்னாலான வளையல், சரடு ஆகியவற்றின் மூட்டுவாய்த் திருகாணி. உருத்திராக்கமணிகளுக்குப் பக்கமாக இணைக்கும் வில்லைத்தகடு.

*"உருத்திராக்ஷத் தாழ்வடம் ஒன்றிற் பொன்னினசுரிஐம்பத்தாறுய"*

(தெ. கல். தொ. 2:1, கல் 3)

*"தாழ்வடம் ஒன்றில் பொன்னின் சுரி ஐம்பத்தாறும் உருத்ராக்ஷம் ஐம்பத்தாறும்"*

*"உருத்ராக்ஷச்சுரி பொன்னின் நூலிற்கோத்த உருத்ராக்ஷம் ஒன்றும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 38)

**சுருக்கினதகடு :** (கலை) செம்பு, பித்தளை ஆகிய உலோகத்தாலான பொருள்களின் மேல் வடிவோடு இரண்டறப் பொருந்துமாறு அமைக்கப்பெறும் பொற்றகடு.

*"செப்புக்குடம் ஒன்று நிறை மூவாயிரத்து எண்பத்து முப்பலத்தில் சுருக்கின தகடு பல பொன்று"*

(தஞ்சைப் பெரியகோயில் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 2, கல். 1.)

**சுவத்தி :** (மொ) (சுபஸ்ஸ்ரீ) சுவஸ்தி. மங்கலம் உண்டாகுக. தமிழ்க் கல்வெட்டுக்களின் தொடக்கமாக இம் மங்கலச் சொல்லைக் குறித்தே மெய்க்கீர்த்தியும், அறச்செயலும் எழுதப் பெறுதல் வழக்காகும். இச்சொல் "ஸ்வஸ்திஸ்ரீ" என்று குறிக்கப்பெறுதல் பெருவழக்காகவுளது.

*"ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்"*

(முதல் இராசராசன் மெய்க்கீர்த்தி)

**சுவாமிபோகம் :** (சம) திருக்கோயிலுக்குரிய இறையிலி நிலம்.

*"சுவாமி போகத்துத் திருவமிர்து காட்டுவோமானோம்"*

(திருவல்லிக்கேணி கல்வெட்டு)

**சூரசாரம்பி :** (சமு) வைணவ பிராமணருள் ஒரு பிரிவினர்க்குரிய பட்டப்பெயர்.

*''சூரஸாரம்பி ஸ்ரீ கிருஷ்ண கிரமவித்தன்''*

(தெ. கல். தொ. 4, கல். 133)

**சூலநாழி :** (பொ) சிவபெருமானுக்குரிய சூலக்குறி பொறிக்கப்பட்ட நாழி அளவு. சூல இலச்சினை பொறிக்கப்பட்ட மரக்கால். சூலக் கால் என்றும், சூலம் பொறிக்கப்பட்ட மரக்கால் சூலப் பொன் கால் என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளன.

*''நெல்லு சூலக்காலால் கலம்''*

*''நெல் சூலப் பொற்காலால் நூற்றிருபதின்கலம்''*

(தெ கல். தொ. 8, கல். 580, 581.)

*''இத்தேவர் பண்டாரத்து சூலநாழியால் நிசதி உரிய் நெய் அட்டுவதற்கு''*

(தெ. கல். தொ. 14, கல். 5)

**சூலஸ்தாபனம் :** (பொ) சூலவடிவினைப் பொறித்த கற்களை நிலையாக நடுதல். சிவன் கோயில்களுக்கு இறையிலி செய்யப் பட்ட நிலங்கட்குரிய எல்லைகளில் திரிசூலக்குறி பொறிக்கப்பட்ட கற்களை நிறுவுதல் வழக்காகும்.

(ஸ்தாபனந் நிலைபெறச் செய்தல்)

**செக்காயம் :** (அ) எண்ணெய் ஆட்டும் செக்குக்குரிய வரி. இதனைச் ''செக்குக்கடமை'' ''செக்கிறை'' என்றும் கூறுவர்.

*''செக்குக்கடமை, வாணிகர் பேராற் கடமை - உள்ளிட்ட கடமை களும்''*

(தெ. கல். தொ. 7, கல். 98, 107)

*''செட்டிகள் வாணிகர் பேர்க்கடமை செக்கிறை - மற்றும் இவ் வூர்களை நோக்கிவரும் எப்பேர்ப்பட்ட வரிகளும் உட்பட''*

(தெ. கல். தொ. 7, கல். 98, 107)

**செக்கார் :** (சமு) வாணியர். எண்ணெய் வியாபாரி, சங்கரபாடியார். இவர்கள் தலைச்சுமையாக எண்ணெய் எடுத்துத் தெருவில் கூறி விற்கும் பாங்குடையராவர். இவர்கள் ''சங்கரன் பாடியார்'' என்ற சிறப்புப் பெயரும் பெறுவர். இவர்களில் ஒரு பிரிவினர் ''மாயிலட்டி'' என்ற பட்டப் பெயர் பெற்றுள்ளனர்.

*காஞ்சிமாநகரின் செப்பேட்டுப்படி, செக்கார் செய்யக் கடவமுறமை எண்ணையுண்டானவையிலே கூறி விற்க கடவந் இவனுக்கு உகச்சும் பறையும் கொட்டக் கடவதல்லந்''.*

(இராசராசன் 2, கி. பி. 1155, தெ. கல். தொ. 7, கல். 865)

*''சங்கரபாடியான் படியசோலை அரைசான குலோத்துங்க சோழ மாயிலாட்டி''*

(செந்தலைக் கல்வெட்டு—தெ. கல். தொ. 6, கல். 9)

செக்கிறை : (அ) செக்கிடுவதற்கு, ஊர்ப்பொதுவிடத்தில் அமைத்துக் கொண்ட நிலத்திற்குரியதாக வாணியர் செலுத்தும் வரி

செகண்டி : (சமு) செயகண்டி. உலோகத்தாலான தட்டும் இசைக் கருவி. கோயில்களில் பூசைக்காலத்து, காணியுடைய உவச்சர் இக் கருவியினைத் தட்டுவது வழக்கு.

*''செகண்டிகை - இவ்வூரில் அரயணிச் சிங்க உவைச்சன் கொட்டுவதாக வைத்தோம்''*

(தெ கல். தொ. 12, பகு. 1, கல். 114)

செங்கழுநீர்ப்புறம் : (சம) குளத்தில் செங்கழுநீர் எனும் குவளை மலர் வளர்த்து, நாள்தோறும் அலரெடுத்து மாலையாக்கிக் கோயிலுக்குத் தருபவனுக்குரிய வருவாயாக அமைக்கப் பெறும் மூலதனம். இறையிலி நிலம்.

*''திருவண்ணாமலை உடைய நாயனார்க்கு நாள் க-க்கு உ௰ரு திருச் செங்கழுநீர் திருப்பள்ளித்தாமஞ் சாத்திவிக்க கடவராகவும். இதுக்குத் திருச்செங்கழு நீர் செய்கிற குவளை கிழவனுக்கு ஜீவிதத்துக்கு சிபண்டாரத்திலே ஒடுக்கின காசு 2000- திருச்செங்கழு நீர்புறமாகக் கொடுத்தோம்.''*

(தெ. கல். தொ. 8, கல். 93)

செங்காட்டுக்கோட்டம் : தொண்டை மண்டலத்தின் 24-கோட்டங்களுள் ஒன்று. தொண்டை மண்டலம், முதல் இராசராசன் ஆட்சிக்கு உட்பட்டதிலிருந்து செயங்கொண்ட சோழ மண்டலம் என்று பெயர் பெற்றது.

*''செயங்கொண்ட சோழ மண்டலத்து செங்காட்டுக்கோட்டத்து மாகனூர் நாட்டு மணிமங்கலம்''*

(தெ. கல். தொ. 2:1, கல். 28)

**செட்டிகள் வாணிகர் சேனையங்காடிகள் :** (சமு) இவர்கள் மூவரும் மூன்றுவகை வியாபாரிகளாவார்கள். இவர்கட்கமைந்த பட்டப்பெயரே இம்மூன்றுமாகும். இவர்களிடம் விற்கும் பொருள்களுக்கு ஏற்ப அரசு பெறும் வரியே ஆயம் எனப்படும்.

*''செட்டிகள், வாணியர், சேனையங்காடிகள் இவர்கள் பேரால் ஆயமும்''*

(தெ. கல். தொ. 7, கல். 855)

**செட்டிறை :** (அ) வணிகராய செட்டிகளிடம் அரசுபெறும் இறை. 'செட்டிகள்' என்னும் பட்டமுடைய நகரத்தார்களாகிய வணிகர், மதிப்பிற்சிறந்த பொருள்களை விற்றுப் பொருளீட்டும் பெரு வாணிபம் செய்வாராதலின் அவர்களிடம் அரசு செட்டிறை என்ற பெயராலேயே அரசுக்குரிய நேர் வருவாயாகிய இறையினைப் பெற்றுளது என்பது புலனாகும்.

**செந்நடை :** (சம) நாளும், தவறாது நிகழும் தூய வழிபாட்டு முறைமை.

*''இவ்வூர்த் திருமேற்றளி ஆழ்வார்க்கு வைத்த திருச்செந்நடை நிசதி நெல்லுக் குறுணி நானாழியால் சந்திராதித்தவல் வைத்தோம்''*

(தெ. கல். தொ. 19, கல். 351.)

**செந்நீர் :** (வே) பருவகாலப் புதுநீர். பருவகாலத்தில் ஆற்றில் பெருகி வரும் புதுநீர்.

*''செந்நீர் வெட்டி செய்யக் கடவதில்லையாகவும், புந்நீர்விட்டு பாச்சிக் கொள்வதாகவும்''*

(தெ. கல். தொ. 3 : 1, கல். 24)

**செந்நெல் தீட்டல் :** செந்நெல்லை உரலிட்டுக் குற்றித் தீட்டிய அரிசி.

*''செந்நெற்றீட்டல் அறுபத்து நாற்கலம்''*

(தெ. கல். தொ. 14, கல். 13)

**செப்புக்குடம் :** (சம) விமானத்தின் உச்சியில் பொருத்தப் பெறுஞ் செப்பாலான கலசம்.

*''ஸ்தூபித்தறியில் வைக்கக் குடுத்த செப்புக்குடம்''*

(தெ. கல். தொ. 2, கல். 1)

**செம்பாதி :** (வே) சரிபாதி. ஒரு நிலத்தை இரு கூறாகப் பிரிக்க, அதில் ஒருபாதி செம்பாதி நிலமாகும்.

''*கிழக்கடைய செம்பாதி நிலமும்*''

(சிதம்பரம் கல்வெட்டு, தொ. 12)

(கல்வெட்டுத்துறை அறிக்கை எண். 1(6/1934)

''*நிச்சயித்த வலையில் பண்டாரத்துக்கு செம்பாதி குடுப்ப தாகவும்*''

(தெ. கல். தொ. 8, கல். 75)

''*இக்கோயிலிற் செம்பாதி காணியுடைய சிவபிராமணன்*''

(தெ. கல். தொ. 7, கல் 43)

''*இவ்வூர் தச்சக்காணி செம்பாதியுடைய தச்சன் வடுகனாதன்*''

(தெ. கல். தொ. 3:1, கல். 35)

**செம்பியன் மாதேவிநாழி :** (வா) திருமழபாடி கோயிலில் உப்பளக்க இருந்த நாழி அளவை. இப்பெயரால் மரக்காலொன்றும் இருந்ததைக் கல்வெட்டு குறிக்கின்றது.

(தெ. கல். தொ. 5, கல். 627, 638)

**செம்பில் பொந் பூசிந மகுடம் ;** (கலை) செம்பு என்னும் உலோகத்தினால் செய்யப்பட்டு அதன்மேல் பொன்முலாம் பூசின மகுடம்.

**செம்பின்மேல் பொன் கடுக்கின குடம் :** (கலை) செப்புத்தகட்டின் மேல் பொற்றகடு பொருந்திய (பதித்த) குடம்.

(தெ. கல் தொ. 2 2, கல். 60)

கடுக்குதல் - ஒன்றாகப் பொருத்துதல். குடம் - செப்புக்கலசம்.

''*ஸ்ரீ விமாநத்துச் செம்பின் ஸ்தூபித் தறியில் வைக்கக் குடுத்த செப்புக்குடம் ஒன்று நிறை மூவாயிரத்து எண்பத்து முப்பலத்தில் சுருக்கின தகடு பல பொன் ஆடவல்லா னென்னுங் கல்லால் நிறை இரண்டாயிரத்துத் தொளாயிரத்து இருபத்தறு கழஞ்சரை*''

சுருக்குதல்-தகட்டின் மேல் தகடாகப் பொருந்துமாறு பதிவித்தல்

(தெ. கல் தொ. II, கல். 1)

**செம்பிலும் வெட்டிக் கொள்க :** (வ) செப்புத் தகட்டிலும் பட்டயமாக சாசனச் செய்திகளை வெட்டிக்கொள்க.

***"கல்லிலும் செம்பிலும் வெட்டி சந்திராதித்தவரையும் பூசைத்தாழ்வு அற நடத்திப் போக"***

(தெ. கல். தொ. 8, கல். 210)

**செம்பொன் :** (பொ) செம்மையான பொன். உரையிலும் தரத்திலும் குறையாத நற்பொன்.

***"உரையும் நிறையும் குறையாத பொன்"***

***"கல்வெட்டுப்படி தந்து கொண்டக் குடிஞை எடை செம்பொன்"***

(தெ. கல். தொ. 17, கல். 297)

***"நாங்கள் கைக்கொண்ட செம்பொன் இருகழஞ்சு"***

(தெ. கல். தொ. 3:1, கல். 41)

**செய் :** (வே) திருத்தம் செய்த நிலம். நன்செய்.

***"நடுவு திருத்தம் செய் அரை நிலமும்"***

(தெ. கல். தொ. 3:1, கல். 33)

**செய்க்கடமை :** (அ) நிலங்களைச் சீர்திருத்தம் செய்வதற்குரியதாகப் பெறும் வரி.

**செயகண்டிகைப்புறம் :** சிவன் கோயில்களில் வழிபாடு நிகழும் போது உவச்சர் இசைக்கும் வெண்கலத் தட்டிசைப்பணிக்கு நிலையாக அளிக்கப்பெறும் நிலம்.

(தெ. கல். தொ. 5, கல். 660)

**செல்வி ராஜகேசரி :** (சம) திருவல்லம் சிவன்கோயிலில் நெல்லளக்க விருந்த மரக்காலின் பெயர்.

***"காசொன்றுக்கு செல்விராஜகேஸரியால் நெல்லு நாற்கலமாக"***

(தெ. கல். தொ. 3:1, கல். 57)

**செலவற்ற விழுக்காடு :** (வே) செலவில்லாததாக எஞ்சிநின்ற பகுதி நிலம்.

***"இவ்வாண்டுகளில் ஊரில் கடமை செலவற்ற விழுக்காட்டுக்கு மேற்பட்ட திருநாமத்துக்காணி"***

(தெ. கல். தொ. 8, கல். 193)

செவ்வேய் : (மொ) நேராக, செம்மையாக, நேர் ஒழுங்காக.

*"இதனின்றுஞ் செவ்வேய் தெற்கு நோக்கி பதினைங்கோல் சென்று"*

(தெ. கல். தொ. 8, கல். 518)

செழிஞர் : (மொ) செழியர், பாண்டியர். யகரத்திற்கு ஞகரம் போலியாக வந்துள்ளது. முதல் இராசராசன் ஆட்சியில் தொண்டை மண்டலத்து-மணிமங்கலம் சபையோர் சாசனம் - மெய்க்கீர்த்தி, கி. பி. 990.

(தெ. கல். தொ. 6, கல். 267)

செழிய வாணியர் : (சமு) தொண்டை மண்டத்தில் வாழ்ந்திருந்த ஒருவகை வாணியக்குடியினர். சோழியவாணியர்.

*"குன்றத்தூர் செழியவாணியர்களோமானோம்"*

(தெ. கல். தொ. 12, பகு, 1, கல். 53)

செறு : (வே) திருத்திச் சேர்த்த நிலம். நஞ்செய் நிலங்களைச் சார்ந்திருந்த மேட்டுப்பகுதியைக் கல்லித் திருத்தி நஞ்சையாக்கி, நஞ்சையோடு செறிந்ததாகக் கூட்டிய நிலம் "செறு" என்று கூறப்பட்டது.

*"புளியங்கொல்லையில் தீர்த்த நென்று திருத்திந செறு குழி எண்ணூற்றொருபது குழியும்"*

(முதல் இராசராசன் காலம், கி.பி. 995,)

(தெ. கல். தொ. 7, கல். 154)

*"செறுவில் பூத்த சேயிதழ்த் தாமரை"*

(புறம்-397)

செறுவு : (வே) திருத்திய நிலம். தொண்டை மண்டலத்தின் வடபால் வழக்கிலிருந்த நிலம்பற்றிய பெயர். மலைச்சாரலாகவும், பாறைப்படராகவும் அமைந்த பூமியில், முயன்று நிலமாக ஆக்கப் பட்டமையால் "செறுவு" என்று பெயர் பெற்றது.

*"பாறைச் செறுவு ஏரிப்பட்டி செய்தது"*

(தெ. கல். தொ. 12, கல். 110)

செறுவும் கழுவலும் : (வே) சமனான நிலமும் சரிவான நிலமும். கழுவல்-மழைநீர் வழிந்தோடும் நிலப்பாங்கு.

சென்று முட்டி : (அ) படையுடன் சென்று நேருக்கு நேர் மறித்து எதிர்த்து.

''*காரிப்பெருமான் - எருமை தொறு எயினாட்டார் கொள்ளப் பாசாற்றூர் பூசலிடப் பூசல் சென்று கோவூர் நாட்டுச் சிற்றிடை யாற்று முதுகொன்றை முக்கின் மீமலை, அயங்கரையிற் சென்று முட்டி பட்டான்*''

(செங்கம் நடுகற்கள்-கம்பவர்மன். கி.பி. 9-ஆம் நூற்.)

சென்னடை : (சம) (செல் நடை) கோயில்களில் நாளும் நிகழும் வழிபாடு முதலிய படித்தரச் செலவினங்கள். செந்நடை—தூய வழிபாட்டு முறைமை.

''*ஸ்ரீ கோக்கருந்தடக்கன் அக நாழிகைச் சென்னடைக்கு அட்டின பூமி*'' (பார்த்திப சேகரபுரச் செப்பேடு)

''*எம்மூர் அமரேஸ்வரப்பெருமாளுக்கு செந்நடைக்கு யாங்கள் பணித்துக்குடுத்த நிலமாவது*''

(தெ. கல். தொ. 19, கல். 481)

சென்னீர் பொதுவினை : (வே) பருவகாலத்தில் பெருகும் நீரினைப் பொது மக்களும் விவசாயிகளும் பயன்படுத்தும் செயல். இதற்குரிய வரியும் இப்பெயர் பெறும். (செல்நீர்-சென்னீர்)

''*சென்னீர்ப் பொதுவினைச் செய்யாததாகவும்*''

(ஆனைமங்கலச் செப்பேடு)

சேக்கிழான் : (சமு) நிலபுலன் மாடு மனைகளை உடைய செல்வர். ஆநிரைப் பண்ணையார்.

''*மேலூர் கோட்டத்துத் தன்கூற்று காவனூர் சேக்கிழான் சத்தி மலையனாகிய சோழமுத்தரையன்.*''

(தெ. கல். தொ. 19-கல்-72.)

தொண்டை நாட்டு வேளாளரின் குடிப்பெயருள் ஒன்றாகும் என்பர்.

சேட்டை : (சமு) வைணவ பிராமணன் ஒரு சாராருக்குரிய குடிப் பெயர்.

''*இவை சேட்டை தாமோதரப்பட்டன் எழுத்து*''

சேமப்பிள்ளை : (அ) அரசனுடைய மெய்க்காவலன். (சேமம்-பாதுகாப்பு)

*"ஸ்ரீ வீரபாண்டிய தேவற்கு 4-வது', 'நாயனார் சேமப் பிள்ளையார் அகம்படி முதலிகளில்"* (நாயனார் - அரசன்)

(புதுக்கோட்டை கல்வெட்டு எண். 430)

**சேமம்போகிப் போகையில் :** (சம) பாதுகாவல் இல்லாமல் (சிலை) களவுபோனமையில்,

*"நாயனார் கோயில் எழுந்தருளுகிற நாயனார் இத் தேவர்க்கு ஏழாவது நாளிலே சேமம போகிப் போகையில் பின்பு இக் கோயிலுக்கு எழுந்தருளு விநாயகரையும் எழுந்தருளுவித்தான்"*

(இராசராசன், 2, கி.பி. 1160; தெ. கல். தொ. 8, கல். 201)

**சேனாபதி ஆழ்வார் :** (சம) விஸ்வச்சேனர் என்னும் பெயரமைந்த திருமால் அடியார். திருமால் கோயில்களில் கருவறை வாயிலுக்குப் பக்கமாக இவர் திருமேனி எழுந்தருளப் பெறுவது வழக்காகும்.

**சேனைமீகாமன் :** (அ) கடற்படையில் திறமையுடன் கலஞ்செலுத்து பவன். (கப்பலோட்டி)

*"இராசராச சேதிராயந் சேனைமீகாமன் எழுந்தருளிவித்த சேதி நாயகற்கும் நாச்சியாற்கும்"*

(முதல் இராசாதிராசன், கி. பி. 1049, தெ. கல். தொ. 7, கல். 890)

**சைவசக்கரவர்த்தி :** (சம) சிவன் கோயிற்பூசை செய்யும் ஆதி சைவருள், சைவாகமங்களில் தேர்ந்த முதன்மையுடையவர்.

*"தில்லை பிரான்பட்டர் பிள்ளைகளில் காசிபன் பாண்டிய தனஞ் சியசைவேசுரமுடையானான சைவசக்கரவர்த்தி"*

(தெ. கல். தொ. 5, கல். 272)

**சைவாசாரியம் :** (சம) கோயில்களில் ஆகம விதிப்படி வழிபாடுகள் நிகழ்விக்கும் தலைமைப்பதவி. வேத ஆகமத்தில் சிறந்தவர்கள் இப்பதவியில் இருப்பர்.

*"இக்கோயில் சைவாசாரியம் தேவராஜ பண்டிதன்"*

(தெ. கல். தொ. 12, பகு. 1. கல். 222)

**சொக்கச்சியன் கல் :** (வா) தொண்டை மண்டலத்தில் பொன்னை நிறுக்க நாட்டு வழக்கில் நிலவிய நிறைக்கல்.

(திருவாமாத்தூர் கல்வெட்டு, தெ. கல். தொ. 12, கல். 181)

சொக்கசீயன் என்பது கோப்பெருஞ்சிங்கன் என்னும் பல்லவ அரசனுக்குரிய சிறப்புப் பெயராகும்.

சொக்கச்சியன் திருவாசல் : (சம) சிதம்பரம் திருக்கோயிலின் தெற்குவாசலுக்கமைந்த பெயர். இதற்கு, சொக்கச்சியன் திரு நிலை எழுகோபுரத் திருவாசல் என்றும் விளக்கப் பெயர்அமையும்.

(தெ. கல். தொ. 8, கல். 50.)

சொக்கச்சியன் கோல் : (சம) சொக்கச்சியன் என்ற பெயரால் தில்லை நடராசப் பெருமான் கோயிலில் நிலவளவைக் குரியதாக இருந்த அளவுகோல்.

''*சொக்கச்சியன் சமுகு திருநந்தவனம் நிலம் அறுபத்து மூன்றுமா முக்காணிக்கீழ் முக்காலும சொக்கச்சியன் கோலால அளந்த இடத்து*''

(தெ. கல். தொ. 12, கல். 215)

சொறுமாட்டு : (வ) பாக்கிப்பட்டதாகும் — செல்வம். தொகையும்— வரியும்.

''*பொன்கொண்டு எப்பேர்ப்பட்ட இறையுஞ் சொறு மாட்டுங் காட்டப்பெறாதோமாக*''

(கம்பவர்மன், கி.பி. 9-வது நூற்.) (தெ. கல். தொ. 7, கல். 420)

சோணாடு ஓடம் : (மொ) (சோணாடு, ஓடம்)
ணா, ஓ— ணா, ஓ, . இவ்வாறு நெட்டெழுத்தின் வடிவிற்குரிய தாக கால் இட்டு எழுதும் முறை, கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதலாகத் தொண்டை நாட்டிலும் சோணாட்டின் வடக்குப்பகுதி யிலும் உள்ள கல்வெட்டுக்களில் காணப்படுகின்றது.

''*ஸ்ரீ ராஜராஜதேவர்க்கு யாண்டு 24வது சோணாட்டும் சோணாட் டுப்படும புறநாடுகளிலும*''

(தெ. கல். தொ. 3:1, கல். 9)

''*எமமூர் ஏரிக்கு வைத்த ஓடம்*''

(தெ. கல். தொ. 3:1, கல். 10)

சோதிவிளக்கு : (சம) இறைவழிபாட்டில் எடுத்து வலமிட்டுக் காட்டும் திரிவிளக்கு.

''*சிறுகாலை ஒரு சந்தி விளக்கு எரிக்க வைத்த பொன் கழஞ்சு-இது சோதிவிளக்கு*''
புதுக். கல். 39)

**சோபானம்:** (கலை) கற்படிக்கட்டு. தாழ்வாரபத்தி.

"பெருமாள் கோயிலில் அபிஷேக மண்டபத்துக்கு கீழைப் புலிமுக மான சோபானத்துக்கு வேண்டும் பொன்னிட்டு, கல்காரஞ் செய் வித்தான்..."

(கல்காறம்-கருங்கல் திருப்பணி)

(தெ. கல். தொ. 3:1, கல். 39)

**சோமனாதன் மரக்கால்:** (சம) விக்கிரம சோழன் ஆட்சியில் தென்பாண்டி நாட்டில் வழக்கிலிருந்த மரக்கால். ஆத்தூர் சோமநாத ஈஸ்வரர் கோயிலிலும் இம்மரக்கால் இருந்துளது.

"ஆட்டாண்டு தோறும் சோமனாதன் மரக்காலால் அளக்கக்கடவ நெல்லு எழுபதினை கலம்"

(தெ. கல். தொ. 14. கல். 191)

**சோமயாஜியார்:** (சமு) வேதாகமங்களை நிறைவாகக் கற்றுத் தெளிந்த பிராமணர், சோமயாகம் செய்த சிறப்பினால் சோம யாஜியார் என்ற சிறப்புப் பெயரினைப் பெறுவர்.

"சோமாசி குறுச்சியிது - ஸோமயாநமநோசுந்நாகிய காடக ஸோமாஜியார்க்கு ஏகபோக மதுவாக எழிற் செப்பேட்டோடு குடுத்தனன்"

(பராந்தக விரநாராயணன்-தளவர்ய்புரச் செப்பேடுகள்)

"அட்டாம்புறத்து உருத்திரகுமாரபட்ட சோமயாஜியார்"

(தெ. கல். தொ. 4, கல். 133)

"இவை, பசிண்டி ஸ்ரீகிருஷ்ணபட்டன் சோமயாஜி எழுத்து"

(தெ. கல். தொ. 5. கல்-739)

**சோழிய நாழி:** (சம) பாண்டிநாட்டுத் திருச்சுழியில் சுந்தரபாண்டிய ஈஸ்வரத்தில் இருந்த நெய் அளக்கும் அளவையின் பெயர்.

"நெய் சோழிய நாழியால், நெய் ஆழாக்கும் அட்டுவதாக"

(தெ. கல். தொ. 14, கல். 80)

**சோளமால் ஈஸ்வரம்:** (சம) சோழப் பெருமான் ஈஸ்வரம். தொண்டை மண்டலத்துள் திருவுறையூரிலுள்ள சிவன்கோயில்

**சோனகச் சிடுக்கின்கூடு :** (கலை) சோனகர் எனப்படும் அராபிய நாட்டு குதிரை வணிகர் வழியே தமிழக மக்களின் வழக்கில் இடம் பெற்ற காதணி வகைகளுள் ஒன்று. சோனகர் சிடுக்கு என்றும் பெயர் பெறும். அச்சோனகச் சிடுக்கே, இங்கு சோனகச் சிடுக்கின் கூடு என்று குறிக்கப்பட்டுளது.

(சிடுக்கு- கடுக்கன்; கூடு- கூடு போன்ற அமைப்புடைய கடுக்கண்.)

*''சோனகச் சிடுக்கின கூடு ஒன்றிற் கட்டின மாணிக்கம் ஒன்பதும், மரகதம ஒன்பதும உட்பட நிறை''*

(முதல் இராசராசன், தெ. கல். தொ. 2, கல். 93)

**சோனகவரி :** (அ) அராபிய நாடுகளிலிருந்து தமிழகத்திற்குக் கடல் வழி வாணிபம் நிகழ்த்தும் சோனகரிடம் பெறும் வரி.

(தெ. கல். தொ. 8, கல். 469. முதல் இராசராசன்)

**ஸ்தபநம் :** (சம) திருமுழுக்கு அபிஷேகம். இறைவன் திருமேனிக்கு அபிஷேகம் செய்யுங்கால், தேன், நெய், பால், தயிர், மஞ்சள் பொடி, வாசனைத் திரவியங்கள், ஏலம், சிறுசண்பகமொட்டு, விலாமிச்சைவேர் ஆகியவை திருமுழுக்கிற்குப் பயன்படுத்துவர்.

*''திருத்திண்டீஸ்வரமுடைய மஹாதேவற்கு ஸ்நபநம் நூற்றெட்டுக் கலசமாடியருளுவதுக்குத் தேன் நாழியும் நெய்நாழியும் பால் நாழியும் தயிா நாழியும்''*

(தெ. கல். தொ. 7, கல். 156, முதல் இராசராசன் கி.பி. 1003)

**ஸ்தூபித்தறி :** (சம) கோயில் விமானத்தின் தலைப்பில் கலசம் பொருத்தும் உலோகத்தாலான கம்பம்.

**ஸ்நபநத்ரவ்யங்கள் :** (சம) திருக்கோயில்களில் இறைவன் திருமுழுக்கிற்குரிய திருமஞ்சன நீரிலும் தண்ணீரிலும் இடும் மணப் பொருள்கள். இலாமிச்சை வேர், பெருஞ்சண்பகமொட்டு, ஏலக்காய் முதலியன,

*''ஸ்ரீராஜராஜீஸ்வரமுடையார் ஆடியருளுந் திருமஞ்சன நீரிலுந் தணணீர் மீதிலு மிட பெருஞ்சண்பகமொட்டுக்கும் ஏலவரிசிக்கும் இலாமச்சத்துக்கும் வேண்டும் நிவந்தத்துக்கு''*

(தெ. கல். தொ 2:1, கல். 24)

**ஸ்நபந மண்டபம் :** (சம) தெய்வ மூர்த்தங்கள் நீராட்டு மண்டபம். (ஸ்நாந - ஸ்நபந)

**ஸ்வஸ்திஸ்ரீ :** (வ) சாசனங்களின் தொடக்கத்தில் மங்கலமாக வரும் வடமொழித் தொடர். ''*ஸ்வஸ்தி*'' என்றும் சில சாசனங்களில் பொறிக்கப்பட்டுள்ளது. ஸ்வஸ்தி - ''*மங்கலம் உண்டாகுக*'' என்னும், 'நலம் வளர்க' என்பதும் இதன் பொருள்.

''*ஸ்வஸ்தி ஸ்ரீ- திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்-*''

(முதல் இராசராசன் மெய்க்கீர்த்தி)

**ஸ்வஸ்தி சொல்லி ஸேவித்தும் :** (சம) மங்கள வாழ்த்து சொல்லித் தொழுதும்.

''*குலோத்துங்கச் சோழன் திருத்தோப்பில் எழுந்தருளினால் ஸ்வஸ்தி சொல்லி ஸேவித்தும்*''

(சிதம்பரம் கல்வெட்டு, தெ. கல். தொ. 8, கல். 43)

**ஸங்கிரமம் :** (வ) கதிரவன் ஒரு இராசியிலிருந்து அடுத்த இராசியிற் செல்லும் காலம். தமிழ்த் திங்களின் முதல்நாள்.

''*ஸங்கிரமம் ஒன்றுக்கு இலாமிச்சம் ஒருபலவரையாக ஸங்கிரமம் பன்னிரண்டுக்கு*''

(தெ. கல். தொ. 2:1, கல். 24)

**ஸஸிகுல சளிக்கி :** (அ) சந்திரகுலத்தில் தோன்றிய சளுக்கியன் (சளிக்கி - சளுக்கி) இக்குலத்தவராய சளுக்கியப் பிரிவினர்களே யாதவராயராவர்.

''*தக்கோலமான குலோத்துங்க சோழபுரத்து ஆளுடையார் திரு வூறலுடைய நாயனார்க்கு ஸஸிகுல சளிக்கி திருக்காளத்திதேவ நான யாதவராயனேன்*''

(முதற்குலோத்துங்கன், கி.பி. 1087)

(தெ. கல். தொ. 5, கல். 1379)

**ஸ்த்யாச்ரயன் :** (அ) மேலைச்சாளுக்கிய மன்னன். முதல் இராச ராசன் இவனை வெற்றி கண்டுள்ளான்.

''*ஸ்த்யாச்ரயனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீபாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுதன*''

(த. பெ. கோ. கல்வெட்டு)

**ஸப்ரயோகம் :** (பொ) உயர்ரக வயிரங்களுள் ஒன்று.

*''இதில் நடுவுகட்டின ஸப்ரயோகம்' ஒன்றினால்''*

(தெ. கல். தொ. 5, கல். 520)

**ஸாபநியோகம் :** (அ) கிராமசபையார் இடும் கட்டளை, செய்யும் முறைமைகள்.

**ஸபைஸ்ரீமுகம் :** (அ) கிராமசபையார் முடிவு செய்த செய்தியை உரியவருக்கு எழுதியனுப்பும் ஓலை.

*''பணிப்பணியால் படுத்தி பணித்து ஸபைஸ்ரீமுகம் இட்ட பரிசாவது''*

(தெ. கல். தொ. 7, கல். 34)

**ஸம்ஹரிக்கிற :** (மொ) விரும்பிய வாறு அனுபவிக்கிற, செலவழிக்கின்ற.

*''திருமுகம் உள்வரியும் பெற்று எங்களில் ஸம்ஹரிக்கிற இடத்து''*

(தெ. கல். தொ. 17, கல். 244)

**ஸம்ஹாரம் பண்ணிச் சதுரங்கட்டின பதினறு சாண்கோல் :** (அ) இப்பெயரமைந்த நிலமளக்கும் கோல், முதற் குலோத்துங்கன் ஆட்சியில், வடதொண்டை மண்டலத்தில் வழக்கிலிருந்த கோலாகும்.

*''நான்கெல்லை அகத்துப்பட்ட நிலம் ஸம்ஹாரம் பண்ணிச் சதுரங் கட்டின பதிநறு சாண்கோலால் அளந்த நிலம்''*

(கத. கல். தொ. 7, கல். 542)

**ஸமஸ்த பிறாத்திகள் :** (வ) எல்லா வருவாய்கள், அனைத்து வருவாய்கட்கமைந்த இடங்கள். பிறாப்திகள்—போகங்கள்.

*''ஆக இசைந்த பெருநான் கெல்லைக்குட்பட்ட குளமிரண்டும் குளப் பருப்பும், நீர்கோவையும், நீர்நிலமும், புன்செய், கருஞ்செய்களும், நத்தமும், நத்தப்பாலும், களருந்திடலும் மேனோக்கின மரமும், கீழ் நோக்கின கிணறும், மீன் படுபள்ளமும், தென்படு பொதும்பும், புற்றுந்தெற்றியும், ஆமைதவழியும, உடும்போடியும், சுடுகாடும், படித்துறைகளும், இவ்வூர்க்குப் போகிற சிறுவழி பெருவழிகளும், இப்பற்றில் ஏாடும், ஓடைகளும், வெள்ளமும், வெள்ளச் சாய்வும், இக்குளத்தில் நீர்வாரிகளும், நீர்கோவைகளும் மற்றும் எப்பேர்ப் பட்ட ஸமத்தபிறாப்திகளும்''*

(தெ கல், தொ. 5, கல். 303)

**ஸாஸ்வதீகமாக :** (வ) நிலையான அனுபோகமாக.

*"நாங்கள் ஸாஸ்வதீகமாக இறையிலி செய்து குடுத்த நிலமாவது"*

(தெ. கல். தொ. 5, கல். 702)

**ஜகதிப்படை :** (கலை) கற்றளிகளின் அடிப்படையிலிருந்து பீட வரிசையாகத் தொடர்ந்து எழும் சிற்ப அடுக்குகளில் பலகை முகப் பாக அமையும் பகுதி ஜகதிப்படையாகும்

*"யாண்டு இருபத்தைஞ்சாவதும் யாண்டு இருபத்தாறுவதும் இந்த ஜகதிப்படையில் இதனுககு முன் கிழக்கடைய கல்லில் வெட்டிந"*

(தெ. கல். தொ. 2, கல். 1. தஞ்சைப் பெரிய கோயில்.)

**ஜயங்கொண்ட சோழமண்டலம் :** (அ) தொண்டை மண்டலத்தை முதல் இராசராசன் வென்ற பிறகு அதற்கு இட்ட பெயர். ஜயங் கொண்ட சோழன் என்பது இராசராசன் விருதுப் பெயர்களுள் ஒன்றாகும்.

**ஜயசிங்க குலகால வளநாடு :** (அ) இது வட சிறுவாயில் நாடு, குலமங்கலம் நாடு தென்மீபொழில்நாடு, தென்கவர்நாடு முதலிய பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது

புதுக்கோட்டை மாவட்டத்தில் ஆலங்குடி வட்டத்திற்குட்பட்ட வராப்பூர், குளத்தூர் வட்டம், திருவேங்கை வாசல், கீரனூர் ஆகிய ஊர்கள் இவ்வளநாட்டின் பகுதிகளாகும்.

(புதுக்கோட்டை கல்வெட்டுத் தொகுதி)

**ஜயஸ்தம்பம் :** (அ) வெற்றிக்கற்றூண். பகைவர் நாட்டை வென்று அரசன், தன் வெற்றிக்கு இலச்சினையாக, அந்நாட்டில் தன் வீரச் செயல்களை அரச முத்திரையுடன் பொறித்து நிறுத்தும் கல்தூண்.

*"கம்பிலிசுட்டுக் கரடிக் கல்லில் ஜயஸ்தம்பம் நாட்டி"*

(வீரராசேந்திரசோழன் - தெ. கல். தொ. 4, கல். 339)

**ஜீவிதம் :** (சமு) வாழ்க்கைக்குரிய வருவாய், குடியிருப்புமனை, உணவுக்குரிய நிலம், ஆடைக்குரியகாசு ஆகியவை மக்கள் வாழ்க்கைக்கமைந்த தேவைகளாதலின், இம்மூன்றும் பெறுதல் சீவிதம் எனப்பெறும்,

*''ஸ்ரீபலிகொட்டும் உவச்சன் அரையனுக்கும் மக்களுக்கும் வைத்த ஜீவிதம் ஆண்டுவரை நாற்கழஞ்சு பொன்னும, மூன்றொக்கு நிலமும், மனையும தோட்டமும்''*

(தெ. கல். தொ, 19. கல்-28. உத்தமசோழன்)

*''இவர் பிதாக்கள் அப்பாட்டன் மழவராயருக்கு ஜீவிதமாய்ப் பினபு இவர்க்கு மண்டல முதன்மைக்கு ஜீவிதமாய் வருகிற நிலம''*

(தெ. கல். தொ. 5. கல்-431.)

**ஜீவிதமுடைய :** (சமு) வாழ்கின்ற. ஊரில் நிலையாக வாழ்ந்து வருகின்ற.

*''இவ்வூர் ஜீவிதமுடைய ஸேநாபதிகள் ஜயங்கொண்ட சோழ பிர்மாத்ராஜா''*

(தெ. கல். தொ. 3:1, கல். 30)

**ஜேஷ்டை கோஇல் :** (சம) ஜேஷ்டாதேவிக் கோயில். ஜேஷ்டை-மூத்தவள். திருமகளுக்கு முன்பிறந்த மூத்ததேவி. 'தவ்வை' என்பர் திருவள்ளுவர்.

*''நக்கந் கொற்றியாற் செய்யப்பட்டது துர்காதேவி கோஇலுஞ் ஜேஷ்டை கோஇலும்''*

(தெ. கல். தொ. 14, கல். 3

**க்ஷத்திரிய சிகாமணி வளநாடு :** (அ) தஞ்சாவூர் மாவட்டத்தில், அரசிலாற்றுக்கும், குடமுருட்டி ஆற்றுக்கும் இடைப்பட்ட நிலப் பரப்பாகும். இது வடகடுவை நாடு என்றும் பெயர்பெறும். இவ்வளநாடு சோழர் காலத்தில்.

அளநாடு, திருநறையூர், இன்கண்நாடு, (எண்கண்) மருகல் நாடு, தேவூர்நாடு, முறையூர் நாடு பனையூர் நாடு, விளநாடு, பட்டினக் கூற்றம், சேற்றூர் கூற்றம், திருவாரூர்க் கூற்றம் என்னும் பதினோரு பிரிவுகளாகப் பட்டிருந்தது.

முதல் குலோத்துங்கன் ஆட்சியில் குலோத்துங்க சோழ வளநாடு என்னும் பெயர் அமைந்தது.

**க்ஷேத்திரங்கள் :** (சம) குடியிருப்பு, குடியிருப்பு அல்லாத மனைகள்

*''காலிங்கராயன் கொண்டு விட்ட க்ஷேத்திரங்கள் கீழைத் தெருவில் கீழ்சிறகில் வடக்கடையமனை இரண்டே''*

(தெ. கல். தொ. 7, கல். 49)

**க்ஷேத்திரபால தேவர் :** (சம) கோயிலுக்குரிய இறைவனை, சிற்பநூல் விதிப்படி உலோகச் சிலையாகச் செய்தமைக்கும் திருமேனி-க்ஷேத்திரபாலதேவர் ஆவர். விநாயகர் என்றும் பைரவர் என்றும் சிலர் கூறுவர்; கல்வெட்டுச் சான்றுகள் இதற்குப் பொருந்தியதாக இல்லை.

*'நம்பிராட்டியார உலகமாதேவியார் வைத்த க்ஷேத்ரபால தேவற்கும் கணபதியாற்கும தேவதாநம்''.*

(முதல் ராஜராஜன், கி.பி. 1001, தெ. கல். தொ. 8, கல் 223)

**தக்கணலாடம் :** (அ) தென் விராட தேசம்: பீகார் தேசம். பாண்டவரின் மனைவி திரௌபதி பிறந்த தேசம்; முதல் இராசேந்திரன் வென்ற நாடுகளுள் ஒன்று.

*''திக்கணை கீர்த்தி தக்கண லாடமும்''*

(முதல் இராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**தகட்டுப் பொன் :** (கலை) தகடாக வடிக்கப்பட்ட பொன். இதனைப் பொன் ரேக்கு என்பர். பொன்னணிகளில் ஒப்பனை மிகுமாறும் தோற்றப் பொலிவூட்டவும் வேண்டிய வடிவில் பொருத்தப்பெறும் பொற்றகடு.

*''முடிஒன்றில் -கட்டின தகட்டுப் பொன் முக்கழஞ்சும்''*

(தெ. கல். தொ 5, கல். 521)

**தச்சக்காணி :** (அ) தச்சர்கட்குரிய காணியாட்சி நிலம்.

*''இவ்வூர்த்தச்சக்காணி செம்பாதியுடைய தச்சன் வடுகனாதன் திருவாய்க் குலமான் தொண்டைனாட்டாசாரியநேன்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 35)

**தச்சவாசாரியன் :** (கலை) கருங்கல்லில் தொழில் செய்யும் ஆசாரியன். கோயில்களில் இவர்களிலொருவனுக்கு நிவந்தமிட்டு வைப்பது வழக்கு.

*''ஸ்தானத்தார் அருளிச் செய்ய இவ்வெழுத்து வெட்டிநேந் இக் கோயிலில் தச்சவாசாரியந் மழுவாடி வீர நாந கொட்டையூர் ஆசாரிநேந்''*

(தெ. கல். தொ. 5, கல். 642)

**தச்சுத்தேவை :** (அ) கிராமப் பணிக்காக காணியாட்சி பெற்றிருக்கும் தச்சர்களிடம் தனியார் வேலை பெறுவதற்கு இறுக்கும் வரி.

**தஞ்சாவூர் உடையார் பண்டாரம் :** (அ) பாண்டிய குலாசனி வள நாட்டு தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூரைத் தலைநகராகக் கொண்டு சோழமண்டலத்தைக் கி.பி. 985—1014 வரையில் பெரும் புகழோடு ஆட்சி செய்த இராசகேசரி முதல் இராசராசன் பெயரால் அமைந்த பண்டாரம் (கருவூலம்). உடையார் - அரசருக்குரிய மரியாதைச் சொல். முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டுக்களில் இவ்வாறே குறிப்பிடப்பட்டுள்ளன.

*''தஞ்சாவூர் உடையார் பெரும் பண்டாரத்தே ஆட்டை வட்டம் காசு ஒன்றுக்கு முக்குறுனி''*

(தெ. கல். தொ. 2:2, கல். 35)

*''ஆக இப்படி உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவாய் மொழிந்தருளினபடி கல்லில் வெட்டியது''*

(தெ. கல். தொ. II, கல். 65)

**தட்டழி :** (சம) ஒருமுகத்தோற்பறை. தம்பட்டம். வரிவகையுள் இதுவுமொன்று. சோழராட்சியில் கிராமசபை கூடுவதற்குரிய நாளினைத் தட்டழிகொட்டி ஊரவர்க்கு அறிவிப்பர்.

*''காமரசவல்லி சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குறி மக்களோம். இவ்வாட்டை தனுநாயற்று வியாழக்கிழமை பெற்ற கார்த்திகை நான்று தட்டழி கொட்டி பெருங்குறி சாற்றி மண்டபத்தே கூட்டி''*

(தெ. கல். தொ. 19, கல். 231, உத்தமசோழன் யாண்டு.9)

**தட்டழிகொட்டிகள் :** (சம) தட்டழி என்ற பெயரமைந்த தப்பட்டை எனும் தோற் கருவியினை இசைப்பவர்கள். இவர்கள் உவச்சு என்னும் கோயில் பணிக்கு உட்பட்டவராவர்.

*''திருவோணம் பெருவிழாவாக எழு நாளும் நிசதி நூறு விளக்கும் பதினாறாள் தட்டழி கொட்டிகளையும் கொண்டு செய்வித்து ஸ்நபன மாட்டு வித்து''*

(கம்பவர்மன் கல்வெட்டு, தெ. கல். தொ. 7, கல். 421)

**தட்டார்ப்பாட்டம்** : (அ) பொற்கொல்லர் பட்டறை அமைத்துக் கம்மத் தொழில் செய்வதற்கு ஆண்டொன்றிற்கமைந்த வரித் தொகையைப் பங்கீடாகச் செலுத்துவது.

*''இனவரி, தறியிறை, தட்டார்பாட்டம் எப்பேற்பட்ட வரிகளும்''*

(தெ. கல். தொ.8, கல். 169)

*''கொல்லன் ஊதுகின்ற உலைகளில் உலை ஒன்றுக்குக் கொள்ளும் காசு மூன்றாக''*

(புதுக்கோட்டை கல்வெட்டுத்தொகுதி, கல். 427)

**தட்டாரக்காணி** : (அ) சோழர்காலத்தில், கோயில்களில் அணிகலன்கள் செய்வதற்கென்று அமைக்கப்பட்ட பொன் தட்டானுக்குரியதாகக் கொடுக்கப்பட்ட இறையிலி நிலம்.

*''உலோக மாதேவீச்சரத்து தட்டாரப்பணி செய் காணி தட்டான் சக்கடி சமுதையனான செம்பியன் மாதேவிப் பெருந்தட்டான்''*

(தெ. கல். தொ. 5, கல். 515)

**தட்டொலி** : (அ) கம்மாளர், கொல்லர் போன்றோர் பட்டறை அமைத்துத் தொழில் செய்வதற்கு இறுக்கும் வரி.

**தடவிக்கட்டின கல்** (கலை) சாணையில் பட்டையிட்டுப் பொன்னணியில் வைத்துப் பதித்த, தளம் என்னும் பெயரிலமைந்த வயிரவகைக் கல்.

*''திருமாலையில்-தடவிக்கட்டின கல்லு''*

(தெ. கல். தொ. 23, கல். 46.)

**தடவிக்கட்டின பளிங்கு** : (கலை) பட்டைதீட்டி, பொன்னில் கட்டின பளிங்கு வயிரக்கல். பளிங்கு-வயிரவகையில், தளம் என்ற பெயரிலமைந்த வெள்ளிய நீரோட்டமுள்ள கல்லாகும். எனவே தான், பட்டை தீட்டி ஒளிரச் செய்து அணிகலன்களில் பதிக்கச் செய்வர். இதனை வயிரக்கல் என்றும் கூறுவர்.

*''தடவிக்கட்டின பளிங்கு பதினெட்டினால் நிறை நாலு மஞ்சாடியும் குன்றியும்''*

(தெ. கல். தொ. II. கல். 3.)

**தடிக்கு நிலன்** : (வே) அகன்ற விளை நிலத்தைப் பல துண்டங்களாக வகுத்து வரப்பிட்டுப் பிரித்த நிலம்.

÷ இக்குறி வகுத்துப்பிரித்த என்னும் பொருளைத் தருவ தாகும். பாகுபடுத்திய, பிரிவாகச் செய்த.

*''நீர் அட்டு நெல்விளைவது கீழ்புலச் செய்தடி ÷ நிலன் ஏற்றித் தடி ஒன்பது''*

வகுத்தல் அடையாளம் வரப்பிட்டுப் பிரித்தலை உணர்த்தும். (தெ. கல். தொ. 14, கல். 41, 44.)

**தடிகைபாடி :** (அ) கங்கபாடிக்கும் நுளம்பபாடிக்கும் இடையில் உள்ள சிறு நாடு. முதல் இராசராசன் வென்ற நாடுகளுள் ஒன்று.

*''தடிகைபாடியும் நுளம்பபாடியும்''*

(முதல் இராசராசன் - மெய்க்கீர்த்தி)

**தடிவழிவாரியம் :** (வே) வயல்களுக்கு இடையே செல்லும் வரப்புப் பாதை, நடைவழி ஆகியவற்றை மேற்பார்வை செய்வதுடன் பிற ஊர்களுக்குச் செல்லும் வயல் வழிப்பாதைகளை அளந்து குறித்து அனுமதியளிக்கும் உரிமையும் பெற்ற குழுவினர்.

*''அவநி நாராயணச் சதுர்வேதி மங்கலத்துள்-கலிங்குவாரியப் பெருமக்களும், தடிவழிவாரியப்பெருமக்களும்-கூடியிருக்க''*

(தெ கல். தொ. 3:3, கல். 156)

**தண்டக்குற்றம் :** (அ) தண்டனைக்குரிய குற்றம். குற்றவாளிகளை நீதி மன்றில் விசாரணை செய்து, குற்றத்திற்கேற்ப தண்டித்துப் பெறும் காசு.

*''குற்றம் செய்தாரைக் கொள்ளும் தண்டமும''*

(தெ. கல். தொ. 8, கல். 469)

**தண்டநாயக்கன் :** (அ) படைத்தலைவன், சேனாதிபதி. தண்டு படை.

*''ஆகவமல்லன் - தண்டநாயகன் தார்க்கேத்தரையன் திண்டிறல் மாரயன் சினப்போத்தரையன் - என்று அநேக சாமந்தர்''*

(வீரராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**தண்டபுத்தி :** (அ) பீகார் தேசம். முதல் இராசேந்திரன் வடநாட்டுப் படையெடுப்பில் வென்ற நாடுகளில் ஒன்று. இந்நாடு ஒட்டர

தேசத்துக்கும் வங்காளத்துக்கும் நடுவில் சுவர்ணரேகை ஆற்றுக்கு இருகரையிலும் உள்ள நாடு.

*"தன்ம பாலனை வெம்முனையழித்து, வண்டுறை சோலை தண்ட புத்தியும்"*

(முதல் இராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**தண்டல் :** (அ) இறைவரி வகைகளில் பிழை செய்த குற்றவாளிகட்குரிய தண்டனையை நிறைவேற்றும் சிறைச்சாலை. நீதிமன்றம் வழங்கிய தண்டனையை நிறைவேற்றும் இடம்.

*"எங்களைப்புணைத்து இனனாள் வரையும் வல்லத்துத் தண்டலில் வைத்து நாங்கள் நெடுநாள்பட கிடந்து மிறுக்குப்படுகையில்"*

(வல்லத்திலுள்ள சிறைச்சாலை) (தெ. கல். தொ. 12, கல். 224)

**தண்டல் நாயகம் :** (அ) அரசுக்குரிய இறைவரி முதலிய வருவாய்களை உரிய முறைகளில் நாட்டில் வசூல் செய்யும் குழுவினர்க்குத் தலைமையதிகாரி. இவர்கட்கென்று பாதுகாப்புப்படையொன்றும் நிறுவப்பட்டிருந்தது.

*"இலைப்புணைப்பட்ட கைரைப்படையிலார்கட்கு தண்டல் நாயகம்"*

(முதற்குலோத்துங்கன், கி.பி. 1079, தெ. கல். தொ. 5, கல். 990)

**தண்டலில் கடமை :** (அ) அதிகாரிகள் வசூல் செய்யாமல் மக்கள் தாமே செலுத்தும் வரி. (அந்தராயம்)

**தண்டவந்தார் :** (அ) வசூல் செய்ய வந்தவர்கள்.

*"இந்நெல் தண்டவந்தார்க்கு மெய்கண்டு சோறிடுவதாகவும்"*

(தெ. கல். தொ. 4, கல். 867)

**தண்டவாணி :** (அ) மாற்றில் குறைந்ததினால் குற்றம் பெறும் வாணிபத்திற்குரிய பொன். இதனை

*"தண்டவாணிக்குக் கால் மாற்றுத் தண்ணிய பொன்"*

என்னும் தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுப்பகுதியால் அறியலாகும். வாணி-வாணிபம்.

(தண்ணிய - மாற்றுக் குறைந்த)

(தெ. கல். தொ. 2, கல். 3.)

**தண்டவாணிகம் :** (அ) தண்டம் பெறுவதற்கான பொருள் வியாபாரம். தூய்மையில்லாமல் குற்றப்படும் பொருளை விற்கும் வாணிகம்.

**தண்டி :** (மொ) (தண்டல், தண்டுதல்) வசூலித்து.

*''இந்நெய் தண்டி அட்டுவித்தானடி என்றலை மேலன''*

(தெ. கல். தொ. 19. கல். 344.)

**தண்டிக்கொள்ளல் :** (அ) வசூலித்துக் கொள்ளல். ஊர்ச்சபையாரோ, உரிமைபெற்றவரோ நேரில் பொருளை வசூலித்துக்கொள்ளல் என்னும் பொருளில் அமைந்துளது.

**தண்ணிய பொன் :** (வா) மாற்றிற்குறைந்த பொன்.

*''பண்டாரத்துப் பொன்கொடு செய்த திருப்பட்டிகை ஒன்று தண்டவாணிக்குக் கால்மாற்றுத் தண்ணிய பொன் பதின்கழஞ்சே முக்காலே மஞ்சாடியும்''*

(தெ கல். தொ. 2. கல். 59.)

**தண்ணீர் அட்டுவார் :** (வே) தண்ணீர் அட்டுபவர். அதாவது கொடுப்பவர். தண்ணீர் முகந்துவந்து உரிய இடங்களிலமைந்த கலங்களை நிரப்புபவர்.

*''ஸ்ரீ ராஜராஜன் தண்ணீர் அட்டு வார்க்கு நிசதம் நெல்உ குறுணி''*

(தெ. கல். தொ. 3:1, கல். 4)

**தண்ணீர் கால் :** (வ) வழிப்போக்கர்கள் தண்ணீர்யேற்றுக் குடிப்பதற்த உதவியாக அமைக்கப்படும் நீண்ட குழல் மரம். இது மூங்கினால் அமைக்கப்படும்.

**தந்திவர்மன் :** (அ) தந்திவர்ம பல்லவன், இப்பல்லவ மன்னனின் விருதுகள், பல்லவர் அந்தணரைப் போன்று கோத்திர சூத்திர முடையவர் என்பதனைப் புலப்படுத்துகின்றது. (இம் மன்னனின் ஆட்சிக்காலம்-கி.பி 775-826.)

*''ஸ்ரீ பல்லவகுல திலத, பாரத்வாஜ கோத்ராலங்காரபதியாகிய ஸ்ரீ தந்திவர்ம மஹாராஜற்கு''*

(கல்வெட்டுத்துறை அறிக்கை-தொ. 8, கல். 29)

**தந்ம கட்டளை :** (வ) தர்ம கட்டளை, தர்மஞ் செய்வித்தற்காம் ஆணை. நீதிமன்றத்தார் இடும் ஆணை. தர்மகட்டளை என்ற பெயரால், தொண்டை மண்டலம், ஈக்காட்டுக் கோட்டம்

காக்கலூர் நாட்டு பெருமுளையூர் சபையாரிடம் இருந்த பொன் நிறுத்தல் அளவைக்கல்.

*''காக்கலூர் நாட்டு பெருமுளையூர் சபையார் கொண்ட தந்ம கட்டளையால் பொன் ளஅ''.*

(தெ. கல். தொ. 12, கல். 64)

*''தந்ம கட்டளைக் கல்லால் துளை நிறை கொண்ட பொன்''.*

(தெ கல். தொ.17, கல். 297)

**தந்மகட்டளைக்கல் :** (வ) தர்மகட்டளைக்கல், பொன்னை எடையிடும் நிறைகல். திருநாகேசுவரம் கோயிலில் முதல் இராசேந்திரன் ஆட்சியில் வழக்கிலிருந்த நிறைகல்லின் பெயர்.

*''பொற்பூ ஏழினால் தந்மகட்டளைக்கல்லால் பொந்பந்நிரு கழஞ்சே முக்கால்''*

(தெ. கல். தொ. 6. கல் 33)

**தபஸ்யர் :** (சம) தவவொழுக்கமுடைய சைவத்துறவியர்.

*''ஐப்பசி பரணி (சுவாமி) எழுந்தருளுமன்று தேவரடியாரையும் தபஸ்யரையும் மத்யாந ஸந்தி அமுது செய்விக்கப் பொலியூட்டாகக் கொண்ட பழங்காசு''*

(தெ. கல். தொ. 8, கல். 40)

*''இத்தேவர் சித்திரைத் திருநாள் ஒன்பது நாளும் பிராமணரும் சிவயோகிகளும் தபஸ்யரும் உண்ண''*

(தெ. கல். தொ. 17, கல். 442. முதல் இராசராசன், கி.பி. 1001.)

**தம்நியமத்து இயற்றி :** (வ) தம் முன்னோரின் ஆட்சி நெறிப்படியே அரசேற்று நடத்தி.

*''கங்காபுரி புரிந்தருளி ஏராதிபராசுத் தம் நியமத்தியற்றி''*

(வீரராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**தம்பரிசுடையார்க்கு இரந்து :** (வ) தம்மைப் போலவே சிவனது வழித்தொண்டு செய்யும் அடியார்கட்கு அன்னப் பிச்சை பெற்று.

*''உடையார் தம் பரிசு உடையார்க்கு இரந்து இட்டு''*

(தெ. கல். தொ. 8, கல். 200)

**தம்பிரானார் திருப்பாட்டு :** (மொ) தம்பிரான் தோழர் என்ற சிறப்புப் பெயர் பெற்ற சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய தேவாரப் பதிகங்கள்.

*''தம்பிரானார் திருப்பாட்டு ஓதும் மஹாதேவர்க்கு காணி மடப்புற இறையிலி''*

(தெ. கல். தொ. 7, கல். 106)

**தமப்பன் :** (வ) தம் அப்பன், தன்னுடைய தந்தை.

*''இவன் அடைகுடி இவன் தமப்பன் சத்துரு மழபாடியும்''*

*''இவன் தமப்பன் புகழன் சூற்றியும்''*

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு, தெ. கல். தொ. 2, கல். 63, 94)

**தமனகம் :** (பொ) மருக்கொழுந்து, மணமுள்ள கொழுந்து. சாம்பல் நிறமான வெளிர் பச்சைக் கொழுந்து. இம்மணப் பயிரைப் பயிரிட்டு வளர்ப்பதற்கு அரசு வரி பெறுதலுண்டு.

*''தமனகமும் மருவும் இருவேலியும்-இடவும் பெறுவதாகவும்''*

(பெரிய ஆனைமங்கலச் செப்பேடுகள்)

*''திருநாவுக்கரசென்று பேர் கூவப்பட்ட தமனகத் திரு நந்தவனத்துக்கு நந்தவனப்புறமாக''*

(தெ. கல். தொ. 17, கல். 598)

**தமிழ்ப்பரணிகொண்டோன் :** (அ) முதல் இராசாதிராசன் ஆட்சி யாண்டு கி.பி. 1042 - 1052. இச்சோழமன்னன் முதல் இராச ராசனின் பெயரன் ஆவான். இவன், பாண்டியநாடு, சேரநாடு, மேலைச்சாளுக்கிய நாடு, இலங்கை ஆகிய நாடுகளை வென்றுள்ளான். எனவே இவனது பெருங்கீர்த்தியை அக்காலப் புலவர் பரணி என்னும் தமிழ்ப் பிரபந்தமாகவும் பாடியுள்ளார் என்பது புலனாகின்றது.

*''தன் நாடையிற் றமிழ்ப்பரணி கொண்டோன்''*

(தெ. கல். தொ. 5, கல். 607)

**தமிழவேள் :** (அ) வீரபாண்டியன் ஆட்சியில் அமைச்சனாகவும், சேனைத்தலைவனாகவும், புலமை நிரம்பிய கல்விமானாகவும் இருந்தவன். காஞ்சியைப் பிறப்பிடமாகக் கொண்டவன்.

*"தண்டமிழோடாரியநூல் வல்ல தமிழவேள்"*

*"கச்சி முதூர்க் காமக் கிழவோர் படுவண்கீர்த்தி மரபுளான்"*

(தெ. கல். தொ. 14, கல். 87)

**தயித்திரியக் கிடைப் புறம் :** (சம) நான்கு வேதங்களின் ஒரு பிரிவாகிய தயித்திரியத்தினை மாணாக்கர்கட்கு ஓதுவிக்கும் வேதபாடசாலைக்கு விடப்பெற்ற இறையிலி நிலம்.
தைத்திரியம் வேதம் நான்கினுக்கும் அமைந்த பிற பெயர்களுள் ஒன்றாம் என்பதனை,

*"நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையான் 'நான் மறை' என்றார். அவை தைத்திரியமும் பௌடிகமும் தலவகாரமும் சாம வேதமுமாம். இனி, இருக்கும் யசுவும் சாமமும் அதர்வணமும் என்பாரும் உளர்"*

என்று தொல்காப்பியம் சிறப்புப்பாயிர உரையில் நச்சினார்க்கினியர் விளக்கம் தந்துள்ளார் கிடை-அகரத்தில் நிலையாக அமைக்கப்பட்டிருக்கும் வேதபாடசாலை.
(உத்தரமேரூர் கல்வெட்டு)

**தயித்திரியம் :** (சம) தைத்திரியம். ஆரிய இருடிகளால் செய்யப்பட்ட உபநிடதம் 108 ஆகும். 108—உபநிடதங்களின் திரண்ட பொருளை 11—உபநிடதங்கள் ஏற்றுள்ளன. அவை, அதார பூர்வர், கடகர், பிரஸ்நரர், முண்டகர், மாண்டூக்யர், தைக்ரியர், பிருகதாரணியகர், காண்டோக்யர், ஈசாவாஸ்யர், கேனர், ஆயிரத்ரேயர் என்னும் இருடிகளால் இயற்றப்பட்டவைகளாகும். அவைகளுள் தைத்ரியரால் செய்யப்பட்ட பெருநூல் தயித்திரியமாகும்.

**தர்ம்மியூதி பெருங்குறி கொட்டி :** (வ) கிராமமகாசபை கூடும் நாளினை ஊராரும் உறுப்பினரும் வாரியத்தாரும் முன்னதாகவே அறிந்து கொள்வதற்கு அறிகுறியாகக் காளம் ஊதியும், முரசு கொட்டியும் அறிவிப்பதை இத்தொடர் குறிக்கின்றது.

*"ஸ்ரீகுலோத்துங்க சோழவிண்ணகராழ்வார் கோயிலில் முந்பில் மாவிந் கீழேய் தர்ம்மியூதி பெருங்குறி கொட்டிக் கூட்டங் குறைவறக் கூடியிருந்து மஹாசபை வியவஸ்தை பண்ணினபடி"*

(தெ. கல் தொ. 6, கல். 57)

**தர்மவாரியப் பெருமக்கள் :** (அ) ஊர்ச்சபையுள்ளடங்கிய வாரியக் குழுவினருள் வயதும் கல்வியும் அனுபவமும் மிக்காரமைந்த

*"சம்வத்சரவாரியம்"* தர்மவாரியம் என்று பெயர் பெறும். இவ் வாரியம் சிறப்பாக நீதி விசாரணை செய்வதால் தர்மவாரிய மென்று பெயர் பெற்றது.

(முதல் இரரசராசன், 1002, தொ. 3, பகு. 1, கல். 6)

**தர்மாசனம் ;** (அ) கிராமசபையின் உட்பிரிவுகளில் தலைமைக்குழு வாகிய நீதி விசாரணைக்குழு. இக்குழு சம்வத்சரவாரியம் என்று பெயர்பெறும்.

*"இதில் திறம்பில் பன்மாகேசுவரரே தர்மாசனத்து நூற்றெட்டுக் காணம் தண்டமிட்டும்"*

(தெ. கல். தொ. 4, கல். 534)

**தரகு :** (அ) மதிப்புடைய பொருள்களை விலையுறுதி செய்து விற்றுத் தரும் தரகரிடம் அரசு பெறும் வரி. விற்பனைக்குரிய பொருளை விலைபேசி விற்றுக் கொடுக்கும் ஆள் இருவரிடமும் பெறும் ஊதியம்.

*"இக்கூறைத் தரகு ஆயத்தில் முதலாய் வரும்காசு தேவர் பெறுவாராகவும்"*

(தெ. கல். தொ. 17. கல். 452.)

**தரம்எழுதிப்புகுதல் :** (வ) நிலத்தின் மண் தரமும் அதன் விளைவுத் தரமும் மதிப்பிட்டு ஊர்க்கணக்கில் பதிவித்தல்.

*"தரமெழுதிப் புகுந்தால் தரவொபாதியால் வந்த நெல்லு நில வொபாதிக்கு ஏறுமாகில் இறைகாட்டாக்கிக் கொள்ளுவது"*

(தெ. கல். தொ. 17, கல். 597, குலோத்துங்கன் 2, கி.பி.1144)

**தரப்பெற்ற நீர்நிலம் :** (வே) மண் வளத்தாலும் பாசனத்தாலும் முதல் தரம் பெற்ற நெல்விளையும் நிலம்.

*"திருநீற்றுச் சோழ நல்லூர் தரம் பெற்ற நீர்நிலம் நாற்பத்து ஒன்பதிற்று வேலியும்"*

(தெ. கல். தொ. 7, கல். 816)

**தரமிலி நிலம் :** (வே) நன்செய்யின் முழுத்தரம் பெறாத நிலங்கள்.

*"தரமிலியாய் ஒழுகல் மாட்டெறிந்து வருகிற குளங்கள் உள்ளிட்ட தரமிலி நிலத்து பல பேரிலும் தரம் பூட்டி"*

(தெ. கல். தொ. 8, கல். 206)

**தரவு** ; (வ) வரவு செய்ததற்குரியதாகப் பெறும் பற்றுச் சீட்டு.

*''இவ்வாண்டு கார்முதல் கடமை இறுக்ம்கு இடத்து-இவர் கையால் தரவு கொள்வோமாகவும்''*

(தெ. கல். தொ. 5, கல். 215)

*''கடமை பதாறத்தூற்றி கோயிலிலே எடுத்து கோயில் காலால் அளந்து தானத்தார் கைய்ய ல் தரவு கொள்வாராகவும்''*

(புதுக் - கல்-386.)

**தரவு கொள்வது** : (வ) ஒருபொருளைக் கொடுத்தற்கு, பெற்றாரிடம் கொடுத்தார் பெறும் எதிர் நடைச் சான்றுச் சீட்டு. இதனை ''எதிரடை'' என்றும் கூறுவர். வரவு வைத்ததற்குப் பெறும் இரசீது.

*''திருக்காரைக் காடுடையார் திருமுற்றத்துக்கே கொடுவந்து இந்த ஸ்தான முடையார் வசம் பண்டாரத்து அளந்து தரவு கொள்வதாகவும்''*

*''இத்தேவர் கன்மிகள் வகம் நின்றானாலேய் நிசதம் உழக்கு நெய்யளந்து கொடுத்து தரவு கொள்வேனானேன்''*

(முதல் இராசேந்திரன், கி.பி. 1028, தெ. கல். தொ.8, கல். 5, 6)

*''பண்டாரத்துப்புகவிட்டு, எதிரடை இடவும்''*

(தெ. கல். தொ. 8, கல். 47)

*''இத்தேவர் திருமுற்றத்தே (நெல்) கொடுவந்து ஆண்டாண்டு தோறும் அளந்து தரவு கொள்வதாகவும்''*

(தெ. கல். தொ. 4, கல். 867)

**தரா** : (கலை) செம்பும் ஈயமும் கலந்த கலப்பு உலோகம். செம்பு-8 பாகம், பித்தளை 5 பாகம், ஈயம் 3 பாகம் கலப்பு-தரா என்னும் கலப்பு உலோகமாகும்.

*''தராநிலை விளக்கு ஒன்று''*

*''நிலைவிளக்கு தரா நிறை ௫ய''*

(தெ. கல். தொ. 4, கல். 534)

**தராதிபர்** : (அ) தரை அதிபர்-தராதிபர். தரை-நாடு, அதிபர்-மன்னர் நாட்டு மன்னர்.

*"கங்காபுரி புகுந்தருளி தராதிபட்கத தந் நிபமத்தியற்றி"*

(வீரராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**தரா நிலை விளக்கு :** தரா என்னும் கலப்பு உலோகத்தால் செய்யப் பட்ட நிலைவிளக்கு (நிலையாகத் தொங்கும் விளக்கு, குத்து விளக்கு)

*"ஸ்ரீராஜேந்த்ரசோழ தேவர்க்கு யாண்டு மூன்றாவது வரை குடுத்த தராநிலை விளக்கு ஒன்று"*

(தஞ்சைப் பெரிய கோயிலில் கல்வெட்டு) (தெ. கல். தொ. 2:2, கல். 41)

**தலவகாரம் :** ( ) சாமவேதம் ஓதும் சாதுகைகளுள் ஒரு பகுதி. இது தலவுக்காரம் என்றும் கூறப்பெற்றுளது.

*"தலவுக்காரக் கிடைப்புறம் நிலம் ஒரு வேலி"*

(கரந்தைச் செப்பேடுகள்)

**தலைக்கோலி :** (சமு) 'தலைக்கோலி' என்னும் பட்டம் பெற்ற ஆடல் மகள். நடனக் கலையினைக் கற்றுத் தேர்ந்த ஆடல் மகள் அரங்கேறிய காலத்து அரசு தரும் விருதுப்பெயர்.

*"பதியிலாள் நக்கன் அரங்கமான ஐயங்கொண்ட சோழத் தலைக் கோலியும்"*

(தெ. கல். தொ. 5, கல்.520)

*"திருவாரூர் திருவீதி வடசிறகில் பதியிலாரில் உமையாழ்வியான அழகிலுமழகிய தேவத் தலைக்கோலி"*

(தெ. கல். தொ. 17, கல். 600)

*"இயல்பினில் வழாமைத் தலைக்கோலெய்தித் தலையரங்கேறி"*
*"மலைப்பருஞ் சிறப்பிற்றலைக்கோலரிவை"*

(சிலம்பு : ஊர்காண்-வரி. 154, அரங்-வரி. 161)

**தலைக்கோலி விண்ணகர் :** (சம) திருவிடைமருதூரில் தலைக் கோலி விண்ணகர் என்ற பெயரால் திருமால் கோயில் ஒன்று அமைந்துளது. தலைக்கோல் விருதுபெற்ற ஆடல் மகளொருத்தி யால் எழுப்பப்பட்ட திருமால்கோயில் என்ற பொருளமைதியும் பெறலாம்.

*"திருவிடைமருதில் மஹாதேவர்க்கும், திருவிடை மருதில் தலைக் கோலி விண்ணகர் விஷ்ணுக்களுக்கும்—இருவேலிநிலம்"*

(தெ. கல். தொ. 19, கல். 181)

**தலைச்சமாடு :** (வே) முதலீட்டுப் பொருள். முதன்மை பெறும் செல்வம் நிலத்திலும், பாசனத்திலும், விளைவிலும் முதல் தரமானதும் தலைப்பாக அமைந்ததுமான நிலம். (மாடு-செல்வம்)

*''இப்பொன் பத்தொன்பதின் கழஞ்சரையேந் அரைக் காலுக்குந் தலைச்சமாடாக வைத்த பூலாஞ்செய் மூன்று மா''*

(தெ. கல். தொ. 5, கல். 590)

*''இவ்விளக்கு முட்டில் இவ்வூர் எங்கள் நிலம் முப்பத்தறு வேலியிலே தலைச்சான்மாடாக வைத்தோம்''*

(உத்தமசோழன் - கி.பி. 976 தெ. கல். தொ. 19, கல். 173)

**தலைச்சைமாடு :** (வே) (தலைச்சைமாடு) முதல் தரமதிப்புடைய செல்வம், முதல் பகுசியில் முதல் போகம். சில கல்வெட்டுக்களில் தலைச்சான் மாடு, என்றெல்லாம் கூறப்பட்டுள்ளதும் இப்பொருளில் அமைந்ததேயாகும்.

*''பொன்னிலானாரேத்துப் பட்டிநிலம் தலைச்சை மாடாக உடைய நெல் ஐந்நூற்றுக்காடி''*

*''கொடுஞ்செறுவு தலச்சமாடாக நெல் அஞ்பதின் காடிக்கும்''*

(பரமேசுவரபல்லவன், கி.பி. 673, தெ. கல். தொ. 8, கல். 331)

*''இவ்விளக்கு முட்டில் இவ்வூர் எங்கள் நிலம் முப்பத்தறு வேலியிலே தலைசசான் மாடாக வைத்தோம்''*

(தெ. கல். தொ. 19, கல். 173)

**தலைச்சைமாடு வைத்தோம் :** (வே) முதலுக்குரிய தரமுடைய செல்வத்தினை வைத்தோம். முதலுக்குரிய மூலதனம் வைத்தோம். மாடு-இங்கு பொன், மணி, நிலபுலன்கள் ஆகிய செல்வங்களைக் குறிக்கும்.

*''வைத்தநிலம் ஒருமா வரையின் கீழை அரைமாவும் ஆக நிலன் காலும் தலைச்சைமாடு வைத்தோம்''*

*''இப்பொன்னுக்குத் தலைச்சம் மாடாய் ஒருநொன்தா விளக்கு எரிப்போமானோம்''*

(தெ. கல். தொ. 5, கல். 590, 593)

**தலைச்சேமர் :** (வே) முதல் தரமான நிலம். தலைப்புப் பகுதியாக அமைந்த நிலப்பகுதி. சேமர்-வரப்பில் முள்வேலியிட்டுப் பாது காக்கும் நிலம்.

*''கீழை மயக்கலில் இப்பொன்னுக்கு தலைச்சேமர் புகவித்துக் குடுத்தது''*

(தெ. கல். தொ. 5, கல். 583, முதல் பராந்தகன்)

**தலைப்பாடகம் :** (வே) ஊர் விளைநிலங்களுள் முதல் பகுதியாக அமைந்த நிலம். தலைப்பாக அமைந்த நன்செய் நிலம்.

(பாடகம்-குறித்த பகுதிக்குள் அடங்கிய நிலம்)

(தெ. கல். தொ. 8, கல். 331)

*''தலைப்பாடகம் அரைமாவும்''*

(தெ. கல். தொ. 7, கல். 47)

**தலைப்பிறை :** (மொ) வளர்பிறையின் முதலங்கம். இந்நாள் அமாவாசையின் அங்கமாகவும் அமையும். அன்று சூரியகிரகணம் ஏற்பட்டிருப்பதைக் கல்வெட்டு குறிக்கின்றது.

*''கோவிராசகேசரி பன்மக்கு இயாண்டு இருபத்து நாலாவது, ஆணித்தலைப்பிறையால் தீண்டின ஸூர்ய கிரஹணத்திநான்று''*

(தீண்டின - இராகுகேதுக்களுள் என்னும் கோள்களில் ஒன்று பொருந்திய)

(முதல் இராசராசன், கி. பி. 1009, தெ. கல். தொ. 5, கல். 1363)

**தலைப்பேழை :** (வே) ஏரி குளங்கட்கு நீர் நிறைக்க ஆற்றிலிருந்து அமைக்கப் பெறும் வாய்க்கால்புகும், ஏரி வாய் தலைப்பில், வட்டித்த மடை. இது வாய்க்கால் வழி வரும் வண்டலைத் தேக்கும் அமைப்புடையதாதலின் பேழை எனப்பட்டது. (பேழை-வட்டித்த குழிப்பு மடை)

*''பரமேசுவர தடாகத்துக்கு பாலாற்று நின்றும் தோண்டின பெரும் பிடுகு காலின் புழுதிப்பாடும் நீர்த்த வழியாலே தலைவாயும், தலைப் பேழையும் ஊற்றுக்காலும்''*

(பரமேசுவரன், கி.பி. 675. கூரம் செப்பேடுகள்)

**தலைமடை :** (வே) பாசன வாய்க்காலின் முற்பகுதியிலமைந்த நிலவரப்பில், முதலாவதாகத் திறக்கப்பெறும் நீர் பாயும் புழை. நீர் பாயும் முதல் மடை. மடை-நிலவரப்பில் பாசன நீர்பாய அமைக்கப்பெறும் சிறுபுழை.

*"இதன் மேலை தலைமடை நிலன் அறுமாவும்"*

(தெ. கல். தொ. 4. கல். 537)

*"இந்நிலன் தலைமடை வேலியும்"*

(தெ. கல். தொ. 17. கல். 496)

**தலைமாறு :** (மொ) பதிலாக, ஒருவரிருந்த இடத்தில் வேறொருவர் இருப்பது. பரிவர்த்தனை.

*"இவர்களில் செத்தார்க்கும், அனாதேசம் போனார்க்கும் தலைமாறு அவ்வவர்க்கு அடுத்த முறை கடவார் அந்நெல்லுப் பெற்றுத் திருப்பதியம் விண்ணப்பம் செய்யவும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 65)

**தலைமாறு பரிவர்த்தனை :** (வ) உரிமை மாற்றமாக நிலங்களை ஒன்றற்கொன்று கொடுத்து மாற்றிக்கொள்ளும் செயல். பிரதிக்ஷேத்திரமென்பதும் இதுவேயாகும்.

*"இவ்வூர் உடையார் திருவகத்தீஸ்வரமுடையார்க்கு நந்தத்துக்கு தலைமாறு பரிவர்த்தனை—நாங்கள் பற்றின மனைகுழி—22"*

(தெ. கல். தொ. 8, கல். 205)

**தலைமாறும் :** (மொ) எதிர்ப்புறமாக அமைந்ததும்.

*"சாத்தனேரி எல்லைக்கு மேற்கும் நடவூகிடந்த கிணறு ஒன்றும் இதறகு தலைமாறும் நிலன் மூன்று மாவும்"*

(தெ. கல். தொ. 5, கல். 307)

**தலைவரிசை :** (மொ) முதல் பகுதியின் தலைப்பில் வரிசையாகத் தொடர்ந்து அமைந்த நிலம்.

*"ஜீவிதமாய் வருகிற நிலத்து தலைவரிசை நிலத்திலே"*

(தெ. கல். தொ. 5, கல். 431)

**தலைவாய்** (வே) தலைமையான வாய்க்கால். பல கண்ணறை.

*"தெற்கடைய பத்து செறுவுக்கும் கீழ்பால்கெல்லை திருவீரட்டான தலைவாய்க்கு மேற்கும்"*

(முதல் இராசராசன் கி.பி. 1003, தெ. கல். தொ. 7, கல். 878)

**தலையுவா :** (வ) தலை உவா. முதல் நிறைமதிநாள். ஆண்டின் முதல் திங்கள் சித்திரையில் அமையும் நிறைமதிநாள். (சித்ரா பௌர்ணமி)

*"குன்றத்தூர் செழிய வாணியர்களோம். திருவாதிரையுந் தலை யுவாவுந் திங்கள் நிலவியுங்—காட்டுவோமானோம்"*

(தெ. கல், தொ. 12, கல்,53)

**தவ்வை :** (வ) தமக்கை. தனக்கு முன்பிறந்தவள்.

*"வீரசலாமேகன், போர்க்களத்து அஞ்சித்தன் கார்களிறிழந்து கவ்வையுற்றோடக் காதலியொடுதன் தவ்வையைப் பிடித்துத் தாயை மூக்கரிய"*

(முதல் இராசாதிராசன்-மெய்க்கீர்த்தி)

**தவளச்சத்ரம் :** (கலை) வெண்குடை. வெண்பட்டினாலான கொற்றக்குடை. இதன் மகுடம் மொட்டு இடைப்பட்ட பறளை ஆகியவை பொன்னால் செய்யப்பட்டிருப்பதைக் கல்வெட்டுச் செய்தி புலப்படுத்துகின்றது.

*"தவளச் சத்ரம் மகுடம் மொட்டு அடுத்து விளக்கின பறளை யுட் படஇஞ்சினால் பொன் ஐம்பதின் கழஞ்சு"*

(தெ. கல். தொ. 2. கல்-1.)

**தவளைவாய் நாலி :** (கலை) தவளையின் வாய் போன்ற அமைப் புடைய பொற் பூக்களால் அழகு செய்யப்பட்ட தொங்கல். ஸ்ரீசந்தம் என்னும் அணிகலனுக்கமைந்த சிறந்த பகுதி.

*"ஸ்ரீ சந்தம் ஒன்றினால் முகமொன்றும் இடைக்கட்டு நாலு தவளைவாய் நாலியில் சவுக்கம் ஒன்றும்"*

(முதல் இராசராசன்-தெ. கல். தொ. 5, கல். 521)

**தளந்து :** (மொ) தளர்ந்து. வயது மூப்படைந்து செயலற்று.

*"மங்கையர்க்கரசியாரும் மரித்து, நாற்பத்தெண்ணாயிரப் பிள்ளையுந் தளந்து இவ்வேரியும் பல இடங்களிலும் உடைந்து ஆறும் உடைஞ்சு பாழ் கிடக்க"*

(தெ. கல். தொ. 8, கல். 83)

**தளி :** (சம) தெய்வத்திருமேனிகள் எழுந்தருளப்பெற்றுள்ள திருக்கோயில். கற்றளி.

"*இத்தளிப்பட்டுடையோம் கொண்டு இவனிட்ட நிலை விளக்கு எரிப்போமானோம*"

(தெ. கல். தொ. 4, கல்.534)

"*சேநாபதிகள் வாணராசர் நம்மூர் எடுப்பித்த திருக்கற்றளி திருவெண்காடுடைய மஹாதேவர்*"

(தெ. கல். தொ, 5, கல் 1003.)

**தளிகை :** (சம) பொன்னின் தளிகை. பொன்னால் செய்யப்பெற்ற நிவேதனத் தட்டு. தஞ்சை இராசராஜீச்சுரமுடையார்க்கு முதல் இராசராசன் அளித்தது (தளிகை - நிவேதன உணவை மட்டும் குறிப்பதாயினும், தானியாகுபெயராய் அதனை இட்டுப் படைக்கும் தட்டிற்காயிற்று.)

"*தளிகை ஒன்று அடியுட்பட பொன் ஆயிரத்து ஒருநூற்று முப்பத்து ஐங்கழஞ்சரை*"

(தெ. கல். தொ. 2, கல். 1)

"*பரிகலம் வெண்கலத் தளிகை*"

(தெ. கல். தொ. 5, கல். 644)

"*தளிகை பஞ்சவன் மாதேவியென்னுந் திருநாமமுடையது*"

(தெ. கல். தொ. 2:2. கல்.51)

**தற்குறிமாட்டெறிதல் :** (வ) கையெழுத்திடுவதற்குப் பயிற்சி பெறாதவர்க்குப் (கல்வியில்லாதவர்க்கு) பதிலாக ஒருவன் கையெழுத்துச் சான்றிடுதல் தற்குறி மாற்றெறிதலாம். தமிழில் கையொப்பமிடவறியாத பிறமொழியாளர்க்குப் பதிலாக ஒருவர் கையொப்பமிடுதலும் ஒக்கும்.

"*கூத்தன் தற்குறிக்கு, தற்குறி மாட்டெறிந்தேன் திருவேங்கடமுடையான் சிகைலாசமுடையானெழுத்து*"

(தெ. கல். தொ. 5, கல். 426)

**தறி :** (பொ) மரச்சட்டங்களினால் ஆக்கப்பெறும் நெசவு இயந்திரம்.

"*தறி ஒன்றுக்கு 10-பணம் இறுப்பார்களாகவும்*"

(தெ. கல். தொ. 14, கல். 221)

**தறிக்கடமை :** (அ) அரசு ஆடை நெய்வாரிடத்துத் தறிக்கு இவ்வளவு காசு வரி என்று இட்டுப் பெறும் வரிவகை. இத்தறி மூன்று வகைப்படும்.

*''அச்சுத் தறி, பறைத்தறி, சாலியத்தறி உள்ளிட்ட தறிக்கடமை''*

(தெ. கல். தொ. கல். 12, பகு. 1, கல். 202)

**தறிப்புடவை :** (அ) ஆடை நெய்வோர், தறிக்கு ஒரு புடவையாகச் செலுத்தும் வரி. புடவை நெய்தற்குரிய தறிக்குச் செலுத்தும் வரி எனலாம்.

*''தட்டார்ப்பாட்டம் உள்ளிட்ட கீழிறைப்பாட்டமும் தறிப்புடவையும் வேலிக்காசும் உள்ளிட்ட அந்தராயமும்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 57)

**தறியிறை :** (அ) நெசவாளர் ஆடைநெய்யும் தறி ஒன்றிற்கு இந்த அளவொன்று அதிகாரிகள் இட்டுப்பெறும் வரித்தொகை.

*''நாற்பாற்றெல்லைக்கு உட்பட்ட நன்சை, புன்சை நிலமும் தறியிறை தட்டாரப் பாட்டமும் மற்றும் எப்பேற்பட்ட பல்லாயங்களும்''*

(தெ. கல். தொ. 8, கல். 87)

*''மனை-24. இம்மனை இருபத்துநாலுக்கும் மாதமொன்றுக்கு தறி ஒன்றுக்கு ம பணமும் இறுப்பார்களாகவும்''*

(தெ. கல். தொ. 14, கல். 221)

*''தறியிறை தட்டார்ப் பாட்டம் எப்பேற்பட்ட வரிகளும்''*

(தெ. கல். தொ. 8, கல். 169)

**தன்கூற்று :** (மொ) தன் நேர்பார்வைக்கும் செயலுக்கும் ஆணைக்கும் உள்பட்டது. (தன்து அதிகாரத்திற்கு) உட்பட்ட கூற்றம்.

*''கோராஜகேசரிவர்மர்க்கு யாண்டு பதினேழாவது ஊற்றுக் காட்டுக் கோட்டத்து தன் கூற்று ஸ்ரீ உத்தம சோளசதுர்வேதி மங்கலத்து''*

(தெ. கல். தொ. 7, கல். 413)

*''தன்கூற்றுச் சிவ சூளாமணி மங்கலமாகிய ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்து இருந்துவாழும் வெள்ளாளன் சிக்காருடையான்''*

**தன்மவாணியர்** : (வா) உண்மை நெறி தவறாமல் வணிகம் செய்யும் பெருமக்கள்

*"இக்குழி ஆயிரமும் - சந்திராதித்தவரை செல்வதாக கொண்டு விட்டோம். சத்திய வாசகரான தன்மவாணியரோம்"*

(குலோத்துங்கசோழன், தெ. கல். தொ. 8, கல். 138)

**தன்னேற்றம் ஆள்** : (வ) தன்னோடு சேர்த்துக் கூட்டிக் கொண்ட ஆட்கள்.

*"சகடை கொட்டிகளில் தாமோதிரன் செட்டிக்குத் தன்னேற்றம் ஆள் பதினொருவர்க்குப் சோற் பங்கு ஆரையாக பங்கு ஐந்தரையும்"*

(தெ கல். தொ. 2, கல். 66)

**தனிச்சு** : (மொ) தனியாக, தனியுரிமையுடையவர்களாக. ஒரே தொகுதியாகப் படர்ந்துள்ள நிலங்களுள் ஒரு பகுதியைப் பிரித்துக் காட்டுவதும் தனிச்சு என்ற சொல் சுட்டுவதாகும்.

**தனியூர்** : (அ) ஒவ்வொரு வளநாட்டிலும் அரசு சிறப்பாக அமைக்கும் ஊர். கூற்றத்தின் தலைமை ஊராகவும் அமையும்.

*"விருதராச பயங்கர வளநாட்டுத் தனியூர் திருநாரையூர்"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 153)

(ஆட்சி நிலவும் தலைமையான ஊரே தனியூர் எனப்படும். பல கிராமங்கள், ஊர்கள், சதுர்வேதி மங்கலங்கள் ஆகியவற்றிற்குரிய ஆட்சித் தலைமையகமாகத் தனியூர் அமையும்.)

*"ஜயங்கொண்ட சோளமண்டலத்துக்காலியூர்க் கோட்டத்துத் தனியூர் உக்கலாகிய ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலம்"*

(தெ. கல். தொ. 3, பகு. 1, கல். 4)

*"ராஜேந்திரஸிம்ஹ வளநாட்டு கார்நாட்டுத் தனியூர் ஸ்ரீவீர நாராயணச் சதுர்வேதி மங்கலம்"*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**தனுநாயறு** : (வ) மார்கழி மாதம். தனூர் இராசியில் சூரியன் நிகழும் திங்கள். மேடம் முதலாகிய பன்னிரண்டு இராசிகளில் தனூர்ராசி ஒன்பதாவதாகும்.

**தக்ஷிணமேருவிடங்கன் :** (சம) தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளியுள்ள தியாகராச மூர்த்தம் தக்ஷிணமேருவிடங்கர் என்று பெயர் பெறுவர். இவர் பெயரால் கோயிலில் இரத்தினங்களை எடையிடுவதற்கு முதல் இராசராசனால் வைக்கப்பட்டிருந்த நிறைகல், "தட்சண மேருவிடங்கன்" என்று பெயர் பெற்றிருப்பதைக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. (தஞ்சைப் பெரிய கோயில் விமானமாகிய தக்ஷிண மேருவின் கீழ் மூலவராகிய ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்கு முன்புறம் தென்பால்எழுந்தருளியுள்ள தியாகேசர்.)

*"ரத்னங்கள் சரடும் சட்டமும் நீக்கி தக்ஷிண மேருவிடங்கன் என்னும் கல்லால் நிறை எடுத்தும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 39)

*"தக்ஷிண மேருவிடங்கர்க்குச் சார்த்தி அருளக்குடுத்தன; திருக்கைக் காறை ஒன்று. திருவடிககாறை ஒன்று"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

*"உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையாரும் தக்ஷிணமேரு விடங்கரும் ஆடியருளுந் திருமஞ்சன ரீரிலுங்க தண்ணீர் மீதிலுந் இடஸங்ரமம் ஒன்றுக்கு இலாமிச்சம் ஒருபலவரையாக ஸங்கிரமம் பன்னிரண்டுக்கு இலாமிச்சம் பதினெண் பலமும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 24)

**தக்ஷிணமேருவிடங்கர் நர்பிராட்டியார் :** (சம) தஞ்சைப் பெரிய கோயில் விமானம், தக்ஷிண மேரு என்று பெயர் பெறும். அவ்விமானத்தின் கீழ் எழுந்தருளிய இறைவன் "தக்ஷிணமேரு வியடங்கர்" எனப்பட்டார். அவ்விறைவன் தேவியார் உமா பரமேஸ்வரியார்.

*"தக்ஷிணமேரு விடங்கர் நம்பிராட்டியார் உமா பரமேஸ்வரியார்"*

(தெ. கல். தொ. 2:1, கல். 7)

**தக்ஷிணமேருவிடங்கன் கல் :** (சம) தக்ஷிணமேருவிடங்கன் என்னும் பெயருடன் தஞ்சை இராசராசேசுவரத்தில், கோயில் திருமேனிகட்கு அளிக்கப்பட்ட இரத்தினங்களை நிறை எடுக்கப் பயன்படுத்தப் பெற்ற கல். தக்ஷிண மேரு என்பது இராசராசேசுவரம் கோயில் கருவறை விமானத்தின் பெயர்.

*"ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார் கோயிலில்—எழுந்தருளுவித்த செப்புத் திருமேனிகள் உடையார் கோயிலில் முழத்தால் அளந்தும் ரத்நங்கள் சரடு நீக்கி தக்ஷிண மேருவிடங்கன் என்னும் கல்லால்*

*நிறை எடுத்தும் பொன்னும் வெள்ளியும் ஆடவல்லான் என்னும் கல்லால் நிறை எடுத்துங் கல்லில் வெட்டினபடி''*

(தெ. கல். தொ. 2:2. கல். 34)

**தக்ஷிணாமூர்த்திகள் திருமேனி;** (சம) முதல் இராசராசன் தான் எழுப்பிய இராசஇராசேசுவரத்தில் செய்தமைத்த செப்புத்திருமேனி களுள் ஒன்று. இத்திருமேனி வடிவமைப்பில் தனிச் சிறப்புடைய தாகும். நாலு கைகளுடையாராக தக்கணாமூர்த்தம். அவர் அமர்ந்திருந்த பெரியமலை; அடியில் சிறியமலைகள்; பர்வத சிகரம் இரண்டு; கின்னரர் இருவர்; கின்னரிகள் இருவர்; மூர்த்தியின் ஊன்றிய பாதத்தில் கிடந்த முசல்கன்; ரிஷிகள் நால்வர்; பாம்பு ஒன்று; கர்ண்ண பிரவர்த்தரிகள் இருவர்; மரக்கிளை பெரிய வடிவில் ஒன்பதும் சிறிய வடிவில் நாற்பத்திரண்டும் உள்ள பெரிய கல்லால மரம் ஒன்று; பொக்கணம் ஒன்று; கைத்தழை ஒன்று. ஆகிய அங்கங்கள் சூழ்ந்து பொருந்த நடுவே கல்லால மரநிழல் அமர்ந்த தக்ஷணாமூர்த்தி திருமேனி. இவ்வாறாகச் செப்புத் திருமேனி அமைந்திருப்பதைக் கல்வெட்டு விளக்கமாக உணர்த்துகின்றது.

(தெ. கல். தொ. 2:2, கல். 50)

**தாக்கு :** (வே) பாசன நீர் கொள்ளும் பள்ளமாக அமைந்த விளை நிலம்.

*''முதல் சதிரத்து வடக்கிலெட்டில் கீழை நாலில் வடக்கடைய தாக்கு இரண்டினால் பாடகம் ஒன்றே கால்''*

(தெ. கல். தொ. 5. கல். 999)

**தாங்கல் :** (வே) பள்ளமான செய் நிலம். இதனைத் தாக்கு என்றும் கூறுவர்.

*''இரண்டாம் தரத்து நிலமுட்பட நீர்நிலமும் புன்செயும் தாங்களும் உட்பட''*

(தெ. கல். தொ. 8. கல். 30)

**தாணித்தல் :** (கலை) அடியிற் பதித்தல். பொன்னாற் செய்யப்பட்டு முத்துக்கள் வைத்துப் பொருத்தப் பெறும் அணிகலன்களில், முத்துக்கள் வைக்கப் பெறும் பகுதியின் அடிப்படையாக அரக்

கென்று தயாரிக்கப்பட்ட சிவப்புத் துணியைப் பதிவித்து அதன் மேல் முத்துக்களைப் பொருத்துதல் கம்மத் தொழிலின் நுட்பமாகும். இத்தொழிற் பெயரே தாணித்தல் என்பதாம்.

*"ஆக முத்து இருநூற்று அறுபத்தைஞ்சும் அரக்கு உட்படத் தாணித்த சிவப்புச் சீலையுஞ் சரடும் நீக்கி"*

(தெ. கல். தொ. 2:2. கல். 51)

**தாதர்க்கு மடப்புறம் :** (சம) திருமால் கோயில்களில் வழிபாட்டின் போது சேவிக்கும் அடியாராகிய தாதர்க்கு வாழ்விடமும் இறையிலி நிலமும் அளிப்பதாகும். இவ்வற நிவந்தமும் மடப்புறமென்றே குறிப்பதாகும்.

*"ஸ்ரீவைகுந்தத்து கள்ளப்பிரான் கோயிலில் தேவபிரான் தாதர்க்கு மடப்புறமாக அவ்வூர்ப்படி கார்பசானம் விளையும் நிலத்திலே அஞ்சுமாநிலம் முதலடங்க இறையிலியாக குடுத்து"*

(தெ. கல். தொ. 5, கல். 741)

**தாதி :** (சமு) பணிப்பெண். வளர்ப்புத் தாய். செவிலி.

*"கன்னரதேவர் தாதியாயின குறுக்கை நாட்டு காவிரீக்கடம்ப விடரி"*

*"சோழ பெருமான் பராந்தக தேவர் தாதி பாண்டன் காளி"*

(தெ. கல். தொ. 5, கல். 550, 693)

**தாமரைச் செயல் பொற்பூ :** (கலை) தாமரை மலரின் வடிவமாகப் பொன்னால் செய்யப்பட்ட பூ. முதல் இராசராசன் தாமெழுப்பிய தஞ்சை இராசஇராசேசுவர பரமசுவாமிக்குச் செய்தளித்த பொன்னணிகளுள் ஒன்று.

*"ஸ்ரீ ராஜராஜதேவர் ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார்க்குக் குடுத்த தாமரைச் செயல் பொற்பூ ஒன்று"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

**தாரணி படகம் :** (கலை) உவச்சர் மாலையணிந்து கொட்டும் தம்பட்டம். பலர் வரிசையாக நின்று அடிக்கும் தம்பட்டம். திருவாவடுதுறைக் கோயிலில் திருவிழாக் காலங்களில் இந்நிகழ்ச்சி நிகழ்ந்துள்ளது.

*"உவச்சர்கட்கு, தாரணிபடகத்துக்குக் கால்—நிலம்"*

(தெ. கல். தொ. 19, கல். 69)

**தாராபூர்வம் :** (வ) அறஞ்செய்ததனை உறுதி செய்யும் செயலாகச் செய்பவர் பெறுபவர் கையில் நீர்வார்த்து உறுதி செய்யும் செயல்.

*"இப்படி இவ்வூர் விலைய..கக் கொண்டு இத்திரு மேற்கோயில் எம்பெருமானுக்கு காணியாகக் குடுத்து திருக்கைமலரிலே நீர் வார்த்துக் குடுத்தேன்"*

(தெ. கல். தொ. 8, கல். 299)

*"திருவெண் காடுடைய நாயனார் கோயில் ஆதிசண்டேஸ்வர தேவற்கு தாராபூர்வமாக சிலாலேகை பண்ணிக்குடுத்தபடி"*

(தெ. கல். தொ. 5. கல். 998)

*"திருவகத்தீசமுடைய நாயனாற்கு தேவதான தன்மமாக திருக்கை மலரிலே நீர்வார்த்துக் குடுத்தமைக்கு"*

(புதுக். கல் 57.)

**தாரைத்தாள் வட்டில் :** (கலை) அடியில் நீரொழுகும் தூம்புடனும் பாதங்களுடனும் அமைக்கப்பெற்றதும் அபிடேகத்திற்குரியது மான பொற்பாத்திரம்.

*"தாரைத்தாள் வட்டில் ஒன்று கூ௫க்கிரண்டும் சிங்கபாதமிரண்டும் உட்பட பொன் நானூற்று நாற்பத்தெண்கழஞ்சு"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

**தாலப்பட்டோலை :** (அ) அரசோ, கிராம சபையாரோ முடிவு செய்த ஆணை ஓலை. (தாலம்-பனையோலை) (பட்டோலை-தீர்மான உத்தரவு கட்டளை)

*"மகேந்திரமங்கலத்து சபையோம் விற்றுக்குடுத்த நிலவிரையா வணம்தாலப்பட்டோலை எழுதின சேந்த மங்கலமுடையான்"*

(கல்வெட்டு அறிக்கை எண்-159-1895)

**தாலி :** (கலை) சரட்டில் கோக்கப்பெறும் மங்கலத் தொங்கல் பொன்மாலையில் தொங்கும் பாங்கில் கோக்கப்பெறும் பதக்கம்.

*"திருமாலையில் தாலி நாற்பத்தொன்றும்"*

(தெ. கல். தொ. 23, கல். 46)

*"மாணிக்கத்தன் தாலி ஒன்றிற் கட்டின வயிரம் எட்டும்"*

(தெ. கல். தொ. 2, கல். 93)

**தாலிமணிவடம் :** (கலை) இரத்தினங்கள் வைத்து இழைக்கப்பட்ட மங்கல மாலை. தொங்கல் இரத்தின மாலை.

*"உமா பரமேஸ்வரியார்க்குக் குடுத்தன-தாலிமணிவடம் ஒன்று பொன் கழஞ்சேய் முக்காலே நாலுமஞ்சாடியும் குன்றி"*

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

**தாவடி :** (அ) விரைந்தநடை. வேகமான நடை.

*"சக்கரக் கோட்டத்தப் புறத்தளவு மேவருந் தானைத் தாவடி செலுத்தி"*

(வீரராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

**தாழ்வடம் :** (கலை) தொங்கலாக கழுத்தில் அணியப்பெறும் பதக்கத்தோடு கூடிய முத்துமாலை. பொன் மணிகளால் ஆன மணி வடமும் அமையும்.

*"தாழ்வடம் ஒன்றிற் கோத்த புஞ்சை முத்து எண்ணூற்றெண்பத்தேழினால்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 44)

**தாழ்வு அற :** (மொ) குறைவு இல்லாமல். குறைவு நீங்க.

*"சந்திராதித்தவரையும் பூசைத்தாழ்வு அற நடத்திப் போகவும்"*

(தெ. கல். தொ. 8, கல். 210)

**தாழக் கூட்டுக் கம்பி :** (கலை) திருமேனிகட்குச் சாத்தும் காதணி. இவ்வணிகலன் வளையவடிவில் வேலைப்பாடமைந்ததாகஇரண்டு பகுதிகளாகச் செய்யப்பெற்று ஆணியிட்டுப் பொருத்துவதாகும்.

*"சாத்தும் தாழக் கூட்டுக்கம்பி ஓரணையினால் துண்டமிரண்டும் ஆணி இரண்டும் உட்பட"*

(தெ கல். தொ. 5. கல்-521.)

**தாழி :** (சமு) இடையர்கட்குரிய குடிப்பெயர்களுள் ஒன்றாகவும், அரசியலதிகாரிகட்கமைந்த தகுதிக் குறிப்பாகவும் இச்சொல் இடம் பெற்றுளது.

*"தாழிதிரிபுவன விசையன் கொண்ட காசு இருபத்தைஞ்சினால் ஆடு இருபத்திரண்டரையினால் நெய் இருபத்திருநாழி உரியும்"*

(தெ. கல். தொ. 5, கல். 636)

*"திருமந்திர ஓலை சத்திரிய சிகாமணி வளநாட்டு பனையூர் நாட்டு நேர்வாயிலுடையான் தாழி திருப்பனங்காடுடையான் வானவப் பலலவரையன்"*

(தெ. கல். தொ. III:I.

**தாழிவிளக்கு** : (கலை) குடவிளக்கு, வட்டத்தட்டின் நடுவே அமைந்ததாகச் செய்யப்பெறும் விளக்கு. மண்ணால் செய்யப் பட்ட விளக்கு.

*"தாழி விளக்கு மாகாணிக்கு ஆடு ஐஞ்சரை"*

(தெ. கல். தொ. 5. கல்-645.)

**தாளம்** : (கலை) வெண்கல உலோகத்தால் வட்ட வடிவில் இணையாகச் செய்யப்பெற்று, ஒன்றையொன்று தட்டுவதால் இசை தரும் கருவி. கஞ்சக்கருவிகளுள் ஒன்று.

**தாளமுறி** ; (வ) தாலமுறி. பனைஓலைப்பத்திரம்.

*"கோயில் பண்டாரத்துக்கு உடலாக பதினேழாவது தாள முறி முதல் கைக்கொண்டு முதலிட்டுக் கொள்ளவும்"*

(தெ கல். தொ. 12, கல். 206)

**தாளிம்பம்** : (கலை) திருமேனிகட்கு அணியும் அணிகலன்களுள் வயிரங்கள் வைத்திழைக்கப்பட்ட இடைக்கட்டுப்பட்டை, திரிசரம் ஆகியவற்றின் கீழ் தொங்கல் பகுதி.

*"இடைக்கட்டு, இரண்டிலுந்தடவிக் கட்டின பளிங்கு எட்டும் பொத்தி எட்டும் ஏழொன்றாக அடுத்து விளக்கின தாளிம்பம் இரண்டும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 34)

*"தாளிம்பம் இரண்டும் படுகண் ஒன்றும் கோக்குவாய் ஒன்றும் தாளிம்பத்து ஈக்காவாணியும் அரக்கும் உட்பட"*

(தெ. கல். தொ. 2:2. கல்.51.)

**தான பிரமாணம்** : (வ) தானபத்திரம், தானசாசனம். தர்மதான உறுதிச் சீட்டு. பிரமாணம்-உறுதிச்சீட்டு.

**தானைத் திருப்பட்டிகை** : (கலை) இடை ஆடைமேல் அணியப் பெறும் பொன்னாலும் இரத்தினங்களாலும் முத்துச் சரங்களாலும் ஒப்பனை செய்யப்பட்ட மேகலை.

*"உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்குச் செய்த தானைத் திருப்பட்டிகை ஒன்று"*

(தெ, கல். தொ. 2, கல். 59)

**திக்திக்க ஆடுவான் :** (சம) தில்லை நடராசப்பெருமானுக்குரிய சிறப்புப் பெயர்களுள் ஒன்று.
(சிதம்பரம் கல்வெட்டு.)

*''திருச்சிற்றம்பலமுடையார் கோயில் உடையான் தித்திக்க ஆடுவான் திருநாமத்துக்காணி''*

(தெ. கல். தொ. 12. கல்-152.)

**திமிலை :** (கலை) பம்பை என்னும் தோற்கருவி. (இசைக் கருவி) திருக்கோயில்களில் திருப்பலிக்கு உவச்சு கொட்டுகின்ற போது இசைக்கப்படும் கருவிகளுள் ஒன்றாம்.

*''இவ்வாண்டு முதல் காளம் இரண்டுக்கும் சங்கு ஒன்றுக்கும், திமிலை ஒன்றுக்குமாக ஆள் நாலுக்கு நிலம் இருவேலி''*

(புதுக் - கல் - 85.)

**திரங்கல் :** (கலை) நவரத்தினங்களுள் முத்துக்குரிய குற்றங்களுள் ஒன்றாகும். மேற்புறம் சுருண்டிருப்பதைப் போன்ற தோற்றமாக அமைந்த முத்து.

**திரப்பில் :** (மொ) (திரம்புதல்) தவறினால். உரிய காலத்தில் உரிய செயலைச் செய்யத் தவறினால். (திரப்பு-தவறு)

*' சபையார் திறம்பில் ஆறுகாசு தண்டப்படுவதாகவும்''*

(தெ. கல். தொ. 3:3, கல். 106)

**திரமம் :** (வா) ஒருகாசுக்குரிய பின்ன அளவைப்பொன் நாணயங்களுள் ஒன்று. இத்திரமம் கால், அரை, முக்கால் என்ற அளவையிலும் அதற்கு கீழடங்கிய சிறு மதிப்பீட்டிலும் வழங்கப் பட்டுள்ளது. இந்நாணயம் யவனர் தமிழகத்தோடு வாணிபம் நிகழ்த்திய வழி, தமிழக வழக்கில் நிலவிய பொன் நாணயமாக இருப்பதை வரலாறுகள் உணர்த்துகின்றன.

*''பொலியூட்டாகக் கொண்ட பழங்காசு அரையே அரைக் காலுக்கு ஆட்டுப் பொலியுள் திரமம் முக்காலே மூன்றுமா''*

(இராசாதிராச சோழன்-கி.பி. 1054, தெ. கல். தொ. 8, கல். 36)

*''இப்பரிசு சம்மதித்து இத்திரமம் நூறும் ஒடுக்குக் கொண்டோம். இவ்வாள்வாள் கண்டிமகளோம்''*

(பாண்டிநாடு) (தெ. கல். தொ. 14, கல். 198)

*''திரமம் இரண்டேக்கு நெல் அறுசலம்''*

(தெ. கல். தொ. 8. கல். 330)

**திரள்மணிவடம் :** (கலை) திரட்சியான வடிவில் இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட நெடிய மாலை. உத்திராக்கமாலை.

*''இரண்டு ஸ்ரீ ஹஸ்தம் உடையாராய் ஆடுகின்றாராகக் கனமாக எழுந்தருளுவித்த ஸ்ரீபைரவ மூர்த்திகள் ஒருவர்-இவர்க்கே இவன் குடுத்த திரள்மணிவடம் ஒன்று பொன் நாலு மஞ்சாடி''*

*''நம்பி ஆருரனார்க்கு குடுத்தன-திரள்மணிவடம் ஒன்று''*

(முதல் இராசராசன், தெ. கல். தொ. 2:2, கல். 43,32)

**திரிகாலந்திருவமுது :** (சம) கோயில்களில் இறைவனுக்கு காலை, நண்பகல், மாலை (இரவு) ஆகிய மூன்று காலங்களில் நிகழும் பூசனைக்குரிய நிவேதன உணவு.

**திரிசந்தி :** (சம) காலை, மதியம், இரவு ஆகிய மூன்று சந்தியா காலங்கள். பெரும்பான்மையும் இம்மூன்று காலங்களிலேயே கோயில்களில் வழிபாடு நிகழ்தல் வழக்காம்.

*''திருவண்ணாமலையில் எழுந்தருளுவித்த பிச்சதேவர்க்கு திரிஸந்தி முக்காலுந் திருவமுது செய்தருளச் சிறுகாலைக்கு உச்சியம் போதைக்கு—இரவைக்கு திருவமுதரிசி இரு நாழியும்''*

(தெ. கல். தொ. 8, கல் 66)

**திரிசரம் :** (கலை) மூன்றுவரிசைக் கோவையாகவும் இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட ஒப்பனை யுடையதாகவும் அமைந்த பொன்மாலை. இம்மாலை முத்துக்களாலும் அமைக்கப்பெறும்.

*''திரிசரம் ஒன்றில் கோத்தமுத்து தொண்ணூற்று ஒன்பதும்''*

(தெ. கல். தொ. 2.2. கல். 34)

**திரிபுவனச்சக்கரவர்த்தி :** (அ) சேர, சோழ, பாண்டிய நாடுகளுக்குப் பேரரசன் சக்கரவர்த்தி என்ற சிறப்புப் பெயருடன் விளங்குதல். முதற் குலோத்துங்கனுக்குரிய விருதுப் பெயர்களுள் ''*திரிபுவன வீரன்*'' என்பதும் ஒன்றாகும்''

*''கோவிராசகேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழ தேவர்க்கு''*

(முதல் குலோத்துங்கன்—மெய்க்கீர்த்தி)

**திரிபுவனமாதேவிப் பேரங்காடி :** (வா) முதல் இராசராசன் ஆட்சியில், தஞ்சாவூர் கோட்டைக்குப் புறமாகச் சூழ்ந்திருந்த பெருங்கடை வீதிகளுள் ஒன்றின் பெயராகும். திரிபுவன மாதேவி-முதல் இராசராசன் மனைவியருள் ஒருவர் பெயர்.

**திருப்பரிச்சட்டம் வாட்டும் வண்ணத்தான் :** (சம) இறைவன் திரு மேனிக்கு அணிவிக்கும் ஆடையினைத் தூய்மை செய்து உலர்த்தும் —வண்ணான். இவர்கள், "திருப்பரி சட்டங் கழுவுவார்" என்றும் கூறப்பெறுவர்.

*"திருப்பரி சட்டம் வாட்டும் வண்ணத்தானுக்கு நெல் குறுணி"*

(தெ. கல். தொ. 7, கல். 485, புதுக். கல். 90)

**திருப்பலிகொட்டுதல் :** (சம) கோயிலில் பூசை நிகழும் பொழுது உவச்சர் செகண்டி காளம் முதலிய இசைக்கருவிகளை இசைத்தல்-நாள்கூலியோ காணியாட்சியோ இப்பணிக்குச் செய்யப்பெறுவது 'உவச்சு' என்னும் பெயரால் வழங்கப்பெறும். திருப்பலி என்பது ஸ்ரீபலி என்று வடமொழியில் கூறப்பட்டுளது.

*"இத்தேவர்க்கு திருப்பணி மூன்று தேசகாலமும் செகண்டிகை உட்பட ஐஞ்சாள் கொண்டு திருப்பலி கொட்டுவதற்கு வைத்த நிலம். இவ்வூரில் உவச்சர்க்குரியது"*

(தெ. கல். தொ. 12. கல். 114.)

**திருப்பள்ளித்தாமம் :** (சம) இறைவனுக்கு சாத்தும் மலர் (மாலை

*"தெய்வ நாயகர்க்குச் சாத்தும் திருப்பள்ளித் தாமம்"*

(பெரியபுராணம் எரிபத்தர் - செய். 9)

*"திருப்பள்ளித்தாமம் பறித்துத்தொடுப்பார் இருவர் நந்தவானக்) குடிகள"* (தெ. கல். தொ. 5, கல். 625)

**திருப்பள்ளிபொழுச்சி கொட்டுதல் :** (சம) வைகறைப் பொழுதில், திருக்கோயில்களில் இறைவனைத் துயில் எழுப்புவதாக இசைக் கருவிகளைக் கொட்டுதல்.

*"திருப்பழங்கோளூர் மகாதேவர்க்கு-ஆயிரங்குழிகொண்டு ஆருள் மூன்று ஸங்கயும் திருப்பள்ளி எழுச்சி கொட்டுவதாகவும்"*

(தெ. கல். தொ. 19. கல். 169.)

சங்கியை சங்கய் என்று திரிந்துளது. சங்கியை-எண்ணிக்கை.

**திருப்பள்ளித் தொங்கல் மகுடம் :** (கலை) முகப்பில் பொன் நகாசுத் தொங்கல்களால் அலங்கரிக்கப்பட்ட திருமுடி போன்ற வடிவிலமைந்த மகுடம். முதல் இராசராசன் தஞ்சை ஸ்ரீராச ராசேச்சரமுடையார்க்கு அளித்த சின்னங்களுள் சிறந்த வேலைப் பாடமைந்த விருதுச்சின்னம் இம்மகுடங்களேயாகும்.

*"தஞ்சை ஸ்ரீ இராசராசேசுவரமுடையார்க்கு முதல் இராசராசன் இத்தகைய பொன்னாலான மகுடங்கள் பதினெட்டினை அளித்துள்ளான்"*

*"அடுத்து விளக்கின மொட்டும் பறளையும் உள்பட திருப்பள்ளித் தொங்கல் மகுடங்கள் - பொன் நூற்று நாற்பத்து ஒன்பதின் கழஞ்சரையே இரண்டு மஞ்சாடியுங்குன்றி"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

**திருப்பறையறைவு :** (சம) திருக்கோயில்களில் நிகழும் திருவிழா நிகழ்ச்சிகளை நாளும் பறையறைவித்து ஊரவர்க்கு அறியச் செய்யும் செயல்.

*"ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார் ஆட்டைப் பெரிய திருவிழா வுக்குத் திருக்கொடியேற்று நான்று திருப்பறையறைவு கேட்பிக்கும் கடிகையார்"*

(தெ. கல். தொ. 2:2. கல். 26.)

**திருப்பாவாடை :** (சம) இறைவனின் சிறப்புப் பிரசாதமாக தூய வெண்மையான ஆடைவிரிப்பன் மீது படைக்கப்பெறும் சிறந்த முறையில் சமைக்கப்பட்ட உயர்ந்த பொங்கல்.

*"திருப்பாவாடைக்கு நாங்கள் அளக்கும் குத்கல் அரிசி இருகலம்'*

(திருநெல்வேலி கல்வெட்டு-தெ. கல். தொ. 12, கல். 244)

**திருப்பாவாடைப் புறம் :** (சம) தில்லை அம்பல நடராசபெரு மானுக்குத் தைப்பூசத் திருநாளில் இட்டுப் படைக்குஞ் சிறப்பான அமுது படையல் "திருப்பாவாடை" என்று பெயர் என்று வரையப்பெற்றுளது. இச்சிறப்புப் படையலுக்குரியதாக நிவந்தம் செய்யப்பட்ட இறையிலி நிலம் திருப்பாவாடைப் புறம் என்று பெயர் பெறும்.

திருத்தைப்பூசைத் திருநாளிலே திருப்பாவாடைச் சிறப்பாக அமுதுபடிக்கு-பதின்கலனுக்குப் போனகப் பழவரிசியும்"

(கல்வெட்டு அறிக்கை எண்-106/1934/35

*"அச்சிறுபாக்கத்து உடையார் ஆட்சிகொண்டருளிய மஹா தேவர் நந்தவனத்து மண்டபத்து எறியருளின நாள் திருப்பாவாடை அமுது செய்தருள விட்ட நீர்நிலமாவது"*

(தெ. கல். தொ. 7, கல். 452)

**திருப்புகை :** (சம) சோழர் காலத்தில் திருக்கோயில்களில் இறைவனுக்கு நாளும் நிகழும் வழிபாட்டின் போது தணலில் சந்தன மரத்துகள், அகில்துகள், குங்கியதுகன் ஆகியவற்றை இட்டுப் புகையெடுத்தல் வழக்காகும். வழிபாட்டுக்குரிய நறும்புகையே திருப்புகை எனப்பட்டது.

*"பழுவேட்டரையர்ப் பெருந்தரத்து அரையன் சுந்தரசோழனேன் திருப்புகைக்குக் குடுத்தேன்"*

(தெ. கல். தொ. 5, கல். 677)

*"திருப்புகைக்கு குங்கிலியம் காசு அரைக்கு நெல்லு இருகலம்"*

(தெ. கல். தொ. 5, கல். 578)

**திருப்பொற்பூ :** (கலை) பொன்னாலும் இரத்தினங்களாலும் தாமரைப் பூ போன்றும் செவ்வந்திப்பூ போன்றும் அழகாக செய்யப்பெறும் பொற்பூ.

(தெ. கல், தொ. 2:2, கல். 39)

**திருமகரம் ஓரணை :** (கலை) மகரமீன் வடிவம் நகாசு செய்யப்பட்ட காதணி இரண்டு. மகர குண்டலம் எனலாம். ஓரணை-ஓர் இணை. இரண்டு.

*"ஸ்ரீபதஞ்சலிதேவர் திருமேனி-இவர்க்குக் குடுத்தன திருமகரம் ஓரணையிநாற் பொன் கழஞ்சே முக்காலே நாலுமஞ்சாடி"*

(தெ. கல். தொ. 2:2. கல்-53.)

**திருமகுடம் :** (கலை) திருமேனிகளின் சிகரத்தில் அணியப்படும் திருமுடி (கிரீடம்)

**திருமஞ்சனப்புறம் :** (சம) கோயிலில் சுவாமிக்கு நாளும் அபிஷேகம் செய்ய, தண்ணீர் கொண்டு வருவானுக்குரிய வருவாயாக கோயில் நிலத்திலொரு பகுதியை இறையிலியாகச் செய்தல். திருமஞ்சனநீரில் செண்பகமொட்டு, ஏலம், விலாமிச்சைவேர் ஆகியவற்றை இட்டு மணமூட்டி அபிஷேகம் செய்வதற்கும் இந் நிவந்தம் அமைக்கப்பெறும்.

*"இந்நிலம் அரைமாவும் திருமஞ்சனப்புறமாக நாங்கள் விட்டமை யால் இதுக்கு திருமஞ்சனம் எடுக்கும் திருமேநிக்கு ஜீவனத்துக்கு வேண்டுவது இன்னாயனார் திருநாமத்துக்காணி விளை நிலத்திலே விட்டு"*

(தெ கல். தொ. 5, கல். 649)

**திருமஞ்சனம் :** (சம) கோயில் வழிபாட்டின்போது திருமேனியினை நீராட்டுவதற்குரியதாக எடுத்து வரப்பெறும் தூய நீர்.

*''காவேரி ஆற்றில் நின்றும் நாள் ஒன்றுக்கு ஒரு குட திருமஞ்சனம் சந்திராதித்தவறச் செல்வதாக விட்டமைக்கு''*

(தெ. கல். தொ. 5, கல். 658)

*'மதுராந்தகவிண்ணகர ஆழ்வார்க்கு நித்தமிரண்டு திருமஞ்சனகுடம் அபிஷேகம் பண்ணித் திருமாலை சாத்தப் பழங்காசு காலே அரைக்கால்''*

(தெ. கல். தொ. 8, கல். 38)

**திருமண்டபம் இழிச்சியெடுப்பதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி :** (வ) இடிந்த நிலையில் உள்ள கோயிலைப் புதிதாகக் கட்டத் தொடங்குமுன் அக்கோயிற் பகுதிகளில் உள்ள பழைய கல்வெட்டுகளை எழுதிக்கொண்டு பின் கோயில் ஏற்ற இடங்களில் அக்கல்வெட்டுக்களைப் பொறித்து வைப்பர்.

இச்செய்தினையே, கோயில் மண்டபத்தினை இடித்து எடுப்பதற்கு முன் அங்கிருந்த கல்வெட்டுப்படியென்று கூறப்பட்டுளது. விமானத்தினை இடித்துப் புதுப்பிக்கும்போதும் இவ்வாறே செய்வது அக்கால மரபு. இதனை '*ஸ்ரீவிமானம் இழித்துவதற்கு முன்புள்ள சிலலேகைப்படி*'' என்ற கல்வெட்டுப்பகுதி' அறிவிக்கின்றது.

*''திருமண்டபமிழிச்சு எடுப்பதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி''*

(தெ. கல். தொ. 3:1, கல். 43)

**திருமந்திர ஓலை:** (அ) அரசன் இடும் ஆணைகளையும் செய்திகளையும் ஓலையில் எழுதுபவன்.

*''உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு திருமந்திரவோலையெழுதும் அருமொழிதேவ வளநாட்டு இங்கணாட்டு ராஜகேஸரி நல்லூர் கிழவன் காறாயிலெடுத்த பாதம்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 27)

**திருமந்திர ஓலை நாயகம் :** (அ) அரசன் ஆணையைத் திருமந்திர ஓலை என்னும் அதிகாரி கேட்டபடி எழுதிய பின்னர் அவ்வோலையை அரசனிட்ட ஆணையோடு ஒப்பிட்டுப் பார்த்து அனுமதி வளங்கும் தணிக்கை அதிகாரிகள்.

**திருத்தேர் :** (சம) கோயில்களில் சிறப்பு விழாவாக இறைவன் திரு மேனியினைத் தேரில் எழுந்தருளச் செய்து வீதியில் வலமாக இழுத்து வரும் மரச்சித்திரத்தேர். இத்தேரினைப் பெருவடமிட்டு பல்லாயிரம் மக்கள் ஈர்த்து வருவது விழாச் சிறப்பாகும். தில்லை நடராசப் பெருமான் திருக்கோயிலில் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் திருத்தேர்விழா நிகழ்ந்திருப்பதனை கல்வெட்டு உணர்த்து கின்றது.

*"நாயகர் திருத்தேர் எழுந்தருளும் போது திருப்புறக்குடையில் அத்யயனம் பண்ணி சேவிக்கவும்"*

(தெ. கல். தொ. 12, கல். 245)

**திருத்துகின்ற :** (வ) முறைபெறச் செய்கின்ற, சீர் செய்கின்ற, குறைவில்லாமல் நடத்துகின்ற.

*"சர்வத்ஸர கிரமகாரியம் திருத்துகின்ற பெருமக்கள்"*

(தெ. கல். தொ. 19, கல். 62)

**திருநாமக்கிழவர் :** (சம) ஊரின் பெரிய மனிதர் பெயர் பெற்றவர். குடவோலை வழியே பெயர் சொல்லப்பட்டு ஊர்ச்சபைக்குத் தேர்ந் தெடுக்கப்பட்ட முதன்மையுடைவர்.

*"ஊற்றுக்காட்டு பூசலி வாமனனுக்கு இவ்வூரைச் சேரி திருநாமக் கிழவர்களோம் ஒட்டிக்குடுத்த பரிசாவது"*

(கம்பவர்மபல்லவன், கி.பி. 884, தெ. கல். தொ. 8, கல். 108)

*இவ்வூரைச் சேரித்திரு நாமக்கிழவர்களோம்"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 108)

**திருநாமத்துக்காணி :** (சம) கோயிலுக்குரிய சிவபெருமானின் பெய ரால் அளிக்கப் பெறும் இறையிலி நிலம்.

*"நுஞ்சை புஞ்சை திருவாறில மஹாதேவற்கு வேண்டும் நிமந்தங் களுக்குத் திருநாமத்துக் காணியாக"*

(தெ. கல். தொ. 3:1, கல். 21)

**திருநாமப்வாங்கி :** (சம) திருநாமம்–சிறப்புப்பெயர். வாங்கி–வாங்கி யது, பெற்றது. திருக்கோயில்கட்கு அளிக்கப் பெறும் சிறந்த பொருள்கட்குக் கொடுத்தாரின் பெயரும் இறைவனின் பெயரும் இட்டு வழங்குதல் இதனால் பெறப்படும்.

*"சிவபாத சேகரனென்றும் ஸ்ரீ ராஜராஜனென்றும் திருநாமம் வாங்கி கங்கில் ஒன்றும் குழல் இரண்டும் மோதிரம் ஐஞ்சும் உடைய பொன்னின் காளங்கள்."*

(தஞ்சைப்பெரிய கோயில் கலவெட்டு)

(தெ. கல். தொ. 2. கல். 1.)

தஞ்சை இராசராசேச்சரத்திற்கு இராசராசன் அளித்துள்ள சின்னங்களுள் காளம் என்னும் குழலிசைகருவிக்கு இடப்பட்டிருந்த பெயரினைக் கல்வெட்டுப் பகுதி உணர்த்துகின்றது.

**திருநாவுக்கரையர் :** (சம) திருநாவுக்கரசர்; அப்பரடிகள் தேவாரம் பாடிய மூவருள் ஒருவர். முதல் இராசராசன் ஆட்சியாண்டு 29-இல் கி.பி. 1014-ல் வேந்தன் ஆணைப்படி தஞ்சைப் பெரிய கோயில் காரியங்களின் கண்காணியாக இருந்த பொய்கை நாடு கிழவன், கோயிலில் செய்தமைத்த படிமங்களுள் ஒன்று. திரு நாவுக்கரசர் பிரதிமமாகும். இச்செயலைக்குறிக்கும் கல்வெட்டில் திருநாவுக்கரையர் என்று பெயர் குறிக்கப்பட்டுளது.

*"இரண்டு திருக்கை உடையராகக் கனமாக எழுந்தருளுவித்த திருநாவுக்கரையர் பிரதிமம் ஒன்று"*

*(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)*

(தெ. கல். தொ. 2:2. கல். 38.)

**திருநிலைக்குன்றம் :** (சம) திருநலக்குன்றம். குடுமியான் மலை. புதுகோட்டைக்கு வடமேற்கே பத்துக்கல் தொலைவிலமைந்த குன்று. வரலாற்றுச் சிறப்புடையதும் மகேந்திரவர்ம பல்லவன் காலத்தில் பொறிக்கப்பட்டதுமான தமிழிசை விளக்கக் கல்வெட்டு இக்குன்றின் கிழக்கு முகப்புப் பாறையில் உள்ளது.

(தெ. கல். தொ. 19, கல். 151.)

(இந்திய கல்வெட்டுத்துறை அறிக்கை-தொ. 12. பக்-231.)

இக்குன்று, திருநிலைக்குன்றம், திருநிலக்குன்றம், திருநலக் குன்றம் என்றெலாம் கல்வெட்டுக்களில் கூறப்பட்டுள்ளன.

*"திருநிலக்குன்றம்", "திருநலக்குன்றம்"*

(புதுக்.கல்-31, 32)

**திருநீற்றுச்சோழன் திருமடை விளாகம் :** (சம) மூன்றாம் குலோத் துங்கன் ஆட்சியில், அவனுக்கமைந்த சிறப்புப்பெயராகிய திருநீற்றுச் சோழன் என்ற பெயரால் ஜயங்கொண்டசோழ

மண்டலத்தில் தியாகவல்லி வளநாட்டு குலோத்துங்கச் சோழச் சதுர்வேதி மங்கலத்து திருவனந்தீசுவர முடையார் கோயிலிற் குரிய மடவளாகம். இப்பெயரால் வழங்கப்பட்டுளது.

(தெ. கல். தொ. 7, கல். 407)

**திருநெடுந்தாண்டகம் விண்ணப்பம் :** (சம) திருமங்கையாழ்வார் பாடியருளிய திருநெடுந்தாண்டகத்தினை திருமாலின் திருமேனிக்கு முன்னர் சன்னதியில் பாடுதல். திருக்கோயிலூர் திருவிக்கிரமப் பெருமாள், அய்ப்பசி மாதம் திருவோணநாளில் திருவேட்டை எழுந்தருளி வந்து திருவோலக்கமாக இருக்கும் போது திருமுன், திருமங்கையாழ்வார் அருளிச் செய்த "திருநெடுந்தாண்டகம்" பாடுவார்க்கு நிவந்தம் செய்யப்பெற்றுளது.

"*திருவோலக்கத்தில் திருநெடுந்ததாண்டவம் விண்ணப்பம் செய்வார்க்கு ஒரு காசு இடுவதாகவும்*"

(திருக்கோயிலூர் கல்வெட்டு) (தெ. கல். தொ. 7. கல்-139)

**திருப்பட்டம் :** (கலை) நெற்றியில் அணிவிக்கும் பொற்பட்டை. இதனை வீர பட்டம் என்றும் கூறுவர்.

"*ஸ்ரீராசராசதேவர் குடுத்த பொன்னின் திருப்பட்டம் ஒன்று*"

(தெ. கல். தொ. 2. கல். 1.)

"*சீராளதேவர் - இவர்க்கே இவர் குடுத்த வீரப்பட்டம் ஒன்று*"

(தெ. கல். தொ. 2:2, கல். 43)

**திருப்பட்டிகை :** (கலை) மேகலை வகையிலான அரைக்கச்சையணி. முதல் இராசராசன் தாம் எழுந்தருளுவித்த உமாபரமேஸ்வரியார்க்குச் செய்தளித்த அணிகலன்களுள் யானை முகப்பும் (யாளமுகம்) மட்டப் பூ பத்துர், மொட்டு ஒன்றும், விடங்கு நாலும் உள்ளதாக செய்தளித்த சிறந்த அணிகலன் மேகலை என்னும் இடை ஒப்பனை அணிகளுள் சிறந்த அமைப்புடையதாகும். ஆண் தெய்வங்களாயின் அரைக்கச்சை வடிவில் செய்யப்பெறும்.

"*திருப்பட்டிகை நாணும், அரசி மாணிக்கமும், படுகண்ணுங் கள்ளிப்பூவுங் கிண்கிணி பேரும் நாணும், மாங்காய் நாணுடையனவும் கிம்பிரிமுகமும உடையது*"

(தெ. கல். தொ. 2, கல். 93)

**திருப்பண்ணிகாரப்புறம் :** (சம) இறைவனுக்குரிய நிவேதனங்களில் பண்ணிகாரம் செய்து நிவேதனம் படைக்க வருவாயாக வைத்த நிலம்.

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 160)

**திருப்பதியம் :** (சம) திருப்பதிகம், தேவாரப் பாடல்கள், பதிகம்-பத்துப்பாடல்களின் தொகுதி.

*"உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீராஜராஜதேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும்"*

(தெ. கல். தொ. 2;3, கல். 65)

**திருப்பதியக்காணி :** (சம) சிவன் கோயில்களில் திருப்பதிகமெனும் தேவாரப் பாடல்களை நாளும் பாடுதற்கு நியமிக்கப் பெற்றவர் பெறுதற்குரியதாக விடப்பட்ட இறையிலி நிலம்.

*"இக்கோயில் திருப்பதியக்காணி இவந் கைக்கொண்டு இவன் இட்டாரே திருப்பதியம பாடவும்"*

(தெ. கல். தொ. 17, கல். 453)

**திருப்பதியம் பாடுவார் :** (சம) தேவாரத் திருப்பதியம் பாடுவார். இவர்கள் சோழர்காலத்தில் பிடாரர்கள் என்று பெயர் பெறுவர். இக்காலத்தில் ஓதுவார்கள் என்று அழைக்கப்படுகின்றனர்.

*"திருப்பதியம் பாடுவார்க்கு நெல்லு எயஉ கலத்துக்கு வைத்த பொன் ௲௰௲"*

(தெ. கல். தொ, 5, கல். 6!1)

*"விஜயநந்தி விக்கிரம பன்மர்க்கு யாண்டு ௰எ-வது படுவூர்க் கோட்டத்து மீயாறுநாட்டுத் தீர்காலி வல்லமுடைய பரமேஸ்வரர்கூ-திருப்பதியம் பாடுவாருள்ளிட்ட பல பணி செய்வார்க்கு நெல்லு நானூற்றுக் காடியும்"*

(தெ. கல். தொ. 3:1, கல். 43)

(விசயநந்தி விக்கிரம பல்லவன்—கி.பி. 830-854)

*"தெள்ளாறெறிந்த நந்திவர்மன் காலத்திலேயே திருப்பதியம் பாடும் வழக்கிருந்ததை கல்வெட்டுக்கள் குறிக்கின்றன."*

*"உடையார் ஸ்ரீ ராஜராஜீச்வரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பம் செய்ய உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மர்"*

(தெ. கல். தொ. 2;3, கல், 65)

*''தஞ்சாவூர் கூற்றத்துத் தஞ்சாவூர்ப் புறம்படித் திரிபுவன மாதேவிப் பேரங்காடி நகரத்தார்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 24)

**திரு அபிஷேக உகவை :** (அ) முடிசூட்டுவிழா செய்யப் பெற்ற மன்னனை அவ்விழா நிகழ்ச்சியாக மக்கள் மகிழ்வுடன் சென்று நேரில் கண்டு செலுத்தும் காணிக்கை. (வரி)

**திருக்கம்பி :** (கலை) கழுத்தணிகளுள் பொன்னால் செய்யப்பட்ட கம்பிக்காறை என்பதாகும். தெய்வத் திருமேனிகட்கு அணிவிக்கும் அணிகலனாதலின் திருக்கம்பி என்னும் சிறப்புப்பெயர் பெறுவதாயிற்று.

*''நங்கைபரவையார்க்குக்குடுத்தன திருக்கம்பி ஒன்று பொன் முக்காலே இரண்டு மஞ்சாடி குன்றி''*

(தெ. கல். தொ. 2:2, கல். 38)

**திருக்கற்றளி :** (கலை) கருங்கல்லால் கட்டப்பட்ட திருக்கோயில். கல் தளி கற்றளி. (தளி-கோயில்)

*'பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி ஸ்ரீராஜ்ராஜேஸ்வரம்''*

(தெ. கல். தொ 2, கல்.1)

**திருக்காவணம் :** (சம) கோயில் திருவிழாக்களிலொன்றில் இறைவன் திருமேனி எழுந்தருளுவதற்குரியதாக சோலைகளின் நடுவே அமைக்கப்பெறும் ஒப்பனை செய்யப்பட்ட பந்தல். ஓலை, மாவிலை, தாழைக்காய் தென்னைகுருத்து ஆகியவற்றால் ஒப்பனை செய்யப்பெற்று சோலையைப் போன்ற தோற்றம் கொள்வதால் காவணம் என்னும் பெயர் பெறுவதாயிற்று.

*''திருமழபாடி உடையார்-காவேரி ஆற்றிற் கெழுந்தருளவும் ஆற்றிலே திருமண்டபம் கட்டி, திருக்காவணம் இட்டு''*

(தெ. கல். தொ. 5, கல். 628)

**திருக்காற்காறை :** (கலை) தெய்வத் திருமேனிகட்கு நவமணிகள் வைத்திழைக்கப் பெற்றதாக அணியப்பெறும் கால் காப்பு (கொலுசு)

*''நங்கை வரவையார்க்குக் குடுத்தன திருக்கைக்காறை-திருக் காற்காறை''*

(தெ. கல். தொ. 2:2, கல். 38)

**திருக்குதம்பை :** (கலை) காதணிகளுள் ஒருவகை. குழை வடிவாக அமைக்கப்பெறும் காதணி.

(தெ. கல். தொ. 2:2, கல். 34)

**திருக்குதம்பைத் தகடு :** (கலை) திருமேனிகளின் காதிற்கு ஒப்பனையாகக் காதின் வடிவமாகவே பொன்னாலும், பொன்னில் மணிகள் வைத்திழைக்கப்பட்டதாகவும் செய்து சார்த்தப்படும் பொன் நகாசுத்தகடு.

*"திருக்குதம்பைத்தகடு இரண்டு பொன் மஞ்சாடியுங்குன்றி"*

(தெ. கல். தொ. 2:2, கல். 43)

**திருக்கை ஒட்டி :** (கலை) திருக்கோயில்களில் கருவறைவாயிலினைத் தொடர்ந்து இணைப்பாக அமைக்கப்படும் பொருள் காப்பகப் புரையிடம். தெய்வப் பிரசாதத்தினை மரியாதையுடன் பெறும் கருவறைமுகப்பிடம்.

*"தேவர் திருமுகம் வந்தமையில் இத்திருமுகம் திருக்கை ஒட்டிப் பண்டாரத்திலே கோத்துக் கொண்டு"* (சேர்த்துக் கொண்டு)

(தெ. கல். தொ. 12, கல். 215)

*"இக்கோயிலிற் திருக்கை ஒட்டி திருமுன் ஓதுகையும்"*

(தெ. கல். தொ 7, கல். 69)

*"விலைகொண்ட சாதனங்களும், நிலங்களில் பங்கு வரிகழிய பெரும்பற்றப் புலியூர் மூல பருஷையார் எழுதின நியோகமும் திருக்கை ஒட்டி பண்டாரத்து ஒடுக்கவும் இப்படிக்கு திருமாளிகையில் கல்வெட்டக் கடவதாக"*

(தெ. கல். தொ. 12. கல்-151.)

**திருக்கைக் காறை :** (கலை) திருமேனிகளின் கையில் அணியப் பெறும் வேலைப்பாடமைந்த பொற்காப்பு.

(தெ. கல். தொ. 2:2, கல். 34, 48.)

**திருக்கைக்கோட்டி :** (கலை) தேவாரத்திருமுறைகளைப் பாதுகாத்துப் பூசிக்குமிடமும் தேவாரம் ஓதுதற்கமைந்த இடமுமாகத் திருக்கோயில்களில் அமைந்த மண்டபம்.

(கல்வெட்டு அறிக்கை எண். 203, 414, 454/1908)

**திருக்கைப்பொட்டு :** (கலை) திருமேனிகளின் உள்ளங்கைகளில் பொருத்தப்படும் பொன் தகடு. நகாசு வேலைப்பாட்டுடன் வட்ட மாக அமைக்கப்பெறுவது.

**திருக்கை வழக்கம் :** (வ) கையில் ஒப்படைக்கும் வழக்கம். வாய் மொழியாகச் செய்யும் உரிமை வழக்கம்.

*"இவ்வீரர்கள் வீரப் பல்லவரையன் சாகையில் எனக்கு தேவர் திருக்கை வழக்கமாகத் தந்தருள நானும் உடையார் ஆட்கொண்ட தேவற்கு திருவிளக்குப் புறமாக விட்டருள"*

(தெ. கல். தொ. 12, கல். 189, பகு. 1)

**திருக்கொடிப் பிடவை :** (சம) கோயில்களில் திருவிழாக்காலத் தொடக்கமாக ஏற்படும் கொடிக்குரிய ஆடை (பிடவை-புடவை

*"நாயனார் கோயிலுக்கு மூன்று திருநாளுக்கும் திருக்கொடிப் புடவை சந்திராதித்தவரை இடக்கடவோம்"*

(தெ. கல். தொ. 8, கல். 141)

**திருக்கோசாலை ;** (சம) திருக்கோயில்கட்குரிய பசுக்கள் காக்கப் பெறும் இடம். (கொட்டில்)

*"திருக்கோசாலைச் சுரவிகளுக்கு வைக்கோல் கொண்டிடு கைக்கும்"*

(தெ. கல். தொ. 17, கல். 597)

**திருச்சனவடம் :** (கலை) திருச்சன்னவடம். மெல்லிதாக நீண்ட முத்து மாலை. சன்னம்-மெல்லிதானது. வடம்-நீண்ட மாலை. (அணிகலன்)

*"திருச்சனவடம் மூன்றி நால் முத்து ஆயிரத் திருநூற்றெழுபத் தெட்டும்"*

(தெ. கல். தொ. 5. கல். 521)

**திருச்சுண்ணம் :** (சம) உயர்ந்த மஞ்சள் பொடி.

*"திருச்சுண்ணத்திற்கு நாடன்மஞ்சள் நாற்பதின் பலமும்"*

(தெ. கல். தொ. 3:2, கல். 187)

**திருச்சுற்றாலை :** (சம) கோயிலில் கருவறையின் புறத்தே சூழ்ந்த தாகப் பிரகாரத்துடன் அமைக்கப்படும் நெடிய மதின்சுவர்கள். திருமதிலுக்கு வெளிப்புறம் நாற்புறமும் சூழ்ந்த வீதியும் இப் பெயர்பெறும்.

*"திருவையாருடையார் பெரிய புறத்திருச்சுற்றாலையில் வட வடகீழ்மூலை - திருவிழா வீதியாக"*

(தெ. கல். தொ. 5, கல். 518)

**திருச்சுற்று மாளிகை :** (சம) கோயில்கட்குரிய அங்கமாகும் திருச் சுற்று மதிளின் உட்புறமாகத் தொடர்ந்தாற்போல் கட்டப்பெறும் நெடும் மண்டபம் திருச்சுற்று மண்டபமாகும். இம்மண்டபம் மேலடுக்குடன் கட்டப்பெறுமாயின் திருச்சுற்று மாளிகை என்று பெயர் பெறும்.

(தஞ்சைப்பெரிய கோயிலிலும் கங்கைகொண்டசோழபுரம் கோயி லிலும் திருச்சுற்று மாளிகைகள் கட்டப்பட்டுள்ளன.)

*"ஸ்ரீராஜராஜதேவர் திருவாய் மொழிந்தருள இத்திருச்சுற்று மாளிகை எடுப்பித்தான்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 31)

**திருச்சூலக்கல் :** (சம) சிவன்கோயில்களுக்குரிய தேவதான நிலங் களின் எல்லைகளில் நாட்டப்பெறும் திரிசூலம் பொறித்த எல்லைக் கல்.

*"இந்நிலத்தில் நாற்பாலெல்லையிலும் திருச்சூலக் கல்லு நாட்டி"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல், 142)

**திருச்சூலத்தாபரம் :** (சம) (திருச்சூலத்தாபனம்) சிவன் கோயில் களுக்கு அளிக்கப் பெறும் தேவதான நிலங்களின் நான்கு எல்லை களிலும் சிவபெருமானின் திரிசூல இலச்சினை பொறிக்கப்பட்ட கல்லை நிலையாக நாட்டுவித்தல்.

*"இறையிலி திருநாமத்துக் காணியாகத் தந்தோம். இப்படிக்கு நாற்பாற்கெல்லைக்கும் திருச்சூல தாபரமும் பண்ணி கல்லிலும் வெட்டிக்கொள்க"*

(முதற்குலோத்துங்கன், கி. பி. 1078, தெ. கல். தொ. 7, கல். 780)

**திருத்தில் :** (வே) திருத்தம் செய்யப்பட்ட நிலம்.

*"இத்தேவர் ஊரான சோதியம் பாக்கத்து ஊரின் மேலை புதுத் திருத்தில் அரையும்"*

(புது திருத்தல் அரை-புதிதாகத் திருத்தம் செய்யப்பட்ட நிலத்தில் அரைமாவும்)

(தெ. கல். தொ. 3:1, கல். 11)

*''மொழிந்தருளினபடிக்கு, திருமந்திர ஓலை எழுத்தினானும், திரு மந்திரஓலை நாயகம் அச்சுதன இராசராசனான தொண்டைமானும் ராஜராஜபிர்மாதிராஜனும் — இவர்களுடன் ஒப்பிட்டுப் புகுந்த கேள்விப்படியே''*

(தெ. கல். தொ. 3:1, கல். 20)

**திருமந்திர போனகப் புறம் :** (சம) கோயில் சுவாமிக்கு சந்தி வழி பாட்டின்போது மந்திரம் ஓதி நிவேதன உணவுப் படைப்பதற் குரிய வருவாயாக வைக்கப்பெறும் நிலம் அல்லது ஊர்.

*'நாயனாற்கு திருமந்திரப் போனகப்புறமாக விட்ட என்பற்றில் மடப்பள்ளியில் குமிழியூரும் தீர்த்தமும் ஆக இவ்விரண்டூரும்''*

(குலோத்துங்க சோழன், தெ. கல். தொ. 8, கல். 130)

**திருமாலை :** (கலை) இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட நெடிய மாலை, இரத்தின மாலை.

**திருமாளிகை :** (சம) திருச்சுற்று, திருச்சுற்றுத் தொடர் மண்டபம். திருச்சுற்று மதிள். பிரகாரத்தில் மதிளைச் சார்ந்ததாகக் கட்டப் பெறும் நெடிய மண்டபம்.

*''இக்கோயிலில் திருமாளிகைப் பிள்ளையார்க்கு — அமுதுசெய் விக்கைக்கு''*

(தெ. கல். தொ. 8. கல். 27)

**திருமாளிகைக்கூறு :** ( ) கோயில் பிரகாரங்களில் அமைக்கப் படும் பரிவார தெய்வங்கட்குரிய அர்ச்சகர்கட்கு, கோயில் நிர் வாகத்தினர் பங்காகப் பிரித்து அளிக்கும் செயல்.

*''அருளுடையான் கோயிலுக்குச் சமுதாயத் திருமாளிகைக் கூறு தில்லையம் பலப்பல்லவராயனும்''*

(தெ. கல். தொ. 4, கல். 222)

**திருமுகம் :** (அ) அரசனுடைய ஆணை ஓலை. சாசனம் எனினுமாம், அரசன் ஓலை வழி இடும் கட்டளை. இது ; ஸ்ரீமுகம் என்றும் கூறப்பெறும்.

ஸ்ரீ ராஜராஜதேவர்க்கு யாண்டு இருபத்தொன்றாவது, நாட்டோ முக்குத் திருமுகம் வர நாட்டோமும் திருமுகம் கண்டு எதிரெழுந்து

சென்று தொழுது வாங்கித் தலைமேல் வைத்துப் பிடி சூழ்ந்து பிடாகை எல்லை தெரித்து-அறவோலை செய்த நிலம்.

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**திருமுகத்தேவை :** (அ) அரசுவழி தற்காலிகமாக அதிகாரம் பெற்றவனும் கிராமத்தையோ ஊரையோ கண்காணித்து வருபவனும், குற்றவாளிகளைச் சிறைப்பிடிக்கும் அதிகாரமுள்ளவனுமாகிய ஆள். இவனுக்குரியதாக அமைந்த வரியும் உண்டு. இவர்கள் மக்கள் சேவகர் என்ற பெயரும் பெறுவர்.

*"திருமுகத் தேவைக்கு ஆளாய் வந்தது—பெருங்குடிகள் பேரால் கடமைக்கு வெள்ளாழரைச் சிறைபிடித்தல் இவர்கள் அகங்களில் ஒடுக்குதல் செய்யக் கடவதல்லாதாகவும்"*

(தெ. கல் தொ. 6, கல் 48-50)

*"மக்கள் சேவகப் பேற்றுக்குப் பரப்பு ஒரு மாவுக்கு குறுணியாகத் தண்டுக்கிற நெல்லு மக்கட் சேவகர் கொண்டு சிறுமுறியெடுத்துத் தேவை செய்விக்கவும் திருமுகத் தேவையாய் வரும் ஆளும்"*

(தெ. கல். தொ. 6, கல். 58)

**திருமுகமருளுதல் :** (அ) அரசன் ஓலைவழிக் கட்டளை, யிட்டருளுதல். திருமுகக் கட்டளை கிராமசபையாரும் செய்தலுண்டு. இதனை

*"அந் நிலத்திற்குக் கல்நாட்டுச் சிலாலேகை செய்து கொள்க என்று சபை திருமுகமருளிச் செய்த திருமுகப்படி"*

என்னும் திருப்பாற்கடல் கல்வெட்டாலும் அறியலாம்.

**திருமுட்டு :** (சம) திருக்கோயில்களில் வழிபாட்டுக்குரிய பாத்திரங்கள் சின்னங்கள், ஆகியவற்றுடன். நிவேதன உணவு அட்டுவதற்கான உலோகப் பானை, சட்டுவம், வட்டில் முதலிய பாத்திரங்கள் (தட்டு-முட்டு சாமான்கள் வழக்கு)

*"இக்கோயில் ஸ்தானத்தாரை தண்டிய திருவாபரணங்கள் உள்ளனவும், திருமுட்டு உள்ளனவும்".*

(தெ. கல். தொ. 8, கல். 2.)

**திருமுற்றம் :** (சம) கோயில்களின் முன்வாயிலாகும் தோரணவாயிலுக்கும் உள்ளே தொடரும் மகாமண்டபம் அல்லது முகமண்டபத்திற்கும் இடைப்பட்ட வெளியிடம்.

*"கீழைத் திருமுற்றத்தே தர்மம் செய்து கூட்டம் குறைவறக் கூடி"*

(தெ. கல். தொ: 7, கல். 499)

**திருமுறைத் தேவாரச் செல்வன் :** (சம) திருமுறைகளாக வகுக்கப் பட்ட தேவாரத் திருப்பதிகங்களை அருளிச் செய்த திருஞான சம்பந்தர்.

*"திருக்கழுமல நாட்டு திருக்கழுமலத்து (சீர்காழி) உடையார் திருத்தோணீசுரமுடைய நாயனார் திருக்கோயிலின் வடக்கில் திருமடை வளாசத்து திருமுறைத் தேவாரச் செல்வன் திருமடத்து"*

(தெ. கல். தொ. 8. கல். 205)

**திருமெய்ப்பூச்சுச் சந்தனம் :** (சம) திருமேனிகட்கு சிறப்புத் திரு நாளில் அணிவிக்கும் சந்தனக்காப்பு. நாளும் அணிவிக்கும் சந்தனம்.

*"திருமெய்ப்பூச்சுச் சந்தனஞ் ஸ்ரீகண்டத்து ஓராண்டைக்கு காசு அரையும்"*

(தெ. கல். தொ. 5, கல். 724)

**திருமெழுக்குப்புறம் :** (சம) கோயிற் பகுதிகளையும் திருமுற்றத்தி னையும் நாளும் தண்ணீர் தெளித்தும், சாணமிட்டும் மெழுகு வார்க்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம். நிவந்தம்.

*"திருமெழுக்கு இடுவாளொருத்திக்கு நெல்லு நாழிஉரியும்"*

(தெ. கல். தொ. 5, கல். 578)

**திருமேனி :** (சம) கடவுளரின் பல்வேறுபட்ட மூர்த்தங்களை ஆகம சாத்திரவழி, பொன்னாலும் பிற உலோகத்தாலும் அமைக்கும் சிலை.

*"பெரிய பெருமாளுக்குத் தேவார தேவாரக எழுந்தருளுவித்த தேவர் பாதாதி கேசாந்தம் ஐவிரலே இரண்டு தோரை உசரத்து நாலு ஸ்ரீஹஸ்தமும் உடையாராகக் கனமாகப் பித்தளையால் எழுந்தருளுவித்த சந்திரசேகர தேவர் திருமேனி ஒன்று"*

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 2:2, கல். 38)

**திருமேனிகள் :** (சம) திருநீறு அணிந்து திருத்தொண்டு செய்யும் சிவனடியார்கள். நந்தவனக்குடிகள்.

*"நந்தவனம் செய்யும் திருமேனிக்கு"*

(தெ. கல். தொ. 8, கல். 194)

*"உடையார் தம்பரிசுடையார்க்கு இரந்து திருவிளக்கும் இட்டு, திருத்தொண்டும் செய்கிற திருமேனிகளுக்கு விக்கிரமசோழன் திருவீதியில் திருமடம் ... நடத்தி"*

(தெ. கல். தொ. 8, கல். 200)

**திருவக்கரை :** (சம) தென்னாற்காடு மாவட்டம், விழுப்புரம் வட்டத்திலுள்ள சிவத்தலம். இக் கோயிலைச் செம்பியன் மாதேவியார் கி. பி. 1001-ல் "சிவலோகம்" என்ற பெயரால் கற்றளியாகக் கட்டியுள்ளார்.

*"சோராஜராஜகேஸரி வந்மற்கு யாண்டு கரு ஆவது ஸ்ரீகண்டராதித்த தேவர் நம்பிராட்டியார் ஸ்ரீ உத்தம சோழரைத் திருவயிறு வாய்த்த உடைய பிராட்டியார் செம்பியன் மாதேவியார் எடுப்பித்தருளின ஸ்ரீ திருவக்கரை திருக்கற்றளி சிவலோகம்"*

(தெ. கல். தொ. 17, கல். 222)

**திருவக்கிரம் :** (சம) திருஅக்கிரம். மேலான முதல் மரியாதை உணவு. சிறந்த அக்கிரதானம்.

முதற்குலோத்துங்கன் ஆட்சியில் திருவகீந்திரபுரம் திருமால் கோயிலில் நாளும் பத்துக்கலம் திருவக்கிர உணவு தயாரிக்கப் பட்டு வைணவ பிராமணர்கட்கு அளிக்கப்பட்டது.

*"திருவயிந்திரபுரத்தாழ்வானுக்கு திருநாட்களில் எழுந்தருளவும் இக்கோயிலில் நித்தம் பத்துக்கலம் திருவக்கிரம் உண்ணக்கடவதாகவும்"*

(முதற்குலோத்துங்கன் — கி. பி. 1092, தெ. கல். தொ. 7, கல். 760)

**திருவடிக்காறை :** (கலை) திருக்கோயில்களில் செய்து அமைக்கப் பெறும் தெய்வத்திருமேனிகட்கு அளிக்கப்பெறும் அணிகலன்களுள், கணுக்காலுக்கு மேல் பிடிப்பாக அணிவிக்கப் பெறும் அரை வட்டப் புடைப்பாக அமைந்த நகாசுக் கொலுசு. இக்காறையணிகை, கால், கழுத்து ஆகிய உறுப்புக்களிலும் ஏற்புடைய முறையில் இரத்தினக்கற்களாலும் முத்துக்களாலும் ஒப்பனை செய்யப்பட்டு

முறையே கைக்காறை, அடிக்காறை, பட்டைக்காறை என்ற பெயர்களுடன் சோழநாட்டில் விளங்கியதைத் தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

*"திருக்கைக்காறை ஒன்று பொன் அறுகழஞ்சே கடல்"*

*"திருவடிக்காறை பொன்னின் பட்டை மேற்-கோத்தமுத்து"*

*"நம்பிராட்டியார்க்குக் குடுத்தன பொன்னின் பட்டைக்காறை மேல் கோத்த திருவில் கட்டின வயிரம்"*

(தெ. கல். தொ. 2:2, கல் 86, 51, 48)

**திருவடிகள் :** (சம) கோயில் இறைவன் (வைணவ சமய வழக்கு).

*"திருவடிகட்கு திருவமிர்து முட்ட"*

(திருவல்லிக்கேணி கல்வெட்டு) (இந்திய கல்வெட்டுத்துறை.)

(தொ. 8, கல். 29)

**திருவடிகள் தேவதானம் :** (சம) திருமால் கோயில்களுக்குரிய வருவாயாக அமைக்கப்பட்ட இறையிலி நிலங்கள். தேவதானம் - சைவ, வைணவ கோயில்களுக்குரிய இறையிலி நிலங்களைக் குறிக்கும் பொதுச் சொல்.

*"மஹாதேவர் தேவதானங்களும், திருவடிகள் தேவதானங்களும்"*

(முதல் இராசராசன், கி. பி. 1014, தெ. கல். தொ 2, கல். 4)

**திருவடி நிலை :** (சம) பாதத்திலணியும் குறடு, நிலை-காலணி. குறடு.

*"திருவடி நிலையில் எழுந்தருளி பலிக்கு எழுந்தருளு நின்ராராகக் கனமாக எழுந்தருளுவித்த பிச்சதேவர் திருமேனி ஒன்று"*

(தஞ்சை பெரிய கோயில் கல்வெட்டு, தெ கல். தொ. 2:2, கல். 34)

**திருவடி பிடிப்பான் :** (சம) திருமால் கோயில் அர்ச்சகர். வைணவ வழக்குப் பெயர்.

*"பூபால சுந்தர விண்ணகர் எம்பெருமான் கோயிற் திருவடி பிடிக்கும் காஸ்யபன் ஸ்ரீ கிரஷ்ணபட்ட நின்ற நம்பி"*

(தெ. கல். தொ. 8, கல். 340)

**திருவமிர்து** : (சம) திருவமுது. கோயில்களில் இறை வழிபாட்டிற் கெனத் தூய முறையில் ஆக்கப்பெறும் நிவேதன உணவு.

*"குலங்கிழார்கள் கருமாரச்சேரி புலம் ஒற்றியிட்டு நாற்பத்தைங் காடி நெல் பொலியூட்ட, திருவடிகட்கு திருவமிர்து முட்ட"*

(தந்திவர்மன், கி.பி. 789. கல்வெட்டு அறிக்கை தொ. 8, எண். 29)

*"நடுவிற்றளி தேவர்-திருவமுதுக்கு நில நிவந்தம் செய்தபடி"*

(தெ. கல். தொ. 5, கல். 612)

*"திருவமுது காட்டுவா னொருவனும்"*

(தெ. கல். தொ. 19, கல். 62)

*"பரமேஸ்வரர்க்கு திருவமிர்தும் திருவமிர்துக்கு வேண்டுவன வும்"*

(புதுக்.கல்.63)

**திருவலகு திருமெழுக்கு** : (சம) கோயிற் பகுதிகளைத் தூய்மை செய்ய நாளும் பெருக்குதல், திருவலகிடுதல் சாணமிட்டு மெழுகு தல், திருமெழுக்கிடுதல் என்பதாம். இப்பணியினைப் பெண்கள் புரிவர்.

*"திருவலகு திருமெழுக்கிவாளொருத்திக்கு நெல்லு நாழி உரியும்"*

(தெ. கல். தொ. 5, கல். 578)

*"திருவலகிட்டுத் திருமெழுக்கு இடுவார் இருவர்க்கு நிசதம் நெல்லு*

*"அறுநாழி"*

(தெ கல். தொ. 17, கல். 243)

**திருவண்ணாமலை** : (சம) திருவண்ணாமலைக் கோயிலில் இருந்த மரக்கால்.

*"ஆக நாள் ஒன்றினுக்கு திருவண்ணாமலை என்னும் மரக்காலால் நெல்லு ஐங்குறுணி"*

(தெ. கல். தொ. 8, கல். 66)

**திருவணுக்கன் திருவாசல்** : (சம) கோயில்களில் இறைவன் திரு மேனி எழுந்தருளப் பெற்றுள்ள கருவறைக்குரிய வாயில் அணுக் கன் திருவாயிலாகும்.

*"திருச்செந்துறை உடைய மஹாதேவர் கோயில் திருவணுக்கன் திருவாசலுக்குள்ளே ஒரு நந்தா விளக்கு எடுக்கக் கடவோமாக"*

(தெ. கல். தொ. 8, கல். 622)

*"திருக்கோயில் கர்பகிரகத்துக்குள் திருவணுக்கன் திருவாசலில்"*

(தெ. கல். தொ. 5. கல். 427)

**திருவயிறு வாய்த்தல் :** (வ) மகளிர் கருவுறப் பெறுதல்.

*"ஸ்ரீ உத்தம சோழரைத் திருவயிறு வாய்த்த உடைய பிராட்டியார் செம்பியன் மாதேவியார்"*

(தெ. கல். தொ. 17. கல். 222)

**திருவாய்க்கேள்வி :** (அ) அரசன் கூறியதைக்கேட்டு வந்து திருமந்திர ஓலையிடம் அறிவிப்போர். அரசனிடும் உத்தரவுகளை நேரில் கேட்டறிந்து செயல்படுத்தும் அணுக்கவதிகாரி.

*"உடையார் ஸ்ரீராஜேந்திரசோழதேவர் திருவாய் மொழிந்தருளத் திருமந்திர ஓலை, செம்பியன் விழுப்பரையன் எழுத்தினால், திருவாய்க் கேள்விப்படி கல்லில் வெட்டித்து"*

(தெ. கல். தொ. 2:1, பக். 106)

**திருவாய் மொழிந்தருளி :** (அ) அரசன் தான் செய்ய விரும்பிய அறச் செயலை சொல்லியருளியபடி (அதிகாரிகள் முறையாகச் செயல் படுத்துவர்).

*"திருவாய் மொழிந்தருளி, கேள்விப்படியும் திருமுகப் படியும் கல்லிலும் செம்பிலும் வெட்டின"*

(தெ. கல். தொ. 8, கல். 225)

**திருவாராதனை :** (சம) கோயிலில் மூலவர்க்கும் பரிவாரதெய்வங்கட்கும், நாள்தோறும் கால முறையோடு செய்யும் வழிபாடு.

(தெ. கல். தொ. 5, கல். 578. முதல் இராசேந்திரன்)

*"திருப்பழுவூர் பரமேஸ்வரரை திருவாராதனை செய்வார்"*

(திருவாராதனை செய்வார்-ஆகமமுறைப்படி வழிபாடு செய்யும் அர்ச்சகர்)

(தெ. கல். தொ, 19. கல். 54.)

**திருவாழிக்கல்லு :** (சம) திருமாலுக்குரிய சங்கு சக்கரவடிவினைத் தலைப்பு முகப்பில் பொறித்து வைணவக் கோயில்களுக்கு விடப் பட்ட இறையிலி நிலங்கட்குரிய எம்லைக் கற்களாக நிறுத்தும் குத்துக்கல்.

*"நாலு மூலையிலு திருவாழிக்கல்லு நாட்டி"*

(தெ. கல். தொ. 12, கல். 170, பகு. 1)

**திருவாழியும் சித்திரமேழியும் இட்ட கல் :** (சம) திருமாலுக்குரிய சக்கரமும், வேளாளர்க்குரிய இலச்சினையாகும் சித்திரமேழியும் பொறிக்கப்பட்ட எல்லைக்கல். திருமால் கோயில்களுக்குத் திரு விடையாட்டமாக விடப்பெறும் நிலங்களுக்குரிய எல்லைக்கற் களில் இவ்வாறு இலச்சினைபொறித்து நடுதல் வழக்காகும்.

*"இருநூற்றைம்பது குழியும் நீர்நிலத்திலே விட்டு நாலு மூலை யிலுந் திருவாழியுஞ் சித்திரமேழியும் இட்டகல் நட்டுச் சந்திராதித் தவரை செல்லக் கடவதாக மேழிபிடித்துக் கடவரெல்லாரும் விடக்கடவராகவும்"*

(தெ. கல். தொ. 5, கல். 496)

**திருவாழியாழ்வார் :** (சம) சக்கரத்தாழ்வார். பெருமாள் திருமேனி மூர்த்தங்களுள் ஒன்று. சக்கரத்தின் நடுவே நின்றருளும் பாங்கில் செய்யப்பெறும் திருமேனி.

*"திருவிடையாட்டமாக விட்ட நிலம் இரண்டு வேலியும் திருவாழி யாழ்வாரை எழுந்தருளுவித்துக் குடுத்தோம்"*.

(தெ. கல். தொ. 4, கல். 859)

**திருவாளத்தி :** (சம) இறைவழிபாட்டில் ஆகமவிதிப்படி அர்ச்சகர் எடுத்துக்காட்டும் பெருந்திருவிளக்கு.

*"இத்தேவர்க்கு மந்திரா தீபத்துக்கும் அந்திக் காப்புக்கும் திரு வாளத்திக்கும் நிசதம் நெய் ஆழாக்காக"*

(தெ. கல். தொ. 17, கல். 319)

**திருவாளர் :** (வ) மரியாதைப்பெயர். திருவாளர் என்று இயற் பெயருக்கு முன்னர் கூறப்பெறும் தமிழ் மரியாதைப் பெயர். சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியன் ஆட்சியிலேயே (கி.பி.) 12-ம் நூற்றாண்டு) பாண்டி நாட்டு வழக்கிலிருந்ததை புதுக்கோட்டை கல்வெட்டுத் தொகுதி-எண் 249 காட்டுகின்றது.

தலைமையானவர்கட்கு, ''திருவாளர் சோலை மூவேந்த வேளான்'' என்றும் அடுத்த நிலை அதிகாரிகட்கு,

''திருவன் சோழ மூவேந்த வேளான்'' - என்றும் முறையாக இச்சிறப்புப்பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன.

**திருவிடு :** (சம) மனை, நிலம் ஆகியவற்றைப் பெறுவார்கட்கு அறமாகவிட்டு அவர்க்கே உரிமை செய்தல் திருவிடு என்பதாகும்.

*''தாமே அனுபவித்து தம்முடைய மடம் நன்றாக நடத்தக் கடவர் ஆகவும், இப்படிக்குத் திருவிடு இட்டுக் குடுத்தமைக்கு இவை பல்லவ ராயர் எழுத்து''*

(தெ. கல், தொ. 7, கல். 108)

**திருவிழாப்புறம் :** (சம) திருக்கோயில்களில் இறைவன் திரு வீதிகளில் திருவுலாக் கொண்டெழுந்தருளுகைக்குரிய செல வினங்கட்காகும் வருவாயாக விடப்பெறும் இறையிலி நிலம்.

*இந்நிலத்தில் இத்திருவிழாவுக்கு உடலாகக்கொண்டு திருவிழா எழுந்தருளுவிக்கக் கடவார்களாக''*

(தெ. கல். தொ. 8, கல். 187)

*' கற்குறிச்சித் திருக்கற்றளி ஆழ்வார்க்கு திருவிழாப்புறமாகச் செய்து குடுத்த பூமி''*

(புதுக். கல். 38)

**திருவிளக்குடையார் :** (சம) தீவர்த்தி பிடிக்கும் கோயில் பணியாளர்.

**திருவிளக்குப்பட்டி :** (சம) கோயிலில் திருவிளக்கு எரிப்பதற்குரிய நிவந்தமாக அளிக்கப்பெற்ற இறையிலி நிலம் அல்லது ஊர்.

*''அந்தியம் போழ்து துடங்கி திருவர்த்த சாமம் அறுதியாக எரிக்க கடவதான விளக்குக்கு இசைந்தபடியே திருவிளக்குப் பட்டியாக இந்நிலம் கொண்டுவிட்டேன்''*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 176)

**திருவிளக்கு முதல் :** (சம) கோயிலில் நாளும் எரிப்பிக்கும் திரு விளக்குச் செலவுக்குரிய முதலாக வைக்கப்பட்ட நிவந்தப் பொருள்.

*"திருவேங்கடக் கோட்டத்து எம்பெருமானடிகளுக்கு எழுந்தருளுவித்த திருவிளங்கோயிற் பெருமானடிகளுக்குச் சோழநாட்டுச் சோழனார் உலகப் பெருமானார் வைத்த திருவிளக்கு முதல் முப்பதின் கழஞ்சு"*

(விசயதந்தி விக்கிரமவர்மன் — கி.பி. 824, தெ. கல். தொ. 12, கல். 43)

திருவிளக்குப் பிடிக்கும் கூனர் குறளர் : (சம) இரவுக் காலங்களில் ஊர்த் தெருக்களில் திருவிளக்குப் பிடிப்பதற்கு பிறவிக் கூனரும் குள்ளரும் சோழர்காலத்தில் தொழில் செய்து வந்துள்ளனர். அவர்கட்கு ஊர்ச்சபையார் 'குடிவிலை நிலம்' என்ற பெயரால். இறையிலி நிலமும் அளித்துள்ளனர்.

*"இன்னாட்டு ஆலூர் கூற்றத்து திருவிளக்குப் பிடிக்கும் கூனர் குறளர் இறையிலியாந நிலம்"*

(தெ. கல். தொ. 8, கல். 204)

திருவிளக்குப்புறம் : (சம) திருக்கோயில்களில் நாளும் எரிவதற்கு அமைக்கப்பெறும் திருவிளக்குகட்குரிய நெய் அல்லது எண்ணெய் ஆகியவற்றிற்காகும் செலவினங்கட்கு விளக்கிட்டார் இட்டு வைக்கும் நிலம். ஆடுகள், பசுக்கள் இவற்றிற்கு அரசு இறையிலி செய்தல் அக்கால நியதியாகும்.

*"இன்னிலம் ஆறேமாகாணி முந்திரியைகைக் கீழெட்டு மா முக்காணியும் இவ்வாண்டு பாசன முதல் திருவிளக்குப் புறமாசத் திருநாமத்துக் காணியாகக் குடுத்தமைக்கு"*

(தெ. கல். தொ. 5, கல். 554)

திருவீதி மடப்புறம் : (சம) கோயிலைச் சுற்றிலுமுள்ள தெருக்களை நாளும் பெருக்கித் தூய்மை செய்யும் ஆண்டார்கள் எனப்படும் கோயிற் பணியாளர் தங்கி உணவு பெறும் இடமே திருவீதி மடமாகும். அம்மடத்திற்கமைந்த செலவினங்கட்குரிய வருவாயாக அளிக்கப்பெறும் இறையிலி நிலமே, திருவீதி மடப்புற மாகும்.

*"திருவேோத்துடையாற்கு திருவீதி பணி செய்யும் திருவீதி ஆண்டார்களுக்கு அமுது செய்கைக்கு திருவீதி மடப்புறமாக நிலம் இறையிலியாக விற்று விலையாவனம் செய்து குடுத்தோம்"*
(தெ. கல். தொ. 7, கல். 97)

திருவுடம்புகள் : (சம) தெய்வத்திருமேனிகள். தெய்வச்சிலைகள்.

*"திருப்பள்ளியறை நாச்சியார் முதலாக உள்ள திருவுடம்புகளும் ஏறியருளப்பண்ணுவித்து"*

(திருவாங்கூர் கல். தொ. 1, பக். 91)

**திருவுண்ணாழிகை :** (சம) கருப்ப இல். கோயில் கருவறை. கோயிலுக்குரிய திருமேனி எழுந்தருளப்பெற்றுள்ள இடம்.

*"திருவகத்தீஸ்வரத்து பரமேஸ்வரர் திருவுண்ணாழி கையிலே சந்திராதித்தவற் எரிய வைத்த திருநொந்தா விளக்கு"*

(புதுக். கல். 83.)

*"உண்ணாழிகையாருமையாளொடும்"*

(திருவீழி மிழலைத் திருத்தாண்டகம் - அப்பர்)

**திருவுண்ணாழிகைச் சபையார் :** (சம) கோயில் வழிபாட்டு முறைமைகளையும், திர்வாகத்தினையும் நடத்திவரும் அர்ச்சகர் உள்ளிட்ட பல பணியாளரடங்கிய சபையார். இத்தகைய சபை குன்றத்தூர் கோயிலில் இருந்துள்ளது.

*"குன்றத்தூர் திருநாகீஸ்வரமுடைய நாயனார் கோயில் காணியுடைய திருவுண்ணாழிகைச் சபையோம்"*

(தெ. கல். தொ. 12, கல். 204)

**திருவுண்ணாழிகைப்புறம் :** (சம) கோயிலில் மூலவர் முதலாக அமைந்த திருமேனிகட்கு நாளும் நிகழும் திருவமிர்து முதலான வழிபாட்டுச் செலவினங்களுக்குரிய மூலவருவாயாக அமைக்கப் பட்ட விளைநிலம்.

*"கோயில் பெருமானடிகளுக்கு திருவுண்ணாழிகைப்புறம் திருவமிர்து செறுவாக"*

(தெ கல். தொ. 17, கல். 291)

*"எம்முர் திருமேற்றளி அடிகளுக்கு உண்ணாழிகைப் புறம் நிசதி உழக்கெண்ணை"*

(தெ. கல். தொ. 17, கல். 67)

**திருவுலகளந்தருளினபடி பன்னீரடிக்கோல் :** (அ) முதற்லோத்துங்கன் ஆட்சியில் சோழநாட்டில் நிலவிய நிலமளக்கும் கோல். இந்நில மளக்கும் கோல் 12 அடி நீளமுள்ளதாகும். இதன் சதுரம் - 1 குழியாகும்.

**திருவுளகளந்தேறிந நிலம் :** (அ) ஒரூரிற்குரிய நன்செய் புன்செய் தரிசு நிலங்களை அதிகாரிகள் அளந்து ஊர் நிலக்கணக்கில் சேர்க்கப்பட்ட நிலம்.

*''வண்ணக் குடியான தியாக சமுத்திர சதுர்வேதி மங்கலம் திருவுலகளந்தேறிந நிலம் உள்பட''*

(தெ. கல். தொ. 23, கல். 273, விக்கிரமசோழன் - கி.பி. 1124)

**திருவுலகளவின் படி :** (அ) ஆட்சிக்குட்பட்ட நிலங்களை அளந்த அளவின்படி. கோயிலுக்கு நிவந்தமாக விடப்பட்ட நிலங்களை நாட்டளவுக் கோலால் அளந்தபடி.

*''விட்டநிலம் திருவுலகளவின்படி பந்நீரடிக் கோலால் குழி ஆயிரத்துக்கும்''*

(தெ. கல். தொ. 7, கல். 432)

**திருவெழுச்சிக் குடிமை :** அரசன் நாடு சுற்றிப் பார்க்குங்கால், ஓர் ஊருக்கு வருதற்குச் செலவாகும் தொகைக்கு ஊரார் கொடுக்கும் வரிவகை. இவ்வரி நாடென்ற வரியாகும்.

*''உலகுடைய நாயனார் எழுந்தருளினால் திருவெழுச்சிக் குடிமை முதலாக நாடென்ற வரியும்''*

(புதுக்கோட்டை கல்வெட்டுத் தொகுதி, கல். 250)

**திருவெழுச்சிப் பேறு :** (அ) அரசன் தன் ஆட்சிக் குட்பட்ட ஊர்கட்குச் சென்று நேரில் நிலைமையினை விசாரணை செய்தற்குரியதாக மக்கள் செலுத்தும் காணிக்கை.

**திருவெழுத்து :** (அ) அரசனின் கையொப்பம்.

*''திருவெழுத்துச் சாத்தி இவை திருமந்திர ஓலை எழுத்து''*

(தெ. கல். தொ. 5. கல். 987)

**திருவையாறன் :** (சம) (நாழி) முதல் இராசராசன் ஆட்சியில் திருவையாறுடையார் கோயிலில் நெய் அளத்தற்கிருந்த நாழியின் பெயர்.

*''சந்திராதித்தவற் திருவையாறனால் உழக்கேய் ஒரு பிடி அரை நெய்யால்''*

(தெ. கல். தொ. 5, கல். 550)

**திரையன் :** (அ) பல்லவ மன்னரின் முன்னோருள் முதல்வன், கடல் வழி வரப் பெற்றுக் காஞ்சியில் ஆட்சி பெற்றமையால் ''திரையன்'' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றனன் என்பர். ''தொண்டைமான் இளந்திரையன்.''

அவன் வழி வந்தாருள் சிலர் திரையன் என்ற பெயரைத் தன் இயற்பெயருக்கு முன்னர்ப் பட்டப்பெயராக வைத்துக் கொண்டுள்ளதைச் சோழர் காலக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

*''செயங்கொண்ட சோழ நல்லூர் திரையன் மா தேவடிகள் திரையன் ஒற்றிகண்டான்'', ''திரையன் தேவர் கண்டன்''*
(விக்கிரமசோழன் - தெ. கல். தொ. 8, கல். 24. 25, 27)

**திறப்பில் :** (வ) ஊராட்சிக்கமைந்த பொதுப் பொறுப்பாகக் கடமை பெறும் நிலத்தில், ஊர்ப்பொதுவாக ஒதுக்கியுள்ள நிலக் கணக்கில்.

*''திருநாமத்துக் காணியாய் திறப்பில் இறுக்கும் நிலம் முன்னாள் இருபத்தொன்றாவது முதல் ஊரோட கூடி முன்னில் இறுக்கும் கடமை''*
(தெ. கல். தொ. 8, கல். 193)

**திறப்பு நத்தமனை :** (வ) ஊரைச்சார்ந்து புதிதாக வளர்ச்சியடைந்த குடியிருப்பு மனை நிலம். நத்தப்பகுதி.
*''குலோத்துங்க சோழ மங்கலத்து, எடுத்தபாத நல்லூர் திறப்பு நத்த மனை''*
(தெ. கல். தொ. 5, கல். 650)

**திறப்பில் :** (மொ) தவறினால். மாறுபடில்.
*''இதிற்றிறம்பில் தர்மாசனத்து நிசதி எட்டரை சாணம் தண்டப் படுவோமானோம்''*
(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 100)

**தீப்போக்கு செம்பொன் :** (மொ) தீயில் உருக்கினும் மாற்றுக் குறையாத செம்மையான பொன்.
*''விலைப்பொருள் தீப்போக்கு செம்பொன் கழஞ்சு''*
(தெ. கல். தொ. 5, கல். 669)

**தீபமாலை :** (சம) திருக்கோயில் கருவறை வாயிலின் பக்கங்களில் மாலைக்காலத்தில் வரிசையாக ஏற்றும் விளக்கு. வழிபாட்டில் எடுத்துக்காட்டும் அடுக்கு தீபம்.
*''இரண்டு நொந்தாவிளக்குக்கும் ஸந்திகளில் தீப மாலைகளுக்கும் தேவபோகமாவதாகவும்''*
(தெ. கல். தொ. 3:1, கல். 12)
*''அந்தியம்போது திருவமுது செய்கிற்று தீபமாலை காட்டப் பசுவின் நறுநெய் நியதி உழக்கு''*
(தெ. கல். தொ. 14, கல். 16.அ.)

**தீயெரி :** (அ) சூளையிடுதல் போன்ற பெருந்தீயிட்டு ஆக்கும் தொழில் கட்கு அரசுபெறும் வரி.

**தீவாந்தரத்துப் பூபாலர் :** (அ) தீவு நாடுகளிலுள்ள அரசர். கடல் கடந்த நாட்டரசர்.

*"வார்கடற் றிவாந்தரத்துப் பூபாலர் திறைவிடு கலஞ்சொறி களிறு முறை நிற்ப"*

(முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)

**தீக்ஷித்தார் :** (சம) சிவ தீட்க்ஷை பெற்றாராய் திருக்கோயில்களில் அர்ச்சனை வழிபாட்டிற்குரிய பணி செய்வார்.

*"திருப்பரிசாரகஞ் செயும் மாணி ஒருவனுக்கு நிசதம் நெல்லுப் பதக்கும் இவர்களிலே நிலயாய் தீக்ஷித்தார் பதின்மர்க்குப் பேராற் நிசதம் நெல்லு முக்குறுணியும்"*

(தெ கல். தொ. 2, கல். 66)

**துஞ்சா விளக்கு :** (சம) கருவறையில் திருமேனிக்கு முன்னர் எக் காலத்தும் தொடர்ந்து எரியுமாறு செய்யப்பெறும் திருவிளக்கு. இதனைத் தூண்டாவிளக்கு, நுந்தாவிளக்கு என்றும் கூறுவர்.

*"வைகாவூர் திருமலை யக்ஷி படாரர்க்குத் துஞ்சா விளக்கொன்று வைத்தார்"*

(தெ. கல். தொ. 23, கல். 65, கன்னரதேவர்—கி.பி. 953)

**துடந்தடிமை கொண்டான் :** (சம) தொடர்ந்து அடிமை கொண்டவன். சுந்தரரைத் தொடர்ந்து சென்று அடிமையாக்கிக் கொண்ட சிவபெருமான் இப்பெயரால் நந்தவனம் அமைக்கப் பட்டுள்ளது.

*"நிலம்பத்து மாவும் துடந்தடிமை கொண்டான் என்ற திருநாமத் தால் திருநந்தவனமாகச் செய்து"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல், 174)

**துடவை :** (வே) நீர்ப்பாசனம் தடையின்றி பெறுதற்குரிய தாழ்நிலம் துடவை. கிராம ஊழியர்க்கும் பறையாளர்க்கும் விடப்பெறும் மானியம் (துடவை - நிலம்).

*"பெருங்குளத்து வேள்விக்குமிழியால் நீர் படுவன கருமத்துடவை தடி-2"*

(தெ. கல். தொ. 14, கல். 40)

**துணிந்து நாடு பாவிநார் :** (மொ) துணிவுடன் சென்று நாட்டினுள் புகுந்தார். நாட்டைக் கைப்பற்றினார்.

"*தகடூர் புகுந்து நுளம்பன் பலத்தோடே துணிந்து நாடு பாவிநார் சங்கர குட்டியார்*"

(செங்கம் நடுகல்)

**துத்தூரு :** (கலை) திருக்கோயில்களில் வழிபாட்டின்போதும், விழாக்களின் போதும் ஊதப்பெறும் சிறுகொம்பு எனும் குழற்கருவி. இது உலோகத்தால் செய்யப் பெறுவதாகும். இதனைத் 'துத்தரி' என்றும் கூறுவர்.

திருவையாற்றில் தாம் எடுப்பித்த உலகமாதேவீச்சரத்திற்கு உலகமாதேவியாரால் செய்தளிக்கப்பட்ட இசைக்கருவிகளுள் ஒன்றாகும்.

"*செப்புக்காளம் ஒன்று நிறை பதின் ஐம்பலம், துத்துரு இரண்டு நிறை பதின் நாற்பலம்*"

(தெ. கல். தொ. 5, கல். 521)

**துமித்தல் :** (வ) மசிவித்தல். மென்மை பெறச் செய்தல்.

"*புளிங்கறிக்கு உழக்கு தயிரும் பொழுது கறிக்கு காயம் இரு செவிடும் கறி துமிக்கச் செவிட்டு நெய்யும்*"

(தெ. கல். தொ. 12, கல். 71)

**துர்க்கையார் :** (சம) கொற்றவை என்று குறிக்கும் பெண் தெய்வம். துர்க்கம்—கோட்டை (கன்னடச் சொல்) கோட்டைக் காவலாக அமைக்கப் பெறும் பெண் தெய்வம். கிராம தெய்வங்களுள் ஒன்றாகும் சோழர்காலத்தில் வழங்கப்பட்டுள்ளது.

"*இவ்வூர் துர்க்கையார் கோயிலுந் திருமுற்றமும*"

(தெ. கல். தொ. 2:1, கல். 5)

துர்க்கைக்கு அளிக்கப் பெறும் இறையிலி நிலம் 'துர்க்கைப்பட்டி' என்று பெயர் பெறும்.

"*துர்க்கைப்பட்டியும் பிடாரிப்பட்டியும் இம்மரியாதி இறையிலியாகவும்*"

(தெ. கல். தொ. 7, கல். 57)

**துரவடி :** (வே) ஊர் நத்தக்கால் செய்களைச் சார்ந்துள்ள புன்செய் நிலம். (புன்செய்) துரவு என்னும் பெரும் கட்டடக் கிணற்றினைத் தொடர்ந்துள்ள நிலம்.

"*கீழ்தலையில் திருத்தின நன்செய் ஒருமாவும் இ நத்தத்து துரவடியைச் சேர திருவிளக்குப் புறமாக விட்ட புன்செய் நிலம் நாலுமாவும்*"

(தெ. கல். தொ. 7, கல். 708)

**துரவு :** (வே) மேட்டுநிலத்தின் உட்பகுதியில் பாசனத்திற்குப் பயன் பெறும் வகையில் அகழப்பெறும் பெருங்கிணறு. இக்கிணறு, சதுரமாகவும், படிகளமைந்த வழியுடன் ஏற்றம் இடுதற்கமைந்த கட்டடக்கரைகளை உடையதாகவும் இருக்கும். "தோப்பும் துரவும்" என்பது வழக்கு.

*"தியம்பக பட்டன்றுரவின் வடகரை புழுதீப்பாடு"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 105)

*"துரவு கிணறு இழிச்சப் பெறுவதாகவும்"*
(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

*"துரவு கண்ணாறு இழிச்சப் பெறுவதாகவும்"*

(தெ. கல். தொ. 19. கல். 344)

**துருத்தி :** (வே) ஆற்றிடைக்குறை. பிரியும் ஆறுகட்கிடையே அமைந்த மேட்டுநிலம்.

*"கீழை துருத்தியில் நிலம் ஒருமாவும்"*

(தெ. கல். தொ. 19. கல். 348)

**துல்யம் :** (மொ) சாசன ஓலைகளிலும், பட்டயங்களிலும் செய்திகளை அரசனோ, உயர்அதிகாரிகளோ சரிபார்த்து ஒப்புதல் தருதற்கமைந்த குறியீடு "துல்யம்" என்ற சொல்லாகும். அரசனிடும் கையொப்பம் என்றும் கூறுவர்.

*"கல்லிலும் செம்பிலும் கல் வெட்டுவித்துக் குடுத்தேன் என்று திருவாய் மொழிந்தருளினார் சிறு முறி. துல்யம்"*
(தெ. கல். தொ. 8, கல். 359)

*"திருப்பணியும் திருநாளும் தாழ்வற நடத்திப் போதுக துல்யம் இவை நெட்டுருடையான் இளையாழ்வான் காலிங்கராயன் எழுத்து"*

(தெ. கல். தொ. 17, கல். 127)

**துலாபார தானம் :** (சம) அரனும் மிக்க செல்வரும் இம்மை மறுமைப் பயன் கருதி வேதியர்க்குச் சடங்கின் வழிச் செய்யும் பெருந்தானங்களில் ஒன்றாகும். இத்தானம் ஆண்கள் மட்டுமே செய்யத்தகுந்ததென்பதாக 'துலாபுருஷதானம்' என்று ஆகமம் கூறும்.

துலாபாரதானம் செய்யும் அரசன் புதிதாக மண்டபம் ஒன்றினை அமைத்து, அதன் நடுவே துலாக் கோல் ஒன்றை நிறுத்தி, அத்துலாக்கோலை அலங்கரித்து, வேதியர்களைக் கொண்டு, வேள்வியாசிரியன் முன்னர் ஆகுதி முதலிய கிரியைகள்

செய்து துலாக்கோலை வழிபட்டு, ஒரு தட்டில் அமர்ந்து கொள் வான். அவன் எடைக்குச் சரியாக மற்றோர் தட்டில் பொன்னை நிரப்புவார்கள். பின்னர் அப்பொன்னில் பாதியை வேள்வியாசிரி யனுக்கும் மிகுதியைத் திருக்கோயில்கட்கும் வேதியர்கட்கும் அரசன் தானமாகக் கொடுப்பான். இவ்வாறு செய்தவன் மிக்க புகழுடன் ஆயுளையும் பெற்று, திருமாலின் பதம் புகுவான் என்பது அருமறை வழக்காம்.

''*நிருபதுங்க மஹாராஜர் தேவியார் வீர மஹாதேவியார் ஹிரண்ய கர்ப்பமும் துலாபாரமும் புக்க பொன்னில்*''

(தெ. கல். தொ. 12, கல். 79, பகு. 1)

**துவராபதி :** (சம) துவரைக்குப் பதி. துவாரகைக்குத் தலைவன். கண்ணன்.

''*நம்மூர் வண்டுவராபதி எம்பெருமான் கோயில்*''

(தெ. கல். தொ. 3:1, கல். 31)

**துளைநின்ற செம்பொன் :** (பொ) துளையும் நிறையும் உரையும் குறையாத பொன்.

சோழர் காலத்தில் நாட்டு வழக்கிலிருந்த பொற்காசு. நடுவில் துளையும், ஒரு பொன்னுக்கு அரசு விதித்த எடையும், மாற்றும் குறையாத காசுகளாகச் செய்யப் பெற்றிருந்தன என்பதனை ''உரையும் துளையும் வழுவாத பொற்காசு'' என்னும் கல்வெட்டுச் செய்திகளாலும் அறியலாம்.

**துளைப்பொன் :** (பொ) காய்ச்சி உருக்கினும் மாற்றும் நிறையும் குறையாதது என்பதற்கு அரசாங்கத்தாரால் உறுதி செய்யப்பட்டதற்கு அடையாளமாக நடுவிடம் துளையிடப் பெற்ற பொன் காசு.

**துறையில் ஏறுவன இறங்குவன :** (அ) கடற்றுறையில் மரக்கலங் களில் வெளிநாட்டிற்கு ஏற்றப்படும் சரக்குகள். வெளிநாட்டி லிருந்து வந்த கலங்களிலிருந்து இறக்கப்படும் சரக்குகள்.

''*சிறுகடற்கரை சேதுமூலம் - ஸ்ரீவல்லபப்பட்டினமும் கரையும், துறையும் நான்கெல்லைக்குட்பட்ட இடத்தில் இறுத்து வரும் துறையில் ஏறுவன இறங்குவன உட்பட்ட பாட்டங்களும்*''

(பாட்டம் - பருவகாலத்திற்கேற்ப அளவிட்டுப் பெறும் வரி.)

(தெ. கல். தொ. 8, கல். 403)

**தூக் குத்தல் அரிசி :** (சம) இறைவன் நிவேதனத்திற்குரியதாக தூய்மையுடன் நெல்லைக் குற்றித் தீட்டிய அரிசி.

*"பிள்ளையார் கணவதியார்க்கு நாள் போனகத்துக்கு வைத்த தூக்குத்தல் அரிசி இருநாழி"*

(முதல் இராசராசன், கி.பி. 996, தெ. கல். தொ. 7, கல். 841)

**தூங்கு விளக்கு :** (சம) தொங்கும் விளக்கு. கோவில் கருவறையுள் இரும்பு நாராயத்திலோ, உலோகச் சங்கிலியிலோ தொங்குமாறு அமைக்கப்பெறும் திருவிளக்கு.

*"திருமணஞ்சேரி பரமசுவாமிக்கு தூங்கு விளக்கு-க"*

(தெ. கல். தொ. 19. கல். 99)

**தூ ஞாட்டு :** (மொ) தூ நாட்டு (ஞகரப் போலி)

தூயநாட்டிடத்து. எல்லைகளும் பெயரும் மாறாது வரும் நாடு தூய நாடு என்று குறிக்கப் பெறுதல் வழக்கு.

**தூணிப்பாடு :** (வே) தூணி நெல் விதை கொண்டு பயிரிடும் அளவிற்குரிய நிலம்.

*"பல வயல் முப்பதின் தூணிப்பாடு"*

(தெ. கல். தொ. 7, கல். 173)

**தூதகிரி :** (சமு) அந்தணரின் ஒரு பிரிவினர்க்குரிய குடிப்பெயர்.

**தூதுவன் :** (அ) அரசன் அனுப்பும் இன்றியமையாத செய்திகளை, ஓலை வழிக்கொண்டு சென்று, அளித்து, விடையும் பெற்று வருபவன். முதல் இராசேந்திரன் ஆட்சியில் சிறுபழுவூர் செறுவாடியில் இருந்த தூதன், "திருவாலந் துறைப் பேரரையன்" என்பவனாவன்.

(தெ. கல். தொ. 5, கல். 678)

**தூ நெல்:** (வே) கல், மண், பதர் நீக்கிப் பதனுடன் காய வைத்த நெல் தூ நெல்லாகும்.

*"நிறைத்தளளவு தூநெல் நாலாயிரக்காடியும்"*

(தெ. கல். தொ. 8, கல். 529)

**தூபத்தோடு காட்டுத் தீபம் :** (சம) நறுமணப்புகையாகும் தூபத்தோடு, தொடர்ந்து காட்டும் கற்பூர தீபம்.

*"ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார்க்கு தக்ஷிண மேரு விடங்கர்க்குள் தூபத்தொடு காட்டுந் தீபத்துக்குக் கற்பூரத் திரியிட்டு எரிய"*
(தெ கல். தொ. 2:2, கல். 26)

**தூபம் :** (சம) தணலில் நறுமணப் பொடியிட்டுப் புகைக்கும் நறுமணப் புகை. திருக்கோயில்களில் நிகழும் வழிபாட்டில் நறும்புகையாகிய தூபம் காட்டுதல் ஆகம வழக்கு.

தூம்பின் கால் : (வே) மதகிலிருந்து தொடரும் பாசனக் கால்வாய். தூம்பு - மதகு.

*''இவ்வூர் செங்குளத்துத் தூம்பின் கீழ்புற வாய்க்கால் கரை''*

(தெ. கல். தொ. 5, கல். 669)

தூம்பு : (வா) முகத்தலளவையுள் ஒன்று. பெரிய மரக்கால். பூண் கட்டிய மரக்கால். (பல்லவர் ஆட்சியில் தொண்டை மண்டலத்தில் நெல் அளவிற்குரியதாக அமைக்கப்பட்ட மரக்கால்)

*''பூண்டும்பினால் நிறைத்தளவு தூ நெல் நாலாயிரக்காடியும்''*

*''நீசதமரிசி முப்பத்தேழு காடி ஐந்தூம்புமாக''*

(முதற்பராந்தகன், தெ. கல். தொ. 8, கல். 529)

*''நாயனார் ஆடியருளத் தேன் ஒரு தூம்பு, பால் ஒரு தூம்பு, தயிர் ஒரு தூம்பு நெய் ஒரு தூம்பு''*

(தெ. கல். தொ. 17, கல். 296)

2. மதகு, ஆற்றிலோ, ஏரியிலோ கரைப்பகுதியின் அடியில் கட்டடமாகப் புழையமைத்து, அதன் வழியே பாசனத்திற்கு நீர் வரும்படி செய்யும் அமைப்பே தூம்பு எனப்படும்.

*இவ்வூர் பெருந்தூம்பி நின்றும் வடக்கு நோக்கிப் போன பெருங் காலுக்குக் கிழக்கு''*

(தெ. கல். தொ. 3:1. கல். 34)

தெரித்தல் : (வ) ஆராய்ந்து வரையறை செய்தல். எல்லை தெரித்தல்
*''எல்லை தெரித்துப் பிடி சூழ்ந்து பிடாகை நடந்து கல்லும் கள்ளியும் நாட்டி''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

தெற்றி : (வே) மேட்டிடம். இயற்கையாகவே பூமியின் மேற் பரப்பில் மண் மேடிட்டதாக அமைந்த பகுதி.

*''ஆறிடு படுகையும் மீன் பயில் பள்ளமும் சொட்டகரையும் புற்றும் தெற்றியும் காடும்''*

(தெ. கல். தொ. 19, கல். 344)

*''மருதங்குடி உடும்போடி ஆமைம தவழ்ந்தது புற்றுந் தெற்றியும் பல்லுருவிற் பயன் மரமும்''*

(புதுக்.தொ. கல். 63.)

**தெற்றி இலக்கை :** (அ) ஊர்ப்பொதுவிலொரு பகுதியை மேட்டிடமாகச் செய்து பயன்படுத்துவோர் செலுத்தும் வரி.

**தென்கரை நாடு :** (அ) காவிரிக்குத் தென் கரையாகச் சோழ மண்டலத்துள் அமைத்த நாடு. இதன் உட்பிரிவே நித்த வினோத வளநாடாகும். நித்த வினோத வள நாட்டிற்கும் இச் சிறப்புப் பெயர் உண்டு.

"*தென்கரை நித்த விநோத வளநாடு*"

(கரந்தைச் செப்பேடுகள்)

**தென்மாட்டில் :** (மொ) தென்பக்கத்தில். மாட்டில் - பக்கத்தில், மாடு பக்கம். பகுதியில்.

"*கோயிலில் அர்த மண்டபத்தில் தென்மாட்டில் வாசலில் மேற்கடைய உத்திரத்திலும்*"

(தெ. கல். தொ. 5, கல். 588)

**தேசகாலம் :** (மொ) குறிப்பிட்ட வேளை, பொழுது. ஒரு சந்தி எனும் காலம்.

**தேசிகப்பாடு :** (சம) நாட்டில் நிகழும் புதிய வழக்குப்படி. வெளி தேசங்களிலிருந்து யாத்திரிகராய் வருவார்க்கு திருக்கோயில்களில் ஒருவேளை உணவு அளிக்கச் செய்யும் முதலீடு.

"*விண்ணகோவரையர் வைத்த தானம் நிசதி நாநாழி அரிசி தேசிகப்பாடு கொடுப்போமானோம்*"

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 42)

**தேசுகொள் :** (மொ) புகழாகிய ஒளியைக் கொண்டுள்ள (ஒளி-*தான் உள்ள காலத்து மிக்குத் தோன்றுதல் உடைமை என்பர் பரிமேலழகர்) இத்தொடர் முதல் இராசராசன் மெய்க்கீர்த்தியில் வந்துள்ளது.*"

"*செழியரைத் தேசுகொள் ஸ்ரீ கோராஜ கேஸரிவர்மரான ஸ்ரீ ராஜராஜதேவர்க்கு*"

(தெ. கல். தொ. 3:1, கல். 4.)

**தேர்ப்பாகன் :** (அ) தேரோட்டுபவன். விக்கிரமசோழன் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1131.) மத்யஸ்தன் மாலரி கேஸருக்கு தேர்ப்பாகன் இருந்துள்ளமையைக் கோவிலடி சிவன் கோயில் கல்வெட்டு உணர்த்துகின்றது.

**தேவகருமம் நவகருமம் :** (சம) கோயிலில் நிகழ்த்தப்படும் வழிபாட்டுப் பணியும், கோயிலைப் புதுப்பித்தல் இடிபாடுகளைச் சீர் செய்தல் ஆகிய திருப்பணிகளுமாகும். இதற்குரிய செலவினங்களுக்குரிய வருவாயாக தேவதான பிரமதேயமாகவும், இறையிலியாகவும் நிலம் அளிக்கப்பெறுவது வழக்கு.

**தேவகுடிமை :** (சம) கோயிலுக்குரிய நிலத்தில் குடியிருப்பதோடு, கோயில் காரியங்களைப் பார்த்து வரும் குடிகள். இவர்கள், கோயிற்பகுதிகளைத் தூய்மை செய்தல், நந்தவனம் செய்து, பாதுகாப்பதோடு, நாளும் மலர்களைப்பறித்து மாலையாக்கிக் கட்டி வழிபாட்டிற்கு அளித்தல் ஆகிய பணிகளைச்செய்பவராவர்.

**தேவடிமை :** (சம) கோயிலில் தெய்வ வழிபாட்டிற்குரிய பணியினை வாழ்நாள் முழுதும் செய்பவராகிய தேவரடியார். வேலைக்காரர் முதலியோர்.

**தேவடியாந் :** (சம) (தேவடியான்) தேவரடியான். சிவபிராமணன்.

*"காளி தேவடியாந் இரண்டாயிரத்து நாநூற்றுவநேன்"*

(தெ. கல். தொ. 3:1. கல். 10)

**தேவதானபிரமதேயம் :** (சம) கோயில் வழிபாட்டிற்கென்று உரிமை செய்யப்பட்ட தேவ பிராமணர்கட்கும், கோயிலுக்கமைந்த செலவினங்கட்கும் உரியதாக அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

*"விச்சாவிநீத பல்லவ பரமேச்சுரம் எடுத்து ஏரி தோண்டி இத்தளி வழிபாடு செய்வார்க்கு இருக்கும் மனையும் மனைப்படையும் வகுத்து இதனுள் மிக்க நிலம் (கோயில்) ஒழுக்கவிளக்கு விளை நிலமாகவும்"*

(முதல் பரமேச்சுரவர்மன் - கூரம் செப்பேடு)

**தேவதானம் :** (சம) கோயில்களுக்கு இறையிலியாக அளிக்கப்பெறும் நிலம். இது சைவ வைணவ கோயில்கட்குப் பொதுவானது.

*"தேவதானம் திருச்சுழியல்-சுந்தரபாண்டிய ஈஸ்வரம்"*

*"தேவதானம் தென் திருமாலிருஞ்சோலை நின்றருளிய கரு மாணிக்க தேவர்க்கு"*

(தெ. கல். தொ. 14, கல். 80, 71)

**தேவநாழியோடொக்கும் உழக்கு :** (சம) திருச்சோற்றுத்துறை சிவன் கோயிலில் நெய் அளப்பதற்கிருந்த அளவை.

*''நிசதி உழக்கு நெய்-தேவநாழியோடொக்கும் உழக்கினால் அட்டுவேன்''*

(தெ. கல். தொ. 5, கல். 619)

**தேவபோகம் :** (சம) தேவதானம். சிவன் கோயில்களுக்கு அளிக்கப் பட்ட இறையிலி விளைநிலம்.

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 102)

**தேவபோக முறைமை :** (சம) கோயில் தெய்வங்களுக்குரிய வழிபாட் டுச் செலவினங்களுக்குத் தேவதான வருவாயினைக்கொண்டு நாளும் நிகழ்த்துவிக்கும் வழிபாட்டு முறைமைகள்.

*''இப்புவனி மாணிக்க விஷ்ணு கிரகத்துப் பெருமானடிகளுக்கு ஆராதிப் பார்க்கும், அர்ச்சநா போகத்துக்குத் திரிகாலந் திரு வமுதுக்கும் இரண்டு நொந்தா விளக்கும் ஸந்திகளில் தீபமாலை களுக்கும் திருவுத்ஸவத்துக்கும், அயனமும், விஷுவும், கிரஹ ணமும் ஸ்நபநஞ் செய்வதாகவும், ஸ்ரீபலிக்குந் திருவுண்ணாழிகைப் புறம் மற்றுமெப்பேர்ப்பட்டதுக்குந் தேவ போகமாவதாகவும்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 12)

**தேவர் கன்மிகள் :** (சம) கோயில் வழிபாடு முதல் தெய்வக்காரியங்கள் செய்யும் அந்தணர்கள்.

*''திருத்தினைநகர் உடையர் கோயிலில் தேவர்கன்மிக்கும் ஸ்ரீ மகேஸ்வர கண்காணி செய்வார்களுக்கும் ஸ்ரீ கார்யஞ் செய் வானுக்கும்''*

(தெ. கல். தொ. 17, கல். 135)

**தேவரடியார் :** (சம) சிவபூசை செய்யும் ஆதி சைவர். திருக்கோயில் களைச்சார்ந்த திருமடங்களில் இருந்து கோயில் வழிபாட்டின் போது கும்பிட்டு நிற்கும் சைவ அடியார்கள் துறவியர்.

*''நாற்பத்தெண்ணாயிரவர் திருமடத்துக்கு தேவரடியாரை அமுது செய்விக்கைக்கும்''*

(தெ. கல் தொ. 23, கல். 47)

**தேவரடியாள் :** (சம) சிவன் திருக்கோயில்களில் கோயிற்பணி செய்யும் அந்தணமகளிர். ஆடல் பாடல் நிகழ்த்தும் பதியி லாரையும் குறிக்கும்.

*"இந்நாயனார் தேவரடியாள் தில்லைபிரான் பட்டர் நம்பிமார் களில் சேந்தியான மங்கையர்க்கரசி"*

(தெ. கல். தொ. 5, கல். 272)

**தேவரடியான்** : (சம) திருக்கோயில்களில் இறையன்பிற் சிறந்த தொண்டராகப் பணி செய்பவர்.

*"திருவிசலூர் தேவரடியான் பட்டன் அரங்கநான சிவசரண தொண்டன்"*

(தெ. கல். தொ. 23, கல். 15)

**தேவரிடைச் சான்றார்** : (சமு) இடையர். கோயில்கட்குரிய திரு விளக்கு நிவந்தமாக வைக்கப்பெறும் ஆடுகளைக் கைக்கொண்டு நிவந்தப்படி நாளும் கோயிலில் நெய்யளந்து வரும் இடையர் குலமக்கள். (மன்றாடிகள்)

*"நிசதம் உழக்குநெய் திருமறைக்காடநா லட்டுவோமாநோம் இவ்வூர் தேவரிடைச் சான்றோம்"*

(தெ. கல். தொ. 17. கல். 501)

*"இவ்வூர் இடைச்சான்றோம்"*

(தெ. கல். தொ. 19. கல். 119)

**தேவாசிரியன் கால்** : (சம) தேவாசிரியன் என்ற பெயரால் விளங்கிய மரக்கால். திருவாரூர்த் திருக்கோயிலில் வழக்கிலிருந்த மரக்கால். இம்மரக்கால் திருமுதுகுன்றமுடைய நாயனார் கோயிலிலும் இருந்ததனைக் கல்வெட்டொன்று உணர்த்துகின்றது

*"உடையார் திருமுதுகுன்றமுடைய நாயநாற்கு-வைத்த திரு நுந்தா விளக்கு ஒன்றுக்கு தேவாசிரியன் காலால் அளக்கும் நெய்"*

(தெ. கல். தொ. 12. கல். 144)

**தேவாசிரியன் திருக்காவணம்** : (சம) திருவாரூர்க் கோயிலில் உள்ள கருங்கல் திருப்பணியாக அமைந்த பெருமண்டபத்தின் சிறப்புப் பெயர். காவணம் - கல்மண்டபம்.

*"இவ்வனைவோம் தேவாசிரியன் திருக்காவணத்தே கூட்டம் குறைவறக்கூடி"*

(தெ. கல். கல். தொ. 17, கல். 598)

*"தேவாசிரியன் எனுந் திருக்காவணம்"*

(பெரிய-என்பர் சேக்கிழாரடிகள்.

**தேவாசிரியன் நாழி** : (சம) திருமுதுகுன்றம், திருவெண்ணைநல்லூர் ஆகிய கோயில்களில் நெய் அளக்கப் பயன்படுத்தப்பட்ட நாழிக்கமைந்த பெயர். (தேவாசிரியன் திருவாரூர்த் திருக்கோயிலில் உள்ள தெண்வீக மண்டபத்தின் பெயர்)

*''திருநுந்தாவிளக்கு ஒன்றுக்குத் தேவாசிரியநால் அளக்கும் நெய''*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 123)

*''அருமொழி நங்கை நாழி''*

(திருவத்தியூர் அருளாளப் பெருமாள் கோயில் கல்வெட்டு)

**தேவாரத்துச் சுற்றுக் கல்லூரி** : (சம) தெய்வ மூர்த்தங்களாகிய சிலைகள் மாடங்களில் அமைக்கப்பட்டு விளங்கும் திருச்சுற்றாக அமைந்த கல் மண்டபம்.

*''முடிகொண்ட சோழன் திருமாளிகையால் வடபக்கத்து தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் தானஞ் செய்தருளா இருந்து''*

(முதல் இராசேந்திரசோழன், தெ கல். தொ. 2:1, கல். 20)

**தேவாரதேவர்** : (சம) ஆன்மார்த்த பூசைக்குரிய மூர்த்தி. இத்திருமேனி முதல் இராசராசன் தேவாரம் பாடி வழிபட்ட உலோகத் திருமேனியாகும்.

இராசராசன் தில்லைவாழ் அந்தணரால் சிவபாத சேகரனாகத் தீட்கைஷ பெற்றதினால் சிவ மூர்த்தங்களுள் ஒன்றான சந்திர சேகரர் திருமேனியினைத் தான் நாளும் ஆத்மார்த்தமாக வழிபடும் தன்மையுடையவனாக இருந்துள்ளான். எனவே இராசராசனிடத்தில் பேரன்பு கொண்டவனும் இராசராசேச்சரத்தில் ஸ்ரீ கார்யம் பார்த்தவனுமாகிய பொய்கை நாடு கிழவன் ஒரு முழமே நால்விரலரை உசரத்தில் இராசராசனுக்குப் பெரிய பெருமாள் என்ற பெயருடன் பிரதிமம் அமைத்துக் கோயிலில் எழுந்தருளிவித்தபோது, ' பெரிய பெருமாளுக்குத் தேவார தேவராக ஐந்து விரல் இரண்டு நெல் உசரமுடையாராக'' சந்திரசேகரர் திருமேனியினைச் சிறியவடிவில் பித்தளையால் செய்தமைத்துள்ளான்.

ஒரு சிறு பேழையுள் வைக்கத் தகுந்ததாக அத்திருமேனியும் 5¼ விரல் உயரத்தில் அதாவது 4 அங்குல அளவில் பித்தளையால் செய்யப்பட்டதாக உளது.

*"பெரிய பெருமாளுக்கு தேவார தேவராக எழுந்தருளுவித்த தேவர் பாதாதி கேஸாந்தம் ஐவிரலே இரண்டு தோரை உசரத்து நாலு ஸ்ரீ ஹஸ்தமும் உடையராகக் கனமாகப் பித்தளையில் எழுந்தருளுவித்த சந்திரசேகரர் திருமேனி ஒன்று"*

(பெரியபெருமாள் - முதல் இராசராசன்)

(தஞ்சைப்பெரியகோயில்-கல்வெட்டு)

(தெ. கல். தொ. 2:2. கல். 38.)

**தேவாரத்துக்கு திருப்பதியம் விண்ணப்பம்** : (சம) ஆன்ம பூசைக்குரிய திருமேனிக்கு முன்னர் தேவாரம் பாடுதல் தெய்வத் திருமேனிகளாகிய சிவ மூர்த்தங்கட்கு முன்னர் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோரால் பாடப்பட்ட திருப்பதிகங்களைப் பாடுதல்.

*"உறையூர் கூற்றத்து திருவடகுடி மஹா தேவர் ஸந்தான மடம் தேவாரத்துக்கு திருப்பதியம் விண்ணப்பம் செயும் அம்பலத்தாடி திருநாவுககரையனுக்கும் இவன் வற்சத்தார்க்கும் தான நிமித்தமாகக் குடுத்தோம்-மடபோகமாக நித்தம் தூணி நெல் கொள்ளச் சொன்னோம்"*

(தெ. கல். தொ. 8, கல். 675)

**தேவாரத்து வாசல்** : (சம) திருக்கோயில்களில் தேவாரத் திருப்பதிகங்களை வைத்து பூசிக்கும் இடம். அடியார்கள் நின்று திருப்பதிகங்களை ஓதும் திருவாசல். இது கருவறைக்கு முன்புறம் அமைந்ததாகும். இதனைத் "திருக்கைக் கோட்டி" என்றும் கூறுவர்.

*"இக்கோயிலில் தேவாரத்து வாசலில் எழுந்தருளியிருந்து"*

(தெ. கல். தொ. 23, கல். 313)

**தேவாரச் சுற்றுக் கல்லூரி** : (சம) கோயில் கருவறைப் புறத்தும், கருவறைத் திருச்சுற்றிடத்தும் மூர்த்திகளுடன் அமைந்த தெய்வ கோட்டங்கள்.

*"ஸ்ரீராஜேந்திர சோழதேவர் கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலினுள்ளால் முடிகொண்ட சோழன் திருமாளிகையில் வடபக்கத்து தேவாரச் சுற்றுக்கல்லூரியில் தானஞ் செய்தருளாவிருந்து"*

(தெ. கல். தொ. 2:1, பக். 106)

**தேவியர் குழாமும் பாவையர் ஈட்டமும் :** (அ) அரசனின் மனைவியர் கூட்டமும் காமக்கிழத்தியர் கூட்டமும்.

*''ஒப்பில் சத்தியவ்வை சாங்கப்பையென் றிவர்முதல் தேவியர் குழாமும் பாவையர் ஈட்டமு மினையன பிறவு முனைவயிற் கொண்டு''*

(விசயராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**தேவியார் :** (அ) அரசனின் உரிமை மனைவியர். அரசியர்.

*''பிரிதிவி கங்கரையர் தேவி அரிகண்டன் மகள் நங்கைமானி''*

(தெ. கல். தொ. 8, கல். 12,)

*''சோழபெருமானடிகள் தேவியார் தென்னவன் மஹாதேவியார்''*

(தெ. கல். தொ. 5, கல். 684)

*''உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் நம்பிராட்டியார் ஒலோகமஹா தேவியார்''*

**தேவைகள் :** (வ) தேவையான பொருள்கள். அரசுக்கும் கிராமத் தலைவர்கட்கும், பெருநிலக்கிழார்கட்கும், கிராமச் சமுதாயத் தொழிலாளர்களாகிய தச்சர், கொல்லர், குசவர் ஆகியோர் செய்து கொடுக்கும் தேவைப் பொருள்கள். இதற்கு ஆண்டு தோறும் நெல் அறுவடைக் காலங்களில் அவர்களிடம் நெல் பெறுவர்.

*''பாடிகாவல்-தச்சர், கொல்லர், குசவர். நமக்குச் செய்யும் தேவைகளும்''*

(தெ. கல். தொ. 12, கல். 221)

**தேன்பயில்பொதும்பு :** (மொ) தேன்கூடுகள் நிலவும் வளமமைந்த சோலை.

*'மீன்பயில் பள்ளமும் தேன் பயில் பொதும்பும்''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**தேஜமானியம் :** (வ) அஷ்ட போகம் உள்ளிட்ட நிலத்தின் முழு உரிமை. தேஜஸ்வாமியம் என்றும் கூறப்பெறும்.

**தைத்தமுத்து :** (கலை) அணிகலன்களில் இரத்தினங்களின் ஒப்பனையாகக் கற்களைப் பதிப்பதுடன் முத்துக்கள் துளையமைப்புப் பெறுவனவாகலின் பொற்கம்பியால் அமைப்பிடங்களில் வைத்துப்

பொருத்தித் தைப்பது கம்மத்தொழில் நிலையாகும். அம்முறையே வைத்து தைக்கப்பட்ட முத்து.

"கோத்தமுத்து வட்டமும் அனுவட்டமும்-தைத்த முத்து (தைய்ப்பு முத்து) சக்கத்தும் சப்பத்தியும் ஒப்புமுத்தும் குறுமுத்தும்"

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

"முத்தின் வளையல் ஒன்று-மேற்படியில் தச்சமுத்து ஞூற்றெண் பத்தெட்டு"

(தெ கல். தொ. 5, கல். 521)

**தொக்கைக்குன்றி** : (வே) உரச்சேர்க்கை எருக்குவியல். ஊர்ப்பொது இடத்தில், தரிசுப்பகுதியில் நிலங்களுக்கு இடும் பசுந்தாள் சாணம் ஆகியவற்றைச் சேர்க்கும் குவியல். எருச்சேர்க்கும் பொது இடத்திற்குரியதாக ஊர்ச்சபையார் பெறும் வரி.

"ஆட்டுக்கறையும் தொக்கைக்குன்றியும் மற்றும் எப்பேர்ப்பட்ட சித்தாயதியுமடங்கலாக"

(தெ. கல். தொ. 5, கல். 1374)

**தொண்டர் சீர் பரவுவார்** : (சம) திருத்தொண்டத் தொகையின் வழியே சிவனடியார்களின் சிறப்பினைக் கூறும் சுந்தரமூர்த்தி சுவாமிகள். பெரிய புராண ஆசிரியரையும் குறிக்கும்.

**தொழிற்பட்டிகை** : (கலை) மகளிர் அரையிலணியும் ஒப்பனையோடு கூடிய பட்டிகை என்னும் அணி.

**தொழுதகை** : (மொ) இத்தொடர், முதல் இராசராசன் மெய்க்கீர்த்தியில் இடம் பெற்றுளது.

"தொழுதக" என்றிருக்க வேண்டும். தொழத்தக்க நிலையில் என்பது இதன் பொருள்.

"தன்னெழில் வளருழியு ளெல்லா யாண்டுந் தொழுதகை விளங்கும் யாண்டே"

(தெ. கல். தொ. 3;1, பக் 7)

**தொறு** : (மொ) பசுக்கூட்டம், எருமை மந்தை, ஆட்டு மந்தை.

"பாசாற்று எருமைத்தொறு எயினாட்டார் கொள்ள"

(செங்கம் நடுகல் - கல்வெட்டு)

**தொறுஇடுவித்துப் பட்டான் :** (அ) பகைவரிடமிருந்து ஆநிரைகளைப் போரிட்டு மீட்டுக்கொண்டு வந்து தங்களூரில் இடுவித்த பின்னர் இறந்தான். இச்செயல் கரந்தைத்திணைக்குரியதாகும்.

(செங்கம் நடுகற்கள் - கி. பி. 7-ஆம் நூற்றாண்டு)

(தொறு-ஆநிரை, ஆட்டு மந்தை.)

**தொறுக்கொண்ட ஞான்று மீட்டு பட்டான் :** (அ) பகைவர் தங்கள் ஆநிரைகளைக் கைப்பற்றிச் சென்றபோது அவர்களோடு போரிட்டு, ஆநிரைகளை மீட்டு இறந்தான்.

(வெட்சியும் கரந்தையும் விரவி வந்த நிகழ்ச்சி)

(செங்கம் நடுகற்கள், கி பி. 7. முதல் மகேந்திரவர்ம பல்லவன்)

**தொறுநிலை :** (பசு) எருமை ஆகியவை கட்டும் கொட்டில்.

**தொறுப்பட்டி :** (வ) ஆயிரம் மாடுகள் அடைக்கப்பெறும் அளவுள்ள பூமி, ஒரு தொறுப்பட்டி நிலமாகும்.

*''தோறுப்பட்டி நிலம் கொடுத்தார்கள்''*

(தொறு-நிரை, பட்டி-அடைவிடப்பாய்பிடம்)

*''பொத்தனம் கிழவர்களும் தொறுப்பட்டி நிலம் குடுத்தார்கள்''*

(செங்கம் நடுகற்கள் - கல்வெட்டு)

**தொறுவிடுவித்துப் பட்டான் கல் :** (மொ) தம்மூர் ஆநிரைகளைப் பகைவரிடமிருந்து மீட்டு, போரில் பகைவரால் ஏற்பட்ட விழுப் புண்ணினால் இறந்து பட்டான். வெட்சியாரிடமிருந்து ஆநிரைகளைப் போரிட்டு வென்று மீட்ட பின் இறந்துபட்ட கரந்தை மறவனின் நடுகல்.

(செங்கம் நடுகற்கள், கி பி. 7. கரந்தை-திணை)

**தோட்டக்கூறு :** (வே) மரங்கள் வளர்ப்பதற்குத் தகுதியான நிலப் பகுதி.

மா, பலா, வாழை முதலிய பயன் தரு மரங்கள் வளர்க்கப்பட்ட தோட்டத்தின் ஒரு பகுதி.

**தோட்டப்பாழான நிலம் :** (வே) பயன்தரும் மரங்களோடு இருந்து, பின்னர் பாழாகி, வறிதாகக் கிடக்கும் நிலம்.

*''இவ்வூர் மும்முடிச் சோழப் பெருந்தெருவில் வியாபாரி ஆச் செருமான் வயிரமேகன் தோட்டப் பாழான நிலத்தின் வட வருகேய்''*

(முதல் இராசராசன் கல்வெட்டு, தெ. கல். தொ. 3:1, கல். 15)

**தோட்டப்புரவு :** (வே) தோட்டமாக அமைந்த நிலத்திற்குரியதாக அரசு பெறும் வரி.

**தோட்டவாரியம் :** (அ) புன்செய் தோட்டக்கால்களைக் கவனிக்கும் குழுவினர், கிராம சபையிலிருந்து தோட்டக் கால்களைக் கவனிக்கும் குழுவினர்.

**தோடு :** (கலை) இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட காதணி.

*"தோடு ஒன்று பொன் இரு கழஞ்சேய் முக்காலே நாலு மஞ்சாடி"*

(முதல் இராசராசன், தெ. கல். தொ 2.2, கல். 34)

**தோப்புக்குடிகள் :** (சம) கோயில்கட்குரிய வழிபாடு நிவேதனம் ஆகியவற்றிற்குரிய காய்கள், பழங்கள் ஆகியவற்றை, கோயிலார் விட்ட நிலத்தில் மா, பலா, வாழை முதலிய மரங்களைப் பயிர் செய்து, அவற்றால் வரும் பயனை நாளும் கோயிலுக்கு அளித்து வருவதோடு அத்தோப்பிலேயே குடியிருக்கும் கோயில் பணியாளராதலின் "தோப்புக்குடிகள்" எனறு கூறப்பெற்றனர்.

*"விக்கிரமசிங்கபுரத்து மேற்புறத்தில் செய்வித்த ஆளியார் திருத் தோப்பில் பலாக்காய் வாழைக்காய் பழங்கள் உள்ளிட்டன, திரு மடைப்பள்ளி பண்டாரத்துக்கு முதலாக எடுக்கவும், தோப்புக் குடிகளாக ஐம்பது ஆள் முதல் கொள்ளவும்"*

(தெ. கல். தொ. 8, கல். 52)

**தோரணகாணிக்கை :** (அ) வீதிகளில் தோரணமிட்டு அலங்கரிப் பதற்கு, ஊர்ச்சபையார் பெறும் சிறுவரி.

**தோரை :** (வா) ஒரு நெல்லளவு, நீட்டல் அளவை. கல்வெட்டுக் களில் குறிக்கப்பட்டுள்ள திருமேனி படிமம் ஆகியவற்றை அளந்து கூறியுள்ள நீட்டலளவையின் ஒரு கூறு.

*"பாதாதி கேசாந்தம் இருபதிற்று விரலே நாலு தோரை உசரத்து நாலு ஸ்ரீ ஹஸ்தம் உடையாராகக் கனமாக எழுந்தருளுவித்த சண்டேச்வர பிரசாத தேவர் திருமேனி ஒருவர்"*

(தெ. கல். தொ. 2:1, கல். 29)

**தோரணக்கால் :** (கலை) உலோகத்தால் செய்தமைக்கப்படும் தெய்வத் திருமேனிகளின் பாதபீடத்தின் இருபக்கமும் கால் கொண்டு பட்டை முகப்பாகவும், புடைப்பு நகாசு வேலைப் பாட்டுடனும் எழுந்து நிற்கும் கால்கள் தோரணக்கால்கள் என்று பெயர் பெறுவனவாகும்.

இத்தோரணக்கால்களின் மீதே திருமேனிகட்கு மேல் கவித்த தாக, நடுவில் யாள முகப்புடன் கூடியதாகவும், அரைவட்ட முடையதாகவும், பத்திரிப்புடன் அமைந்ததாகவும் உள்ள அர்த்த சந்திரம் எனும் பெயர்பெற்ற உலோகப் பிரபை திருவாசி பொருத்தப்பெறும்.

*''தேவரையும் நம்பிராட்டியாரையும் ரிஷபத்தையுங் கவித்த தோரணக்கால் இரண்டும் அர்த்த சந்திரம் ஒன்றுமாய் அறு முழமே ஒன்பதிற்று விரலரைச் சுற்று உடைய கனமாகச் செய்த பிரபை ஒன்று''*

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

**தோல் தேய்ந்தன தோல் இடந்தன** : (பொ) முத்து வகைகள்.

முத்துக்கள் பதினாறு வகைகளாகக் காணப்படுகின்றன. அவற்றுள் பிறப்பிலேயே மேற்பட்டையாக உருவாகியிருக்கும் தோல் எனும் ஒளிநிறைந்த படிமம் தேய்ந்ததைப் போன்று மழுங்கியிருக்கும் முத்துக்கள் தோல் தேய்ந்தன என்றும், தோல் பிசிரிட்டதைப் போன்ற தோற்றமுடையதாக இருக்கும் முத்துக்கள் தோல் இடந்தன என்றும் பெயர் பெறுவனவாகும்.

*''சப்தசரி ஒன்றில் கோத்த முத்து-பயிட்டமும் பாணிச்சாயும் தோல் தேய்ந்தனவும் ஆகமுத்து முன்னூற்று எழுபத்திரண்டு''*

(தெ. கல். தொ. 2:2, கல். 34)

**நக்கவாரம்** : அ)) வங்கக் கடலிலுள்ள அந்தமான் தீவுகள். (நிகோபார் தீவுகள்). முதல் இராசேந்திரன் அலைகடல் நடுவே பல கலம் செலுத்தி வென்ற பகுதிகளுள் ஒன்று.

*''தேனக்க வார் பொழில் மாநக்க வாரமும்''*

(முதல் இராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**நகரக் கரணத்தான்** : (வா) வணிகக் கணக்கு மேற்பார்வையாளன்.

*''திருநெய்த்தானம் ஸ்ரீகார்யம் ஆராயப்பெற்ற அரயன் நாமக் கோடனார், இவ்வூர் நகரக்கரணத்தான் பனையூருடையானைக் குற்றத்தண்டம் கொண்ட பொன்.''*

(தெ. கல். தொ. 5, கல். 592)

(இக்கல்வெட்டில் ஊர்க்கணக்கு எழுதிய கணக்கன் பொய்க் கணக்கு எழுதியதால் தண்டனை பெற்றுள்ளான்.)

**நகரக்கல் :** (வா) வியாபாரிகள் வைத்திருக்கும் எடைக்கற்களுக்குச் சான்றாகச் சபையார் வைத்திருக்கும் சரியான எடைக்கற்கள். வணிகத்திற்குரியதாக அரசு தணிக்கைசெய்து முத்திரையிட்டு வழங்கச் செய்த எடுத்தலளவைக்கல்.

*''திருவாலந்துறை மகாதேவற்கு வைச்ச வெள்ளியிந் கலசம் நகரக் கல்லால் நூற்று தொண்ணூற்று முக்கழஞ்சரை''*

(தெ. கல். தொ. 5, கல். 671)

**நகரங்களிலார் ;** (வா) வியாபாரிகளின் சபைக்குரிய உறுப்பினர்கள்.

**நகரசுவாமி :** (வா) வியாபாரிகள் தலைவன். வியாபாரிகள் சபைக்குத் தலைவன்.

**நகரத்தார் :** (வா) வணிகர், அங்காடிகள், வியாபாரிகள். தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டில், கோயில் கணபதிக்குரிய நிவேதன வாழைப்பழத்திற்குரிய முதற்பொருளை வட்டிக்குக் கொண்ட வர்கள், அங்காடிகள் என்று பொதுவாகக் குறிப்பிட்டுள்ளபடி அவ்வாறு வட்டிக்குக் கொண்டவர்கள்.

1. தஞ்சாவூர் புறம்படி நித்த வினோதப் பெருந்தெருவில் நகரத்தார்.

*2. தஞ்சாவூர் கூற்றத்து தஞ்சாவூர் புறம்படி மும்முடிசோழப் பெருந்தெருவில் நகரத்தார்*

*3. தஞ்சாவூர் கூற்றத்து தஞ்சாவூர்ப் புறம்படி திரிபுவநமாதேவிப் பேரங்காடி நகரத்தார்.''*

என்றெல்லாம் விளக்கமாகக் குறிப்பிடப்படுவதால், நகரத்தார் என்பது வியாபாரிகளையே பெரும்பாலும் குறிப்பிடுவதோடு அவர்கள் வணிகம் செய்து வாழ்ந்து வரும் ஊரும் ''நகரம்'' என்று பெயர் பெற்றுள்ளது என்பதும் புலனாகும்.

*''பூந்தமலியான உய்யக்கொண்டான் சோழபுரத்து வாணிகர் நகரத்தோம''*

(தெ. கல். தொ. 7, கல் 537)

*''தஞ்சாவூர் புறம்படி திரிபுவநமாதேவிப் பேரங்காடி நகரத்தார்''*

(பெரியகடை வீதியிலிருக்கும் வணிகப் பெருமக்கள்)

(தெ. கல். தொ. 2 2, கல். 37)

*"மும்முடிச் சோழபுரத்து வியாபாரி கொற்றுழான் தர்மசீலநான புருஷமாணிக்கச் செட்டியும் சங்கரபாடியாந் கண்ணன் கீரனான குன்றை மாயிலட்டியும் உள்ளிட்ட நகரத்தாரும் நகரகரணத் தானும்"*

(தெ. கல். தொ. 17. கல். 313)

**நகரம் :** (வா) வணிகமும் வணிகரும் நிறைந்த பேரூர்.

*"ஒய்மாநாட்டு நகரம் உலோகமாதேவிபுரத்து வியாபாரி ஆர் வலங்கிழான்".*

(முதற் குலோத்துங்கன், கி பி. 1099. தெ. கல். தொ. 5 கல். 1000.)

**நகரமாக இசைந்த நகரத்தோர் :** (வா) வணிகர் வாழும் இடமாக அரசினால் அனுமதிக்கப்பட்ட நகரத்தோம். (நகரம்-வணிகர் வணிகம் செய்து வாழும் ஊர்)

*"நகரமாக இசைந்தநகரத்தோம், சுந்தரசோழபுரமான தேசியுகந்து பட்டணம்".*

(புதுக்கோட்டை கல்வெட்டு, எண். 422)

**நகரவனுச்சை :** (வா) நகரத்தார் அமைத்துக்கொள்ளும் ஒழுங்கு முறை ஊர்க்கட்டுப்பாடு. அனுச்சை - இன ஒப்புரவில் தீர்மானிக்கப்பெற்றுச் செயல்படும் நடைமுறைகள்.

**நகரவாரியம் :** (வா) நகரமாகக் கொள்ளப்பட்ட ஊர்களில், வணிகத் தொடர்பான செயல்களைக் கண்காணிக்கும் குழு. இத்தகைய வாரியம் சிறந்த வணிகர் வாழும் ஊர்களிலேயே அமைக்கப் பெறும்.

*"இவ்வூர் அங்காடியில் ஊராள்வார்கள் பெறும் அங்காடிக் கூலி கொண்ட இவ்வூர் நகர்வாரியம் செய்வோமாக".*

(தெ. கல். தொ. 5, கல். 597)

**நங்கிலி :** (அ) கோலார் மாவட்டத்திலுள்ள செல்வவளமுள்ள நாடு. மலைப்பாங்கான சூழ்நிலையுடன், துங்கபத்திரை ஆற்றை வடக்கு எல்லையாகக் கொண்டிருந்தது. இதனை முதற் குலோத்துங்கன் கைப்பற்றியுள்ளான்.

*"கல்லதர், நங்கிலி துடங்கி மணலூர் நாடுவென்று துங்க பத்திரையளவும்"*

(முதல் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)

**நஞ்சை புஞ்சை :** (வே) நன்செய், புன்செய். நீர்ப்பாசனம் இயல்பாகப் பெற்று நெற்பயிர் விளையும் நிலம் நன்செய். இறைப்புப் பாசனம், வானமாரி ஆகியவற்றினால் விளைவுபெறும் நிலம் புன்செய்.

*''வாணவிச் சாதிரப்புத்தேரி - நன்செய் புன்செய் நால்பாலெல்லை''*

(தெ. கல். தொ. VII, கல். 120)

**நட்டவம் :** (கலை) நட்டுவம் என்பதின் திரிபு. நாட்டியம் பயிலும் மாணவர்கட்கு, அக்கலையினைப் பயிற்றுவிக்கும் கலைத்தொழில். இக்கலையில் வல்ல ஆசிரியன் ''நிருத்தமாராயன்'' என்ற சிறப்புப் பெயர் பெறுவான்.

*''நீட்டவஞ் செய்ய நட்டவம் ஒன்றுக்கு அரையன் சுந்தரசோழனான மும்முடி சோழ நிருத்தமாராயனுக்குப் பங்கு இரண்டும்''.*

(தெ. கல். தொ. 3, கல். 66)

**நட்டவக்காணி :** (அ) நாட்டியம் பயிற்றுவிக்கும் நட்டுவனார்க்கு அரசு அளிக்கும் இறையிலி நிலம் நட்டவக்காணி என்பதாகும். திருக்கோயில்களில் நாட்டியம் நிகழ்த்துவிக்கும் ஆசிரியனுக்குரிய காணியாட்சியும் இப்பெயர் பெறும்.

*''ஸ்ரீபராந்தகதேவீஸ்வரத்து நட்டவக் காணியுடைய நித்தவிடங்கன்''*

(தெ. கல். தொ, 5, கல். 579)

**நட்டுத்துரவு :** (வே) நட்டவத்துரவு. நாட்டியம் பயிலும் மாணவ மாணவியர்க்கு, அப்பயிற்சி நிகழும் தனியிடம். நட்டுவக் கலைக் கூடம்.

**நட்டுப்பாழ் :** (வே) நாற்று நட்டபின்பு நீர் இன்றியோ மழையின்றியோ, நோய்ப்பட்டோ பாழான பயிர்.

**நடவல் :** (வே) நாற்றங்காலிலிருந்து பிடுங்கிய நாற்றினை, முறையாக நடப்பெறும் தொழில்.
நாற்றுநடும் ஆள் 'நடவாள்'' என்று கூறப்பெறுவர்.

**நடைமாளிகை :** (சம) கருவறையைச் சூழ்ந்ததாகத் திருச்சுற்றில் அமைக்கப்பெறும் தொடர்நிலை மண்டபம்.

**நத்தப்பாடு கடமை :** (அ) ஊர் நத்தப்பகுதியில் சீர்திருத்தம் செய்வதற்குரியதாகப் பெறும் வரி.

**நத்தப்பாழ் :** (வே) கிராமத்தின் ஒருபகுதியாகும் நத்தத்தில், மக்கள் குடியிருப்பும் விளைவும் இல்லாத தரிசுநிலம்.

**நத்தம் :** (வே) ஊரையோ, கிராமத்தையோ சார்ந்துள்ள குடியிருப்புப் பகுதி. இப்பகுதி நீர்நிலைகளைச் சார்ந்ததாகவே அமையும் பார்ப்பனரும், சமுதாயத் தொழிலாரும் உழவர்களும் வாழும் குடியிருப்பாகவும் நன்செய், புன்செய் நிலங்களும் திடலும் சூழ்ந்ததாகவும் அமைந்திருக்கும்.

*''ஊர் நத்தத்து சிவ பிராமண குடியிருப்பு மனை இரண்டும்''.*

*''நத்தம் புன்செய் நன்செயும்''*

(தெ. கல், தொ. 4 கல். 424)

*''இவ்வூர் நத்தத்தில் நீர்நிலம் ஏழுமாவும்''*

(தெ. கல், தொ. 4, கல். 524, 537)

*''சாலிசர்க்கு குடியிருப்பு நத்தமாக''*

*''சிவபிராமணர் குடியிருப்பு நத்தம்''*

*''பலபணி நிமந்தக்காறர்க்கு ஜீவிதமடைந்த நத்தமான நிலம்''*

(தெ. கல், தொ. 12, பகு.1, கல் 154)

**நந்தவான புறம் :** (சம) நந்தவனப்புறம். இறைவன் வழிபாட்டிற்குரிய நந்தவனம் அமைக்க விடப்பட்ட நிலம். நந்தவனத்தைப் பயிர் செய்துகாப்பவருக்கும், மலர் பறித்து வருபவருக்கும், மாலை தொடுப்பவருக்கும் கொடுக்கப்பெறும், இறையிலி நிலம்.

*''திரும்புறம்பியமுடைய மஹாதேவர்க்கு, இருமடி சோழவணுக்கள் செய்வித்த இவ்வூர் திருநந்தவானம் மண்டலங்காப்பானாக்கு நன்தவானபுறமாக-நிலம்''*

(தெ. கல். தொ. 6, கல். 18)

*''எல்லாப்பூமரமும் வைத்த நிலம் மூன்று மாநிலமும் வேலியடைந்து நீரிறைத்து கன்று வைத்த ஆள் மூவர்க்கும் திருப்பள்ளித்தாமம் பறித்து குணந்து தொடுக்கும் மாணிகள்வசம் பலகையில் அட்டுவாரிருவர்க்குமாக ஐந்தாளுக்கும் சொற்றுக்கு ஆளால் கர்ற்செயலாக ஒன்றேகாலுமான நிலமாவது''.*

(தெ. கல். தொ. 8, கல். 640)

**நந்தாவிளக்கு :** (சம) கோயிலில் இறைவனுக்கு முன்னர் இடையருமல் எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கும் திருவிளக்கு. கல்வெட்டுக்களில் நுந்தா விளக்கு நொந்தா விளக்கு என்றெலாம் குறிக்கப்பெறும் தூண்டாவிளக்கு. 'நொந்தா வொண்சுடரே' என்பர் சுந்தரர்.

'நந்தாவிளக்கனைய நாயகனே' என்பர் கம்பர்.

*"திருச்செந்துறைக் கற்றளிப் பரமேஸ்வரர்க்கு சந்திராதித்தவல் ஒரு நொந்தா விளக்கெரிப்பதற்குக் குடுத்தேன்."*

(முதல் பராந்தகன், தெ. கல். தொ. 8, கல். 602)

**நந்திபோத்தரையன் :** (அ) நந்திவர்மபல்லவன். "போத்தரையன்" என்பது பல்லவ மன்னர்கள் பெற்றிருந்த விருதுப் பெயராகும்.

*"தெள்ளாறெறிந்து ராஜ்யமுங் கொண்ட நந்திப் போத்தரையர்க்கு"*

(தெ. கல். தொ. 12, கல். 56)

**நப்பு :** (சம) வழிபாடு, அர்ச்சனை. நம்பு செய்வார்-அர்ச்சனை செய்பவர். நம்பிக்கையான செயல்.

**நம்பிராட்டியார் :** (வ) நம்முடைய அரசியார். பிராட்டியார்-பெண் தெய்வங்கட்கும், அரசியர்க்கும் அமைந்த சிறப்புப் பெயர்.

*"ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார் கோயிலில், நம்பிராட்டியார் ஒலோகமஹாதேவியார் எழுந்தருளுவித்த பிச்சதேவர்க்கு"*

(முதல் இராசராசன், தெ. கல். தொ. 2 2, கல். 35)

*"உமாஸகிதர் திருமேனி ஒருவர், இவர் நம்பிராட்டியார் உமா பரமேஸ்வரியார் திருமேனி ஒருவர்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 33)

**நயினார் :** (வ) நாயனார். அரசன், அடியார்கள், ஆகியோர்கட்கமைந்த மரியாதைப் பெயர்.

**நரசிங்க பருமன் :** (அ) நரசிங்க வர்மன்.

*"கோவிசைய நரசிங்க பருமற்கு இரண்டாவது வாணகோஒ அரைசர். சேவகர்".*

(தா. வேலூர் - நடுகல்)

**நரபதி :** (அ) மக்கள் தலைவன்; அரசன். சோழ மன்னர்களும், பாண்டிய மன்னர்களும் பெற்றிருந்த விருதுப்பெயர்களுள் ஒன்று. இப்பெயர் கல்வெட்டுக்களின் தலைப்பாக கிரந்த எழுத்துக்களிலமைந்த வடமொழிச் செய்யுள்களில் கூறப்பெற்றுள்ளன. (நரர்-மக்கள்)

**நல்பசு (நற்பசு) :** (சமு) கிராமத்தில் காட்சியாக வைக்கப்பெற்றுள்ள பசுக்களின் பாதுகாப்பிற்கான வரி. 'நல்லா' என்றும் கூறப்பெறும்.

**நல்லெருது :** (அ) சிறந்த சாதி எருதுகளை வளர்ப்பதற்குரியதாக அரசுபெறும் வரி. நல்லெருது, நல்லெருமை, என்ற பெயர்கள் கல்வெட்டுக்களில் அடைவாகக் கூறப்பெறும் வரி வகைகளுள் இடம் பெறலுள்ளமையால், இவை கிராமங்களில் சிறப்பாக வளர்க்கப் பெறும் பசு, எருமை ஆகிய இனங்களில் வளர்க்கப் பெறும் சிறந்த காளைகட்கு உரிய வரியாகவும், அவற்றின் பாதுகாப்பிற்காக அரசுபெறும் வரியாகவும் அமையும்.

**நவகண்டம் :** (வ) வீரனொருவன் தன் உடலிடத்து ஒன்பது இடங்களில் தசையரிந்து கொற்றவைக்குப் பலியிடுதல். இது வீரர் காணிக்கையாகும்.

*"படாரிக்கு நவகண்டங்குடுத்து குன்றகத்தலை அறுத்துப் பிடலிகை மேல் வைத்தானுக்கு".*

(தெ. கல். தொ. 12. பகு. 1. கல். 106)

**நவநிதிக் குலப் பெருமலைகள் :** (பொ) ஒன்பது வகையான இரத்தினமாகிய செல்வங்கள் விளைகின்ற மதிப்புடைய பெருமலைகள் (இப்பகுதி விந்திய மலைக்கும் கோதாவரி ஆற்றுக்கும் இடையே அமைந்த மலைத்தொகுதிகள் எனலாம்).

*"இரட்டபாடி யேழரை இலக்கமும் நவநிதிக்குலப் பெருமலைகளும்".*

(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**நவரத்ந மோதிரம் :** (பெ) வயிரம், நிலம், முத்து, புஷ்யராகம், கோமேதகம், பவழம், மரகதம், வைடூர்யம், மாணிக்கம் என்னும் ஒன்பது மணிகளும் ஏற்ற அமைப்பில் முகப்பாக வைத்திழைக்கப்படும் மோதிரம்.

*"நவரத்ந மோதிரம் ஒன்றில் நவரத்நம் ஒன்பதும் உள்பட*

(தெ. கல். தொ. 2 கல். 93)

முதல் இராசராசன் தாமெழுப்பிய தஞ்சை இராசராசேச்சரத்து பரமசுவாமிக்குச் செய்தளித்த அணிகலன்களுள் நவரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட மோதிரமும் ஒன்ருகும். நவரத்தினங்கள் எம்முறையில் மோதிரத்தில் பதிக்கப் பெற்றிருக்கக் கூடுமென் பதைக் கல்வெட்டினைக் கொண்டு அறியலாகும்.

''*நவரத்தின மோதிரம் ஒன்றிற் கட்டின 1. வயிரம் ஒன்றும் 2. நீலம் ஒன்றும், 3. முத்து ஒன்றும் 4. புஷ்பராகம் ஒன்றும், 5. கோமேதகம் ஒன்றும். 6. பவழம் ஒன்றும். 7. மரகதம் ஒன்றும், 8. வைடூர்யம் ஒன்றும் 9. மாணிக்கம் ஒன்றும் உட்பட*''

(தெ. கல். தொ. 2, கல். 86)

நவிரை : (வே) இஃது ஒருவகை நெல். ஆடிப் பட்டத்தில் வான வாரியாக விதைக்கப் பெறும் நெல். பாண்டிய நாட்டின் பெரும் பகுதியில் இந்நவிரை நெல் போகம் மிகுதியாக விளைக்கப் பட்டிருப்பதைக் கல்வெட்டுக்கள் புலப்படுத்துகின்றன.

''*இவ்வூர்களில் நீரிலி நிலமாய் வரிசைப்படி இறுத்து வருகிற நிலங்களுக்கு-நவிரை இந்நெல்லின் ஒன்று முக்கால் இறுப்ப தாகவும்*''.

(புதுக். கல். தொ. கல். 250)

நாற்கால வற்காலமெல்லாம் : (வ) பருவமழை பெய்து பயிர்விளைந்த நற்காலத்தும், அவ்வாறு அமையாது நின்ற வறிய காலத்தும், எல்லாக் காலத்தும்.

''*இரண்டு நந்தாவிளக்கு எரிப்பதாகவும் நற்கால வற்கால மெல்லாங் கலந்து சந்திராதித்தவல் பிரமாண மிப்பணி முட்டா மைச் செலுத்துவதாக*''

(முதற் பராந்தகன், தெ. கல். தொ. 8, கல் 10)

நற்காசு ; (அ) உரையும் துளையும் எடையும் குறையாத பொற் காசு. குற்றமற்ற காசு.

''*குற்றமற்ற அன்றாடு நற்காசு*''

(தெ. கல். தொ. 8. கல். 613)

நன்திபன்மன் : (அ) நந்திவர்மன். பல்லவ மன்னன் 'சன்தி விளக்கு''. இவ்வாறு நகரமயக்குச் சொற்கள் செங்கற்பட்டு

மாவட்டத்திலமைந்த கல்வெட்டுகளில் பெரும்பான்மையாகக் குறிக்கப்பட்டுள்ளன.

**நாட்டாமை ;** (அ) நாட்டாண்மை, ஊர்நிர்வாகத் தலைமை. ஊர்க்கட்டுப்பாட்டுத் தலைமை. நாட்டாண்மைக்காரர்.

**நாட்டார் ரக்ஷை :** (வ) நாட்டுப் பெருமக்கள் காப்பார்களாக. கோயில்களுக்குச் செய்யப்பெறும் அறநிவந்தங்களை ஏற்றுக் காத்து நடத்திவைப்பதனை, ஊர்ச்சபையாரேயன்றி நாட்டுப் பெருமக்களும் பொறுப்பேற்பதுண்டு என்பதனை இதனால் அறியலாகும்.

''*நொந்தா விளக்குக்கு வைத்தபொன் ழுரு·இட்பொன் நாட்டார் ரக்ஷை*''

(தெ. கல். தொ. 14, கல் .25)

**நாட்டு உபாதி :** (வ) நாடு என்னும் பிரிவுக்கு அமைந்த சபைக்குச் செலுத்த வேண்டிய கடமைகள் (வரிகள்).

**நாட்டுக்கணக்கு வரி :** (அ) ''நாடென்ற வரியும்'' என்று கல் வெட்டுக்களில் கூறப்பெறும், நிலப்பகுதித் தீர்வைக் கணக்கு களை எழுதும் செலவுக்குரியதாக ஊராரிடம் இறுக்கும் வரி.

**நாட்டுக்கால் :** (அ) நாடு என்ற பிரிவுக்குரியதாக அரசு அமைத்துள்ள நெல் அளக்கும் மரக்கால்.

''*எப்போப்பட்ட வரிகளும் நாட்டுக்காலால் அறுகல நெல்லும் ஒரு பணமும் இறுப்பாரகளாக*''

(தெ கல். தொ. 8, கல். 411.)

**நாட்டு நாயகர் :** (அ) அரசியல்வழி நாட்டு நிர்வாகத் தலைமையை ஏற்றுள்ளவன். நாடுகாவல்-மேலதிகாரி. இவர்கள் நாடு கண் காணி என்னும் அதிகாரிகளுக்கு மேம்பட்ட அதிகாரமுடையவ ராவர்.

**நாட்டு நீங்கல் :** (அ) நாடென்ற பெயரால் அரசு பெறுதற்குரிய வரிக் கணக்கினின்றும் நீக்கப்பெறும் இறையிலி நிலம், ஊர்ச் சபை யாரின வரிடபுத்தகத்திற்கு மாற்றுதல். அதனால் அவ்வரிகளை ஊர்ச்சபையாரே வசூலித்துப் பயன்படுத்துவர் என்பதாகும்.

**நாட்டு விநியோகம் :** (அ) நாட்டின் பொதுக்காரியங்களுக்காக சபையார் மக்களிடம் முறையாகப் பெறும் காசு வரி.

**நாடகமாராயன் :** (கலை) நாடகத்தினை இயக்குவிப்பதோடு, அதற்கமைந்த பாடல்களையும் பாடுபவன். மாராயம் - அரசனாற் பெறுஞ் சிறப்பு. 'மாராயம் பெற்ற' என்பது தொல்காப்பியம்.

''*குராவன் வீரசே ழனான டஞ்சவன் மாதேவி நாடக மய்யனுக்குப் பங்கு ஒன்று*''.

(தெ. கல். தொ. 2:2, கல். 66)

''*நட்டவரில் மாராயன் ஐயாறநாத ராஜேந்திர சோழ நாடக மாராயனுக்கும் இவன் வர்க்கத்தார்க்கும் குடுத்தோம்*''

(தெ. கல். தொ 8, கல். 644)

**நாடா இசைந்த நாடு :** (அ) நாடாக இசைந்த நாடு. முன்னர் பல ஊர்களாக இருந்து வளர்ச்சியடைந்த நிலையில் ஆளும் அரசு அதனை நாடாகக் கொள்ள அனுமதித்து, அதற்கேற்ப இறைவரி அமைக்கப்பெற்ற நாடு.

(மூன்றாம் குலோத்துங்கன் காலம், புதுக்கோட்டை கல்வெட்டு எண் - 176)

''*வல்லநாட்டு கவிற்பா கள்ளப்பால் நாடாய் இசைந்த நாடோம்*''

(புதுக். கல். 38)

**நாடு :** (அ) வளநாட்டின் உட்பிரிவு. இக்காலப் பிரிவின்படி வட்டம் என்பதை ஒக்கும். சில கல்வெட்டுகளில் நாடு என்ற பெயர்ச் சொல், சபையாரையும் குறிப்பதாக அமையும்.

''*அருமொழிதேவ வளநாட்டு இங்கனாட்டு இராசகேசரி நல்லூர்*''

(தெ. கல். தொ 2:2, கல். 27)

''*உய்யக்கொண்டார் வளநாட்டு அம்பர் நாட்டு குலும்பல்*''
(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**நாடுகண்காணி நாயகம் :** (அ) சோழராட்சியில் அரசு அமைத்த நாட்டு அதிகாரிகளின் செயல்களைக் கண்காணிக்கும் அதிகாரிகளின் தலைவன். இவ்வதிகாரி எவ்விடத்தும், யாரிடமும், எக்கணக்கினையும் ஆய்வு செய்வதற்கு அனுமதி பெற்றவன்.

''*இந்நாடு உள்ளிட்ட நாடுகள் கண்காணி நாயகம் செய்கின்ற வைப்பூர் உடையான்*''

(தெ. கல் தொ. 18, கல். 328, முதல் இராசராசன்)

*''திருக்கோவலூர் திருவீரட்டானமுடைய மஹாதேவர் ஸ்ரீ பண்டாரம், இன்னாடு கண்காணிநாயகஞ் செய்யும் இளமங்கல முடையான நிச்சல் ஸ்ரீயாரூர் இத்தேவர் ஸ்ரீபண்டாரஞ் சோதிச்சு ஸ்ரீபண்டாரப் பொத்தகப்படி நிலைவுருக் கண்டு''.*

(முதல் இராசேந்திரன் கி.பி. 1018, தெ. கல். தொ. 7, கல். 891)

*'சேநாபதி முடிகொண்ட சோழ விழுப்பரையர்க்காக நாடு கண்காணி நாயகஞ் செய்கின்ற கந்மி சீகாருடையான்''*

(புதுக். கல். 90)

**நாடுரி ஆழாக்கே செவிடு :** (வா) நாழியும் உரியும் ஆழாக்கும் செவிடும் ஆகிய அளவுள்ளதானியம். (முகத்தலளவைகள்)

*''நெல்லு இருநாடுரியாழாக்கே நாற்செவிடும்''*

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 2:2. கல், 35)

முகத்தலளவை முறையாகக் கூறப்பட்டுள்ளன.

செவிடு, ஆழாக்கு, உரி, நாழி என்பனவாம்.

அவை : 5 செவிடு-1 ஆழாக்கு, 2 ஆழாக்கு-1 உழக்கு, 2 உழக்கு-1 உரி, 2 உரி-1 நாழி என்னும் அளவுகளுடையனவாகும்.

**நாடுகாவல் :** (அ) அரசினால் நியமிக்கப்பெற்ற வழியே குறிப்பிட்ட ஊர்களின் இணைப்பாகும் நாட்டினைக் காவல் செய்யும் தலைவன். இதனையே ''நாடுதலையாரிக்கம்'' என்றும் கூறப் பெறும்.

*''நாடாட்சியும் ஊராட்சியும்-நாகாவலும் ஊருபோக்கும் - கோத் தொட்டுண்ணற்பாலது எவ்வகைப்பட்டதும்''*

(இறை) (பெரிய லெய்டன் செப்பேடுகள் முதல் இராசராசன்)

**நாடுகூறு :** (அ) நாட்டின் விளைநிலங்களைத் தரம்பிரித்து நிர்ணயப்படுத்தும் அதிகாரி.

**நாடுபாவிய :** (அ) நாட்டில் நுழைந்த. பாவிய-படையுடன் புகுந்த.

*''முத்தரைசர் நாடுபாவிய தஞ்சிற்றப்படிகள் பொன் மாந்தனார்''*

(செங்கம் நடுகற்கள் - பல்லவர் கி.பி. 7 நூற்.)

**நாடுவகை :** (அ) வரி விதிப்பதற்காக, நாட்டு அளவையும் அதன்கண் அமைந்த நிலங்களின் தரத்தையும் கண்டு வகைப்படுத்தி

அளந்து பிரித்து, அவ்வவற்றிற்கேற்ப வரி நிர்ணயம் செய்தல். இதற்கமைந்த அதிகாரியும் "நாடுவகை" என்றே குறிக்கப் பெறுவன்.

*"கேரளாந்தக வளநாட்டு உறையூர்க் கூற்றத்து திருப்பராய்த் துறை-இந்நாடு வகை செய்கின்ற காரிக்குடையான் வீரசோழன்"*

(தெ. கல். தொ. 8, கல். 583)

*"நாடுவகை செய்கின்ற கேரளாந்தக நல்லூருடையான் கேந்திரன் உத்தம சோழன்"*

(புதுக். கல். 92, முதல் இராசராசன்)

**நாடுவாரியம் ;** (அ) நாடுகாவல், நாடென்ற வரி, பாடிகாவல், இறைகாவல் ஆகியவற்றைக் கண்காணிக்கும் மேல் நிலைச் சபையார்.

**நாபிக்குமேல் புருஷாகாரமாய் :** (சம) உந்திக்கு மேல் ஆண் மனித வடிவு உள்ளதாய், உலோகத்தால் செய்யப்பட்ட பதஞ்சலிமுனிவர் —(உந்திக்குக் கீழ் பாம்பு வடிவம்)

*"நாபிக்குமேல் புருஷாகாரமாய் நாபிக்கு கீழ் மூன்று சுற்றுப் பேழை செய்துகொண்டு இருந்தாராகக் கனமாக எழுந்தருளுவித்த ஸ்ரீபதஞ்சலி தேவர் திருமேனி ஒன்று".*

(தெ. கல். தொ. 2:2, கல். 53)

**நாமணைக்கோணை :** (அ) நாமணைக்கோணை, மதுரமண்டலம், பஞ்சப்பள்ளி, மாசுணிதேசம், இவைகள் வேங்கி நாட்டின் ஆட்சிக்கு உட்பட்டனவாகவும் வேங்கி நாட்டைச் சூழ்ந்தனவாக வும் உள்ள இடங்கள். இவைகளை முதல் இராசேந்திர சோழன் வென்றுள்ளான்.

*"காமிடை வளைஇய் நாமணைக் கோணமும்"*

(முதல் இராசேந்திரன்—மெய்க்கீர்த்தி)

**நாயகஞ் செய்பவன் :** (அ) தலைமை வகிப்பவன். நிர்வாகத் தலைமையினைச் செய்து வருபவன்.

*"தனிச்சேரிப் பெண்டுகளுக்கும் கந்தர்விகளுக்கும் நாயகஞ் செய்ய சாவூர் பரஞ்சோதிக்குப் பங்கு ஒன்றும்"*

(த. பெ. கோ. கல்., தெ. கல். தொ. 2, கல். 66)

**நாயகத் தூக்கம் :** (கலை) நவரத்தினங்களால் சிறப்பாக அமைக்கப் பெறும் பதக்கம். ஸ்ரீசந்தம் என்னும் அணிகலனின் நடுவே தோற்றமுடையதாகப் பொருத்தப் பெறும் பதக்கம் (தொங்கல்).

*"ஸ்ரீசந்தம் ஒன்றில்-நாயகத்தூக்கம் மூன்றே நாலித் தலையில் விடங்குடையன இரண்டும்".*

(தெ. கல். தொ. 2,2, கல். 57)

**நாராச நாழி :** (வா) கைப்பிடிக்கம்பியோடு கூடியதாக அமைக்கப் பட்ட நெய்யளக்கும் நாழியளவுள்ள அளவைப்படி. (திருவெள் ளறைக் கோயிலில் வழக்கிலிருந்தது.)

**நாராசம் :** (பொ) கைப்பிடிக் கம்பி. விளக்குகளைத் தொங்கவிடும் வளையம். தூபமணிக் கைப்பிடிப்பகுதி.

*"தூபமணி நாக்கும் நாராசமும் உள்பட பித்தளை இடை 40-ம்"*

(தெ கல். தொ. 12, கமு. 1, கல். 150)

விளக்கினை வளையத்திற் கோர்த்து மேலே மாட்டுதற்கமைந்த இருமுனையும வளைந்த இருப்புக் கம்பி. பித்தளை போன்ற உலோகத்திலும் இக்கம்பி செய்யப் பெறும்.

**நாராயணன் என்றிட்ட அளவுகோல் :** (அ) சடையவர்மன் சுந்தர பாண்டியன் ஆட்சியில் தொண்டை மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்தில் இப்பெயரால் நிலமளக்கும் கோல் நிறுவப் பட்டுள்ளது. இதன் நீளம் பதினாறடியாகும்.

*"தொண்டை மண்டலத்து புலியூர்க் கோட்டம் தட்டுக் கெடவாண ராய தேவர் பேரால் அமைந்த நாராயணந் என்றிட்ட அளவுகோல் பதினாறடியும் வில்தடியும்".*

(தெ. கல். தொ. 6, கல். 264)

**நாராய நாழி :** (சம) நிருபதுங்க பல்லவன் ஆட்சியில் திருத்தவத் துறைக் கோயிலில் இருந்த நாழியளவுக்குரிய அளவைப்படி.

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 61)

**நாராயநாழி ஸ்ரீகண்டன் :** (சம) பாண்டி நாட்டுக் கீழ்மாத்தூர் ஸ்ரீகண்டேசுவரர் கோயிலில் நெய் அளக்கவிருந்த கைப்பிடிக் கம்பியாகும். நாராசத்தோடு இணைந்த ஸ்ரீகண்டன் என்ற பெயருடைய நாழி அளவை.

**நாராயம் :** சிறுபழுவூர் திருவாலந்துறை சிவன் கோயிலில் முதல் பராந்தகன் காலத்தில் வழக்கிலிருந்த நெய் அளக்கும் அளவை (நாழி).

*''நொந்தா விளக்கு இரண்டு இரவும் பகலும் எரிய சந்திராதித்தவற் எரிய, நாராயத்தால் நிசதம் உரிய நெய்''*

(தெ. கல். தொ. 5. கல். 681)

**நாரைக்கண்பட்டி :** (கலை) காதணி. நாரை என்னும் பறவையின் கண் போன்ற வடிவில் பொன்னால் செய்யப்பெறும் காதணி.

(திருவையாறு - கல்வெட்டு)

**நாலிகங்கபாடிக் கல் :** (அ) தொங்கும்படியாக அமைக்கப்பட்ட கங்கபாடி வயிரக்கல். முதல் இராசராசன் கங்கபாடியை வென்று கொணர்ந்த பொருள்களுள் ஒன்றான வயிரம். இது தஞ்சைப் பெரியகோயிலில் தாம் எழுந்தருளுவித்த உமாபரமேஸ்வரியார் திருமேனிக்குரிய பட்டைக்காறையின் நடுவிலமைந்த திருவில் தொங்கும்படியாக அமைக்கப்பட்டதால், ''நாலி கங்கபாடிக்கல்'' என்று குறிப்பிடப்பட்டுளது.

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)

**நாலித்தலை :** (கலை) கழுத்திற்கமைந்த அணிகலன்களில் அசைந்தாடும் தொங்கல்களாக அழகுடன் அமைக்கப்படும் முகப்புக் கோவை.

*''சவி மூன்று வடம் உடையன எட்டும. சவியினுள்ளால் சிறு தூக்கமும் மூன்றே நாலித்தலையில் விடங்குடையன எட்டில் கட்டின பொத்தி எட்டும்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

**நாலுழக்கும் பிழையா நாழி :** (வா) நாலுழக்கு அளவில் குறையாத குற்றமற்ற நாழியளவைக் கருவி. நாலுழக்கு-1 நாழி என்ற அளவு பல்லவர் காலத்தில் தொண்டை நாட்டில் இருந்தது.

(தெ. கல். தொ. 12, கல். 78)

**நாவிசம் :** (சமு) நாவிதத் தொழில். கிராம சமுதாயத் தொழில்களுள் ஒன்று. இவர்கட்கு, கிராமப் பொதுவாக சபையார் காணியாட்சியாக நிலம் அளிப்பதுண்டு.

*''நாவிசம் செய்ய இருவர்க்கு, செயதரன் நெத்தானன் ஆன ராஜராஜப் பெரு ,ாவிசனுக்குப் பங்கு ஒன்றும்''*

(தெ. கல். தொ. 22, கல். 66)

நாழிஉரி : (வா) நாடுரி. நாழியும் உரியுமாக அளந்த முகத்தலளவை. நாழி+உரி=நாடுரி எனப் புணரும் எனத் தொல்காப்பியத்திற் புணர்ச்சி விதி கூறப்பட்டது.

*''உலகளந்தான் நாழியால் அளக்கும் நெய் நாழிஉரி''*

நாழி - ஒருபடி. உரி - அரைப்படி. நாடுரி - ஒன்றரைப்படி.

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 147)

*''போது உரிய தயிரமுதாக நிசதம் நாடுரி தயிரமுதும்''*

(புதுக். கல். 92)

நாள்வட்டம் : (சம) நாள்முறைமை. அன்றாட முறைமை.

*''திருநந்தாவிளக்கு மூன்றுக்கு - எண்ணைமூவுழக்கு நம்பிமார் வசமே நாள்வட்டம் அளக்கவும்''*

(தெ. கல். தொ. 7, கல். 769)

நாள்வாய் : (சம) நாளொன்றிற்கு. வாய் என்பது, 'தொறும்' என்னும் இடைச்சொற் பொருளில் வழங்குவதாகும்.

*''நாள் வாய் நாழி நெய் அளந்து குடுத்து இரண்டு நந்தா விளக்கு எரிப்பேனானேன்''*

(தெள்ளாறெறிந்த நந்திவர்மன் - தெ. கல் தொ. 8, கல். 309)

நாற்றுக்கால் : (வே) நாற்றங்கால், நெல்விதைத்து நாற்றுப் பயிர் செய்யும் நிலப்பகுதி.

*''இதன் கீழை நாற்றுக்கால் தடிமூன்றாய் நிலன் நான்குமா''*

(தெ. கல். தொ. 4, கல். 537)

*''நிலம் ஒன்பது மாவரை முந்திரிகையும் இதுக்கு நாற்றங்காலாந நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை''*

(புதுக். கல். 92)

நாறுபள்ளித்தாமம் : (சம) மணமுள்ள மலர்களால் கட்டப்பட்ட மாலை. இறைவன் வழிபாட்டிற்கு மணமுள்ள மலர்களே பயன் படுத்தப் பெறுவது இதனால் குறிக்கப்பெறுகின்றது.

*''நாறு பள்ளித்தாமம் வடம்-ரு-னால் ஆளு சாத்திரமாணி ரு-னுக்கு நெல் மூன்று கலனும்''.*

(தெ. கல். தொ. 5, கல். 1378)

**நாற்பத்தெண்ணாயிரவர் :** (சமு) தமிழகத்தில் வாழ்ந்திருந்த சிவ பிராமணர் என்னும் ஆதி சைவரின் கூடிய எண்ணிக்கை 48000-பேர்கள் என்பதாகும்.

*''பிறைமுடி யருந்தவச் சடாதர ராதியி லஞ்செழுந்தோதிய தொண்டரென்றெண்ணிய நாற்பத்தெண்ணாயிரவர்''*

(தெ. கல். தொ. 8, கல். 69)

**நாறைக்கண்பட்டி :** (கலை) நாரைக்கண்பட்டி திருமேனிகட்கு அணிவிக்கும் காதணிகளுள் ஒன்று.

*''திருக் காதுக்குச் சாத்த இட்ட நாறைக்கண்பட்டி இரண்டினால் பொன் அரைக கழஞ்சேய் நாலுமஞ்சாடி''*

(திருவையாறு - கல்வெட்டு)

**நான்று :** (வ) நாளில். ஞான்று - நான்று என ஞகரத்திற்கு நகரம் போலி.

*''இவ்வாட்டை மிதுனநாயற்றுச் சனிக்கிழமை பெற்ற சித்திரை நான்று''*

(தெ. கல். தொ. 19, கல். 222) ஞான்று - நாள்.

**நானாதேசி :** (வா) நான்கு திசைகளிலும் சென்று வணிகம் செய்து வரும் வியாபாரிகள், வியாபாரிகள் குழு.

*''நான்கு திசைப் பதினென்பூமித் தேசித் திசை விளங்கு திசை ஆயிரத்தைஞ் ஞூற்றுவரோமும் பலமண்டலத்து நாட்டுச் செட்டிகள்''*

(தெ. கல். தொ. 8, கல். 198)

**நானாதேசிகள் :** (சமு) பிற நாட்டிலிந்து குடியேறி வாழும் வணிகப் பெருமக்கள்.

*''போகீஸ்வரமுடையார் கோயிலில் நானாதேசிச் திருவாசலுக்கு நானாதேசியோம்-வைத்த வைப்பு.''*

வைப்பு - நிலைத்த மூலதனம். (நிதி)

(தெ. கல். தொ. 8, கல். 405)

**நிச்சநடைக்கு :** (மொ) நாள் செலவினங்கட்கு. திருக்கோயில்களில் நாளும் நிகழும் செயல்களுக்கு.

"*குணவிய நல்லூர் விசையராசிச்வரத்து படாரர்க்கு நிச்ச னடைக்கு நானாழியுரியும்*".

(தெ. கல். தொ. 7, கல். 174)

"*தேவர்க்கு நிச்சல் நடைக்குச் செல்லும் பூமியும்*"

(தெ. கல். தொ. 5, கல். 775)

**நிச்சம் :** (மொ) நாளும், நாள்தோறும்

"*நிச்சம் உழக்குநெய் பொற்காலோடொக்கும் முழக்கால் அட்டு வார்களாகவும்*"

(முதல் இராசராசன் கல்வெட்டு, மணிமங்கலம். கி. பி. 990, தெ. கல். தொ. 6, கல். 270)

"*நிச்சமுக்காலு நெய் விரவிக்காட்டுந் திருவமிர்திற்கு*"
(பல்லவர்காலம், கி.பி 9; தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 93)

**நிச்சில் :** (மொ) (நிச்சல், நிச்சம், நிசதம்) நாள்தோறும். (நித்தம்) ஒவ்வொருநாளும்.

**நிசதி :** (வ) (நிசதம்) நாள்தோறும்.

"*இவர்களிலே நிலையாய் உடுக்கை வாசிப்பான் ஒருவனும், இவர்களிலே நிலையாய்க் கொட்டிமத்தளம் வாசிப்பான் ஒரு வனும் ஆக ஐம்பதின்மர்க்குப் பேரால் நிசதம் நெல்லுமுக்குறுணி நிவந்தமாய்*".

(தெ. கல். தொ 2, கல். 65)

"*நிசதிப்படி அட்டும் நெய் இருநாழியும்*"

(தெ. கல். தொ. 19, கல். 51)

"*நிசதி உழக்கெண்ணை முட்டாமே திருக்கோயிலுக்கே கொண்டு சென்று அட்டுவிப்போமாகும்*"

(தெ. கல். தொ. 19, கல். 34)

**நிசதி நாலு சோறு :** (வ) நாள் ஒன்றுக்கு நான்கு அளவு சோறு என்றும், குறிப்பிட்ட அளவில், நான்கு அளவு சட்டிச் சோறு என்றும் கொள்ளலாம். இக்காலத்தில், திருக்கோயில், அன்ன அறச்சாலை ஆகியவற்றில் "ஒருபட்டைச்சோறு" என்ற அளவில் கொடுக்கப்படும் அளவினை ஒப்பிட்டறியலாகும். இவ்வளவை',

அக்காலத்தில் இருநாழி அரிசி கொண்டு ஆக்கிய சோறு ஒரு சட்டிச் சோறு என்பதேயாம்.

*"இப்பொன் கடைக்கூட்ட வந்தார்க்கு நிசதி நாலு சோறு குடுப்போமானோம்".*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 100)

**நிசீதிகை :** (மொ) சமண முனிவர்கள், உண்ணாநோன்பிருந்து உயிர்நீத்த இடத்திலமைத்த ஞாபகச் சின்னம்.

*"ஐம்பத்தேழ னசனந் நோற்ற சந்திர நந்தி ஆசிரிகர் நிசீதிகை"*

(திருநாதர் குன்று கல்வெட்டு - கி.பி. 3ஆம் நூற்)

**நித்தப்பச்சை :** (அ) நாள்தோறும் குறிப்பிட்ட அளவில் பெறும் சிறு காணிக்கை. வரி வகையில் ஒன்று.

**நித்திய நியமம் :** (வ) நாளொன்றிற்கு இன்னவாறான செலவினங்கள் என்று வரையறை செய்தல்.

*"பெருமாள் தன்மமாக நித்திய நியமமாக நடந்து"*

(தெ. கல், தொ. 5, கல். 733)

**நித்தல் நிவந்தம் :** (சம) நாள் வழிபாட்டிற்குரியதாக அமைக்கப்பட்ட கட்டளை.

*'இத்தேவர்க்கு நித்தல் நிவந்தஞ் செய்யக் கடவ இடையரனை வரும் இப்பரிசு நிசதம் பதக்கிரு நாழி உழக்குப் பால் அட்டுவிக்கக் கடவார்கள்".*

(முதல் இராசராசன், கி.பி. 1003, தெ. கல். தொ.7, கல். 880)

**நித்தவிநோத வளநாடு :** சோழநாட்டின் இடையிலமைந்த வளமான பகுதி. தஞ்சை மாவட்டத்தில், தஞ்சை வட்டத்தின் கீழ்ப் பகுதியும் பாபநாசம் வட்டத்தின் மேற்குப் பகுதியும் மன்னார்குடி வட்டத்தின் வடக்குப் பகுதியும் அரிசிலாற்றின் தெற்குப் பகுதியும் கூடிய காவிரியின் பாசனவளம் நிரம்பிய நிலப்பகுதி. ஆலூர்க்கூற்றம், வெண்ணிக் கூற்றம், பாம்புணிக்கூற்றம், நாலூர் நாடு, கரம்பை நாடு, முடிச்சோணாடு என்பவை இந்நாட்டிலடங்கிய பகுதிகளாகும்.

*"சோழ மண்டலத்து-நித்த விநோத வளநாட்டு ஆலூர் கூற்றத்து இரும்புதலாகிய மனுகுல சூளாமணிச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 69)

**நிபந்தம் :** (வ) திருக்கோயில்களில் வேதாகம விதிப்படி வழிபாடு முதலான செயல்கள் தான் நியமித்தவாறு நிகழ்தற்குரிய கட்டளைச் செலவினங்கட்கமைந்த வருவாயாகவும் மூலதனமாகவும் நிறுவப்பெறும் அறச்செயல். இச்சொல் கல்வெட்டுக்களில் நிமந்தம் என்றும் குறிக்கப்பெறுகின்றது. நிலமாகவும், வருவாயாகவும், வரியாகவும், காசாகவும் இருக்கும். கடமையைச் செய்தார் பெறும் கூலியும் நிபந்தம் என்று குறிக்கப்பெறும்.

*"கூத்தாடும் தேவர்க்கும் இவர் நம்பிராட்டியார்க்கும் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிமந்தங்களுக்கும்-பிரமாணம் பண்ணிக் குடுத்த-பாடகம்"* (நிலம்)

நிவந்தம் பார்க்க. (தெ. கல். தொ. 5, கல். 294)

*"இடபவாஹன தேவர்க்கும் நம்பிராட்டியார்க்கும் திருமஞ்சனப் படிகளுக்கும், திருவமுது படிக்கும் வேண்டும் நிபந்தங்களுக்கு நிபந்தம் செய்து குடுத்தோம்"*

*"பூதநாதர் புற்றிடங்கொள் புனிதர்க்க முதுபடி முதலாம் நீதிவளவன் தான் வேண்டும் நிபந்தம் பலவும் அரியணையின் மீது இருந்தமைத்தான் வேதாகம நூல் விதி விளங்க"*

(பெரியபுராணம்-நமிநந்தியடிகள்-பாடல் 19)

**நிம்போளம் :** (பொ) முத்துவகையில் ஒன்று. வேம்பின் பழவடிவில் நிற வேறுபாட்டுடன் அமைந்த முத்து.

*"இரண்டாந்தரத்திற் கோத்த முத்து வட்டமும், அனுவட்டமும் ஒப்புமுத்தும் குறுமுத்தும் நிம்போளமும், பயிட்டமும், அம்புமுதும், கறடும் இரட்டையும சப்பத்தியும் சக்கத்தும் குளிர்ந்த நீரும் சிவந்த நீரும் உடைய முத்து"*

(தெ. கல். தொ. 2:2, கல். 59)

**நிமந்தக்காரர் :** (சம) நிபந்தக்காரர். கோயில் நடைமுறைகளை ஏற்று நடத்தும் பணியாளர். உபயதாரர் என்றும் பொருள்தரும்.

**நிமந்தப்புறம் :** (சம) நிமந்தப்புறம். கோயிலின் குறிப்பிட்ட கட்டளையை நடத்துபவருக்குரிய வருவாய்க்குரியதாக, இறையிலியாக விட்ட நிலம் அல்லது கிராமம்.

**நிமந்தம் :** (சம) நிபந்தம். குறிப்பிட்ட மூலதனத்தினைக்கொண்டு அதன் வழிபெறும், வட்டி, வருவாய் ஆகியவற்றால், நிலையாகச் செயல்பெறும் திட்டமுடன் செய்துவைக்கப்பெறும் அறச்செயல்.

''*ஆக இவையிற்றுக்கு நிமந்தமாகச் செல்வதாக*''

(தெ. கல். தொ. 3:2, பக். 187)

**நியமம் :** (வ) முன்னோர் நியமித்த முறைமை.

''*தராதிபராகத் தன் நியமத் தியற்றி*''

நாட்டு மன்னராக தன் முன்னோரின் வழியே ஏற்று.

(வீரராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

**நியதி :** (வ) பொழுது. காலை மாலை முதலிய சிறு பொழுதுகளைக் குறிக்கும் சொல்.

நிசதி—நாளினையும். நியதி—நாளின் பகுதியாகிய பொழுதினையும் குறிப்பதாக அமைந்துளது.

''*மாணி இரண்டு நியதியும் முட்டாமல் செய்வதாக செய்து குடுத்த நிலம் அர்ச்சனாபோகம்*''

மாணி—கோயில் பரிசாரகன்; பிரமசரிய ஒழுக்கமுடையவன். இரண்டு நியதி—காலை மாலை இரண்டு வேளை.

(தெ கல். தொ. 19, கல். 53)

**நியாயத்தார் :** (அ) ஆள் நியமனம் செய்சுற்குரிய ஊர்ச்சபையார். ஊர்ப்பெருமக்கள், அறங்கூறவையத்தார்.

''*அவ்வவர்க்கு அடுத்தமுறை கடவார் தாந்தம் யோக்யர் அல்லாதுவிடின் யோக்யராயிருப்பாரை ஆளிட்டுத் திருப்பதியம் விணணப்பம் செய்வித்து அந்நெல்லுப் பெறவும், அவ்வவர்க்கு அடுத்தமுறை கடவாரின்றியொழியின் அந்த நியாயத்தாரே யோக்யராயிருப்பாரை திருப்பதியம் விண்ணப்பம் செய்ய இட்டு*''.

(தெ. கல். தொ. 2. கல். 65)

**நியாயநடை :** (வே) நேர்மையான முறைமை. மிகுதி குறைவு இல்லாத செயல்.

*"நியாய நடை வாய்க்கால்"*

(முறைமையோடு அமைந்த பாசன வாய்க்கால்)

(தெ. கல். தொ. 19. கல். 371)

நியோகம் : (மொ) அனுமதி வழங்கல். உடன்படிக்கை செய்தல்.

*"இப்படி கல்வெட்டிக்கொள்வென்று மஹாஸபை நியோகம் குடுத்தோம்"*

(தெ. கல். தொ. 8 கல். 290)

*"வெள்ளாளர் பக்கல் நியோக மெழுதிக் கொள்ளக் கடவதல்லாத தாகவும்"*

(தெ. கல். தொ. 6, கல். 47)

நிர்மலன் கோயில் : (சம) மலமில்லாதவன். பிறப்பில்லாதவன். சிவபெருமான் கோயில்.

*"நெற்றி நாட்டத்து நிர்மலன் கோயில்"* (திருவொற்றியூர் கோயில்)

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 93)

நிரப்ப : (மொ) நிறைவாக, குறைவற.

*"விண்ணகராழ்வார் திருமுற்றத்தே நிரம்ப பெருங்குறி கூடி இருந்து"*

(தெ. கல். தொ. 7, கல். 414)

நிருத்தப் பேரரையன் : (கலை) பரதக் கலையினைப் பயிற்றுவிக்கும் கலைஞருள் நட்டுவத் தலைவன்.

*"நம்மை சேவிக்கும் நட்டுவரில் குலோத்துங்க சோழ நிருத்த பேரரையன் விலைகொண்டு அனுபவித்து வருகிற பங்கிரண்டும்"*

(தெ. கல். தொ. 5, கல். 706)

*"நட்டவம் செய்ய நட்டவம் ஒன்றுக்கு, அரையன் சுந்தர சோழனான மும்முடி சோழ நிருத்த மாராயனுக்குப் பங்கு இரண்டும்"*

(முதல் இராசராசன்., தெ. கல். தொ. 2:2, கல். 66)

நிருத்த மண்டபம் : (சம) திருக்கோயில்களின் முன்னரமைந்த திருமுற்றத்தில், திருவிழா நாட்களில் தேவரடியார்கள் என்னும்

ஆடல் மகளிர் தெய்வப்பாடல்கட்கு மெய்ப்பாடமைத்துக் காட்டி நடனமாடு தற்கென்று அமைக்கப்பெறும் மண்டபம்.

*"திருப்பெருமாண்டார் கோயிலில் திருமுந்பில் நிருத்தமண்டபம் செய்தான்"*

(புதுக். கல். 105)

**நிலக்குறியீடுகள் :** (மொ) விக்கிரம சோழன் காலம்.

கி.பி. 1120 - 1150

கீ - கீழ் - கீழ்நிலம்

கு - குழி - குழிநிலம்.

**நிலத்துக்கு நீர்க்கீந்தவாறு :** (வே) இறையிலி செய்யப்பட்ட நிலத்துக்குரிய நீர்ப்பாசன வகை முறைகட்கு ஊர்ச்சபையார் செய்த அனுமதி விபரம்.

*"வாய்க்கால் அன்னர் குரங்கறுத்துக் குத்தவும், குற்றேத்தம் பண்ணவும் கூடைநீர் இறைக்கவும், விலங்கடைக்கவும், பெறாத தாகவும் செந்நீர்ப் பொதுவினை செய்யாததாகவும், அந்நீர் அடைச்சுப் பாச்சப் பெறுவதாகவும் - துரவு கண்ணாறு இழிச்சப் பெறுவதாகவும்-சுற்றுக் கரை வெட்டிக் கொள்ளப்பெறுவதாகவும், புறவூர் நிலத்துள் வந்துபாய உடைய நிறைமை வந்து பாயவும் வாரவும் பெறுவதாகவும்"*

(தெ. கல். தொ. 19, கல். 344)

**நிலப்பரிவர்த்தனை :** (வ) ஒரு நிலத்திற்கு ஈடாக அதே மதிப்புடைய வேறொரு நிலத்தையோ, மனையையோ, கொடுத்து ஆவணம் செய்தல்.

*"இத்திருவேகம்ப விளாகத்துக்குத் தலைமாறு நிலப்பரிவர்த்தனை பண்ணின பாடகம்"*

(வளாகம் - இயற்கையான பூமி, பாடகம் - விளைநிலமாகத் திருத்திய பூமி.)

(தெ கல். தொ. 6, கல். 351)

**நிலபோகம் :** (வே) நிலவருமானம் நிலத்தில் விளைவிக்கும் பயிர்.

*"நீர்நிலன் இருவேலியினால் வந்த போகம் அஞ்ஞாழிக் காலால் ௩௨-கலம்."*

(தெ. கல். தொ. 3:3, கல். 106)

**நிலப் அடக்கி :** நிலம் அடக்கல். சிறுபகுதிகளாக கூறப்பட்ட துண்டு நிலங்களின் கூடிய அளவினை உள்ளடக்கிக் கொண்ட-அளவு (கணக்கு).

*''பலசுரமடக்கி நிலம் மும்மாவரை முந்திரிகைக் கீழ் எழுமாக்காணி முந்திரிகைக் கீழ் அரையும்''.*

(தெ. கல் தொ. 5, கல். 641)

**நிலவிலைப் பிரமாண இசைவுத்திட்டு :** (வே) நிலத்தின் விலை உறுதி செய்யப் பெற்ற பின்னர், இருவரும் இசைந்து எழுதிக்கொள்ளும் உடன்படிக்கை உறுதிச்சீட்டு (Agreement).

*''இப்பங்கு நாலுக்கும் இக் காசு நாலாயிரமும் விலையாவ தாகவும். இதுக்கு இவர் வேணுமென்றபோதே பிரமாணம் பண்ணிக் குடுக்கக் கடவோமாகவும், குடுத்திலோமாகில் இந்த பிரமாண இசைவுத் தீட்டே பிரமாணமாவதாகவும்! இப்படி சம்மதித்து-விற்று விலைப் பிரமாண இசைவுத் தீட்டு குடுத்தோம்.''*

(தெ. கல். தொ. 8. கல். 340)

**நிலவிலை ஆவணம் :** (வே) நிலத்தின் கிரைய சாசனம்.

நிலத்தை விலைக்கு விற்றதற்குரியதாக ஆவணக் களரியில் பதிவு செய்யப்பட்ட சாசனம்.

*'உறையூர் கூற்றத்து ஈசானமங்கலத்து நன்பகல் ஆவணத் தியன்ற பூமிவிலை யாவனம''*

(தெ. கல். தொ. 8, கல். 612)

*'உடையார் அகமுடையாள் பொன்னாண்டாளேன் நிலவிலை யாவணம் செய்து குடுத்த பரிசாவது''*

(தெ. கல். தொ. 7, கல். 944)

**நிலைநின்று :** (சம) நிலையாகக் குடியிருந்து, நிலைக்குடியாக நின்று

*'ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இருபத்தைஞ்சாவது முதல் நிலைநின்று இறையிருந்தேய் குடியோடிப்போய''*

(தெ. கல். தொ. 5, கல். 701)

**நிலைக்களம் :** (அ) வரிவசூல் செய்யும் அலுவலகம். என்றும் மாறாது இருக்கும் இடம்.

**நிலைப்பொலியூட்டு :** (வ) எக்காலத்தும், நிலைத்த வட்டி செலுத்துகை.

*"ஸங்கிராந்தி தோறும் முட்டாமை நிலைப்பொலியூட்டாகத் திங்கடோறுமாக குடுப்போமானோம்."*

(நிருபதுங்க வர்மபல்லவன்.

(தெ கல். தொ. 12, கல். 70)

**நிலைமைத் தீட்டு :** (வ) நிலையான உடன்படிக்கைச் சீட்டு. என்றும் மாற்றம் பெறாத செய்திகளையுடைய உறுதிச்சீட்டு.

(தீட்டு-சீட்டு, எழுதப்பெற்றது.)

**நிலையிறை :** (அ) அரசுக்கு, எக்காலத்தும் மாற்றமிலாது நிலையாகச் செலுத்தும் வரி. நிலங்களின் பேரிலும் போகங்களின் பேரிலும் அரசு நிலையாகப் பெறும் வரி அல்லது இறை.

**நிலையுடைய :** (மொ) நிலையான வாழ்வினைப் பெற்ற. இத்தொடரில் உகரமேறிய யகர உயிர்மெய் வடிவிற்கு 'யு என்றமைக்காது, யகரத்துடன் கிரந்த எழுத்துகட்குரிய ு வரி வடிவினை இட்டு எழுதப்பட்டுள்ளது.

வீரராசேந்திரன் காலம் - திருவோத்தூர் கல்வெட்டு.

**நிலையுருகண்டு :** (அ) நிலை உரு கண்டு. பண்டாரம் என்று பெயர் பெறும் கருவூலத்தினைச் சோதனையிடும் போது, மூலக்கணக்கின் படி நிலையாக இருக்கும் பொருள்களை ஒப்புப் பார்த்தல் நிலையுரு காணலாகும். நிலைஉரு - நிலையாகப் பாதுகாக்கப்பட்ட உருப்படிகள் (பொருள்கள்). இதனைக் கருவூலக்கணக்குத் தணிக்கை என்றும் கூறலாம்.

*"ஸ்ரீபண்டாரம் சோதிச்சு, ஸ்ரீபண்டாரப்பொத்தகப்படி நிலையுருக் கண்டு".*

(முதல் இராசேந்திரன், கி.பி. 1018, தெ. கல். தொ. 7, கல். 891)

**நிறைச்சலளவு :** (வ) மரக்கால் போன்ற முகத்தலளவைகளில் தானியங்களை அளக்கும்போது நிரம்பிய அளவு கொஞ்சமும் குறைவு படாமல் அளப்பது.

*"ஆட்டாண்டு தோறும் இக்கோயிலில் ஆடவல்லானென்னும் மரக்காலால் உள்ளூர்ப்பண்டாரத்தே நிறைச்சலளவாக இரண்டாயிரக்கல நெல்லு".*

(தெ. கல். தொ. 2:1, கல். 20)

**நிலைவிளக்கு :** (பொ) தரையில் பீடம் பொருந்த, நெய்யகலுடன் எழுந்த அமைப்பிலுள்ள உலோக விளக்கு. இதனைக் குத்து விளக்கென்றும் கூறுவர்.

''*ஐஞ்சான் நீளத்து நிலைவிளக்கு-க.*''

(முதற்பராந்தகன் கி.பி. 907, தெ. கல். தொ. 7, கல். 509)

''*இத்திருநுந்தாவிளக்கு எரிக்க இட்ட குத்துவிளக்கு ஒன்று. இது தரா இடை அறு.*''

(விக்கிரம சோழன். தெ. கல். தொ. 7, கல் 741)

**நிவந்தம் :** 1. திருக்கோயிலில் வழிபாட்டினங்களுக்கும், பலபணி செய்வார்க்கும் நிலையாக வைக்கப்பட்டுள்ள மூலபண்டாரங் களாகிய கருவூலங்களிலிருந்து அரசு ஆணையிட்ட அளவுப்படி அளிக்கப்பெறும் கூலி, ஊதியம், நாட்கூலி ஆகிய திட்ட அறக் கொடை நிவந்தம் எனப்படும்.

''*இவர்களில் திருப்பரிசாரகஞ் செய்யும் மாணிகள் பெறு நெல்லும் காசும் பண்டாரிகளும் கரணத்தார்களும் உடையார் ஸ்ரீராஜராஜீச்வரம் உடையார் நாட்டுப் பண்டாரத்தே பெறவும்,*

*ஆக இப்படி நிவந்தமாக*''.

(தஞ்சைப் பெரியகோயில் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 2: கல். 69)

''*ஆக ஐம்பதின்மர்க்கு பேரால் நிசதம் நெல்லு முக்குறுணி நிவந்நமாய் ராஜகேஸரியோடொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்காலால் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்தே பெறவும்*''.

(தெ. கல். தொ. 2: கல். 65)

2. இறைவனுக்குரிய வழிபாட்டிற்கும் பிற அறச்செயல் களுக்கும் அரசர் முதலாயினோர் நிலையான மூலப் பொருளினை ஏற்படுத்தி, அதன் வருவாயினைக் கொண்டு நாளும் அவ்வறம் நிகழச் செலவு செய்யப்பெறும் செயல் நிவந்தமாகும். மூலப் பொருளின் வருவாயினைக் கொண்டு நாளும் செலவிடுதற் கமைந்த திட்டம்.

நிவந்தம். நிபந்தம்-இவற்றுள் நிவந்தமென்பதே நாள் செலவினம் என்ற சரியான பொருளமைந்த தமிழோசையுடைய சொல் என்பதனை,

*"பொங்குமாமறைப் புற்றிடங்கொண்டவர் எங்குமாகிபிருந்தவர் பூசனைக்கு அங்கண் வேண்டும் நிவந்தம் ஆராய்ந்துளான் துங்க ஆகமம் சொன்ன முறைமையால்"*.

(பெரிய புராணம், மனுச்சோழன் வரலாறு, சேக்கிழார்.)

நிலையாக அமைக்கப்பட்ட பொருள் பண்டாரங்களில், விதிக்கப் பட்ட செலவினங்கட்கும், அறக்கொடை ஆகியவற்றிற்கும் நிலையான இருப்பிலிருந்து அல்லது பண்டாரங்களிலிருந்து வழங்குமாறு விதிக்கப்பெறும் கட்டளை. முதல் இராசராசன் செய் தமைத்த அறச்செயல்கள் யாவும் நிவந்தமாகவே அமைந்திருப் பதை அறிய முடிகின்றது.

**நிற்க வைத்த பூமி :** (சம) அறச்செயலுக்கு நிலையாக ஏற்படுத்தி வைத்த நிலம்

*"இத்தர்மத்துக்கு சந்திராதித்தவல் நிற்கவைத்த பூமி"*.

(தெ. கல். தொ. 3:1, கல். 14)

**நிறைக்குல தனக்குவை :** (பொ) நிறைவான மதிப்புடைய உயர்ந்த பொருட்குவியல்கள். குல தனம்—மதிப்பமைந்த செல்வம்.

*"பலதனத்தொடு நிறை குலதனக் குவையும்"*

(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**நிறைகுறையாப் பழங்காசு :** (வா) எடையிலும் உரையிலும் குறை யாத பழைய பொற்காசு. வரகுண பாண்டியன் ஆட்சியில் திருப் புத்தூர்ப் பகுதியில் நாட்டு வழக்கில் இருந்த பொற்காசு.

(தெ. கல். தொ. 14, கல். 15)

**நிறைமதி நாராயம் :** (சம) திருச்செந்தூர் திருக்கோயிலில் வழக்கி லிருந்த நெல் அளக்கும் மரக்காலின் பெயர்.

*"ஒரு காசுக்கு நிறைமதி நாராயத்தாற் பதின்கல நெல்ல:கமாக"*

(தெ. கல். தொ. 14, கல். 16)

**நீக்கல் நீக்கி :** (வ) நிவந்தத்திற் குரியதாகச் செய்யப்பெற்ற ஊர் அல்லது நிலப்பரப்பின் எல்லைகட்குட்பட்ட ஊர்ப்பொது இடங் களாகிய நத்தம், சுடுகாடு, கோயில், தரிசு, புறம்போக்கு ஆகிய இடங்களை நிவந்தத்துள் அடக்கி எழுதாது, நீக்கல் இடங்களாக நீக்கிச் சாசனமெழுதி. ஓர் ஊரையோ, அன்றி அங்கிருக்கும் நிலப்பகுதிகளையோ, கோயில்களுக்குரிய இறையிலி நிவந்தங்க

ளாகவோ, நான்மறையாளர்கட்குரிய பிர்மதேயமாகவோ, சதுர் வேதி மங்கலமாகவோ, சாசனமாகச் செய்யும் பொழுது, எல்லைக் குட்பட்ட ஊர்ப்பொதுவிடங்களை நீக்கிக் குறித்தெழுதுதல் சாசன மரபாகும்.

*"இவ்வூர் ஊர்நத்தமுஞ் சுடுகாடு முள்ளிட்டு இறைபிலியாக நீக்கின நிலன பொதுவே அனுபவிக்கக்கடவதாக நீக்கல் நீக்கி அளந்தபடி நிலம்".*

(முதல் இராசராசன், கி.பி. 1001, தெ. கல். தொ. 2, கல். 4)

**நீட்டல் அளவை :** திருமேனிகளின் நீட்டல் அளவைகள். (சோழர் கால அளவை)

| | |
|---|---|
| 8 தோரை (நெல்லளவு) | — 1 விரற்கடை |
| 12 விரற்கடை | — 1 சாண் |
| 18 விரல் | — $1\frac{1}{2}$ சாண் |
| 2 சாண் | — 1 முழம். |

**நீடுகால் :** (வே) நீண்டு செல்லும் வாய்க்கால். கால் - வாய்க்கால். வளநாட்டின் உட்பிரிவாகிய நாடு, கூற்றம் ஆகியவற்றில் ஒன்றி லிருந்து அடுத்துள்ள நாட்டினுள்ளோ கூற்றத்தினுள்ளோ தொடர்ந்து நீண்டு செல்லும் பாசனக் கால்வாய்.

*"இவ்வூர் நிலத்தை யூடறுத்துப் புறவூர்களுக்குப் போய் நீர் பாயும் வாய்க்கால்கள்-புறவூர் நிலத்தூடு போந்து இவ்வூர் நிலத்துக்குப் பாயும் வாய்க்கால்கள்"*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**நீர்க்கூலி :** (அ) குடிநீர் வழங்கும் ஆட்கூலியாக அரசுபெறும் வரி.

*"இப்படி பெற்றதற்கும் பெற்ற பரிஹாரம், நாடாட்சியும் ஊராட்சி யும் வண்ணாரப்பாறையும் குசக்காணமும் நீர்க்கூலியும்"*

(பெரிய லெய்டன் சாசனம்)

**நீர்க்கோவை :** (வே) பருவகாலத்தில், நீர் நிரப்பப்பெறும் குளம், குட்டை, ஓடை ஆகிய நீர்நிலைகள்.

*"நஞ்சை புஞ்சைகளும் ஏரிகளும் நீர்க்கோவைகளும் அகப்பட"*

(தெ. கல். தொ. 8, கல். 290)

**நீர்த்தளித்தல் :** (சம) நீர்த்தெளித்தல். புதிதாகக் கோயில் கட்டி, விமான உச்சிக்கலசத்திற்குத் தெய்வ நீராட்டும் குடமுழுக்கு நீர் (கும்பாபிஷேகம்) செய்தல்.

'*மாறன் காரி இக்கற்றளி செய்து நீர் தெளியாதேய், மாறனெ இனன் முக மண்டபஞ் செய்து நீத்தளித்தான்*''.

(நீர்த்தெளித்தான்)

(தெ. கல். தொ. 14, கல். 2)

**நீர்த்தெளியான் :** (சம) நீர்த்தெளியன்; நீர்த்தெளிப்பவன். கிராம சபைகூடும் இடம், நடனசாலை திருவீதி ஆகியவற்றிற்கு நாளும் நீர்தெளித்துத் தூய்மை செய்பவன். தஞ்சைப் பெரிய கோயிலில் இத்தகைய பணியாளர் அமைக்கப்பட்டு அவர்கட்குக் காணியாட்சி கொடுக்கப்பட்டுளது.

''*நீர்த் தெளியான் நால்வர்க்கு பேரால் பங்கு அரையாக மேற்படியானுக்குப் பங்கு இரண்டும்*''.

(பங்கு - பங்கான நிலம்)

(தெ. கல். தொ. 2, கல். 66)

முதல் இராசராசன் தளிச்சேரிப் பெண்டுகட்களித்த நிவந்தம் பற்றிய செய்திகளைத்தரும் இக்கல்வெட்டில் தொழிலாளர் சிலரின் பெயர்கள் ஆன் விகுதிபெற்றதாகவே 'தய்யான்' 'ரத்னத் தய்யான்', 'நீர்த்தெளியான்' என்ற முறையில் கூறப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**நீர் நக்கல் :** குளப்புரவுக்குரிய நீரோடும் சிறுவாய்க்கால். வடிகால்.

''*அனுபோக மழகியான் குளத்தில் நீர் பாயும் பற்றுக்கு வடக்கும், மேல் எலலை இக்குளத்தில் நீர் நக்கலுக்கும் தவணைப் பற்றுக்கும் கிழக்கு*''

(தென்காசி-கல்வெட்டு)

**நீர்நிலப்பாடகம் :** (வே) நன்செய் நிலத்துடன் கூடிய குடியிருப்பு மேட்டு நிலம்.

''*வெண்ணைக் கூத்த நல்லூர் குடியிருப்பு உட்படத் தாம் பெற்ற நீர்நிலப்பாடகம்*''.

(தெ. கல் . தொ. 6, கல். 351)

**நீர்நிலம் :** (வே) நன்செய் நிலம். இயல்பாக ஆற்று நீர்ப் பாசனம் பெறும் நிலம்.

''*இந்நாற்பாற்கெல்லைக்கு நடுவுபட்ட கொல்லலத்துறை காடு வெட்டி கட்டைப்பரித்து மேடும் பள்ளமும் திருத்தி நீர்நிலமாக*''.

(தெ. கல். தொ. 7, கல். 97)

*"உவச்சு கொட்டச் செய்து குடுத்த நீர் நிலமாவது"*

(புதுக். கல். 91)

**நீர்ப்பாட்டம் :** (அ) நீர்நிலைகளின் பராமரிப்பிற்காக மக்களிடம் பருவகால முறையில் பெறும் வரி.

**நீர்பாயவும் வாரவும் :** (வே) கால்வாயிலிருந்து நிலத்திற்கு நீர் இயல்பாக மடைவாய் வழிப்பாயவும், கூடையாலும், ஏற்றத்தாலும் இரைக்கவும் பெறுவதாகவும்.

(தெ. கல். தொ, 8. கல்.1)

**நீர்வார்த்துக் கொடுத்தல் :** (சம) தானதர்மம் செய்ததை உறுதி செய்ய உரியவர் கையில், தர்மத்தை விபரமாகச் சொல்லி தாரை நீர் வார்த்துக் கொடுத்தல்.

*"திருவகத்தீசுரமுடைய நாயனாற்கு தேவதான தன்மமாக திருக்கை மலரிலே நீரவார்த்துக் குடுத்தமைக்கு"*

(புதுக். கல். 97)

**நீருக்கும் பாசிக்கும் :** (மொ) நீர்நிலைகளுக்கும், அவற்றில் வளரும் மீன்களுக்கும் விலையோலை.

(பாசிக் குத்தகை - மீன் குத்தகை)

*"இப்பற்றுக்களுக்கும் நீருக்கும் பாசிக்கும் இதுவே விலை யோலையும்"*

(தெ. கல். தொ. 5, கல். 303)

**நீலங்கோமளம் :** (கலை) ஒன்பது இரத்தினங்களுள் நீலம் என்பது ஒன்றாகும். நீல நிறக்கதிர் வீசும். இதன் வகைகளுள், வடிவும், ஒளியும், அழகும் பொருந்திய நீலம், "கோமளம்" என்று பெயர்பெறும்.

*"கண்டநாண் ஒன்றிற் கோத்த நீலங்கோமளம் ஒன்று"*.

(தெ. கல். தொ. 2:3, கல் 93)

**நுந்தா விளக்கு :** 1. கோயில்களில் நிவந்தமாக பொன், நிலம், ஆடு இவற்றுள் ஏதாவதொன்றினை வைத்து, இடப்பட்டதாகக் கூறப்பெறும், இந்நுந்தாவிளக்கு என்பது, இறைவன் சன்னிதியில்

நாள் முழுதும் தொடர்ந்து தூண்டா விளக்காக எரியும் விளக்காகும். விளக்கின் வடிவம் பலவாக அமையினும் அதன் நிவந்தச் செயல் தூண்டாது தொடர்ந்தெரியுமாறு செய்யப் பெறும் விளக்கென்பதேயாகும். கல்வெட்டுக்களில் நொந்தா விளக்கு, நந்தா விளக்கு என்றெல்லாம் கூறப்பெறுவது இவ் விளக்கேயாகும்.

*"திருவாலந்துறை மஹாதேவர்க்கு சந்திராதித்தவல் இரவும் பகலும் ஒரு நொந்தாவிளக்கு எரிய வைத்த நெய்".*

(தெ. கல். தொ. 5, கல். 682)

*"உதைய அற்தமனமும் அற்தமன உதயமும் எரியவைத்த திரு நுந்தாவிளக்கு".*

(தெ. கல். தொ. 17, கல். 447)

*"இத்திருநுந்தா விளக்கு எரிக்க இட்ட குத்துவிளக்கு ஒன்று இது தரா இடை அழி".*

(தெ. கல். தொ. 7, கல். 741)

2. தூண்டப்பெறுமல் எரியும் விளக்கு. இவ்விளக்கு இறைவன் திருமேனிக்கு அருகில் தொங்கு விளக்காகப் பெருமபான்மையும் அமைக்கப்பெறினும், குத்துவிளக்கு அமைப்பிலும் இவ்விளக்கு தரையில் நிலையாக நிற்கும் தோற்றத்திலும் செய்யப் பெறுவ துண்டு என்பதைத் திருவோத்தூர் கல்வெட்டு உணர்த்து கின்றது.

*"தொண்டைமானார் வார்ப்பித்துக்குடுத்த திருக்குத்துவிளக்கு இரண்டிலெரியுந் திருநுந்தாவிளக்கு இரண்டுக்கு".*

(தெ. கல். தொ. 7, கல். 93)

*"திருவுண்ணாழிகையில் ஒரு நொந்தாவிளக்கு இரவும் பகலும் எரிய வைத்த பொன் முப்பதின்கழஞ்சு".*

(முதல் இராசராசன்—தெ. கல். தொ. 8, கல். 676)

**நுந்தாவிளக்கு குடி :** (சமு) நுந்தாவிளக்கு எரிப்பதற்கு மூலதனமாக வைக்கப்பட்ட ஆடுகளைப்பெற்றுப் பாதுகாத்து, நிவந்தப்படி நாளும் கோயிலுக்கு நெய்யளக்கும் குடியினராகும் மன்றாடிகள் (இடையர்).

*"இத்தேவர்க்கு திரு நுந்தா விளக்கு குடிகளாய் ஆடு கைக்கொண்டு நெய்யளந்து வருகிற மன்றாடிகளில்"*

(தெ. கல். தொ. 5, கல். 643)

**நுளம்பபாடி :** (அ) இச்சிறு நாடு மைசூரின் தென்பகுதியில் அமைந்த தாகும். நுளம்பர் என்னும் அரசகுலத்தினரின் ஆட்சியும் வாழ்க்கை யும் நிலவியதால் இப்பெயர் பெற்றது. முதல் இராசராசன் இந் நாட்டை வென்றுளான்.

"*சங்கபாடியும் நுளம்பபாடியும்*"

(முதல் இராசராசன்-மெய்க்கீர்த்தி)

**நூலாயம் :** (அ) நூல் இழை நெய்யும் கைக்கோளரிடம் பெறும் சிறுவரி.

'*திருமுகப்படிக்கு இவ்வூர் கைக்கோளர் பேரால் நூலாயம்*''

(தெ. கல். தொ. 7, கல் 855)

**நெட்டாள் :** வெட்டி என்னும் தற்காலிகப் பணியாள் போன்றதொரு வேலையாள். கிராமப் பொது வேலைகளைச் செய்வதற்கென்று அமர்த்தப்பட்டு, சிறு ஊதியமும் சோறும் பெறுபவர்.

**நெடுங்கொடி காசு :** நெடிய கொடியின் இலச்சினை பொறிக்கப்பட்ட காசு. கி பி. 12ஆம் நூற்றாண்டில் சோழமண்டலத்தில் மக்கள் வாழ்க்கைக்குரிய பொருளாதார உதவி நிதியாக இக்காசு வழங்கப்பட்டுள்ளது.

"*இம்மண்டலத்துக்கு நெடுங்கொடி காசு சிகை இருபத்து நாலு கோடி காசு சிகை இழிந்தருளி*".

(சிகை—பெருந்தொகை)

(ஆக்கூர் கல்வெட்டு, தெ. கல். தொ. : 12, கல். 129)

**நெல்குற்றுச் சாலை :** (சம) நெல்குத்தும் தொழிலிடம், கோயில் நிவேதனத்துக் குரியதாக, தூய்மையுடன் நெல்லைக் குற்றி அரிசி யாக்கித் தரும் தொழில் நிகழும் இடம். இதனை 'நெற்குறு சாலை' என்றும் கல்வெட்டுக்களில் கூறப் பெறும். 'நெற்குறு சாலை' - பார்க்க.

(தெ. கல். தொ. 4, கல். 558)

"*உடையார் திருவொற்றியூருடைய நாயனாற்கு நெற்குறு சாலைக்கு நெற்குறக் கொண்டுவிட்ட பெரிய நாச்சியையும் இவள் மகள் தங்கைகள் ஆகப்பேர் ஐய்வரையும் இர்தாயனார்*

*நெற்குறுசாலைக்கு இவர்களும் இவ்வழியில் உள்ளாரும் சந்திராதித்தவரை நெற்குறுவதாக''*

(தெ. கல். தொ. 4 கல். 558)

**நெல்லாயம் :** (அ) அரசு நெல்லாகப் பெறும் வரி தானியங்களைப் பிற இடங்கட்குச் சாலை வழிக் கொண்டு சொல்லுங் காலத்தில், அதற்குரிய வரியை நெல்லாக அரசு பெறுவது ஆயமாகும்.

*''நாற்பாக் கெல்லைக்கும் உட்பட்ட-கடமையும் பாடிகாவலும் சாரிகையும் வெட்டிவரி சொள்வரியும் உட்பட்ட எப்பேற்பட்ட நெல்லாயங்களும்''*

(தெ. கல் தொ. 4, கல். 648)

**நெல்வரி :** (அ) நெல்லாக இறுக்கும் வரிவகை, நெற்கடமை எனவும் பெயர்பெறும். நெல் விற்பனை செய்வாரிடம் பெறும் வரி.

**நெற்குறுசாலை :** (சம) நெல்குற்றுஞ்சாலை. திருக்கோயில்களில் திருவமுதுக்குரிய நிவந்த நெல்லை நாள்தோறும் அளவுப்படி குற்றி தூக்குத்தல் அரிசியாக்கித்தரும் தொழிற்சாலை. இச்சாலையில் நெல்குற்றுதற்கு நிலையாகப் பெண்கள் அமர்த்தப் பெறுதல் வழக்காம்.

*''உடையார் திருவொற்றியூருடைய நாயனார்க்கு நெற்குறு சாலைக்கு நெற்குறக் கொண்டு, விட்ட பெரிய நச்சியையும் இவள் மகள் மாரியையும்''.*

(நெற்குற - நெல்குற்ற)

(தெ. கல். தொ. 4, கல். 558)

**நிறுத்தலளவைகள் :** (வா) பலபொருள்களை நிறுப்பதற்கு, கழஞ்சு, பலம், சேர் என்ற எடை அளவைகளும் பொன்னை எடையிட, மா, குன்றி, மஞ்சாடி கழஞ்சு என்ற எடை அளவைகளும், பிற அளவைகளும் பல்லவர் காலம் முதலாக சோழர் பாண்டியர் ஆட்சியிலும் தமிழகத்தில் வழக்கிலிருந்துள்ளன என்பதைக் கல்வெட்டுச் செய்திகள் உணர்த்துகின்றன.

(தெ. கல். தொ. 2:2, கல். 38)

*''அருளாளப் பெருமாள் புறப்பட்டருளி ஏகாதசி திருமஞ்சனமும் பெருந்திருவமுதும் செய்தருளத் திருமஞ்சனத்துக்கு திருமுளை சார்த்த திருமுளைப் பாலிகை ஒன்றுக்கு அடிக்கீழிட்ட, நெல்லு*

*உரியதாக முப்பத்தாறுக்கு நெல்லு பதக்கிருநாழியும், அரிசி அறு நாழி உழக்கும், நந்தாவிளக்குக்கு நாளொன்றுக்கு எண்ணை உழக்காக நாளஞ்சுக்கு எண்ணை நாழி உழக்கும், நெய் மூவுழக்கும், நெல்லு ஐங்குறுணி உரியும் புடவை பதின் மூன்றும், தேன் நாழியும்-பால் முன்னாழி யும்-தயிர் முன்னாழியும்-சந்தனம் முக்கஃசும் கற்பூரம் ஆறுமாவும் அகிலரைக் கழஞ்சும் கஸ்தூரி மஞ்சாடியும்-திருச்சுண்ணத்திற்கு நாடன் மஞ்சள் நாற்பதின் பலமும்-பருப்பு பதக்கிரு நாழியும்-சீரகம் ஆழாக்கும் சர்க்கரை முப்பத்திருபலவரையும்-மிளகு அழாக்கும்-விறகு கட்டு மூன்றும் குசக்கலம் உருவுக்கு நெல்லுக்கலமும் - வெள்ளிலை பற்றொன்பதும்-ஆக இவையிற்றுக்கு நிமந்தமாகச் செல்வதாக.''*

(தெ. கல். தொ. 3:2, பக். 187)

**பக்கவாத்யர் :** (கலை) கானம் பாடிக்கும், ஆரியம்பாடிக்கும், தமிழ் பாடிக்கும் பக்க வாத்தியங்களாக வீணை, வங்கியம், பாடவியம், உடுக்கை, கொட்டிமத்தளம், முத்திரைச் சங்கு ஆகிய இசைக்கருவிகளை இசைப்பவர்கள். இவர்கள் தஞ்சைப் பெரிய கோயிலில் முதல் இராசராசன் காலத்தில் நியமிக்கப்பெற்று, நாள் ஊதியமும் இறையிலி நிலமும் அளிக்கப் பெற்றிருந்தனர்.

*''பக்கவாத்த்யர் அழகிய சோழந் தெரிந்த-ஐயாரன் அந்தரிக்குப் பங்கு ஒன்று''*

(தெ. கல். தொ. 2:3, கல். 66)

**பகுற்றுதல் :** (மொ) பகுதிப்படுத்துதல், சமமாகப்பங்கிடுதல், சரியாகப் பிரித்தல். பரப்பாக அமைந்த நிலத்தைப் பல பகுதிகளாகப் பிரித்து வரப்பிடுதல்.

**பச்சை :** (வரி) (கார்த்திகைப் பச்சை) பொருள்களாகக் கொடுக்கும் காணிக்கை. இதனை வரி என்ற பொருளிலும் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

*''இலாஞ்சனைப்பேறு காணிக்கை கார்த்திகைப்பச்சை உள்ளிட்ட எப்பேர்ப்பட்ட இறைகளும்''*

(தெ. கல். தொ. 4, கல். 371)

**பச்சைக்கல் :** (கலை) ஒன்பது இரத்தினங்களுள் பச்சை நிறமாக அமைந்து ஒளியுடன் விளங்கும் மணி. இதனை 'மரகதம்' என்பர்,

*"பொன்னின் நாணிற் கோத்த மாணிக்கத்தின் திரு ஒன்றிற் கட்டின பச்சை ஒன்றும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 42)

**பச்சைப்பாட்டம் :** (வே) ஆண்டொன்றில் அமையும் பருவகாலங்களில் பொருள்களாகச் செலுத்தும் வரியாகும். வரிக்கமைந்த தானியங்களுக்கு ஈடான தொகையைச் செலுத்துவதும் பச்சைப் பாட்டமேயாகும்.

**பசானம் :** 1. (வே) சம்பாபோக நெற்பயிர். ஆறுமாத விளைவுள்ள நெற்பயிர். இது பிசானம் என்றும் கல்வெட்டுக்களில் பிழையாகக் குறிக்கப்பட்டுளது.

*"இந்நெல் அளக்குமிடத்து கார்பாதி பசானம் பாதி அளப்பதாகவும்"*

(தெ. கல். தொ. 3:2, பக். 168)

2. (வே) சம்பா நெல் பயிரிடும் பருவகாலம், ஆடிப்பட்டப் பருவகாலம். நீர்ப்பாசனம்பெறும் பருவகாலத்தில் விளையும் சம்பா நெற்பயிரும் பசானம் என்றே பெயர் பெறும். இதனை இக்காலத்தில், வேளாண்மை வாய்தா பெறும் பருவகால அளவுக் குரியதாக 'பசலி' என்று கூறுவர். (பசானம்-பசலி) சோழர் ஆட்சியிலும் பசான பருவகாலம் வழக்கிலிருந்துள்ளது.

*"ஸ்ரீராஜேந்திரதேவர்க்கு யாண்டு பத்தாவது பசான முதல் கொண்ட காசு"*

(தெ. கல். தொ. 2:2, கல். 54)

*"உடையார் ஸ்ரீராஜராஜதேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது பசான முதல் கொண்ட காசு"*

(தெ. கல். தொ. 2:1. கல். 37)

*"இந்நிலம் பதினைஞ்சாவது பசான முதல் தேவதான இறையிலியாக கைக்கொண்டு நிவந்தம் செலுத்தப்பண்ணுக"*

(தெ. கல். தொ. 17. கல். 135)

**பசுவின்றொய்தஇர் :** (சம) பசுவின் பாலினைக் காய்ச்சி புரைக்கு ஊற்றித் தோயச் செய்த கட்டித்தயிர்.

*"திருப்பணிக்கு பசுவின்றொய்தஇர் நியதி நாழி"*

(தெ. கல். தொ. 14. கல். 16. அ)

**பஞ்ச ஆசாரம் :** (சம) கோயில்களில் கருவறையுள் சென்று, திருமேனியினைத் தொட்டு வழிபாடு செய்தற்குரிய அர்ச்சகர், நாளும் ஒழுக வேண்டிய தூய நிலைகள் ஐந்தாகும்.

அவை : சரீர சுத்தி, ஸ்நாநம், பூதசுத்தி, பிம்பசுத்தி, ஆன்ம பூசை என்பது வேதாகம வழக்காகும் இதனை அகத்தூய்மை, புறத்தூய்மை, அகவழிப்பூசனை, ஐம்புலத் தூய்மை, வழிபாட்டுத் தூய்மை என்றும் கூறலாம். சிகை வைத்திருத்தல், சிவசின்ன மணிதல், வைகறை காலை, மதியம், மாலை, முன்னிரவு ஆகிய ஐந்து பொழுது நீராடல், ஆகம நியதிப்படி வழிபாடு செய்தல், ஆன்ம பூசை செய்தல் என்றும் கூறுவர்.

**பஞ்சக்கம் :** (அ) பஞ்சாயத்து, பஞ்சாயத்தார் செய்த தீர்ப்பு.

*"ஐவர் சட்டரைக்கொண்டு பஞ்சக்கஞ் செய்தான் புகவு பெறுவான்"*

(பார்த்திவ சேகரபுரச் செப்பேடுகள்)

**பஞ்சகம்மாளர் :** (சமு) பொன், வெண்கலம், இரும்பு, கல், மரம் ஆகியவற்றால் பொருள்களை உருவாக்கும் தொழிலாளர். இவர் முறையே தட்டார், கன்னர், கொல்லர், சிற்பி, தச்சர் என்று பெயர் பெறுவர்.

**பஞ்சகவ்யம் :** (சம) பசுவினிடத்திருந்து பெறப்படும் பால், தயிர், நெய், கோமூத்திரம், கோமயம் என்னும் ஐந்து பொருள்களின் கூட்டு.

*"திருச்சுரமுடையார்க்கு பஞ்சகவ்யம் பால் உழக்கும், தயிர் உரியும், நெய் உழக்கும், கோமூத்திரமும், கோமயமும் கொண்டு அபிஷேகம் பண்ணுவித்து"*

(மாமல்லபுரம் - கல்வெட்டு, தெ. கல். தொ. 7, கல். 541)

**பஞ்சசரி :** (கலை) மார்பணிகளுள் நவரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட பதக்கங்களாக ஒன்றன்கீழ் ஒன்றாக ஐந்து நிலையில் அமைக்கப்படும் அழகு ஒப்பனை அணி.

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுக்கள்; தெ. கல். தொ. 2:2, கல். 1)

**பஞ்சசலாகை :** (பொ) பொற்காசு. கி.பி. 11, 12 ஆம் நூற்றாண்டுகளில் பாண்டிய நாட்டில் வழக்கிலிருந்த பொற்காசு.

*"விற்று குடுத்துக் கொண்ட பஞ்சசலாகை அச்சு ஈடு."*

(புதுக். கல். 158)

**பஞ்சமா சத்தம்:** (கலை) ஐந்துவகையான உயர்ந்த ஓசைக் கருவிகள். இவை விருதுப் பறைகளாகும். திருக்கோயில்களில் நிகழும் வழிபாட்டின் போதும் இவ்விசைக்கருவிகளை இசைப்பது வழக்காகும். செண்டை, திமிலை, செகண்டி, கைத்தாளம் காளம் என்றும், தத்தளி, மத்தளி, கரடிகை, தாளம், காஹளம் என்றும் கூறுவர்.

**பஞ்சரம்:** (கலை) கோயில் விமானத்திற்கமைந்த நான்கு பக்கமுனைப் பகுதிகளில் கிளிக்கூண்டு போன்று அமைப்பில் அமைக்கப்பெறும் சிற்பவேலைப்பாடு மிகுந்த பகுதி.

**பஞ்சவமுது:** (சம) பஞ்சாமிர்தம் - பழம், பால், தேன், நெய், சர்க்கரை ஆகியவற்றை முறையாகச் சேர்த்து இறைவனுக்குப் படைக்கும் திருவமுது.

**பஞ்சவர் ஐவர்:** கி. பி. 11-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், பாண்டியர் ஐந்து பிரிவினராய் அரசு செலுத்தி வந்தனர். அவர்களே பஞ்சவர் ஐவர் என்று குறிக்கப்பட்டனர்.

*"வடகடல் தென்கடல் படர்வது போலத் தன்பெருஞ்சேனையை யேவிப் பஞ்சவர் ஐவரும் பொருத போர்க்களத்தஞ்சி வெருநெளித்தோடி அரணைப் புக்க காடறத துடைத்து நாடடிப் படுத்து."*

(முதற்குலோத்துங்கன் - மெய்க்கீர்த்தி)

**பஞ்சவாரம்:** (அ) ஐந்தில் அமைந்த பங்கு, ஐந்து கூறீட்டின் வழி முறைமையாகப் பெறும் பங்கு. விளைவில் ஆறிலொரு கடமை அரசுக்கு முறைமையாக உரிமையாதல் போக, எஞ்சியதும் காராண்மையாளர்க்குரியதுமான ஐந்து கூறீட்டிலும் அரசு பெறும் ஒரு பகுதி பஞ்ச வாரம் என்பதாகும். இது நெல்லாகவும் காசாகவும் பெறப்பட்ட வரியாகும்

கோயில்கட்குரிய தேவான நிலங்களிலும், அரசுக்கு உரிமையான இறை நிலத்திலும் பஞ்சவாரத்திற்கென்றே நிலம் ஒதுக்கப்பட்டிருந்ததைக் கல்வெட்டுச் செய்திகள் உணர்த்துகின்றன.

முதல் இராசராசன் ஆட்சியிலிருந்து இப்பஞ்சவாரம் அரசு பெறும் நடுத்தர வரிவகையுள் ஒன்றாக மக்களிடம் வசூல்

செய்யப்பட்டுளது எனலாம். மக்கள் பஞ்சவாரமாக அளக்கும் நெல்லிற்கு இறை வரி நீக்கம் செய்யப்பட்டுள்ளது என்பதால், பஞ்சவாரம் நாட்டு நலச் சேமிப்புத் திட்டமாகுமென்பது புலனாம்.

இச்சேமிப்புத்திட்டத்தினைச் சோழவரசு அரசுக்குரிய நேர் வருவாயான நிலங்களில் ஒரு பிரிவாகவே அமைத்திருந்ததோடு, தேவையான காலங்களில் வாரியம் அமைத்து மக்களிடம் முறையாக வசூல் செய்துளது.

பஞ்சவார வாரியத்தார் மக்களிடம் பஞ்சவாரம் பெறுதற் கென்றே, அரசு அதற்கென்று அமைத்த சிறிய கொள்கலமான மரக்காலினால் பஞ்சவார நெல் பெற்றுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

*''நிலம் மூன்றுமா முக்காணி செய்யும் கொண்டு. இந்நிலத்துக்கு பஞ்சவாரம் ஆட்டைவிட்டன மாத்தால் இருகலமாக நெல்லு ஏழுகலனே தூணிப்பதக்கு இறை நீக்கி''*

(தெ. கல். தொ. 5, கல். 711)

(பஞ்ச வாரத்திற்கு இறை நீக்கம்)

*''பஞ்சவாரக் காலோடொக்கும் நாழியால்''*

(தெ. கல். தொ. 7, கல். 114)

*''தொண்டைமான அரியலூரில் விட்ட பஞ்சந்தாங்கி செறு''*

(தெ கல். தொ. 4, கல். 645)

*''ஆகநிலம் மூன்றுமா முக்காணி செய்யுங் கொண்டு, இந்நிலத் துக்கு பஞ்சவாரம் ஆட்டை விட்டன மாத்தால் இருகலமாக நெல்லு ஏழு கலனே தூணிப்பதக்கு இறை நீக்கி''*

(தெ. கல். தொ. 5, கல். 711)

(இப்பகுதியால் அக்காலத்திலேயே அறச்செயலுக்கு வரியில்லை என்பது நாட்டு வழக்கிலுள்ளமை புலனாகும்.)

*''தொண்டைமான் அரியலூரில் விட்ட பஞ்சஞ்தாங்கி செறு''*

(தெ. கல். தொ. 4, கல். 645)

**பஞ்சவாரக்கால் :** (அ) பஞ்சவாரவாரியத்தார், பஞ்சவாரமாக மக்களிடம் தானியங்கள் அளந்து பெறுதற்கமைந்த மரக்கால்.

இம்மரக்கால் இறைபெறும் கடமைக்காலைவிட குறைந்த கொள் கலமாக அமைக்கப்பட்ட மரக்காலாகும்.

*"எங்களூர்ப் பஞ்சவாரக் காலாலே பரக்கூலி பட்டுக் கொண்டு வந்து ஸந்தராதித்தவற் அளந்து குடுப்போமானோம் சிறூர் ஊரோம்"*

*"பஞ்சவாரக் காலோடொக்கும் நாழியால்"*

(முதல் இராசராசன் கி.பி. 996, தெ. கல். தொ. 5, கல். 1366)

(தெ. கல். தொ. 7, கல். 114)

**பஞ்சவாரவாரியப் பெருமக்கள் :** ஊர்ச்சபையின் உட்பிரிவுகளாகிய வாரியங்களுள் பஞ்சவார வாரியத்திற்கமைந்த உறுப்பினராகிய பெருமக்கள். ஆட்சியில் ஆறிலொரு கடமை அரசு கொள்ள, எஞ்சிய ஐந்து கூறிட்டிலும் ஒருபகுதியை, பஞ்சவாரம் கொள்ளும் மரக்காலால் நாட்டு நலச் சேமிப்புத் திட்டமாகவும் வரியாகவும் பெறும் அதிகாரிகளின் குழு.

பஞ்ச-ஐந்தில், வாரம்-பங்கு, வாரியம்-பெறும் அதிகாரிகளின் நிர்வாகம்.

(பஞ்சவாரம்-பார்க்க)

*"எங்களூர் பஞ்சவாரக் காலாலே அளந்து குடுப்போமானோம்"*

(தெ. கல். தொ. 5, கல். 1366)

**பஞ்சாசார்ய தேவ நன்மிகள் :** (சம) ஐந்து வகையான தீட்சா நாமங்களைப் பெற்றவர்களாகவும், ஆகமங்களில் தேர்ந்து தெய்வ வழிபாட்டுப் பணியையும் மேற்கொண்டொழுகும் சிவாச்சாரியர்கள் உள்ளிட்ட சிவ பிராமணர்கள்.

சிவாச்சாரியர் தகுதிக்குரியதாக தீட்சை பெறுங் காலத்து தீட்சாநாமமாக சிவபெருமானின் ஐந்து திருமுகங்களின் பெயர்களுள் ஒன்றினைப் பூவிட்டுப்பெற்றுத் திருக்கோயில்களின் வழி-பாட்டு முறைமைகளையும் நியதிகளையும் கற்றுப் பூசனை செய்து வரும் சிறப்பினாலேயே பஞ்சாசாரியர் என்று பெயர் கூறப்பெற்றனர் என்பர்.

**பஞ்சுபீலி :** (அ) பருத்திச் செடி வளர்த்து, பஞ்சு எடுப்பதற்குரியதாகச் செலுத்தும் வரி. பஞ்சுப் பொதியின் மீது விதிக்கப் பெறும் வரியென்றும் கூறுவர்.

**பட்டங்கொட்டி இட்டன :** (அ) கோயில் கணக்கில் குற்றம் செய்த கரணத்தாரின் பெயர்களுடன், அவர் செய்த குற்றம் இன்னது என்பதனையும் பறை கொட்டித் தெரிவித்து, குற்றத்தார்க்கு விதிக்கப்பட்ட தண்டத் தொகையினை அவர்கள் பொதுமன்றத்தில் செலுத்தப் பெறுவது.

*"திருநெய்த்தானம் ஸ்ரீ கார்யம் ஆராயப் பெற்ற அயன் நாமக் கோடனார், இவ்வூர் நகரக்கரணத்தான் பனையூருடையானைக் குற்றத்தண்டம் கொண்டபொன்-பதின் முக்கழஞ்சே முக்காலே இரண்டு மஞ்சாடியும் பட்டங்கொட்டி இட்டன பட்டம் இரண்டு"*

(பராந்தகன் 2, கி. பி. 968, தெ. கல். தொ. 5, கல். 592)

**பட்டடை வரி :** (அ) பலவகைச் சில்லரை வியாபாரிகளாகிய செட்டிகளிடம் பெறும் வரி. படுகை களத்துமேடு ஆகிய புன்செய்ப் பகுதிகளில், பலவகைக் காய்கறிகளைப் பயிரிடும் குடிகளிடத்துப் பெறும் வரியுமாகலாம். கல்வெட்டுக்களில் 'பலபட்டடை' என்றும் கூறப்பட்டுள்ளது.

*"பலபட்டடை பயிங்குடி ஒன்றுக்கு பணம் மூன்றாகவும்"*

(பயிங்குடி-பயிர் செய்யும் குடி)

*"செட்டிகள் பலபட்டடையும தறியிறை தட்டார் பாட்டமும்"*

(தெ. கல். தொ. 8, கல். 180, 245)

*"சுங்கம் பட்டடைவரி வண்மை நாட்டுவிநியோகம் மற்றும் எப்பேர்ப்பட்ட உபாதிகளும்"*

(தெ. கல் தொ. 5, கல். 257)

**பட்டம் :** (கலை) திருப்பட்டம் : (கலை) பொன்னின் திருப்பட்டம், பொன்னால செய்யப்பெற்ற நெற்றிப் பட்டம். பருவகால விளைவு.

*"பொன்கொண்டு செய்து குடுத்த திருப்பட்டம் ஒன்று"*

(தெ. கல். தொ. 2:1, கல். 1)

**பட்டர் :** (சம) திருமால் திருக்கோயில்களில் ஆகமவிதிப்படி இறை வழிபாடு செய்யும் வைணவ அர்ச்சகர். சிவபிராமணரும் இப் பட்டத்தினைப் பெற்றுள்ளனர்.

*"முத்தான் தேவனான ஆலால சுந்தர பட்டன்"*

(தெ. கல். தொ. 17, கல். 444)

*"தில்லை நாயக பட்டர்"* - (புதுக். கல். 137)

"இவை *கிராஞ்சி திருவரங்க தேவ பட்டன் எழுத்து*"

(தெ. கல். தொ. 5, கல். 739)

*"விஷ்ணுவர்த்த கோத்திரத்தில் ஆபஸ்தம்ப சூத்திரத்தில் பள்ளமட திருமாருபம் கோயில் நாராயணபட்டர்"*

(தெ. கல். தொ. 5, கல். 754)

**பட்டவிர்த்தி :** (அ) காணியாட்சியாகப் பெற்ற நிலத்தினைத் தானும் தன் சுற்றத்தாரும் வழிவழியாக அனுபவிக்கும் நில உரிமை. (பல்லவர்காலம், தெ. கல். தொ. 12)

*"பள்ளிச் சந்தம் பட்டவிருத்தி உள்ளிட்ட நிலங்கள்"*

(தெ. கல். தொ. 7, கல். 936)

**பட்டனவர் :** (சமு) நெய்தல் நில மக்கள், மீனவர்கள். கடற்கரைக் குப்பங்களில் இவர்கள் வாழ்தலினால் பட்டினவர் (பட்டனவர்) என்று பெயர் பெற்றனர். 'பட்டினவன்' பார்க்க.

**பட்டாடை நூலாயம் :** (அ) பட்டாடை நெய்வதற்குரிய பட்டு நூலின் மீது விதிக்கப்பெறும் வரி.

**பட்டி ஒரு வட்டி :** (அ) மேல்வாரமாகவும், கீழ்வாரமாகவும் அமைந்த போகங்களில் ஒருபட்டி அளவு நிலத்திற்கு ஒரு வட்டியாக நெல் லளந்து செலுத்துவதாகும்.

*"இவ்வூர்கள் நஞ்சை புஞ்சை பட்டி ஒருவட்டி கீழ்வாரத்திலே யித்தேவர் இறையிலியிலேயளக்கக் சடவார்களாகவும்"*

(இராசராசன் 2, தெ. கல். தொ. 8, கல். 509)

**பட்டிக்காசு :** (அ) பயிர்பாதுகாப்பிற்காக, உரிய காலங்களில் கால் நடைகளைக் காவல் செய்யப்பெறும் காசுவரி. விளை பயிர்களை அழிவு செய்யும் கால் நடைகளை அடைக்கும் 'பட்டி' என்னும் காப்பகத்திற்குரிய கட்டளைக் காசு.

*"தறி இறை, வெட்டி, முட்டையாள், பட்டிக்காசு, காணிக்கை"*

(தெ. கல். தொ. 8, கல். 379)

**பட்டிகை :** (பொ) இடையிலுடுக்கும் ஆடை.

*"இதில் திறம்பில் உண்டிகையும் பட்டிகையும் காட்டாதே"*

(தெ. கல். தொ. 12, கல். 42)

**பட்டிநிலம் :** (வே) பதினாறு சாண் கோலால் (12 அடி கோலால்) ஐம்பது குழி கொண்டது ஒரு மாவாக ஆயிரங்குழி கொண்டது ஒரு பட்டி நிலமாகும். (இக்கால அளவுப்படி அரைவேலிக்குரிய 10

மா நிலமாகும்.) பட்டி நில அளவில் பல தடிகள் அடங்கும். நாடு களுக்கும் நிலத்தரத்திற்கும் ஏற்ப இவ்வளவு மாறுபட்டுள்ளதைக் கல்வெட்டுச் செய்திகள் புலப்படுத்துகின்றன.
12 அடி சதுரம்—1 குழி.

*"பதினறு சாண்கோலால் அஞ்பது குழி கொண்டது ஒரு மாவாக ஆயிரங்குழி கொண்டது ஒரு பட்டியாக விலைகுடுத்துக்கொண்ட னிலம்"*

*"இரண்டு பட்டியிலும் பொந்த போகம் னெல்லு நானூற்று எழு பத்து ஏழு காடி னானாழி"*

(முதல் இராசராசன், கி. பி. 989, தெ. கல். தொ. 8, கல். 521, குடிமல்லம் கல்வெட்டு)

*"நடுவுட்பட்ட தடி நாலினால் பட்டி ஒன்றும், தடி பதினாலினால் பட்டி ஒன்றும்"*

(தெ. கல். தொ. 8, கல். 67)

*"இந் நான்கெல்லையுள்ளும் அகப்பட்டநிலம் முக்காற்பட்டி குழி முன்னூறும்"*

(தெ. கல். தொ. 7, கல். 432)

(முக்கால் பட்டி-குழி 300-எனில், 1-பட்டிக்கு குழி-400)

*"பதினெண் சாண்கோலால் ஆயிரம் குழி கொண்டது பட்டியாக பெருங்குளத்தூர் நீர்நிலம் இருபத்தேழுபட்டியில்"*

(தெ. கல். தொ. 17, கல். 243)

**பட்டினவன் :** (சம) நெய்தல் நிலத்தவன், பரதவர் குலத்தினன்.

*"உமபர்பாடியில் பட்டினவந் நம்பி ஏறந் மகள் சேரி நங்கை"*

(தெ. கல். தொ. 7, கல். 762)

**பட்டுடையார் :** (சம) பட்டுடை அணிந்து பூசனை புரியும் பிரா மணர்கள். இவர்கள் அர்ச்சகர், திருமஞ்சன நீராட்டுவான், நிவேதனம் அட்டுபவன், படைப்பவன், பரிகலம் தூய்மைசெய்த வோடு திருவிளக்கிடுவான் ஆகிய ஐந்து சிவபிராமணர்கள்.

*"பட்டுடை மூலப் பஞ்சாசார்ய தேவகன்மிகள்"*

(தெ. கல். தொ. 2:3, கல். 68)

*"இத்தளிப் பட்டுடை யோங்கொண்டு இவனிட்ட நிலைவிளக்கு"*

(தெ. கல். தொ. 4, கல். 534)

''*பழியிலி ஈஸ்வரத்துப் பட்டுடையான் உருத்திரன்*''

(தெ. கல். தொ. 12, கல். 63 )

**பட்டுடைமூலப்பஞ்சாசார்ய தேவகன்மிகள் :** (சம) பட்டுடையணிந்து கருவறையுட் சென்று ஐந்துவகை நியதிகளால் நிகழ்வுறும் தெய்வ வழிபாட்டுப் பணியினைத் தூய நிலையில் செய்யும் சிவபிராமணர்கள்.

ஐந்து ஆசாரங்களைத் தவறாமல் மேற்கொண்டவர்களாய் கோயிலில் நாளும் நிகழும் வழிபாட்டிற்குரிய இனங்களாகிய ஐந்து வகை நியதிகளையும் ஆகம விதிவழியே தூய நிலையில் செய்யும் பொறுப்புடையவர்களே பஞ்சாசார்யர் எனப்பட்டனர்.

*பஞ்சாசார்யம்* : (1) திருமேனியினைத் தொட்டுத் திருமுழுக்காட்டுதல் அருச்சித்தல் (2) திருமஞ்சனநீர் எடுத்துவரல். வழிபாட்டில் உபசரித்தல். (3) நிவேதன உணவினைத் தூய்மையாகச் சமைத்தல். (4) வழிபாட்டின்போது நிவேதன உணவினை எடுத்து வந்து முறையோடு காட்டுதல். (5) ஸ்ரீபலிக்கு விளக்கும் தூபமும் பிடித்தலோடு பரிகலங்களைத் தூய்மை செய்தல் - என்னும் ஐந்து வகை நியதிகளாகும்.

இவ்வைந்து நியதிகளும் வழிபாடு நிகழ்தற்குப் பொருந்திய பொறுப்புடன் ஒன்றிய செயலாக நிகழ்வனவாகும். எனவே, நியதிக்கு ஒருவரே பொறுப்பேற்று நிற்பது ஆச்சார்யமாக அமைந்து, ஐந்து நியதிகட்கும் பஞ்சாசார்யம் செயல்படுகின்றது.

அர்ச்சகரும் பிற செயலுடையாரும் தெய்வ வழிபாட்டுக்குரியாராதலின் ஆகம விதிப்படி இவர்கள் பட்டுடையணிந்து செயல்படுவதால் பட்டுடையார் என்று கூறப்பட்டனர்.

கோயில் மூலத்தானத்துள் செல்பவராகவும் வழிபாடு நிகழ்வதற்கு மூலமானவராகவும் இருத்தலின் மூலப் பஞ்சாசாரியர் என்று குறிக்கப்பட்டனர்.

எனவே, பஞ்ச ஆசாரமுடன் கோயில் வழிபாட்டு நியதிக்குரிய மூலவர்களாகப் பட்டுடையணிந்து தெய்வப் பணிபுரியும் ஐந்து வகைப் பொறுப்பாளர்களாகிய சிவபிராமணர்கள், பட்டுடை மூலப் பஞ்சாசார்ய தேவகன்மிகள் என்று சிறப்புடன் குறிக்கப்பெற்றனர்.

(பஞ்சாசாரம் - பார்க்க)

''நாளாலி ஸ்ரீ கோயிலில் கூத்தப் பெருமானையும் ரிஷபவாகனப் பெருமாளையும் முதலாக மற்றுமுள்ள திருமேனிகளையெல்லாம் அர்ச்சிப்பானொருவனும், இவர்க்கே உபசரிப்பானொருவனும் திருவமுது அடுவானொருவனும் எடுத்து திருவமிது காட்டுவா னொருனுவம், ஸ்ரீபலிக்கு விளக்கும் தூமமும் காட்டுவானொரு வனும், பரிகலங்கள் மாற்றி பூசக்கடவானொருவனுமாக இப்பணிகள் செய்துடையாரறுவர்க்கு மகப்பட முதலேற்றி''

(தெ. கல். தொ. 19, கல். 62, உத்தமசோழன்)

அர்ச்சகர் தவிர மற்றையபணிகளுள் இரண்டினை ஒருவர் ஏற்பது இயல்பாதலின் நியதிகள் ஐந்தென்றே கொள்ளப் பெறும்.

''இத்தேவரை திருவாராதனை செய்யும் பிராமணன் ஒருவனுக்கு நிசதம் நெல்லு பதக்கும், திருமஞ்சன நீர் அட்டியும் திருவிளக்குத் தூண்டியும், பரிவாரம் ஆராதிச்சும் திரு அமிர்திட்டும் திருமேனி வட்டிச்சும் மற்றும் இ ஸ்ரீ கோயிலுச்கு வேண்டும் பணிசெய்யும் மாணிகள் நாலவர்க்கு பேரால் குறுணியாக நால்வர்க்கு நெல்லு தூணி''(ஆக ஐவர்)

(தெ. கல். தொ. 8, கல்.235)

''திருக்கோயில் பணிசெய்யும் மாணிகள் ஐவரும்''

(மாணிகள்-பிரமசரியமுடன் கோயில் வழிபாட்டினைச் செய்யும் சிவபிராமணர்.)

''உடையார் திருச்சுரமுடைய நாயனார் கோயில் பதிபாத மூலப் பட்டுடைப் பஞ்சாசாரிய தேவகந்மியும்''

(தெ. கல். தொ. 7, கல். 525, 538)

''இத்தளிப் பட்டுடையோங் கொண்டு இவணிட்ட நிலைவிளக்கு''

(தெ. கல். தொ. 4, கல். 534)

**பட்டைக்காறை :** (கலை) பட்டையாகப் பொன்னால் செய்யப்பட்டு இரத்தினங்கள் பொருத்தப்பட்ட கழுத்தணி.

''நம்பிராட்டியார்க்குக் குடுத்தன பொன்னின் பட்டைக்காறை மேற் கோத்த திருவில் கட்டின வயிரம்''

(தெ. கல். தொ. 2:2, கல். 48)

**பட்டைக்காறையில் கோத்த தாலி :** (கலை) பொற்பட்டையாலான காறையில் கோக்கப்பட்ட தாலி. இதனை தாலிக்காறை என்பர். (கழுத்தணி)

*''திருவெண்காட்டு நங்கை ஒருவர் - இவர்க்கே இவன் குடுத்தன பட்டைக் காறையிற்கோத்த தாலி உள்பட பொன் ஒன்பது மஞ் சாடியுங் குன்றி''*

(தாலி-திரு)

(தெ. கல். தொ. 2:2, கல். 43)

உமாபரமேஸ்வரியாற்கு—*''குடுத்தவ பட்டைக் காறை மேற்கோத்த திருவில் கட்டின வயிரம''*

(தெ. கல். தொ. 2:2, கல். 48)

**பட்டோலை :** (அ) ஊர்நிலக்கணக்கில் பதிந்தபடி, உத்தரவாகவும் பத்திரமாகவும் எழுதப்பெறுவது; பட்டோலை என்று பெயர் பெறும். அவ்வோலை எழுதும் பதவியும் பட்டோலை என்றேபெயர் பெறும். அரசனுடைய கட்டளைகளைத் திருமுகமாக எழுதும் அதிகாரி ''பட்டோலை நாயகம்'' என்று பெயர் பெறுவான்.

*''வரிப்பொத்தகம் கட்டி குறிச்சி உடையானும், பட்டோலை எழுதினான் பட்டோலை கமுதக்குடையானும் - இருந்து வரியிலிட்டது''*

(தெ. கல். தொ. 14, கல். 161)

**பட்டினிக் குரத்தி :** (சம) உண்ணா நோன்பியாகிய சமணப் பெண் துறவியர்.

*''அரிட்டநேமிபடாரர் மாணாக்கியார் பட்டினிக் குரத்திகள்''*

(தெ. கல். தொ. 7, கல். 56)

**படாரர் :** (சம) சமண முனிவர். சமணத் துறவியர்.

*''ஸ்ரீ புட்பணந்தி படாரர் மாணாக்கர் பேருணந்தி படாரர்''*

(தெ. கல். தொ. 5, கல். 391)

**படாரி :** (சம) பிடாகைக்குரிய தெய்வம்-பிடாரி. கிராமப்பெண் தேவதை, கிராமக் காப்பு தெய்வங்களுள் ஒன்று (பிடாகை-கிராமம், சிற்றூர்.)

*''பிடாரி பொதுவகை ஊருடையாள் ஸ்ரீகோயிலும் திருமுற்றமும்''*

(தெ. கல். தொ. 2, கல்.5)

**படாரிக்கு நவகண்டங் கடுத்து :** (வ) ஊர்ப்பிடாரிக்கு, தன் உடலில் ஒன்பது இடங்களில் தானே தசையரிந்து பலி கொடுத்து.

*''ஒக்கொண்டநாதன் ஒக்கதித்தன் பட்டைபொத்தன் மேதவம் புரிந்ததென்று படாரிக்கு நவகண்டம் குடுத்தது, குன்றகத்தலை அறுத்துப் பிடலிகை மேல் வைத்தானுக்கு''*

(தெ. கல். தொ 12, கல். 106)

**படி :** (வ) (முகத்தலளவை) சோழர்காலத்தில் வழக்கில் படி அளவு முகத்தலளவை இருந்தமைக்குச் சான்றாக செந்தலை சுந்தரேசுவரர் கோயில்கல்வெட்டு சான்றாகவுள்ளது.

*''சந்திரலேகை சதுர்வேதி மங்கலத்து திருப்பெருந்துறை மஹாதேவர்க்கு - சந்திராவதிதவல் நிசதம் ஒருபடி எண்ணையால் மூன்று சந்தியும் விளக்கெரிப்பதற்கு''*

(கல்வெட்டுத்துறை ஆண்டு அறிக்கை—எண்– 6/1899)

**படிக்கம் :** (பொ) பொன்னின் படிக்கம்; தாம்பூல மிச்சில் புகுக்கும் பாத்திரம். இது குவளை வாயும் குடமுமாகப் பொருத்தப்பட்டு, உலோக முக்காலியில் நிறுவப்பட்டிருந்ததை, தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு உணர்த்துகின்றது.

*''பொன்னின் படிக்கம் ஒன்று, கால் மூன்றும் வளையில் இரண்டும் உட்பட''*

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு) (தெ. கல். தொ.2, கல்.1.)

**படுகண் :** (கலை) மாலையாகச் செய்யப்பட்ட பொன்னணியின் இரு முனையினொற்றில் அமைக்கப்படும் வளையம் போன்ற பகுதி. இப்படுகண்ணில் எதிர்முனையாகும் கோக்குவாய் மாட்டிப் பொருத்தப்பெறும்.

*''கோக்குவாய் ஒன்றும் படுகண் ஒன்றும் அரக்கும் உட்பட நிறை''*

(தெ. கல். தொ. 2:2, கல். 34)

**படுகாலப்பட்டு :** (வ) அழிவுகாலம் தோன்றி, மழையின்றி வற்கடக் காலம் உண்டாகி.

**படுவோம் :** (மொ) தண்டப்படுவோம். தண்டனைக்கு உள்ளாவோம்.

*''மூட்டுவதாயிற் தர்மாசநத்து நிசதி நாலெகால் காணம் படுவோம்''* (காணம்—பணம்)

**பண்டாடு பழநடை :** (வ) பண்டைக்கால முதலாக அனுபவித்து வரும் பழைய நடைமுறைப்படி.

*"அப்படி செய்யக்கடவதல்ல, பண்டாரு பழநடை இறுத்து வந்த தரத்திலே முன்பு இறுத்து வந்தபடியே இறுக்க"*

(தெ. கல். தொ. 5, கல். 413)

**பண்டாரத்துக்கூடி முதலான பொன்னும்:** (பெ) மூல பண்டாரத்தில் புதிதாகச் சேர்த்த முதற் பொருளான பொன்னும்.

*"பண்டாரத்துக் காட்சி காட்டின நீக்கி உடையார் ஸ்ரீ ராஜராஜீச்வரம் உடையார் பண்டாரத்துக்கூடி முதலான பொன்னும்"*

(தஞ்சைப் பெரியகோயில் கல்வெட்டு) (தெ. கல். தொ. 2, கல். 1)

**பண்டாரவாரியம் :** (அ) ஊர்வரி சேமிப்பு, கருவூலம், இறைசேமிப்பு, கோயில்கருவூலம் ஆகியவற்றை கண்காணிக்கும் குழு.

*"இதிற்றிறம்பில் அடுத்த பண்டார வாரிய கரையும் மடையெழுதின நங்கரணத்தானையும்—கொள்வதாகவும்"*

(முதல் இராசராசன், கி.பி. 989, தெ. கல். தொ. 4, கல். 516)

**பண்டாரத்தார் :** (அ) நாட்டிலோ, ஊரிலோ, கோயிலிலோ அமைக்கப் பெறும் கருவூலமாகிய பண்டாரத்தினைப் பொறுப்புடன் நடத்தும் தலைமை அதிகாரி. இவர்கள் பண்டாரி என்றும் பெயர் பெறுவர்.

*"இத்தேவர் பண்டாரத்துக்கு பண்டாரியாக திருக்கோவலூர் ஸபையார் ஆட்டைவட்டம் இருவரையும் இடுவதாகவும்"*

(தெ. கல். தொ. 7, கல். 858)

*"மூலரத்த பண்டாரத்தார் முதற்தந்த பவழத்தில் கோத்த பவழம்"*

(தெ. கல். தொ. 2, கல் 3.)

**பண்டாரப்பொத்தகம் :** (பெ) கோயில்களில் மதிப்புடைய பொருள்களைப் பாதுகாக்கும் கருவூலத்திலுள்ள பொன், இரத்தினங்கள், அணிகலன்கள் ஆகியவற்றை; கொடுத்தவர், பொருள், பெயர், தரம், நிறம், குறி, நிறை, மதிப்பு ஆகியவற்றுடன் விபரமாகக் குறித்தெழுதி வைக்கப்பெறும் கணக்குப் புத்தகம்.

*"அதிராஜராஜமூவேந்த வேளான் இட்ட மந்திர புஷ்பமாகச் செய்த பொற்பூ—க—னால் நிறை எ. பலம் ஆக கல்லுட்பட குடிஞைக் கல்லால நிறை கூய—இது மாடைக்கு ஒந்பதரை ஆக இட்டுப் பண்டாரப் பொத்தகத்து முதலுண்டாய்"*

(தெ. கல். தொ. 5, கல். 647)

**பண்டாரம் :** (பொ) கருவூலம், பொக்கிஷம், அரசுக்குரிய மூலதனமாகும் பொன்னையும் மணிகளையும் பிற மதிப்புடைய பொருள்களையும் சேமித்துப் பாதுகாக்கும் இடம்.

*"உடையார் ஸ்ரீ ராஜராஜீச்வரம் உடையார் பண்டாரத்துக் காட்சி காட்டி நீக்கி உடையார் ஸ்ரீராஜராஜீச்வரம் உடையார் பண்டாரத்துக் கூடி முதலான பொன்னும் ரத்னங்களும்"*

(தெ. கல். தொ. 2, கல். 59)

**பண்டாரவாரியம் :** (சம) கோயில் பண்டாரங்களைக் கண்காணிக்கும் குழு. இக்குழு பெருங்குறி மகாசபையின் உட்பிரிவாரியங்களுள் ஒன்றாகும்.

**பண்ணிக்குடுத்தேன் :** (வ) சாசனம் செய்து குடுத்தேன். பண்ணி-செய்து.

*"இவன் இட்டாரே திருப்பதியம் பாடவும் பண்ணி"*

(தெ. கல். தொ. 17, கல். 453)

**பண்ணியாரம் :** (சம) இனிப்புப் பண்டம். விக்கிரமசோழன் ஆட்சியில் சின்ன காஞ்சிபுரம் அருளாளப் பெருமாளுக்குரிய நிவேதன அமுதுகளின் ஒன்றாக நிவந்தம் செய்யப்பெற்றுள்ளது. 'பண்ணிகாரம்' என்றும் பெயர் பெறும்.

*"பண்ணியார தக்ஷிணைக்கு அரிசி இருநாழி"*

(பத. கல். தொ. 3:3, பக். 187)

*"திருமுன்பு சேவிக்கும் திருக்காட்சிகளுக்கும் திருப்பண்ணிகாரத்துக்கும் விட்ட நிலம்"*

(தெ. கல். தொ. 8, கல். 43)

**பணாநந்தம் :** (சம) பாம்பின் படம் வரையில். பணம்-பாம்பின் படம்.

*"புச்சாதி பணானந்தம் ஒன்றே முக்காலே அரைக்கால் முழ உசரத்து ஐஞ்சு பணமும் இந்த பணத்தின் உள்ளால் முகம் ஒன்றும் மகுடம் ஒன்றும் ஸ்ரீ ஹஸ்தம் இரண்டும் உடையராய் ஸ்ரீ பதஞ்சலிதேவர்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 53)

**பணிக்கொத்து :** (அ) கூலிப்பணியாளர் தொகுப்பு. இவர்கள் தொகுப்பாக அமைந்திருப்பதற்குச் செலுத்தும் வரியும், இவர்-

களைப் பணி செய்வதற்கு அமைத்துக்கொள்ளுவதற்குச் செலுத்தும் வரியும் இப்பெயர் பெறும்.

(தெ. கல். தொ. 17, கல். 128)

**பணிப்பணியால், பணிகேட்டு :** (வ) இட்ட கட்டளைப்படி சபையார் பணித்தபடிக் கேட்டு எழுதினேன்.

"*சபையுள்ளிருந்து கரையிட்டுக் கரைப்பொந்து பணித்த காராமபிசெட்டு நாராயணக்கிரமவித்தனும், இராயூர் சந்திரதேவ அத்தாழிக் கிரமவித்தனும், ஸஹணை மாதவக் கிரமவித்தனும் பணிப்பணியால் பணி கேட்டு எழுதினேன். இவ்வூர்க்கரணத்தான் அலங்காரன் சீராமநேன்*"

(தெ. கல். தொ. 3:1, கல். 29)

**பணிப்பணியால் பணி கேட்டு :** (அ) ஊர்ச்சபையோர் ஒன்றுகூடிச் செய்த காரிய முடிவின்படி அவர்கள் சொல்லியவற்றைக் கேட்டு.

"*சபையுள்ளிருந்து பணிப்பணியால் பணிகேட்டு எழுதினேன் ஊர்க்கரணத்தான்*"

(தெ. கல். தொ. 3:1, கல். 30)

**பணிமகன் :** (அ) அரசியற் பணியாளன்.

'*ராஜராஜதேவர் பணிமகன்-ஆவூருடையான் கண்ணன் ஆருரன்*"

(உக்கல் கல்வெட்டு, தெ. கல். தொ. 3:1, கல் 4.)

**பணிமூப்பிமார் :** (சம) அரசு நியமித்த பணியினைப் பல்லாண்டுகள் செய்த பணி அனுபவ முதன்மையுடைய மகளிர். தாம் மேற்கொண்ட பணியினைப் பல்லாண்டுகள் தொடர்ந்து செய்து வயது மூப்படைந்தவர்கள்.

"*பணி மூப்பிமாரில் ராஜராஜீஸ்வரத்துப் பதியிலாரில் அரிய பிராட்டி உதையப் பெருமாள்*"

(தெ. கல். தொ. 5, கல். 707)

**பத்திரசாதி பகடரைசு :** (பொ) உத்தமமான அங்கங்களுடன் கூடிய பத்திரசாதி என்னும் உயர்சாதி அரசயானை. இதன் உயரம் ஏழு முழம், நீளம் எட்டு முழம். வயிற்றின் சுற்றளவு பத்து முழம் (கஜசாத்திரம்)

"*துரத்தியபொழுது, அச் செருக்களத்து அவன் விடுபத்திர சாதி பகட்டரைசு அநேகமும்*"

(இரண்டாம் இராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**பத்தெட்டுக்குத்தல் :** (வ) அரிசி. நெல்லைப்பலமுறை குற்றித் தூய தாகப் புடைத்தெடுத்த அரிசி.

*''வேதபிராமணர் நிசதம் அய்வர் அமிது செய்வதாக உச்சபடி பத்தெட்டுக்குத்தல் ஒருவனுக்கு அரிசி இரு நாழியும்''*

(சுந்தரசோழன் கி.பி. 939, தெ. கல். தொ. 3:3, கல். 106)

**பத்தெட்டுக்குத்தல் பழவரிசி :** (பொ) பழைய நெல்லை - பல தடவை உரலிலிட்டுக் குற்றித் தூயதாகச் சேர்க்கும் முழுமையான அரிசி.

*''தேவர்க்கு அர்த்தயாமத்துப் பத்தெட்டுக்குத்தல் நானாழி பழ வரிசியாற் றிருவமிது செய்விப்பதாகவும்''*

(தெ. கல். தொ. 19, கல். 52)

**பத்மாசன ஸ்ரீ பலிதாலம் :** (சம) தாமரை இதழிட்ட பாதமுட னமைந்த பிரசாத நிவேதனப் பொன்தட்டு. (தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)

*''உடையார் ராஜராஜதேவர் குடுத்த பொன்னின் பத்மாஸன ஸ்ரீபலித்தாலம் ஒன்று''*

(தெ. கல். தொ. 2, கல் 1.)

**பதக்கமாலை :** (கலை) பதக்கத்தோடு கூடிய பொன்மாலை. இம் மாலையின் பகுதிகள், நாயகக்கண்டம், அருகு கண்டம், கடைத் தொழில், படுகண், கொக்குவாய் என்ற பெயர்களால் குறிப் பிடப்படுகின்றன.

*''திருவண்ணாமலை நாயனார் சாத்தியருள இட்ட பதக்கமாலை கனால் நாயகக்கண்டம்-க. அருகு கண்டம் ௨, கடைத்தொழில்-2, படுகண்-க, கொக்குவாய்-க.''*

(தெ. கல். தொ. 8, கல். 103)

**பதியிலார் தேவரடியார் :** (சமு) ஆடல் பாடல் ஆகிய கலைத்தொண் டும் சிவத்தொண்டும் செய்யும் பொது மகளிர். கோயில் தொண் டொன்றே வாழ்நாள் முழுதும் செய்யும் ஆடல் பாடல்களில் வல்ல தேவரடியாராகிய மகளிர். தேவரடியார் பிச்சியார் என்றும் பெயர் பெற்றுள்ளமை கலம்பகம் என்னும் பிரபந்தம் கூறும்.

*''திருவீரட்டானமுடைய நாயனார் கோயில் பதியிலாரும் தேவ ரடியாரும்''*

(தெ. கல். தொ. 8, கல். 333)

*"நூற்றுக்கால் மண்டபத்து, நாடற்கரிய கூத்தரும் நாயகரும் ஏறியருளினால் முற்பாடு திருத்திரை எடுத்தால் பதியிலார் ஆடவும், பிற்பாடு திருத்தரை எடுத்தால் தேவரடியார் ஆடவும் கடவதாக திருவாய் மொழிந்தருளினார்"*

(மாறவர்மன் விக்கிரமபாண்டியன், தெ கல். தொ. 8, கல். 333)

**பதஞ்சலிதேவர் :** (சம) முதல் இராசராசன் தஞ்சை இராசராசேசு வரத்தில் எழுந்தருளுவித்த செப்புத்திருமேனிகளுள் உந்திக்கு மேல் ஆண்வடிவும் கீழ் பாம்பு வடிவும் கூடியதாகச் செய்தமைத் துள்ள திருவுருவம் பதஞ்சலி முனிவராகும். கல்வெட்டில் திரு வுருவ அமைப்பு விளக்கப்பட்டுளது.

*"புச்சாதி பணாந்தம் ஒன்றே முக்காலே அரைக்காலில் முழ உசரத்து ஐஞ்சு பணமும் இந்த பணத்தின் உள்ளால் முகம் ஒன்றும் மகுடம் ஒன்றும் ஸ்ரீ ஹஸ்தம் இரண்டும் உடையாராய் நாபிக்குமேல் புருஷாகாரமாய், நாபிக்குக் கீழ் மூன்று சுற்றுப் பேழை செய்து கொண்டு இருந்தாராக கனமாக எழுந்தருளுவித்த ஸ்ரீ பதஞ்சலி தேவர் திருமேனி ஒன்று"*

(தெ. கல். தொ. 2:2, கல். 53)

**பதிபாத மூலத்தர் :** (சம) சிவனுக்கே ஊழியம் செய்யும் முதன்மை யுடையவர். அர்ச்சகர். சிவபிராமணர். இவர்கள் பதிபாத மூலப் பட்டுடை பஞ்சாசார்ய தேவகன்மிகள் என்றும் குறிப்பிடப் பெறு வர்.

*"இது பதிபாத மூலத்தாரும் பந்மாஹேஸ்வரரும் ரக்ஷை"*

*"இப்பொன பதின் கழஞ்சும் கொண்டு இதன் பலிசையால் நிசதி உழக்கெண்ணை முட்டாமே திருக்கோயிலுக்கே கொண்டு சென்று அட்டுவிப்போமானோம் பதிபாத மூலத்தோம்"*

*"இத்தளி பதிபாத மூலத்தோம்"*

(தெ. கல். தொ. 19, கல்.32, 34, 78)

**பதினெண்பூமி தேசி :** (வா) தமிழகத்தோடு வாணிபத் தொடர் புடைய பிறநாட்டு வணிகர் பதினெட்டு வகையாவர் என்பதாம். இவர்கள் சத்தியவாசக தன்ம வாணிகர் என்றும் நானாதேசி வளஞ்சியர் என்றும் பெயர் பெறுவர்.

வெவ்வேறு மொழியினராகிய பதினெட்டு நாட்டு வாணி கரின் தொடர்பு தமிழகத்தில் ஏற்பட்டதினாலேயே, தமிழில் வந்து கலந்து வழங்கும் திசைச் சொற்களுக்காம் மொழிகள் பதினெட்டென்றே குறிப்பாராயினர்.

பல்லவர் சோழர் ஆட்சிக் காலங்களில், திரை கடலோடி வாணிபம் செய்த தமிழ் நாட்டு வணிகரின் தொடர்பால், சீனம் சாவகம், கடாரம், சிங்களம் ஆகிய கடல் கடந்த நாட்டு வணிகரும், வட இந்திய நாடுகளின் வணிகரும் ஆகிய பதினெண் பூமி தேசிகளாகிய வணிகர்கள், வாணிப வளர்ச்சிக்குரிய ஒப்புர வாக தமிழகத்து நடுநாட்டமைந்த சித்திரமேழிப்பெரிய நாட்டுச் சபையிலும், பாண்டி நாட்டுச் சின்னமனூர்ச் சபையிலும் ஆயிரத் தைந்நூற்றுவர் என்ற எண்ணிக்கையில் உறுப்பினராக இருந் துள்ளனரென்பதைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

*பதினெண்பூமி* : பல்லவம், தெலுங்கம், மாளவம், கலிங்கம், கோசலம், கேகயம், அங்கம், வங்கம், அவந்தி, திரிகர்த்தம், கன்னடம், தென்நம், சேரலம், கொங்கம், கடாரம், சிங்களம், சாவகம், ஜிநகம் (சீனா) என்பனவாகும்.

சோழர் காலத்தில் இவற்றுள் பெரும்பாலான நாடுகள் சோழ மன்னரின் ஆட்சிக்குட்பட்டிருந்ததுடன் சீனா போன்ற ஒருசில நாடுகள் நட்புரிமையுடன் வணிகத்தொடர்பு கொண்டிருந்தன என்பதும், குலோத்துங்கன் மெய்க்கீர்த்திச் செய்திகளால் புலனா கின்றது. (தெ. கல். தொ. 8, கல். 30, செய்யூர்.)

*''எழுபத்தொன்பது நாட்டு உத்தம நிதி உயர்பெருங் கீர்த்தி முத்தமிழ்மாலை மும்மையும் நிறைந்த சித்திரமேழிப் பெரிய நாட்டோமும், நான்குதிசை பதினெண்பூமி திசை விளங்கு திசை ஆயிரத்தை நூற்றுவரோமும்-நானூற்றுவன் மண்டபத்தே நிறை வற நிறைந்து குறைவறக் கூடி''*

(தெ. கல். தொ. 8, கல். 291)

பதிபாத மூலப் பட்டுடை பஞ்சாசாரிய தேவகன்மிகள் : (சம) இறைவன் திருவடிகளை எண்பொழுதும் தியானம் செய்பவரும், கருவறையுள் செல்லுதற்கமைந்த ஆகமநியதிப்படி பட்டாடை அணிபவரும், ஐந்துவகை ஆசாரநியதிகளை வழுவாது நாளும் மேற்கொண்டொழுகுபவரும் ஆகிய தெய்வ வழிபாட்டுக்குரிய ஐந்துவகை நியதிகளைப் பொறுப் பேற்றுச் செய்யும் அர்ச்சகர் ஒருவர் மாணிகள் நால்வர் ஆகிய பஞ்சாசாரியப் பணியாளர்கள்.

(பட்டுடை மூலப் பஞ்சாசாரியர்—பார்க்க)

*''திருநெல்வேலி உடையார் கோயிற் பதிபாத மூலப்பட்டுடைப் பஞ்சாசாரிய தேவகன்மிகள்''*

(தெ. கல். தொ. 5, கல். 421, 428)

**பதியிலார் :** (சமு) பொதுமகளிர். இவர்கள் திருக்கோயில்களில் ஆடல் பாடல் தொண்டு செய்வாராகவும் அமைக்மப்பெற்று அதற் கமைந்த இறையிலி நிலமும் பெறுவர்.

*' திருநெல்வேலி உடையார் கோயிலில் பதியிலாரில் நக்கன் உரிமை அழகிய பெருமாளான உரிமை அழகிய பெருமாள் தலைக் கோலி''*

(தெ. கல். தொ. 5, கல். 430)

**பந்தஸாரம் :** (பொ) இது வயிர வகையுள் ஒன்றாகும். ஒன்றன் மேலொன்றாக படிந்த தோற்றமுடைய இயற்கையோடிருக்கும் வயிரம்.

**பயிட்டம் :** (பொ) முத்து வகையில் ஒன்று. நீரோட்டப் பொலிவுடன் அமைந்த முத்து.

*''வடம் ஒன்றிற் கோத்த முத்து வட்டமும் அனுவட்டமும் ஒப்பு முத்தும் நிம்போளமும் பயிட்டமும்-ஆகமுத்து முப்பத்தொன்று''*

(தெ. கல். தொ. 2.2, கல். 46)

**பயிர்சென்றறியாத நிலம் :** (வே) பயிரிடப் பெறாது வறிதாகப் புதர்மண்டிக்கிடக்கும் நிலம்.

*''இ ஞாள் வரையிலுஞ் செல்லப் பயிர் சென்றறியாத நிலத்தில் சேத்திரபாலர்க்கு திருத்திந ராஜராஜவயக்கல்''*

(புதுக். கல். 92)

**பயிர்பார்த்து பயிர்கொண்டநிலம் :** (வே) நெற்பயிரின் விளைவின் தரம் பார்த்து. அதன் மகசூலின் அளவினை மதிப்பீடு செய்து கொண்ட நிலம்.

*''பயிர் பாற்று பயிர்க் கொண்ட நிலத்துக்கு அறுநாழிக்காலால் மாத்தால் நெல்லு பதின்கலமாக வந்த நெல்லு''*

(தெ. கல். தொ. 5, கல். 737)

**பயிரடைப்பு :** (வே) நிலங்களில் உண்டான பயிர்வகைகளை அவ்வப்போது தொகுத்தெழுதும் கணக்குப்புத்தகம். இக்கணக் கினைக்கொண்டும் நில அளவு வருவாய் ஆகியவற்றின் பேரிலும் வரி விதிக்கப்பெறும்.

*''இவ்வூர் நிலமாய் புறவூரில் உட்கிடையான நிலங்கள் உட்பட பொத்தகப்படிக்கு பயரடைப்பின்படி கார்மறுவும் ஒரு பூவும், நன் செய் நிலமும் - எப்பேர்ப்பட்ட உரிமைகளும்''*

பரகேசரி : (வ) பிறநாட்டுப் பகை மன்னரை வெற்றிகொள்வதில் சிங்கத்தினைப் போன்றவன். சோழமன்னர்கட்குரிய பட்டப் பெயர். விசயாலய சோழன் முதலாக கி.பி. 846-லிருந்து சோழ மண்டலத்தை ஆட்சி செய்த சோழ மன்னர்கள் முறையே 'கோ இராசகேசரிவர்மன்', 'கோப்பரகேசரிவர்மன்' என்ற பட்டங்களை ஒருவர் பின் ஒருவராக மாறிமாறி ஆணையாகப் புனைந்து வந்தனர். இதற்குரிய பழைய வரலாற்றினைக் ''கரந்தைச் செப்பேடுகளின் மன்னர் மரபுப் புகழ்ச்சி உரை'' (பிரசஸ்தி) விளக்கமாக உரைக்கின்றது.

*7. ''சிபி என்னும் மன்னனுக்குப் பின்னர் சோழன் என்னும் மன்னன் தோன்றினான்''*

*8. பகைவர்களாகிற யானைகட்கு அரியேற்றினை ஒத்த இராச இராசகேசரி என்ற வேந்தன் அவனுக்கு (சோழனுக்கு) புதல்வனாகத் தோன்றினான். அவனுக்குப் பின், பகைப் படையை முறியடிப்பதிலேயே நோக்கங்கொண்டவனும் வலி படைத்தவனுமாகிய பரகேசரி என்னும் வேந்தன் தோன்றினான்.''*

*''அந்த இராசகேசரியின் பெயரும், பரகேசரியின் பெயரும் அக்குலத்தில் தோன்றிய அரசர்கட்கு முறையே மாறி மாறி வழங்கும் ஆணையாயிற்று.''*

கரந்தைச் செப்பேடுகள் - மன்னர் மரபுப் புகழ்ச்சி (பிரசஸ்தி) வடமொழிப்பாடல் - 7, 8, 9.

*''சுராதிராசன் முதலாகவரு சோழன் முனநாள், சோழ மண்டலமமைத்தபிற கேழுலகையும், இராசகேசரிபுரந்து பரகேசரிகளாம் இருவராணை புலியாணையென நின்றவிதுவும்''*

(கலிங்கத்துப்பரணி : 8-14)

*''கோ ராசகேசரி வர்மரான உடையார் ஸ்ரீராஜராஜதேவர்''*

(முதல் இராசராசன்)

*''கோ பரகேசரி வர்மரான உடையார் ஸ்ரீராஜேந்ர சோழ தேவர்''*

(மகன் - முதல் இராசேந்திரசோழன்)

பரடை : (சம) பருடை. (பருஷை) மதிப்பியல் முதன்மைக்குழு. கோயில்கட்குரிய அறநிவந்தங்களையும் மூலப்பொருள்களையும் பாதுகாத்துப் பரிகரிக்கும் பெருமக்கள் சபை. இச்சபையோர், 'மூலப்பருஷையார்' 'முலப்பருடைப் பெருமக்கள்' என்றும்

கணப்பெருமக்கள் என்றும் குறிக்கப் பெறுவர். இவர்கள் எத்தகைய ஊதியமுமின்றி அறப் பொருள்களைப் பாதுகாத்து அவ்வவற்றிகமைந்த செலவினங்களை முறைமையோடுசெய்யவும் செய்விக்கவும் பணி செய்யும் மதிப்பியல் பெருமக்களாவர். அறநிவந்தங்கள் மிகுந்துள்ள ஊர்களில் இத்தகைய சபைகள் இருந்துள்ளன. பரிகரித்தல் - அளவிட்ட நிவந்தங்கள் முறை யோடு நிகழக் கண்காணித்தல்.

''*இறையழித்து இறையிலி தேவதானமாக விற்றுக் குடுத்தோம் மூலப் பரடையோம். திருக்குரக்குத்துறை பெருமானடிகளுக்கு பரடை பணிக்க எழுதினேன் பரடை மத்யஸ்தன் இந்தணமுவணன் எனபணமுத்து*''

(தெ. கல். தொ. 17, கல். 636)

''*இத்திரு நுந்தா விளக்கு ஒன்றும் அவ்வவ ஆண்டு ஸ்ரீகார்யம் செய்வார்களே நடப்பக் கடவாராகவும் இப்பரிசு பணித்தோம் மூலப்படை பெருமக்களோம்.*''

(தெ. கல். தொ. 19, கல். 95)

மூலப்பருஷையார் பார்க்க.

**பரதல் :** (பொ) தட்டையாக அமைக்கப்படும் பிடியோடு கூடிய வழிபாட்டு மரியாதைச் சின்னங்களுள் ஒன்று. சோடச உபசாரங்களுள் ஒன்றற்குரிய பொருள். (சோடச உபசாரம் - பதினாறு வகைப்பட்ட வழிபாட்டு மரியாதை நிகழ்ச்சி)

**பரதேசிகள் :** (சம) பிரதேசங்களிலிருந்து தலயாத்திரையாக வந்தவர்கள்.

**பரபூமிகன் :** (சமு) பிறநாட்டவன்

''*பரபூமிகன் மல்லன் ஆகிய கண்டராதித்த பல்லவரையன்*''

(தெ. கல். தொ. 7, கல். 894)

**பரமசுவாமி :** (சம) பரம்பொருளாகிய இறைவன். இப்பெயர் சிவன் திருமால் ஆகியோரைக் குறிக்கும் பொதுப்பெயராகவே கல்வெட்டுகளில் காணப்படுகிறது.

''*ஸ்ரீ ராஜராஜச் சருப்பேதி மங்கலத்து ஸ்ரீ ராஜேந்திர சோழ விண்ணகர் பரமஸ்வாமிகளுக்கு-விற்றுக் குடுத்த பூமி*''

''*ஸ்ரீ ராஜேந்திரசோழ விண்ணகர் பரமஸ்வாமிகளுக்கு ஸ்ரீராஜ ராஜச்சருப்பேதி மங்கலத்து மஹாசபையார்-விற்றுக் குடுத்த பூமி*''

(இக்கல்வெட்டின் குறிப்பாக - விண்ணகரிலேயே சிவனுக்கும் இறையகம் இருந்திருக்கலாம் என்ற கருத்தும் புலப்படு கின்றது.)

(தெ. கல். தொ. 14, கல். 144)

*''உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் ஸ்ரீராஜராஜீச்வரம் உடைய பரமசுவாமிக்கு தம் பண்டாரங்களில் குடுத்த வெள்ளியின் பரி கலங்கள்''*

(தெ. கல். தொ. 2:3. கல், 91)

*''பள்ளி கொண்டருளுகின்ற பரமஸ்வாமி''*

(தெ. கல். தொ. 19, கல். 95 )

**பரமஸ்வாமிகள் :** (சம) சிவன் திருமால் இருவர்க்கும் பொதுச்சிறப் பாக குறிக்கப்பெறும் பெயர். இவ்வாறே ஆழ்வார் என்ற சிறப்புப்பெயரும் பொதுவாக இருகடவுளர்க்கும் கூறப்பட்டுள் ளதைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

*''திருவத்திகிரி நின்றருளிய பரமஸ்வாமிகள் பெருமாள் அருளாள நாதன் கோயில் திருப்பதி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு''*

(தெ. கல். தொ. 4, கல். 855)

*''சோழேந்திரசிங்க ஈஸ்வரத்து ஸ்ரீகயிலாயத்து ஆழ்வார்க்கு''*

(தெ. கல். தொ. 5. கல். 756)

**ப்ரமாதப்பட்டமை :** (மொ) கவனக்குறைவான கைப்பிழையால் கொலை செயயப்பட்டமை...எதிர்பாராத இறப்பினை அடைந் தமையின். கவனக்குறைவினால் அகால மரணமடைந்தமை.

*''எங்களுடன் நீர் வழக்காட்டுச் சுட்டி பிணக்கின இடத்து இம் மங்கலங்கிழாந் பரமாதப்பட்டமையில் இதுக்குப் பிராயச்சித்தம் விதித்தபடிக்கு''*

(இராசராசன் 2, கி.பி, 1160, தெ. கல். தொ. 7, கல். 432)

பரமாதம் - பார்க்க.

**ப்ரமாதம் :** (மொ) கவனக்குறைவால் நேரும் கொலை, மரணம், அகாலமரணம்.

*''ஈதூர் கோட்டத்து மன்றாடிதிண்டி ஆருளளேன் என் கைப்பிழை யால், இன்னாட்டு ஓகத்தூர் மன்றாடிசாமி தீத்தனுக்கு பிரமாதம் விளைந்தமையின் இவனுக்காக வைத்த திருநுந்தா விளக்கு-க''*

(முதற்குலோத்துங்கன், கி.பி. 1098, தெ. கல். தொ. 7, கல்.840)

*''தந்புத்ரன் ஏறிவருகிற தேரில் பசுவின் கன்றகப்பட்டு ப்ரமாதப் பட அதிந் மாதாவாந சுரபி கண்டு துக்கித்து மனுவின் வாசலில் மணியை எறிய''*

(திருவாரூர்-தெ.கல். தொ 5. கல்.456)

**பரமாவது :** (மொ) உரிமையாவது.

*''இந்நிலத்தால் வரும் கடமை, குடிமை மற்றும் எப்பேறப்பட்டனவும் தங்களுக்கே பரமாவதாகவும்''*

(தெ. கல். தொ. 5, கல். 244)

**பரிகலம் :** (பொ) நிவேதன உணவு பரிமாறும் பாத்திரம் முதலாக வழிபாட்டின்போது பயன்படுத்தப்பெறும் கலங்கள்.

*''உடையார் ஸ்ரீராஜராஜதேவர், ஸ்ரீராஜராஜீச்வரம் உடைய பரமஸ்வாமிக்கு தம் பண்டாரங்களில் குடுத்த வெள்ளியின் பரி கலங்கள்''*

(தெ. கல். தொ. 2:3, கல். 91)

**பரிச்சட்டம் :** (சம) இறைவன் திருமேனிக்கு நாளும் அணிவிக்கும் அலங்கார ஆடை. கோயில் மரியாதையாக மன்னர்கட்கும் பெரி யோர்கட்கும் அர்ச்சகர் தலையில் அணிவிக்கும் பட்டாடை.

*''திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார்க்கும் சாத்தும் பரிசட்டத்துக்கும்''*

(சிதம்பரம் கல்வெட்டு, தெ. கல். தொ. 12, கல். 154)

*''ராஜராஜதேவர்-தீர்காலிவல்லத்தில் தென்பக்கத்துக் கோயிலிந் உள்ளால் மாளிகை மேலைக்கல்லூரியில் எழுந்தருளி பரிசட்டஞ் சார்த்தியருளா நின்று''* — செய்ததேவதானம்

(தெ. கல். தொ. 8. கல். 222)

**பரிச்சின்னம் :** (அ) வெவ்வேறு அடையாளமுள்ள விருதுத் தூக்குகள். உலாவில் யானை குதிரை ஆள் முதலிய பரிவாரங்கள் எடுத்துச் செல்லும் விருதுச் சின்னங்கள். இவை கோயில்களில் விழாக் காலங்களிலும் பயன்படுத்துவனவாகும். விருது கூறி ஊதும் சிறுகாளம் கொடி முதலியன அரசனுக்குரிய அடையாளச் சின்னங்கள்.

*"வராக வெல்கொடி முதலிராச பரிச்சின்னமும்"*

(தெ. கல். தொ. 3:1, கல். 29)

*"செம்பொற் கற்பகத்தோடு பரிச்சின்னமும் அளவில்லாதன ஒளி பெற அமைத்து"*

(விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தி)

**பரிச்சட்ட உரு :** (வ) திருமேனிகட்கு அணிவிக்கும் தூய ஆடை உருப்படி. (எண்ணிக்கை) உரு-உருப்படி.

*"பரிசட்ட உரு எண்பதுக்கு காசு"*

(தெ. கல். தொ. 8, கல். 330)

**பரிசாரகம் :** (சம) திருக்கோயில்களில் நிவேதன உணவு அட்டுவதுடன் வழிபாட்டின்போது, நிவேதனம் படைத்தலும் தீப தூபம் சோடச உபசாரச் சின்னங்கள் ஆகியவற்றை முறையாக அர்ச்சகர்க்கு எடுத்தளித்தலுமாகிய வழிபாட்டுத் தொழில். இப் பணி செய்வார் "மாணி" என்றும் அழைக்கப்படும் சிவபிராமண ராவர்.

*"பரிசாரகஞ் செய்யும் சிவப்பிராமணர் நால்வர்க்கு பேரால் நிசதம் நெல்லு பதக்கு"*

(தெ. கல். தொ. 8, கல். 3)

*"திருப்பரிசாரகஞ் செய்யும் மாணி ஒருவனுக்கு நிசதம் நெல்லுப் பதக்கு"*

(தெ. கல். தொ. 2:3, கல். 69)

*"பரமஸ்வாமியை அபிஷேகம் செய்வார்க்கும் பரிசரிக்கும் மாணிகளுக்கும் இப்தானமுடைய சிவபிராமணர்க்கும்"*

(தெ. கல். தொ. 19, கல். 62)

**பரிசு :** (வ) முறைமை. கல்வெட்டுக்களில் மிகுதியாக இடம்பெற் றுள்ள இச்சொல், செய்த முடிபு தீர்மானம், அனுமதித்தசெயல், அளித்தமுறைமை, பெறும் கூலி, உரியவருவாய், அமைந்த அறம், நிவந்தம்—என்பன போன்ற நிலைகளில் செய்திகட்கேற்ப பொருள் தருவதாக அமைந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

இதனையே "வியவஸ்தை" அல்லது "வியவஸ்தையாவது" என் றும் கூறும் வழக்குண்டு. இதன் தொடர்பாகவே செய்யப்பட்ட அறச்செயல் விளக்கம் தரப்பெறும். (பரிசாவது—நிவந்தமாவது)

''நவகண்டங்குடுத்து குன்றகத் தலை அறுத்துப்பிடலிகை மேல் வைத்தானுக்கு திருவான்மூர் ஊரார் வைத்த பரிசாவது''

''ஊற்றுக்காட்டுப் பூசாலி வாமனனுக்கு இவ்வூருழைச்சேரி திருநாமக்கிழவர்களோம் ஒட்டிக்குடுத்த பரிசாவது''

(கம்பவர்மன் ஆட்சியாண்டு, 20, தெ. கல். தொ. 12, கல். 106

''குழி முன்னூறும் கொண்டு இத்தேவற்கு விட்டு நிவந்தம் பண்ணிநபடியாவது''

(முதல் பராந்தகன் கி. பி. 916, தெ. கல். தொ. 5, கல். 879)

''பெருங்குறிகூடியிருந்து பேரம்பலத்தேய் குறிகூடி இருந்து வினாப்போக்கி ஒத்தெழுத்திட்டு குடுத்த பரிசாவது''

(கன்னரதேவர்க்கு யாண்டு—27, தெ. கல். தொ. 8, கல். 811)

''இப்பரிசு ஒட்டி விற்றுக் குடுத்தோம்''

''இப்பரிசு கல்வெட்டிக் கொள்ளப் பெறுவார்களாகவும்''

''இறையிலி செய்து குடுத்த பரிசாவது''

(தெ. கல். தொ. 8, கல். 67, 205.)

''காரளவு மாடம் உள்ளிது ஒடுக்கி வருகிற பரிசு''

(தெ. கல். தொ. II : III. கல். 68)

பரிபவம் : (மொ) இழிவு, அவமானம்.

''ஆகவமல்லன் பரிபவமெனக்கிதென்றெரிவிழித்தெழுந்து''

(இராசேந்திரன் 2, மெய்க்கீர்த்தி)

பரிம்பு : (வே) பாழிடம். புதரடைந்த மேட்டுப்பாங்கான நிலம். மலைச்சாரலான தடம்.

''வீரபாண்டிய நல்லூருக்குப் பெருநான் கெல்லையாவது, கீழ் எல்லை தட்டான் குளத்துப் பரிம்புக்கு மேற்கு''

(தென்காசி - கல்வெட்டு)

பரிமாறுதல் : (வா) பண்டமாற்றுச் செய்தல். காசுக்கு - தானியம் பெறுதல்; பகிர்ந்தளித்தல்.

''சந்திராதித்தவரை இத்தெருவிலிருந்து பரிமாறும் வியாபாரிகள்''

(தெ. கல். தொ. 5. கல். 994)

**பரியார மூலப் பஞ்சாசாரியத் தேவர் கன்மிகள் :** (சம) கோயிலில் வழிபாட்டுப்பரிகாரம் நிகழ்த்தும் ஆதி சைவர். சிவபிராமணர். இவர்கள் ஐந்துவகை நியதி பெற்றாராகவும் பட்டுடை அணிந்து அச்செயல்களைப் புரிபவராகவும் இருப்பரென்பது இதனால் புலனாம்.

(பரியாரம் - பரிகாரம். கோயில் வழிபாட்டுக்குரிய நியதிகள் இன்னதற்கு இது அமையுமென்ற ஆகமநெறிமுறைகள் தழுவிய காரியங்கள்.)

**பரிவத்தனை :** (வ) பரிவர்த்தனை. ஒரு பொருளுக்கு ஈடாக மற்றொரு பொருளைக் கொடுத்தோ, அதே தரமான பொருளைக் கொடுத்தோ மாற்றிக் கொள்ளும் பொருள்மாற்றம் பரிவர்த்தனை எனப்படும்.

*''திருப்பசுங்காட்டு மஹாதேவர் பக்கல் பரிவத்தனை பண்ணின- திருத்தோப்பு''*

(கல்வெட்டுத்துறை ஆண்டறிக்கை - எண். 108 / 1934)

**பரிவாரம் :** (அ) அரசன் அரசியர்க்கு எப்பொழுதும் உடனிருந்து பணி செய்பவர்களின் தொகுதி.

*''பழு வேட்டரையர் மகளார் நம்பிராட்டியார் அருமொழி நங்கை யார் பரிவாரம் குணவன் சூரதொங்கி''*

(முதல்பராந்தகன், கி. பி. 934, தெ. கல். தொ. 7, கல். 520)

**பருமுத்து :** (பொ) பெரியவடிவில் திரட்சியாக விளைந்த முத்து.

*''பட்டிகை முகத்தில் தச்ச பருமுத்து அஞ்சு''*

(தெ. கல். தொ. 5, கல். 521)

**பருப்புப் போனகம் :** (சமு) பருப்பிட்டுச் செய்த பொங்கல், கறியமுது.

*''இருநாழி தூக்குத்தலரிசியால் இராப்போனகம் காட்டுவார் ஆனார்கள்''*

(இந்திய கல்வெட்டுத்துறை வெளியீடு - தொ. 8. கல். 29)

*''வெஞ்சனத்துக்கு பருப்பு அமுதுக்கு நாள் ஒன்றுக்கு பயிறு நாழி''*

(தெ. கல். தொ. 5, கல். 252)

**பல்லுருவிற் பயன் மரம் :** (பொ) மா, பலா, புளி, நெல்லி, தென்னை, பனை முதலிய பலவகைப்பட்டனவாகவுள்ள பயன் தரும் மரங்கள்.

(புதுக். கல்வெட்டு. 63)

**பலபட்டடை :** (அ) வரிகளுள் ஒன்று. பலவகைப் பொருள்களை விற்கும் சில்லரைவியாபாரிகளாகிய செட்டிகளிடம் பெறும் வரி.

''*செட்டிகள் பலபட்டடையும் தறியிறை தட்டார் பாட்டமும்-ஆயங்கள்*''

(தெ. கல். தொ. 8. கல். 245)

**பலதளி :** (சம) பல கோயில்கள். பல மூர்த்திகட்கும் தனித்தனியே அமைக்கப்படும் கோயில்கள்.

**பலிக்கல் :** (சம) கோயில்களில் அமைக்கப்பெறும் பலி பீடம்.

''*சேந்தங் குன்றப் பொழி பண்ணுவித்த பலிக்கல்*''

(தெ. கல். தொ. 7, கல். 169)

**பலிசை :** (வ) (பொலிசை) முதலீட்டிற்குரிய வட்டி.

''*எழுத்துச் சடையன் பக்கல் ஆயிரக்காடி நெல் கொண்டோம். இவ்வாயிரக்காடி நெல்லாலும் பலிசை அய்ந் நூற்றுக்காடி நெல் ஆட்டாண்டு தோறும் ஏரிக்கட்டி இருக்குவிப்போமானோம்.*''

(கம்பவர்ம பல்லவன் காலம், தெ. கல். தொ. 3.1, கல். 5)

**பலிபாத்ரம் :** (சம) இறைவனுக்குப் படைக்கும் நிவேதன உணவுள்ள பாத்திரம். நிவேதனத்தட்டு. இதனைத் தளிகை, பலித்தாலம், ஸ்ரீ பலித்தாலம் என்றும் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

''*பிச்ச தேவர் திருமேனி ஒன்று இவர்க்கு பலியாத்ரம் சுமந்து நின்ற பூதம் ஒன்று*''

(தெ. கல். தொ. 2:2, கல். 34)

''*பலித்தாலம் வெள்ளி நிறை இருநூற்று நாற்பதின் கழஞ்சு*''

(தெ. கல். தொ. 19, கல். 46)

''*தளிகை ஒன்று வெள்ளி இருநூற்றிருபதின் கழஞ்சு*''

(தெ. கல். தொ. 2:2, கல். 91)

**பவழத்துக்கோத்தபவழம் :** (கலை) பவழமாலைக்கமைந்த பெரும் பவழத்தின் நடுவமைந்த கட்டுத்துளையின் வழிச்செல்லும் பொற் கம்பியின்முனை நிலைபெற, அப்பெரும் பவழத்தினடியில் கட்டும் பவழமாக சிறுபவழமொன்றை இணைத்துக்கட்டி அம்முறையே கம்மியர் பவழ மாலைக்கமைந்த வகையொன்றினை உருவாக்கு வர். இதனையே இராசராசன் அளித்த அணிகலன்களுள் ஒன்றா கிய பவழமாலையில, ''பவழத்துக் கோத்தபவழம் ஐம்பது'' என்று குறிக்கப்பட்டுளது.

(தெ. கல். தொ. 2:2, கல். 59)

**பவனிஎழுந்தருளுந்திருவிழா :** (சம) இறைவன் திருவீதி உலாவரும் திருவிழா.

*''ஸ்ரீராஜேந்திர தேவர் திருநாள் திருவாதிரைய்நாள் பவனி எழுந்தருளுந் திருவிழாவில் விளக்கெரிக்க எண்ணை''*

(முதல் இராசேந்திரன், கி.பி. 1015, தெ. கல். தொ. 5, கல். 1378)

**பவிழியக்கிடைப்புறம் :** (சம) வேதத்தின் உட்பிரிவாகிய பவிழியம் ஓதுவிப்பதற்குரிய அந்தணர் பெறும் இறையிலி நிலம். (கிடை-நிலையான வேதபாடசாலை)

*''பவிழியக் கிடைப்புறத்திற்கு வைத்த பூமி-நம்மூரிலே நிரந்தர மிருந்து ஓதுவிப்பாராக இறையிழிச்சி வைத்தோம்''*

(உத்தரமேரூர் கல்வெட்டு. தெ. கல். தொ. 6, கல். 312)

**பவிஷ்யம் :** (சம) பவிழியம், வடமொழியிலமைந்த பதினெண் புராணங்களுள் ஒன்று இந்நூல் கி. பி. 15ஆம் நூற்றாண்டில் ஆரிய இருடிகளால் செய்யப்பட்டது.

**பழங்கற்படி :** (வ) பழைய கல்வெட்டில் உள்ளபடி. பழைய கல் வெட்டு பழுதாயின் அதிலுள்ள அறச் செயலை அப்படியே படியெடுத்து உள்ளவாறு பிறிதோரிடத்தில் வெட்டி வைக்கும் முறை நாட்டில் இருந்ததை இக்கல்வெட்டு உணர்த்துகின்றது. ''பழைய கற்படி'' என்றும் கல்கவட்டுக்களில் கூறப்பட்டுள்ளது.

*''இதுவும்மொரு பழங்கற்படி''*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 55, 74, 78)

*"இது பழங்கற்படி, இந்த ஸ்ரீ விமானத்திலே ஏறவெட்டினமையின் முன்னிவாசகம் வெட்டிக்கிடந்த தனிக்கல்லால் உபயோகம் இல்லாமையில் தவிர்ந்தது"*

(தெ. கல். தொ. 19, கல். 72)

பழங்காசு : (பொ) சோழ நாட்டில் நிருபதுங்கவர்ம பல்லவன் ஆட்சியில் வழக்கிலிருந்த பொற்காசு. இக்காசு

*"செம்பொன் சம்பிராணிப் பழங்காசினோடுரைப்பது"*

*"பழங்காசு நிறை இருபத்தைஞ்சுகழஞ்சு"*

(தெ. கல். தொ. 5, கல். 572, 620)

பழந்தீவு : (அ) கடலால் சூழப்பட்ட பழமையான தீவுகள். இவற்றை முதல் இராசராசன் தனது கடற்படையால் கைப்பற்றியுள்ளமையை "முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும்" என்னும் மெய்க் கீர்த்திப் பகுதி உணர்த்துகின்றது. தமிழகத்தின் தென் மேற்கே, பழங்கடல் என்னும் இந்துமாக்கடலில் அமைந்துள்ள தீவுக் கூட்டம். இலட்சத்தீவுகள் என்பர். கடல்கொண்ட தமிழகத்தின் எஞ்சிய பகுதிகளாதலின் "பழந்தீவுகள்" என்று பெயர் பெற்றுள்ளன.

(முதல் இராசராசன் மெய்க்கீர்த்தி)

பழநடைக்காணி : (வே) பழைய முறைமைப்படி தொடர்ந்து அமைந்த செலவினங்களுக்குரிய வருவாயாக அமைந்த இறையிலி நிலம்.

*"இவ்வூர்க்கு ஊர்க்கணக்க காணி உடையவனும் ஆசுவிகளும் பண்டொடு பழநடை காணியுடையவனே செய்யக்கடவதாகவும்"*

(தொ. 7. கல். 430)

பழம்புள்ளிமாடை : (பொ) சோழர் கால அரசியலில் நாட்டில் வழக்கிலிருந்த பொன் நாணயங்களில் ஒன்று. நாணய மதிப்பினைக் குறிக்கும் புள்ளிகள் பொறிக்கப்பட்ட மாடை என்னும் பெயரிலமைந்த பொன் நாணயம்.

*"விலை நிச்செயத்துக்குடுத்த பழம்புள்ளி மாடை ௯௰. இம் மாடை முப்பதுக்கும்"*

(தெ, கல். தொ. 4, கல். 854)

பழம்பாடகம் : (வே) பழமையான நன்செய் நிலம்.

**பழமுத்து :** (பொ) வளர்ச்சித் தோற்றம் உடையமுத்து. முதிர்ந்த முத்து.

*"கறடும் சக்கத்தும் பழமுத்தும்"*

(தெ. கல். தொ. 2:2. கல். 51)

**பழவரவு :** (வ) பழையவரவு. முன்னர் நாட்டில் நிலவியது. முன்னர் நாட்டின் புழக்கத்திற்கு வந்தது.

*"ஈழக்காசு பழவரவு இருபது"*

(தெ. கல். தொ. 19, கல். 129)

**பழவரிசி :** (வ) பழைய நெல்லில் குற்றி எடுத்த அரிசி.

*"பத்தெட்டிக் குத்தல் பழவரிசி"*

(தெ. கல். தொ. 8, கல். 553)

**பழனெல்லு :** (வ) பழைய நெல் சென்ற ஆண்டின் பருவகாலத்தில் விளைந்த சம்பா நெல்.

*"திருப்பாவாடைப் புறத்திரு நாமத்துக் காணியும் தில்லை நாயகன் பெரும் பண்டாரத்துக்கு முதலாகப் போனகப் பழனெல்லு"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 149)

**பள்ளிச் சந்தம் :** (சம) சைவ பௌத்த கோயில்களுக்கு விடப்பட்ட இறையிலி நில நிபந்தம். காசு முதலீடு ஆகியவை பள்ளிச் சந்தம் என்ற பெயரால் வழங்கப்பெறும்.

*"ஐயங் கொண்ட சோழமண்டலத்து பங்களநாட்டு நடுவில் வகைமுகை நாட்டுப் பள்ளிச்சந்தம் ஸ்ரீகுந்தவை ஜிநாலயத்து தேவற்கு சாமுண்டப்பை வைத்த திருநுந்தாவிளக்கு ஒன்றினுக்குக் காசு இருபதும், திருவமுதுக்கு வைத்த காசு பத்தும்"*

(தெ. கல். தொ. I, கல். 67)

*"நாகப்பட்டனத்து எடுப்பிக்கின்ற சூடாமணிபன்ம விஹாரத்துப் பள்ளிக்கு வேண்டும் நிவந்தத்துக்கு க்ஷத்ரிய சிகாமணி வளநாட்டுப் பட்டனக் கூற்றத்து ஆனைமங்கலம் பள்ளிச்சந்தம் இறங்கலுள்பட அளந்தபடி"*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**பள்ளித் தொங்கல் :** (சம) நிலையாகத் தொங்கும் சரங்களால் ஒப்பனை செய்யப் பெற்றதாக எடுத்துச் செல்லும் முகப்புத் தோரணம். இதனை மகுட தோரணம் என்றும் கூறுவர். வீதி உலாவின்போது ஆட்கள் இப்பள்ளித் தொங்கல்களை வரிசையாக எடுத்துச் செல்வர். இவர்களின் தலைவன் 'தொங்கற் பேரரையன்' என்று பெயர் பெறுவன். இவர்கள் நிலையாகப் பெறும் காணியாட்சியும் ஊதியமும் 'பாதவக்காணி' என்றும் பெயர் பெறும்.

*"திருப்பள்ளித் தொங்கல் பிடிக்கும் ஆளுக்கு உள்படுவான் ஒருவனுக்குப் பங்கு ஒன்றும், ஆள் பதின்மர்க்குப் பேராற் பங்கு எட்டுமாவும ஆக உடையான் திருவிசலூரான முப்முடிச்சோழத் தொங்கற் பேரரையனுக்கு மாகப் பங்கு ஐஞ்சும்"*

(தெ. கல். தொ. 2, கல். 66)

**பள்ளிப் படை :** (சம) இறந்தாரை எரித்த அல்லது இட்ட இடத்திலோ அல்லது அவர்களின் நினைவுச் சின்னமாகவோ அமைக்கப் பெறும் கற்கட்டிடம், கற்கோயில்.

*"ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் பெரும்பணப்பாடித் தூஞாட்டு மேற்பாடியாகிய ராஜாஸ்ரயபுரத்து நகரத்தோம், ஆற்றூர்த் துஞ்சின தேவர்க்குப் பள்ளிப்படையாக, உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் எஙகள் நகரத்திலெடுப்பித்தருளின திரு அரிஞ்சிகை ஈஸ்வரத்து மஹாதேவர் ஸ்ரீகோயில்"*

(தெ. கல். தொ. 3:1, கல். 15)

**பள்ளிபீடம் :** (அ) கற்பலகையாலான இருக்கை. அரசன் இருந்து அறஞ்செய்தற்கென சிறப்புப் பெயருடன் அமைக்கப் பெறும் இருக்கை.

*"மாடக்குளக் மதுரைக்கோயில் பள்ளியறைக் கூடத்து பள்ளி பீடம் காலிங்கராயனில் எழுந்தருளியிருந்து"*
— தானஞ்செய் தருளி.

*"பள்ளி பீடம் மழவராயனில் எழுந்தருளியிருந்து"*

(தெ. கல். தொ. 8, கல். 403, 404)

**பள்ளிவிளாகம் :** (சம) சமண பௌத்த கோயில்களைச் சூழ்ந்துள்ள குடியிருப்புப் பகுதி. சமண பௌத்த பள்ளிகட்குரிய இறையிலி நிலம்.

**பளிக்குவயிரம் :** (பொ) பளபளப்பும், கதிரொளியும் கூடிய வயிரம்.

*"பின்னுக் கோவைத்தலையில் தடவிக்கட்டின பளிங்கு ஒன்றும் பொத்தி ஒன்றும் பளிக்குவயிரம் ஒன்பதும்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

**பற்றடை :** (பொ) பற்று அடை, பற்று-நிலம், அடை-விளைவிப்பவை. புன்செய்ப்பயிரினங்கள் மீது விதிக்கப்பெறும்வரி. இது பட்டடை என்றும், திரிந்து வழங்கப்பட்டுள்ளது.

பட்டடை பார்க்க.

**பற்றுமுறி :** (வ) தொகையைப் பெற்றுக்கொண்டவற்குரிய பற்றுச் சீட்டாக எழுதி வழங்கும் ஓலைத்துணுக்கு.

**பறந்தலை :** (அ) போர்க்களம்.

*"செழுநிதிப் பிறக்கமும் தேவியர் குழாமும் பறந்தலை கவர்ந்து"*

(இரண்டாம் இராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

*"கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலை பொருது புண் நாணிய சேரலாதன்"*

(அகம். 55 : 10)

**பறவைக்கரசு :** (சம) கருடன், கருடாழ்வான். வைணவ பிராமணர்கள் இப்பெயரினைப் பெற்றிருந்தனர்.

*"திருவகீந்திரபுரத்து நாயனார் தெய்வ நாயகன் கோயில் நம்பிமாரில் மாழந்திமராய பட்டனான பறவைக்கரசு பட்டனென் தீட்டுக்குடுத்த பரிசாவது"*

(தெ. கல். தொ. 7, கல். 768)

**பறிகால் :** (வே) நாற்றங்காலாகவுள்ள நிலப்பகுதி. நாற்றுப் பறிக்கும் நிலப்பகுதி.

*"பெருங்குமிழ்க்கீழ் செய்வயக்காலும் பறிகாலும் இவ்வடைவிலே கொண்டு"*

(புது. கல்வெட்டு, 28)

**பறிச்சட்ட :** (மொ) பறிச்சு அட்ட, பறித்துக் கொடுக்க, பறித்து மாலையாகக் கட்டிக் கொடுக்க.

*"தும்பைப் பள்ளித்தாமம் பறிச்சு அட்டவைச்ச நிலம்"*

(தெ. கல். தொ. 5, கல். 667)

**பறையறை :** (அ) அரசுவிடும் உத்தரவுகளைப் பறையறைந்து தெரிவிப்பதற்குரியதாகப் பெறும் வரி.

**பற்று :** (வ) நிலம். உரிய நிலம். உரிமை நிலம். இச்சொல், அடுக்கு, சார்பு, உரிமை, பெறும் ஊதியம், பதிந்த கணக்கு என்னும் பொருள்களிலும் கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ளது.

(1) *"வெற்றிலை ஆறு பற்றும்"*

(தெ. கல். தொ. 7, கல். 139)

(100—எண்ணிக்கை கொண்டது ஓரடுக்கு வெற்றிலை)

*"இலையமிர்து வெள்ளிலை இரண்டு பற்று"*

(தெ. கல். தொ. 14, கல். 13) (பற்று - அடுக்கு)

(2) *"இந்நாட்டு பருவூர் பற்றில் பகடங்குடி நான்கெல்லைக்குட்பட்ட நன்செய் புன்செய் நத்தமும் குளமும்"*

(தெ. கல். தொ. 7, கல். 145)

(ஊரைச் சேர்ந்த நிலக்கணக்கிலுள்ள நிலமும் குளமும்)

(3) *"நாயனார்க்குத் திருமந்திரப் போனகப்புறமாக விட்ட என்பவற்றில் குமிழியூரும் தீர்த்தமும் ஆக இவ்விரண்டூரும்"*

(தெ. கல். தொ. 8, கல். 130)

(உரிமையுடைய ஊர் நிலங்கள்)

(4) *"வெட்டிப் பற்றான நிலம்"*

(காணியாட்சி உரிமை)

(5) *"குளத்தில் பாசிப்பற்று கொண்டு சங்கிரண்டு ஊதுவார்களாகவும்"*

(மீன் வருவாய்)

(6) *"தஞ்சாவூர் பற்றுக்கும் தட்டான் குளப்பற்றுக்கும் பெருநான்கெல்லையாவது"*

(ஊர்கட்கு உரிமை நிலம்)

(தெ. கல். தொ. 5, கல். 421, 726, 759)

(7) *"கீரனூ ரோம் பற்றின பற்றுக்களில் குளங்களும் கரைகளில் மரங்களும் வயல்களில் கிணறுகளும்"*

(புதுக். கல். 156) (உரிமை செய்துகொண்ட நிலம்)

**பன்மகேஸ்வரரக்ஷை** (வ) பல சிவனடியார்கள் இவ்வறத்தினைக் காப்பார்களாக. தமிழகத்துச் சிவன் கோயில்களில் அமைக்கப் பட்ட அறச்செயல்களைக் காப்பதோடு வழிபாடுகள் முட்டுப் பெறாமல் காக்கும் பொறுப்பமைந்த சிவனடியார்கள் 48000 பேர்கள் என்று கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன

*"திருத்தவத்துறை மஹாதேவர்க்கு-நொந்தாவிளக்கு சந்திராதித் தவல் இரவும்பகலும் எரிய-இது பன்மாஹேஸ்வரர் நாற்பத் தெண்ணாயிரவரும் ரக்ஷை"*

(தெ. கல். தொ. 14, கல். 12-அ)

**பன்றி ஆழ்வான் :** (சம) வராகப் பெருமான்.

**பன்னீரடிக்கோல் :** (அ) பன்னிரண்டடி நீளமுள்ள நிலமளக்கும் கோல் முதல் குலோத்துங்கன் ஆட்சியில் சோழநாட்டில் வழக்கி லிருந்த நிலமளக்கும் கோல் இதுவேயாகும். இக்கோல் சதுரம் ஒரு குழியாகவும் நூறு குழி கொண்டது ஒரு மாவாகவும் கணக்கிடப்பட்டுள்ளது. இன்றும் அவ்வழக்கே நிலவி வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

*"திருவுலகளந்தருளிநபடி பன்நீரடிக் கோலால் நூறு குழி கொண்ட தொரு மாவாக"*

(தெ. கல். தொ. 5, கல். 702)

**பாகமும் பாகாஸ்ரயங்களும் :** (பொ) சொத்துரிமைப்பங்கும், பாகப் பிரிவினையாகப் பெறுதற்குரிய வழிமுறைமைகளும். (வாரிசு உரிமைகள்)

*"இந்நிலத்து மேனோக்கின மரங்களும் கீழ்நோக்கின கிணறுகளும் பாகமும் பாகாஸ்ரயங்களும் மற்றும் எப்பேற்பட்ட உரிமைகளு மகப்பட விற்றுக்குடுத்த நிலம்"*

(தெ. கல். தொ. 8, கல். 265) (தொ. 17. கல். 491)

**பாகாசிரியம் :** (வே) பங்குக்காணியாட்சியாக கொடுக்கப்பட்ட நிலங்கள். பருவகாலத்தில் பாசனத்திற்குப் பங்கு முறையாக விடப்பெறும் முறைநீர் அளவு.

*"பாகமும், பாகாசிரியமும் மற்றும் எப்பேற்பட்ட உரிமைகளும் உள்பட தன்மதானமாகக் குடுத்தமையில்"*

*"நீவா ஆற்றின் பாகாஸ்ரயத்திலும் அகப்பட"*

(தெ. கல். தெ. 8, கல். 337, 290)

**பாசமாலை :** (கலை) பொற்சரட்டில் கட்டின இரத்தின வரிசைகளோடு கூடின மாலை.

"*பாசமாலை ஒன்றிற் கட்டின வயிரம், 75, மாணிக்கம்-70 பொத்தி 41, கோத்தமுத்து-83 உள்பட நிறை*"

(தெ. கல். தொ. 2, கல். 73)

**பாசிப்படை :** (அ) பகைவரது மதிலைச் சூழ்ந்துள்ள அகழியிற் செய்யும் போரிடத்துப் பாசிபோல ஒதுங்கியும் மீண்டும் பரந்தும் போர் செய்யும் படை. கோட்டையைச் சூழ்ந்து கைப்பற்றும் வலிமை மிகுந்த படை.

"*நீர்ச்செரு வீழ்ந்த பாசியும்*"

(தொல். புறத்திணை-உழிஞை. சூத். 13)

**பாசிப்பற்று :** (பொ) நீர்நிலைகளில் மீன்களைக் கொண்டு வரும் வருவாய்.

"குளத்தில் *பாசிப்பற்றுக்கொண்டு சங்கிரண்டு ஊதுவார்களாகவும்*"

(தெ. கல். தொ. 5. கல். 726)

**பாசிப்பாட்டம் ;** (அ) நீர் நிலைகளில் மீன் பிடித்து விற்பனை செய்வதற்குச் செலுத்தும் வரி.

**பாட்டம் :** (அ) பருவ முறைப்படியும் போகமுறைப்படியும் ஆண்டொன்றிற்கு விதித்துப்பெறும் வரி.

"*ஆண்டுதோறும் சந்திராதித்தவரையும் இந்த பணமும் பாட்ட நெல்லும் ஸ்ரீபண்டாரத்திலே செலவாக்கி சந்தி முட்டாமல் அமுது செய்விக்கவும்*"

"*தனிப் பங்கு பாட்டத்துக்கு-ஆண்டொன்றிற்கு வாடாக் கடமையாக இறுப்பதாகவும்*"

(தெ. கல். தொ. 5. கல். 252, 305)

**பாடகம் :** (வே) குறிப்பிட்ட எல்லைக்குள்ளடங்கிய நஞ்செய் நிலப் பகுதியின் உட்பிரிவுகளில் ஒன்று.

"*ஏழாங்கண்ணாற்று பலாற்றுக்கு தேற்க்கு மூன்றாம் பாடகம் முன்றுமா*"

(தெ. கல். தொ. 5, கல். 549)

*"திருநுந்தாவிளக்கு ஒன்றுக்கு விட்ட நிலம், திருவேகம் பனில் மேல் கூறு பாடகம் ஒன்றும்"*

(தெ. கல். தொ. 8, கல். 18.)

2. நில அளவு. ஒருவேலிநிலம் என்ற அளவினை ஒத்த கருத்தில் "பாடகம்" என்ற பெயர் கூறப்பட்டுள்ளது.

*"திருநுந்தாவிளக்கு ஒன்றுக்கு விட்டநிலம் திருவேகம் பினில் மேல் கூறுபாடகம் ஒன்றும் உறப்போந்தான் செறுப்பாடகம் அரையும் ஆகப் பாடகம் ஒன்றரையும்"*

(விக்கிரமசோழன், கி.பி. 1129, தெ. கல். தொ. 8, கல். 18)

**பாடவியம்** : (கலை) கானம் பாடுவார்க்குப் பின்னிசையாக இசைக்கப்படும் வாத்தியங்களுள் ஒன்று.

*"பாடவியம், ஒன்றுக்கு அரையன் வாத்யமாராயனுக்குப் பங்கு ஒன்று"*

(தெ. கல். தொ. 2, கல். 66)

**பாடிக்கல்** : (அ) ஊரில் பொன் எடையிடும் நிறை கல். வரகுண பாண்டியன் ஆட்சியில் திருச்சிராப்பள்ளி மலைக்கோயிலில் வழக்கிலிருந்த நிறை கல்.

*"திருமலை படாரர்க்குக் குடுத்தபொன் பாடிக்கல்லால் நூற்றிருபதின் கழஞ்சு"*

(தெ. கல். தொ. 14, கல். 10)

**பாடிகாவல்கூலி** : (அ) நஞ்சை புஞ்சை நிலங்களின் விளைவுகளைப் பாதுகாத்துத்தரும் அதிகாரி நெல்லாகப்பெறும் ஊதியம்.

*"இந்நாயனார் தேவதானத்துக்காரும் எள்ளும் பசானமும் விளைந்த நிலத்திலே என் பாடி காவல் கூலி கொண்டு வருகிற, வேலி ஐங்கல நெல்லாக வந்த நெல்"*

(தெ. கல். தொ. 8, கல். 285)

**பாடுகொண்டு** : (வ) உழைப்பைக் கொண்டு சம்பாதித்த.

*"உரங்கா வில்லிதாஸர் பாடு கொண்டு விட்டபாகம் ஒன்றும்"*

(தெ. கல். தொ. 5, கல். 491)

**பாண்டிய குலாசனி வளநாடு** : (அ) பாண்டிய குலாசனி என்னும் தொடர், பாண்டிய குலத்துக்கு இடியை ஒத்தவன் என்று பொருள்

படும். இது முதலாம் இராசராசனின் விருதுப்பெயர்களுள் ஒன்றாகும். இது சோழ மண்டலத்தின் ஒன்பது வளநாடுகளுள் ஒன்றாகும்.

இது ஆர்க்காட்டுக்கூற்றம், தஞ்சாவூர்க் கூற்றம் விளநாடு, கிளியூர் நாடு முதலான—13 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது.

''*பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர்*''

(தெ. கல். தொ. 2, கல். 1)

**பாணப்பேறு :** (சம) திருக்கோயில்களில் இறைவன் சன்னிதியில் நாளும் பாடவும், கோயில் தேவரடியாரைப் பாடும்படிச் செய்யவும், அவற்குப் பின்னிசை இசைக்கவும் பொருந்திய பாணர்குடியில் வரும் இசைவல்லானுக்குக் காசு நெல்லும் நிவந்தமாக அளிப்பது பாணப்பேறாகும்.

''*உடையார் திருவிடைமருதூருடையாற்கு பாடவும் இக்கோயிலில் தளியில்லார் தேவரடியாரை பாட்டுவிக்கவும் பாணரை இடக்கடவராக இவனுக்கும் இவர் வங்ஸத்தார்க்கும் இக்கோயில் பாணப்பேறாக முன்பு பெற்று வரும் காசும் நெல்லும்*''

(தெ. கல். தொ. 5, கல். 705)

**பாணன் வயல் :** (சமு) பண்ணிலும் திறத்திலும் வல்ல யாழ்ப்பாணனுக்கு அளிக்கப்பெற்ற காணி.

''*மேல்பாற் கெல்லை பாணன் வயலில் வரம்பிடுக்குக் கிழக்கும்*''

(தெ. கல். தொ. 8, கல். 412)

**பாணிச்சாய் :** (பொ) முத்துக்களில் ஒருவகை.

''*சப்தசரி ஒன்றிற்கோத்த முத்து வட்டமும் அனுவட்டமும் பாணிச்சாயும் தோல்தேய்ந்தனவும்*''

(தெ. கல். தொ. 2:2, கல். 34)

**பாதத்தில் எழுத்து வெட்டித்தரா விளக்கு :** (பொ) அடிபீடத்தில் கொடுத்தாரின் பெயர் காலம் முதலிய செய்திகள் வெட்டப்பட்ட தரா என்ற உலோகத்தாலான விளக்கு. முதல் இராசராசன் ஆட்சியாண்டு உ௰அ—ல் நாங்கூர்நாட்டு நாங்கூர் வில்லவன் மஹாதேவியார் தங்களாச்சி நக்கன் ஒலோகசிந்தாமணியார் — குடுத்த தரா என்னும் கலப்பு லோகத்தால் செய்யப்பட்ட நிலைவிளக்கு. விளக்கின் பாதத்தில் இன்னாரால் அளிக்கப்பட்டது என்ற செய்தி வெட்டப்பட்டுள்ளதைக் கல்வெட்டுச் செய்தி உரைக்கின்றது.

(தெ. கல். தொ. 5, கல். 981)

**பாதத்து நீர்வார்த்துக் கொடுத்தல் :** (சம) கோயிலுக்கு நிவந்த நிலமோ, பொருளோ அளிக்கும்போது, அத்தர்மத்தைக் கோயிலுகுரிய சண்டேசுவரர் நீர்வார்த்து உறுதிசெய்து கொடுக்கும் வழக்கும் உண்டென்பது இதனால் புலனாகும்.

*"சிங்க தேவனும் நச்சிநாற்க்னியனும் சண்டெஸ்வரதேவர் பாதத்து நீர் வார்த்துக கொடுதத நிலமாவது"*

(தெ. கல். தொ. 6, கல். 34)

**பாதாதி கேசாந்தம் :** அடிமுதல் முடிவரை. பாதம் ஆதியகக முடியுச்சி வரையில் சிலைகளை அளப்பதற்குக் கொள்ளும் அளவு முறை.

*"பாதாதி கேஸாந்தம் இருபதிற்று விரல் உசரத்து இரண்டு கை யுடையராகக் கனமாகச் செய்த தத்தா நமரே காண் என்ற மிலா டுடையார் ஒருவர்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 41)

**பாதபுஷ்பமாக :** பாதகாணிக்கையாக.

*"உடையார் ஸ்ரீராஜராஜதேவர் ஸ்ரீபாத புஷ்பமாக அட்டித்திருவடி தொழுத இரணடாநதரத்து முத்து பதின் மூவாயிரதது முன்னூற் றிருபத்தெட்டினால"*

(தெ. கல். தொ. 2:2, கல். 59)

**பாதமூலத்தர் :** (சம) ஆதி சைவ அர்ச்சகர். சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபாடு செய்யும் பழந்தமிழர் வழிவநத அந்தணர் பெருமக்கள். கால வளர்ச்சியில், வடவாரிய பிராமண அருமறை ஆகமங்கள் தமிழக அந்தணரின் வழிபாட்டு முறைகளையும கொண்டதாக அரசு வழி திருக்கோயில்களில் வழக்குரிமை பெற்றதனால் ஆதிசைவ அந்தணரும் எரியோம்பல், ஆகுதி செய்தல் முதலிய மறைமுறைகளையும் ஏற்று "பதிபாத மூலத்தார்" எனவும,

*'பதிபாத மூலப்பட்டுடை பஞ்சாசாரிய தேவகன்மிகள்"*

எனவும் பெயர் பெற்றுள்ளமையைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

*"திருவிளக்கு எரிப்பதாக-இந்நூறாடுங்கண்டு கொண்டு எரிப் போமானோம பாத மூலத்தோம்"*

(தெ. கல். தொ. 5, கல். 686)

"*இக்கோயிலில் காணி உடைய சிவபிராமணன் கடம்பந் தாங்கு வானும, கடபன் தேவனும், கடபன் உய்ய வந்தானும்*"

(தெ. கல். தொ. 8, கல். 40)

**பாந்தல்** : (வே) நிலப்பரப்பிடத்தில் எல்லை கோலிக்கரையிட்டு மழைநீரைப் பாசனத்திற்குப் பயன்படுத்தும் நிலப்பகுதி. ஏரி என்றும் பொருளமையும்.

"*ஆக இம்மூன்றூரும் ஏத்தல் பாந்தலுட்பட்ட நாற்பாற் கெல்லைக்குள்*"

(தெ. கல். தொ. 8. கல். 148)

**பாய்கால்** : (வே) பாசனத்திற்கு நீர்பாயும் கண்ணிக்கால். பெரும் கால், சிறுகால் ஆசியவற்றினின்றும் பாசனத்திற்கு ஏற்புடைய தாகப் பிரிக்கப்பெறும் கண்ணிக்கால். கண்ணி வாய்க்கால்.

**பாயவும் வாரவும்** : (வே) வாய்க்காலிலிருந்து நீர்த்தடையின்றி நன்செய் நிலத்திற்குப் பாயவும், மேடான புஞ்செய் நிலத்திற்கு நீரை வாரி விடவும்.

"*இவ்வேலிப் பெருஞ் செய்பாயவும் வாரவுமாக வைச்ச அரைக் கொட்டி வாய்க்கால்*"

(தெ. கல். தொ. 5, கல். 572)

**பார்க்கோல்** : (கலை) நாடக அரங்கில், கட்டியங் கூறுவான் கைக் கொள்ளும் அரச விருதுச் சின்னம் பொறித்த கோல்.

**பார்யை (பாரியை)** : (வ) மனைவி (வடசொல்) அந்தணர் வழக்கு.

"*கௌசிகன் பெருமாள் பார்யை சந்தியாண்டாள்*"

(திருக்கோயிலூர் கல்வெட்டு)

"*உத்தமசோழன் பிள்ளை வேளான் பாரியை ஆண்டாள்*"

(தெ. கல். தொ. 8, கல். 215)

**பாரசைவர்** : (சமு) திருவாரூர், தில்லை ஆகிய சிவத்தலங்களில் வழிபாட்டின்போது சுத்தமத்தளமும், ஆதிரைத்திருநாளில் கொட்டி மத்தளமும் வாசிக்கும் உரிமையுடையவர்கள். இவர்கள், கிராம தெய்வங்கட்கமைந்த பூசாரிகளாகவும் இருந்துள்ளனர். சிவந்த ஆடை, செஞ்சந்தனம், செம்பரத்தம் பூமாலை அணிவர். இவர்கள் கல்வெட்டுக்களில் "பாரசிவன்" என்று குறிக்கப் பெறுகின்றனர்.

இவர்களில் ஒருவனே, முதல் இராசராசன் ஆட்சியில் ஆரூரிலிருந்து, தஞ்சைக்கு அழைத்துவரப் பெற்று, தஞ்சைப் பெரிய கோயிலில் அமைக்கப்பட்ட ஓதுவார்கள் நாற்பத்தெண்மர் தேவாரம் பாடும்போது கொட்டி மத்தளம் வாசித்த குணப்புகழ் மருதனான சிகா சிவன் என்பவனாவன்.

(தெ. கல். தொ. 2, கல். 65)

''*பாரசிவன் குலாவும்*''

(தெ. கல். தொ. 5, கல். 473 முதற் குலோத்துங்கன்)

இசை நாடகப் பயிற்சியுடைய இவர்கள் பாரசவர் என வழங்கப் பெறுவர் என்பது. ''பாரசமுனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திரகாளியமும்'' எனஅடியார்க்கு நல்லாரும், கூத்தராயின் பாரசவரும் வேளாளரும் பிறரும் (தொல் புறத்தினண) என நச்சினார்க்கினியரும் தரும் விளக்கம் குறிப்பிடத்தக்கதாகும்.

**பாரத்வாஜ கோத்ராலங்காரபதி :** (அ) பாரத்வாஜ கோத்திரத்தார்க்கு அணியாக விளங்கும் தலைவன். பாரத்வாஜர் என்ற முனிவரின் மரபினைச் சேர்ந்தவர் பல்லவர். பல்லவ மரபினர் கோத்திரமுடையவராகத் திகழ்ந்தமை இதனாற் புலனாம்.

''*பல்லவ குல திலக பாரத் வாஜ கோத்ராலங்காரபதியாகிய ஸ்ரீ தந்திவர்ம மஹாராஜர்க்கு*''

(கல்வெட்டு வெளியீடு-தொ. 8, எண். 29)

**பாரதப்பங்கு :** (அ) பாரதம் வாசிப்பான் பெறும் இறையிலியான பங்கு நிலம். பல்லவர் காலத்திலும் சோழர் காலத்திலும் ஊர்களிலமைந்த மண்டபங்களில் நாளும் பாரதம் வாசிக்கப்பட்டது. அம்முறையில் பாரதம் வாசிப்பவனுக்குரியதாக இலையிலி நிலமும் ஊர்ச் சபையார் அவனுக்கு அளித்துள்ளனர்.

''*கூரத்து மண்டபத்துக்கு தண்ணீர்க்குந் தீக்கும் ஒரு பங்காகவும், இம்மண்டபத்தேபாரதம் வாசிப்பதற்கு ஒரு பங்காகவும்*''

(கூரம் செப்பேடு)

''*வயிர மேகபடாரன் எடுப்பித்து அம்பலத்து இருந்து நிசதியும் ஸ்ரீபாரதம் வாசிக்க பெரும் புலியூர், ஆத்ரைய கோத்ரத்து வைகாநஸ ஸூத்ரத்து ஸிங்கி நதிஸ்வரபட்டனுக்கு இறையிலியாக குடுத்தோம் ஸபையோம்*''

(செந்தலைக் கல்வெட்டு, முதல் இராசராசன் கி.பி. 994, தெ. கல். தொ. 6, கல். 12)

**பாரதப்புரம் :** (சம) கோயிலில் அதற்கென்று அமைக்கப்பட்ட மண்டபத்தில் நாளும் இருந்து பாரதம் பாடுபவன் பெறும் இறையிலி உரிமை நிலம்.

*''முருகமோடன் எடுத்த மண்டபத்துள் ஒத்துவக்காணி விருத்தியும் பாரதப்புறமும்''*

(தெ. கல். தொ. 5, கல். 223)

**பாராயண மார்க்கம் வேதம் வல்லான் :** (சம) மனப்பாடமாக வேதம் முழுமையும் சொல்ல வல்லான்.

*''பாராயண மார்க்கம் வேதம் வல்லானாயுக்தனாகிய பிராமணன்''*

(யுக்தன்—திறமையுடையவன்)

(தெ. கல். தொ. 6, கல். 355)

**பாரிசஞ் செய்தல் :** (வ) ஒருவரின் பொறுப்பாக ஒப்படைத்தல்.

**பாலதேவர் :** (சம) காக்கும் கடவுள், க்ஷேத்ரபாலதேவர். காவல் தெய்வம். சிறப்பாக, பைரவமூர்த்தியையே குறிப்பதாகும்.

*''எட்டு ஸ்ரீ ஹஸ்தம் உடையாராகக் கனமாக எழுந்தருளுவித்த க்ஷேத்ரபாலதேவர் ஒருவர்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 43)

**பாலாசிரியன் :** (கலை) பாலார்க்குக் கற்பிக்கும் ஆசிரியன்.

*''இவ்வூர் பாலாசிரியன்''*

*''பாலாசிரியன் தத்தன்''*

*''மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார்''*

(தெ. கல். தொ. 19, கல். 57, 376)

(அகநா-92)

**பாலும் நெய்யுமாட்டல் :** (சம) இறைவன் திருமேனிக்கு, பாலாலும் நெய்யாலும் திருமஞ்சனம் ஆட்டுதல் வேதாகம நெறியாகும்.

**பாவம் படுவார் :** (வ) பாவத்தினை அடைவார்.

*''கங்கையிடை குமரி இடைச் செய்தார் செய்த பாவம் படுவார்''*

(கல்வெட்டுக்களில் இறுதியாகக் கூறப்பெறும் காப்புரை.)

**பாவாடைப்புறம் :** (சம) வெண்விரிப்பில் இட்டுப் படைக்கும் சிறந்த பொங்கல் பிரசாத நிவந்தம் நிகழ மூலதனமாக வைக்கப்பெற்ற நிலம். இச்சிறப்புப் படையல் தில்லை நடராசப் பெருமானுக்கு, ஆண்டுதோறும் தைப் பூசத்திருநாளில் நிகழ்வதாகும்.

*''திருத்தைப்பூசத் திருநாளிலே திருப்பாவாடைச் சிறப்பாக அமுது படிக்கு ஊர் இளங்காலாலே பதின்கலனுக்குப் போனகப் பழ வரிசியும் இருகல மணிப்பருப்பும், நாலு நிறை சர்க்கரையும், நூறு தேங்காயும், பத்து பலாக்காயும் குலோத்துங்க சோழ திருமடைப்பள்ளி பண்டாரத்திலே முதலிடவும் கயிலாய தேவன் 'திருப்பாவாடைபுறம்' என்று திருமாளிகையிலே கல்வெட்டு வித்து''*

(சிதம்பரம் கல்வெட்டு, தெ. கல். தொ. 12, கல். 171)

**பாவை விளக்கு ;** (கலை) அழகிய மங்கல மகள் இருகையாலும் விளக்கு அகலை ஏந்திய பாங்கில் உலோகத்தால் வார்க்கப்பெற்ற விளக்கு.

*''பாவை விளக்கிற் பருஉச்சுடர் அழல''*

(முல்லைப்பாட்டு வரி. 85)

'சங்ககாலத்தில் யவன வாணிபம் தமிழகத்தில் நிகழ்ந்ததால் ''*யவனப்பாவை அணிவிளக்கு*'' தமிழகத்தில் வழக்கிலிருந்ததைப் பெருங்கதை வரி. 171-175 குறிக்கும்.

*''பாவை விளக்கும் பணிவுடன் பரவுமின்''*

(மணிமேகலை விழாவறை காதை.)

**பாழி :** (சம) மலைகளில் இயற்கையாக அமைந்த குகைத் தடங்கள் பாழி எனப்படும். இப்பாழிகளிலேயே சமண முனிவர்கள் தங்கி வாழ்ந்தனர்.

**பாழி ஸ்ரீ கோயில் :** (சம) மலையில் இயற்கையாக அமைந்த பெருங் குகைகளில் அமைக்கப்பட்ட கோயில். சமணப்பாழியையும் குறிக்கும்)

(புதுக். கல். 84)

**பாற்போகம் :** (சம) பசுக்களின் வழியே பாலாகப் பெறும் வருவாய்.

*''சாவா மூவாப் பசுவாக காத்து மேச்சு ரக்ஷித்து இவையிற்றில் பாற் போகம் கொண்டு நிசதம் உழக்கு நெய்யில் ஒரு நொந்தா விளக்குப் பகலும் இரவும் எரிப்போமானோம்''*

(முதல் இராசேந்திரன், தெ. கல். தொ. 4, கல். 393)

**பானிய விர்த்தி** : (சம) பாணிய விருத்தி. தண்ணீர்ப் பந்தல் நிகழ்வதற்குரியதாக வைக்கப்பெறும் நிவந்தம்

*"ஆக இவை கொண்டு தண்ணீர் விற்கும் பிராமணன் மடமும் கட்டி காவணமு மிட்டுத் தண்ணீர் கால்களுந்தானே தேடியிட்டுத் தண்ணீர் வாரக்க கடவனாகவும் இப்படிக்கு பானிய விர்த்தியாகச் சந்திராதித்தவரை செல்வதாகக் கொண்டு விட்டேன"*

(தெ. கல். தொ. 7, கல். 48)

**பிஞ்சு : (கலை)** அணியின் பொன்னருப்புக் கோப்பு. இரத்தினங்கள் வைத்திழைக்கப்படும் அணிகலன்களில், இரததினக்கற்களைப் பொருத்திச் செம்மைப்படுத்துவதற்குரியதாக ஆங்காங்கே பொற்பொடியிட்டு ஊதிப்பொருத்தப்படும் பகுதிகள் பிஞ்சு என்று பெயர் பெறும். இதனை உம்முசம் என்றும் கூறுவர்.

*"கட்டப்பட்ட ரத்நங்கள் அரக்கும் பிஞ்சும் உள்பட தக்ஷிண மேரு விடங்கன என்னும் கல்லால் நிறை எடுத்து"*

(தெ. கல். தொ. 2:3, கல். 93)

**பிடலிகை** : (சம) பீடம். கோயிலிலுள்ள பலிபீடம். இப்பெயர்ச் சொல் கல்வெட்டுக்களில் பிபீலிகை, என்றும் கூறப்பெற்றுளது.

**பிடாகை** : (அ) சிற்றூர். ஒரு பெரிய நகரையோ, தலைநகரையோ சூழ்ந்துள்ள சிற்றூர்கள் பிடாகை என்று பெயர் பெறுவனவாகும்.

*'பெரும்பற்ற புலியூர்ப் பிடாகைகளில்"*

(தெ. கல். தொ. 12, கல். 245)

*"சோழாந்தகச் சதுர்வேதி மங்கலத்து மேல்பிடாகை பட்டக் குறிச்சி"*

(தெ. கல். தொ. 5, கல். 294)

**பிடாகை வலஞ்செய்து கொடுத்தல்** : (அ) தான சாசனத்தினைப் பெண் யானையின்மீது வைத்து, தானத்திற்குரிய கிராம அல்லது ஊரின் எல்லைகளை வலமாகச் சூழ்ந்து நடத்திக் கொடுத்தல்.

*"மஹாவலி வாணராயர் பிடாகை வலஞ்செய்து குடுத்த"*

(தெ. கல். தொ. 3:1, பக். 91)

'பிடிசூழ்ந்து பிடாகை வலம் செய்தல்'—பார்க்க.

**பிடாரர்** : (சம) தமிழிசை வல்லார். தேவாரம் பாடுபவர்கள். "இது பட்டாரகர் என்பதின் மரூஉப் பெயராகிய படாரர் போலும்" என்றும் கருதுவர். (தஞ்சை திரு. எல். உலகநாதபிள்ளை)

*''ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார்க்குத் திருப்பதியில் விண்ணப்பம் செய்ய உடையார் ஸ்ரீராஜராஜதேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத் தெண்மர்''*

(தெ. கல். தொ. 2:3, கல். 65)

**பிடாரி :** (சம) சிற்றூர்களில் ஊர்க்காவல் தெய்வமாக அமைக்கப் படும் பெண் தெய்வம். பிடாகைக்குரிய பெண் தேவதை. இத் தெய்வங்கட்குரியதாக சிறப்புப் பெயர்களும் அவ்வவ்வூர் வழக்கில் குறிக்கப்பட்டுள்ளதைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. பெண்டிர் பிடாரி என்ற பெயரைப் பெற்றிருந்தனர்.

*''பிடாரி பொதுவகை ஊருடையாள்''*

*''இவ்வூர் எறாடு கடக்கும் இவ்வூர் காளா பிடாரியார் ஸ்ரீ கோயில்''*

(தெ. கல். தொ. 2, கல். 5)

*''திருநலக் குன்றத்து திருமேற்றளி மாதேவர்க்கும் சீவிகத்துக்கும் சாலையூட்டாக சாத்தம் பிடாரி வைத்த பொ.ன்-நி.''*

(தெ. கல். தொ. 17, கல். 356)

*''இந்நாட்டு பாச்சில் கூற்றத்து கீழ்பாலாற்றுத் துறையூர் பிடாரி புன்னைத்துறை நங்கைகோயிலுந் திருமுற்றமும் பிடாரி பொது வகை ஊருடையான் ஸ்ரீ கோயிலும் திருமுற்றமும்''*

(முதல் இராசராசன், தெ. கல். தொ. 6, கல். 5)

*''பிடாரி குதிரைவட்டமுடையாள் ஸ்ரீகோயில்''*

(தெ கல். தொ. 2, கல். 5)

**பிடாரிபாத்தி :** (சம) கிராம தேவதைகளுள் பெண்தெய்வமாக விளங்கும் பிடாரியார்கோயில் நாள்வழிபாடு திருவிழா ஆகிய செலவினங்களுக்குரிய வருவாயாக ஊர்ச்சபையாரின் நிர்வாகத் தின்கீழ் விடப்பெறும் இறையிலி நிலம். இந்நிலம் பிடாரிபட்டி என்றும் பெயர் பெறும்.

*''இவூரில் முன்பு உண்டான தேவதானம், திருவிடையாட்டம் அய்யன் போகம் பிடாரிபாத்தி நீங்கலாக''*

(தெ. கல். தொ. 8, கல். 210)

**பிடிசூழ்ந்து பிடாகை நடத்தல் :** (அ) அரசன் தானம் செய்த ஊர், கிராமம், நிலங்கள் ஆகியவற்றிற்கமைந்த ஊர்ச்சபைப்பெரு மக்கள், அந்நாட்டார், புரவுவரி கரணத்தான் ஆகியோர் கூடி

ஊர் நிலக்கணக்குப்படி நிலங்களை அளந்து, பிடி யானையினை எல்லைகள் வழியே செல்லவிடுத்து அதன்மீது அவ்வூர்ப் பெருமகனொருவன் ஏறியமர்ந்து எல்லைகளை முறையாகக் காட்டிச் செல்ல தொடர்ந்து யாவரும் எல்லை கோலி, எல்லைகளில் கல்லும் கள்ளியும் நாட்டிச் செய்விக்கும் செயல்.

"*இவ்வானை மங்கலம் பிடி சூழ்ந்து பிடாகை நடக்கிற போது ஆனையேறி இன்னாட்டாரோடும் உடனின்று எல்லை தெரித்துக் காட்டினேன். இவ்வானை மங்கலத்திருக்கும் வெள்ளாளன் கோன் புத்தனேன்*"

(ஆனை மங்கலச் செப்பேடுகள்)

"*மேல் வேம்பநாட்டு நாட்டாரும் பிர்மதேயக்கிழவரும் நலபுரத்து ஊராரும் உடனின்று நிலம் அளந்து பிடிசூழ்ந்து கல்நாட்டி*"

(சிவகாசிச் செப்பேடுகள்)

**பிடிபாடு :** (மொ) ஆதரவு பிடிபாடு-உரிமைப்பத்திரம். உடைமை கட்குரியதாக ஆவணக்களரியில் பெறும் சான்றோலை. அதுவே பிடிபாடாகப் பெறுதல்.

"*இப்படி கல்லிலும், செம்பிலும் வெட்டிக்கொள்ளப் பிடிபாடு பண்ணிக் கொடுத்தோம்*"

"*முதலியார் புட்பவன சிவர் பேரால் எழுதின பிடிபாட்டின்படி*"

(தெ கல். தொ. 8, கல். 171, 172)

"*இவ்வோலை பிடிபாடாகக் கொண்டு கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க*"

(தெ. கல். தொ. 17, கல். 202)

**பிடிபாடு தீட்டு :** (வ) ஆதாரமாக எழுதித்தரும் உறுதிச் சீட்டு.

"*இம்மூவோம் பிடிபாடுத் தீட்டுக் குடுத்த பரிசாவது*"

(தெ. கல். தொ. 5, கல். 475)

**பிடிலிகை வாரி :** (சம) பீடத்தின் மீது பெறப்படும் காணிக்கை. (பிடிலிகை - ஸ்ரீபீடம்) (வாரி - கூடிய வருமானம்.) இதனைப் பிபீலிகை என்றும் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

திருக்கோயில்களின் திருமுற்றத்தில் அமைக்கப்பெறும் பலிபீடமெனும் சீபீடத்திலோ அன்றி அதன் முகப்பாக விநாயகர் திருமேனியோடு அமைக்கப்பெறும் புரையிடத்திலோ மக்கள் தமது தெய்வநேர்த்திக் கடனாகச் செலுத்தும் காணிக்கைப் பொருள்க

ளாகிய பொன்னையும் பொருளையும் அணிகலன்களையும் இட்டு வழிபடுவது பண்டைய வழக்காகும். (இக்காலத்தில் இவ்விடத்தில் உண்டியல் வைக்கப்பெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.)

இவ்வாறு நேர்த்திக் கடனெனும் பலியினைப் பெறும் பீடவாரி வழியே வரப்பெறும் பொன்னும் மணியும் அணிகலன்களுமாகிய கோயில் வருவாய்க்கு அரசோ, ஊர்ச்சபையோ ஆயம் என்னும் பேரால் வரி பெறுர் என்பதும், இக்காணிக்கை வருமானத்தில் ஒரு பங்கினை, கோயிலுக்குரிய வழிபாட்டினை நிகழ்த்தும் சிவ பிராமணர்கள் பெறுவர் என்பதும் இப்பொன்னைக்கொண்டு திரு மேனிகட்கு அணிகலன்கள் செய்யப் பெறுவதுண்டு என்பதும் கல்வெட்டுச் செய்திகளால் புலனாகின்றது.

(1) *"தஞ்சாவூர் புறம்படி கருந்திட்டைக்குடி மஹாதேவர்க்கு யாண்டு நான்காவதுவரை பலவகையாலும் இட்டார் இட்ட பொன்னால் பட்டங்களும், பொற்பூக்களும், கண்மணிகளும் நெருஞ்சிப் பூக்களும் பிடிலிகை வாரியால் கூடின பொன்னும் ஆக பலவகையாலும் கூடி பொன் இருபதின்கழஞ்சே அரை-காலினால் இராசேந்திரசோழன் பட்டம் ஒன்று."*

(தஞ்சை - கருத்திட்டைக்குடி சிவன் கோயில் கல்வெட்டு)

(2) *"ஸ்ரீ மதுராந்தகன் நந்தவானத்தில் - நீங்கலாக நின்ற - பல மரங்களும், ஆடு பத்தும் பிடிலிகைவாரி அரைக்கால் பொன்னுக்கு கீழ்ப்பட்ட பொன்னுல் இக்கோயிலில் சிவ பிராமணர்கள் கையுற்று தாங்கள் அனுபவித்து, இச்சிவ பிராமணர்கள் சந்திராதித்தவரை எரிக்கக் கடவ திருநுந்தாவிளக்கு மூன்று"*

(முதல் இராசேந்திரன், கி.பி. 1029, தெ. கல். தொ. 7, கல். 801)

(3) *"திருவண்ணாமலையிலும் திருக்கோயிலிலும் சீபீட வாரியிலும்மற்றும் எப்பேர்ப்பட்ட பல்லாயங்களிலும்"*

(தெ. கல். தொ. 8, கல். 148)

(4) *"இப்பிடிலிகைவாரி கொண்டு மாணியிரண்டு இட்டு பணி செய்யக் கடவேனாகவும்"*

(தெ. கல். தொ. 19, கல். 357)

(காணிக்கை உண்டியல் வருமானத்தினைக் கொண்டு இரண்டு பணியாட்களுக்கு ஊதியம் தரும் குறிப்பு)

பிடி விளக்கு : (பொ) பிடியோடு கூடியதாகச் செய்யப்பெறும் உலோக விளக்கு. கோயில்களில் திருவிளக்குகள் ஏற்றுவதற்குப் பயன்

படுத்தும் கைப்பிடியோடு கூடிய விளக்கு. இவ்விளக்கினை எரிய விடும் விளக்காகவும் எடுத்துச் செல்வர்.

*''ஸ்ரீபலிக்கு எரியும் பிடிவிளக்கு''*

(தெ. கல். தொ. 8, கல். 235)

**பிர்ம்மாதிராஜர்** : (அ) பிர்மாதிராயர். பிர்ம்மமாராயன். சோழ அரசியலில் அமைச்சராகவும். சேனைத்தலைவராகவும் இருந்த பிராமணர்கட்குரிய விருதுப்பெயர்.

*''இவ்வூர் ஜீவிதமுடைய ஸெநாபதிகள் ஜயங்கொண்ட சோழ பிர்ம்மாதிராஜர் தமப்பநார் மஞ்சிப்பயநாரான ஜய சிங்க குலாந் தக பிர்மமாராயர்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 30)

*''சேனாதிபதி-ஸ்ரீகிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிர்ம மாராயன்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 31)

**பிர்மதேயம்** : (சமு) பிராமணர்கட்கு இறையிலியாக உரிமை செய்யப் பட்ட நிலம், ஊர்.

*''கோவிந்தன் மாதவபட்டனும் எம்பி கோவிந்தன் திரு விக்கிரமனும் இவ்விருவோம் விற்றுக்கொடுத்த ஊராவது. நாங்கள் ஒரு பாரம்பரம பெற்றுடையோமாய் அனுபவித்து வருகிற இந்நாட்டு பிர்மதேயம் மானாபரணச் சருப்பேதி மங்கலம் விற்றுக்குடுத்தோம்''*

*''கல்லிகாடும் வெட்டி நிலமும் வசக்கி பயிறேற்றி விளைஞ்ச நிலத்துக்கு-நிலம் ஒரு மாவுக்கு சற்காசும்-இறுப்பாளாகவும் இவ னுக்கும் இவன் வர்க்கத்தார்க்கும் குடி நீங்காக் காராணமையாக குடுத்தோம்''*

(தெ. கல். தொ. 14 கல். 148, 223)

**பிர்மதேயம் இறக்குதல்** : (வ) வேத பிராமணர்கட்கு இறையிலி உரிமையோடிருந்த நிலபுலன்களை மாற்றுதல். (இறக்குதல் - மாற்றுதல்.)

*''பிர்மதேயம் இறக்கி வெள்ளான்வகையில் முதலாக்கி சோழ பாண்டிய நல்லூர் என்னும் பியரால் தேவதான இறையிலியாக-குடுத்தோம்''*

(தெ. கல். தொ. 14, கல். 145)

**பிர்மஸ்தானம்** : (அ) ஊர்ச்சபையார் கூடும் மண்டபம். கிராம பஞ்சாயத்து நிகழும் இடம்.

*''ஜயங்கொண்ட சோழமண்டலத்து செங்காட்டுக் கோட்டத்து மாகனூர்நாட்டு மணிமங்கலமான ராஜசூளாமணிச்சதுர்வேதி மங்கலத்து மஹாசபையோம் எம்மூர் பிர்மஸ்தானத்து கூட்டங் குறைவறக் கூடியிருந்து''*

(தெ. கல். தொ. 3:1, பக். 53)

*''இவ்வூர் பிர்மஸ்தானம் ராஜேந்திரசோழன் பேரம்பலத்தேய் பெருங்குறி மஹாசபையோம் கூட்டம் குறைவரக் கூடியிருந்து''*

(தெ. கல். தொ. 5, கல். 986)

**பிர்மஹஸ்வமும் தேவஸ்வமும்** : (சம) பிராமணர்கட்கு அமைந்தன வும் தெய்வத்திற்கு அமைந்தனவும்.

*''அவிரோத்தால் செய்த தவ காரியமாவது. அசு நாழிகைச் செலவும் பிர்மஹஸ்வமும் தேவஸ்வமும் பற்று வழியும் பணி வழி விருத்தியும்''*

(முதல் இராசராசன் - சேர நாட்டுக்கல்வெட்டு, கி.பி. 1012)
(தெ. கல். தொ. 7, கல். 171)

**பிரசஸ்தி** : (அ) மரபுப்புகழ்ச்சியுரை. மன்னர்களால் உருவாக்கப்பட்ட செப்புப்பட்டயங்களிலமைந்த செய்திகட்கு பட்டய முகவுரையாக அமைக்கப்பெறும் வடமொழிச் சுலோகப் பகுதி. இதில் சாசனத் திற்குரிய மன்னனின் மரபு வழி முதல்வன் முதலாக குறிக்கப்பட்டு அவ்வவரின் சிறந்த செயல் ஆற்றல் இவற்றுடன் இன்னாருக்குப் பின் இன்னார் அரசேற்றனர் என்ற முறைப்படியும் விளக்கமாகக் கூறப் பெறுதல் வழக்கு. இவ்வடமொழிப் பகுதியினை ''மன்னர் மரபுவழிப்புகழ்ச்சிஉரை'' எனலாம்.

**பிரசாதம்** : (சம) சுவாமிக்கு நிவேதனம் செய்த திருவமுதாகிய உணவு பிறருக்கு அளிக்கும்போது பிரசாதம் எனப்படும்.

*''இவ்வமுது செய்த பிரஸாதத்தினால் செம்பாதி அபூர்வி ஸ்ரீவைஷ்ணவராய் வந்தார்க்கு இடுவதாகவும்''*
(மணிமங்கலம் கல்வெட்டு)

**பிரசாதம் செய்தல்** : (வ) அரசன் ஆணை இடுதல் (பிரசாதம் - மரியாதைச் சொல்).

*''உடையார் ஸ்ரீராஜராஜஈஸ்வரம் உடைய நாயனார்க்கு உல குடைய நாயனார் பிரசாதம் செய்தருளின திருமுகப்படி இறையிலி ஆன குடிகாடு''*
(உலகுடை நாயனார் - அரசன்) (புதுக். கல். 155)

பிரதிமம் : (சம) மக்களாய்ப் பிறந்து மாண் செயல் புரிந்தார்க்கு உலோகத்தால் அமைக்கப்பெறும் உருவம். அடியார்கள் அரசன் அரசியர் ஆகியோர்க்கு அமைக்கப்பெறும் உருவமும் அப்பெயர் பெறும். இதனைப் படிமம் என வழங்குதல் தமிழ்வழக்கு.

*"பாதாதி கேசாந்தம் பதினேழுவிரலே இரண்டுதோரை உசரமும் இரண்டு திருக்கையும் உடையாராகக் கனமாக எழுந்தருளுவித்த நம்பி ஆரூரர் பிரதிமம் ஒன்று"*

*"பெரியபெருமாள் (இராசராசன்) பிரதிமம்" உலோக மாதேவியார் பிரதிமம்"*

*"இரண்டு கையுடையாராகக் கனமாக எழுந்தருளுவித்ததிரு நாவுக்கரையர் பிரதிமம் ஒன்று"*

(தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 2:2, கல். 38)

பிரதி க்ஷேத்தரம் : (வே) ஒரு நிலத்திற்கு ஈடாக வேறோரூரில் கொடுக்கும் வேறொரு நிலம். இதுவே "நிலப்பரிவர்த்தனை" என்று கூறப்பெறும்.

*"இந்நிலத்துக்கு பிரதி க்ஷேத்ரமாக ஒன்று முக்காலாக்கி வெண்ணைக்கூத்த நல்லூரில் பரிவர்த்தனையாக விட்ட பாடகம்"*

*"திருவேகம்ப விளாகத்துக்கு தலைமாறு நிலப்பரிவர்த்தனை பண்ணின பாடகம்'*

(தெ. கல். தொ. 6, கல். 351)

பிரபை : (கலை) உலோகத்தால் வார்க்கப்பட்ட தெய்வத்திரு மேனிகளமர்ந்த பீடத்தின் இருபுறமும் காலிட்டெழுந்து மேலே அரை வட்டமாக வளைந்து நிற்கும் சிற்ப வேலைப்பாடமைந்த வளைவு. இது பித்தளை ஆகிய உலோகங்களால் வார்க்கப்பெறுதல் வழக்கு.

*"தேவரையும் நம்பிராட்டியையும் க்ஷபத்தையும் கவித்த தோரணக்கால் இரண்டும் அர்த்த சந்ரம் ஒன்றுமாய அறுமுழமே ஒன்பதிற்று விரலரைச் சுற்று உடைய கனமாகச் செய்த பிரபை ஒன்று"*

(தஞ்சைப்பெரியகோயில் கல்வெட்டு, தெ. கல். தொ. 2:2, கல். 46)

பிரமதேயக்கிழவர் : (சமு) பிரமதேயமாக இறையிலி நிலம் பெற்ற அந்தணப் பெரியார்.

பிரமதேயம் : (வ) அரசன், வேதம் வல்ல பிராமணரை குடியேற்றி அவர்களின் வாழ்விற்கு மனையும் உணவிற்கு நிலமும் அளிப்பதுடன் குறிப்பிட்ட வரிவகைகளைப் பெறும் உரிமைகளையும் அளிக்கும் இறையிலி தானம்.

*"இருபதின்மர் சதுர்வேதிகளுக்குப் பிரமதேயங் கொடுப்பதற்கும் மணயிற் கோட்டத்து பன்மாநாட்டுப் பரமேச்சுரமங்கலத்துள் அகப்பட்ட வளையில்-பிரமதேயமாகக் கொடுத்தது. இவ்வூர் மனையும் மனைப்படைப்பும் ஊராள்சியும் செக்கும் தறியும் கூலமும் தரமும் கத்திக் காணமும் மற்றும் பொதுவினால் உள்ள தெல்லாம் இப்பங்கு இருபத்தைந்தின் வழியாலே பங்கிட்டுண் பார்களாகவும்"*

(முதலாம் பரமேச்சுரவர்மன்-கூரம் செப்பேடு)

*"பிரமதேயம் கொட்டாரக்குடிச் சபையார்"*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**பிரமமாராயன் :** (அ) பிற்காலப் பல்லவர் சோழ பாண்டியர் ஆட்சியில் அமைச்சராயிருந்த பிராமணர் பெற்ற விருதுப் பெயர். சேனைத்தலைவர்களாக இருந்த பிராமணருக்கும் இவ்விருது அளிக்கப்பெற்றுள்ளது. பிர்மமாராசர்-பார்க்க.

**பிரமாண இசைவுதிட்டு :** (வ) பிரமாண இசைவுத் தீட்டு. விலை உறுதி செய்த உடன்படிக்கைச் சீட்டு (Agreement). விற்பவர் விலையை ஒப்புக் கொண்டதற்குரிய சான்றாக இருவரும் எழுதிக் கொள்ளும் உடன்படிக்கை உறுதிச் சீட்டு.

*"இப்பங்கு நாலுக்கும் இக்காசு நாலாயிரமும் விலையாவதாகவும். இதுக்கு இவர் வேணுமென்றபோதே, பிரமாணம் பண்ணிக்குடுக்கக் கடவோமாகவும். குடுத்திலோமாகில் இந்த பிரமாண இசைவுத்தீட்டே பிரமாணமாவதாகவும்."*

(தெ. கல். தொ. 8, கல். 340)

**பிரமாணம் :** (மொ) விலைமதிப்பீட்டு உறுதி. உறுதிச்சீட்டு, ஆதரவுச் சீட்டு.

*"இவ்வூர்ப்பக்கம் கொண்ட நிலன்-பரவை நங்கை நல்லூர் பிரமாணப்படி விலைகொண்டு"*

(தெ. கல். தொ. 4, கல். 223)

**பிரமாணம் பண்ணிக் குடுத்தோம் :** (வ) உறுதிப்பாடு செய்து கொடுத்தோம்.

*"இப்பிரமாணத்தில் பேசிந கடமை அல்லது ஏற்றம் சொல்லோம் திருவாணை அவநிமுழுதுடையாராணை இப்பரிசு இசைந்து இப்பிராமணம் பண்ணிக் குடுத்தோம்"*

(தெ. கல். தொ. 7, கல். 776)

**(ப்)பிரமாதல் பட்டமை :** (வ) கவனக்குறைவுச் செயலால் கொல்லப் பட்டமை, கைப்பழையால் கொலைசெய்யப்படுதல் - ப்ரமாதப் படுதல் என்று கூறப்பட்டுள்ளது.

*"என் சிற்றப்பன் உபகாரி மல்லன் பருக்கலுடையாள் பிரிதி வெண்காடந் கையிலேய் பிரமாதல் பட்டமையில் இவனைச் சார்த்தி வைத்த விளக்கு அரை"*

(தெ. கல். தொ. 7, கல். 877)

ப்ரமாதம், 'கைப்பிழைபாடு' - பார்க்க.

(ப்ரமாதம் - கொலைசெய்யப்படுதல்)

**பிராணாந்திகம் :** (வ) ஆயுள் உள்ள வரையில் அனுபவிப்பது.

**பிராப்தி :** (வ) பேறு. பிராத்தி. இயல்பாகப் பெறும் உரிமைகள்.

**பிராமணி :** (சமு) பிராமணன் மனைவி.

*"தண்டியங்கிழார் பாண்டிய கிரமவித்தர் பிராமணி தேவச்சாணி"*

(தெ. கல். தொ. 12, கல். 68)

**பிரீதிமாணிக்கம் :** (சம) எண்ணெய் அளக்கும் முகத்தளவைக் கருவி பல்லவர் ஆட்சியில் தொண்டை மண்டலத்திலுள்ள திருவாலங்காடு திருக்கோயிலில் இருந்தது.

*"பிரிதி மாணிக்கத்தால் நித்தமுட்டாமல் அளக்கக் கடவ எண்ணை"*

(கல்வெட்டு அறிக்கை எண் - 461 / 1905)

**பிரீதிகைப்பிரமாணம் :** (வ) விருப்பமுடன் செய்யும் உறுதிச்சீட்டு.

**பிருங்கீசர் :** (சம) பிருங்கமா முனிவர், (பிருங்கம்-வண்டு) முதல் இராசராசன் காலத்தில் இராசராசேச்சரத்தில் சிறு தனத்தார் செய்தமைத்த திருமேனிகளுள் ஒன்று. செடமேல் மூன்று கைகளும் மூன்றுபாதங்களும் உள்ள முனிவராக இச்சிலை செய் தமைக்கப்பட்டுள்ளது.

*"செடி ஒருவிரல் உசரத்தும், மூன்று ஸ்ரீ பாதமும், மூன்று ஸ்ரீ ஹஸ்தமும் உடையாராகக் கனமாக எழுந்தருளுவித்த பிருங்கீசர் திருமேனி ஒன்று"*

(தெ. கல். தொ. 2:2, கல். 47)

**பிரும்மபுரி :** (சமு) பிராமணர் சேர்ந்து வாழும் ஊர். பார்ப்பன்சேரி.

பிழைக்கப் பேசி : (தொ) தவறாகப் பேசி, குற்றமுண்டாகப் பேசி.

*"நிலம் ஐ வேலிக்கும் முன்பு எல்லை பிழைக்கப் பேசி வரியி லிட்டமையில்"*

(தெ. கல். தொ. 14, கல். 161)

பிழையா நாழி : (பெ) அளவில் குறையாத நாழி (முகத்தலளவு)

*"நாலுழக்கும் பிழைய நாழி"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 78, விசயதுங்கவர்ம பல்லவன்)

இக்கல்வெட்டுச் செய்தியால் பல்லவர் காலத்தில் "4—உழக்கு கொண்டது 1- நாழி" என்ற முகத்தலளவை வழக்கிலிருந்தமை புலனாகின்றது.

பிழையா நாழிக்கீழ் முழையால் : (வா) அளவில் குறையாத நாழி யளவுக்குரிய அளவையின் அடியிலுள்ள துளைவழியால்.

*"பல்லவர்கால முகத்தலவைகளுள் எண்ணெய் நெய் போன்ற பொருள்களை அளக்கும் கருவிகளின் (படிகளின்) கீழ்ப்பகுதியில் துளையிடப்பட்டிருக்குமென்பதும், அதனை விரலால் அடைத்த நிலையில் நிறைச்சலளவிட்டு, அத்துளை வழியே சிந்தாமல் சிதராமல் ஒழுகவிட்டுக் கொடுக்கும் பாங்குளது என்பதும் அறியப் பெறுகின்றது."*

(தெ. கல். தொ. 17, பகு. 1, கல். 78)

பிள்ளையார் : (அ) அரசுக்குரிய முதல் மகன், 'பிள்ளையார்' என்று அழைக்கப்பெறுதல் சோழர் கால மரபு.

*"மதுரை கொண்ட கோப்பரகேசரி வர்மர்க்கு யாண்டு உ௬-வது பிள்ளையார் பிராந்தகன் உத்தமசீலி வைத்த பகல் விளக்கு"*

(தெ. கல். தொ. 5, கல். 575)

பிள்ளை வரி : (அ) குமரக்காணம்; அரசகுமாரர்கள் சிற்றரசர் அரச மரபினராய அதிகாரிகள் ஆகியோருக்காகப் பெறப்படும் வரி. மேலைச்சாளுக்கியர் சாசனங்களில் "குமாரவிருத்தி" என்ற பெயரால் குறிக்கப்பெறுவதும் இதுவேயாகும்.

புக்க : (வ) புகுந்த, வாழ்க்கைத்துணைவியாகப் புகுந்த, மனை புகுந்த வாழ்க்கை.

*"திருவேகம்பமுடையானுக்குப் புக்க உமையாழ்வியும்"*

(தெ. கல். தொ. 5, கல். 989)

**புக்கசோழிங்க நாச்சியார்** : (சமு) மனைவாழ்க்கைப் புகுந்த சோழிங்க நாச்சியார்.

*"பஞ்சநதிவாணராந நீலகங்கரயற்கு புக்க சோழிங்க நாச்சியார்"*

(தெ. கல். தொ. 5, கல். 474)

**புகவு** : (வ) சேர்க்கை, புகுத்தல், ஒருவர்க்கு ஓரிடமளித்துச் சேர்த்தல்.

*"ஐவர் சட்டரைக் கொண்டு பஞ்சக்கஞ் செய்தான் புகவு பெறுவான்"*

(புகவு பெறுவான்-புகுத்தப்பெறுவான், கல்விச் சாலையில் சேர்க்கப் பெறுவான்)

(பார்த்திபசேகரபுரச் செப்பேடுகள், கி.பி. 866)

**புஞ்சமுத்து** : (பொ) திரட்சியாக அமைந்த முத்து.

*"ஸ்ரீராஜராஜதேவர் குடுத்த முத்திற்கோத்த முத்து. தைப்பு முத்தும் வட்டமும் அனுவட்டமும்-புஞ்சமுத்தும் ஆக முத்து"*

(தெ. கல். தொ. 2, கல். 3)

**புட்ட கவரி** : (அ) சீவல விற்போர் செலுத்த வேண்டிய வரி.

**புண்ணிய கணப் பெருமக்கள்** : (அ) (1) அறக்கட்டளைகளையும் அவற்றின் மூலதனமாகும் பொன், பொருள் நிலங்களையும் நிர்வகிக்கும் கிராமசபையார்.

(2) அறச்செயல்களையும் அவற்றிற்கமைந்த மூலப்பொருள்களையும், நிலங்களையும் காத்து நிர்வாகம் செய்யும் ஊர்ச்சபையின் வாரியப் பிரிவினராவர். இவர்கள் 'தர்மவாரியப் பெருமக்கள்' என்றும் பெயர் பெறுவர்.

**புண்ணியாஹ தக்ஷிடிணை** : (சம) புண்ணியாஹ வாசனம். நாளையும் வேளையும் தூய்மையாக்கும் வேதமந்திரங்களை ஓதும் அந்தணர்கட்குக் கொடுக்கும் மரியாதைப் பொருள். காணிக்கை.

**புணைப்பட்டோம்** : (வ) பொறுப்புடையவரானோம். ஆள் ஒப்புப் பட்டடோம்.

*"சாத்தனைக்கொண்டு திருநந்தாவிளக்கொன்றினுக்கு - நெய் யட்டுவிப்பதாகவும், இவன் சாவினும் போகினும்-இவ்வனைவோ முன்பு நின்றோமே-நெய்யட்டுவதாக புணைபட்டடோம்"*

(தெ. கல். தொ. 3:1, கல். 18)

**புத்தக்கம் :** (பொ) புதிய அக்கம். ஒரு பொற்காசுக்கு உள்ளடங்கிய பின்ன மதிப்பீட்டு நாணயம். இது முதல் பராந்தகன் ஆட்சிக்காலத்தில், தொண்டை மண்டலத்தில் 7½ புத்தக்கம் கொண்டது. ஒரு பொற்காசென்னும் மதிப்பீட்டில் வழங்கியுளது.

*"ஒரு ஈழக்காசுக்குப் புத்தகம் ஏழரையாக ஈழக்காசு ஆறு"*

(ஈழக்காசு - பொற்காசு)

(முதல் பராந்தகன், கி. பி. 939, தெ. கல். தொ. 3:3, கல். 106)

'அக்கம்'-பார்க்க.

**புத்தன் :** (சமு) புத்தமதத்தைச் சார்ந்தவன்.

*"மன்றாடி அசிலஞ்சி புத்தன் மேலடுத்த ஆடு-32."*

(தெ. கல். தொ. 19, கல். 132)

**புதவமும்கதவமும் :** (வ) கோட்டை வாயில் பெருங்கதவும் அதனிடத்தே அமைக்கப் பெறும் சிறு வாயிலாகிய திட்டி வாயிலும், இத்திட்டிவாயில் வெண்கலமணிகள் பொருத்தப்பட்டு கோட்டைகளில் அமைக்கப்பெறும்.

*"புதவமும் கதவமும் புடைத்தனன் ஓர் நாள்"* - சிலப்பதிகாரம்.

*"மொய்த்தெளிர் புனை மணிப்புதவமும் கனமணிக் கதவமும்"*

(முதல் இராசேந்திரன், கி.பி 1024, தெ. கல். தொ. 2, கல். 67)

**புதுக்குப்புறம் :** (சம) பழுது பார்ப்பதற்கு வைக்கப்பெறும் நிதி. *"ஸ்ரீராஜராஜன் கிணற்றுக்கும் தொட்டிக்கும் சேதத்துக்கும் ஆட்டாண்டு தோறும் புதுக்குப் புறமாக வைச்ச நெல்லு"*

(தெ. கல். தொ. 3 1, கல். 4)

**புதுச்சலாகை அச்சு :** (அ) பொன் நாணயம். வீரராசேந்திரன் ஆட்சியில் இந்நாணயம் புதிய அடையாளம் பெற்றதாக வெளியிடப் பெற்றதால் 'புதுச் சலாகை அச்சு' என்று பெயர் பெற்றது. இந்நாணயத்தின் ஒரு புறம் ஸ்ரீஇயக்கி என்னும் பெண் தெய்வம் அமர்ந்தபாங்கில் உள்ளதைப் போன்றும் மறுபுறம் நாணய மதிப்பீட்டுக் குறிகள்பொறிக்கப்பட்டதாகவும் இருந்ததால், ஸ்ரீயியக்கி புதுச் சலாகைஎன்றும் பெயர் பெற்றுளது. சலாகை (நாட்டில்) வழக்கிலுள்ள நாணயம்]

*''இந்நாயனார் ஸ்ரீ பண்டாரத்திலே ஒடுக்கின சீயியக்கி புதுச் சலாகை அச்சு மூன்றும்''*

(தெ. கல். தொ. 5, கல். 237)

**புரவுவரித்திணைக்கள நாயகர் :** (அ) அரசிறை நீங்கிய ஊர்களினின்றும் வருவதற்குரிய பிறவரிகளுக்குக் கணக்கு வைத்திருப்பவர்கட்குத் தலைவர்.

**புரவுவரியார் :** (அ) ஊர்கட்குரிய நிலவரி பற்றிய கணக்குகளைத் தணிக்கை செய்யும் அதிகாரி. இவன் 'புரவுவரிக்கண்காணி' எனவும் கூறப்பெறுவான். இக்கால ரெவின்யூ அதிகாரிகளைப் போன்ற தகுதியுடையவன்.

*''இவ்வாண்டு முதல் தேவதான இறையிலியாக இட்டு நம்புரவு வரியார் எழுதிட்ட உள்வரியும் நம் ஓலையும் தரச்சொன்னோம்''*

(தெ. கல். தொ. 5, கல். 440)

**புரவுவரியார் எழுதிட்ட உள்வரிப்படி :** (அ) புரவுவரியார் என்னும் நில வருவாய்க் கணக்கதிகாரிகள், முன்னர் உள்ள ஒரு பகுதி நிலக் கணக்கில் மேலும் சேர்த்துப் பதித்த உள்வரியின் குறிப்புப்படி.

*''தேவதானம் நீங்கினபடிக்கு புரவரியார் எழுத்திட்ட உள் வரிப்படி''*

(தெ. கல். தொ. 7, கல். 816)

**புரவு :** (அ) இறையெனும் காணிக்கடன் நீங்கிய ஊர்களில் அரசு பெறும் பிறவரிகள்.

புரவு - அரசிறை. புறநானூறு—1/75—ஆம் பாடல்—உரை.

*''புரவுவரி ஆலங்குடையான் கோதண்டன் சேனன்''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**புரவுவரி சீகரணம் :** (அ) ஊரிற்குரிய நன்செய் புன்செய் முதலிய நிலவரி கணக்கின் மேல்நிலை நிர்வாகத்துறைக்குழு. இதன் தலைவர் ''சீரகண நாயகம'' என்று பெயர் பெறுவர்,

*''இவை புரவு சீகரணமுடையான் பந்தணை நல்லூருடையான் எழுத்து''*

(தெ. கல். தொ. 5, கல். 662)

**புல்லிகைக் கண்ட நாண் :** (கலை) மாணிக்கம், மரகதம், இரத்தினம், நீலம் ஆகிய மணிகள் வைத்துப் பொருத்தியதாகவும்

பட்டையாகவும் சரடுகளாகவும் கழுத்திற்குப் பொருந்தி அணைந்து நிற்கும் அமைப்பினதாகவும் செய்யப்பெறும் கழுத் தட்டிகை.

*"புல்லிகைக்கண்டநாண் ஒன்றில் நாண்மூன்றில் கட்டின வயிரம் எழுபத்தாறும், மாணிக்கம் இருபத்து நாலும் மரகதம் பதினாறும் உள்பட நிறை 120 கழஞ்சு"*

(தெ. கல். தொ. 2:2, கல். 93)

**புல்வரி :** (அ) புறம்போக்கில் வளர்ந்த புற்களைப் பயன்படுத்து வாரிடம் பெறும்வரி.

**புலம் :** (வே) நெல்விளையும் நிலன்.

*"நினைத்த நெல்வரும் பனிச்செய்புலமும்"*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 93)

**புழுதிப்பாடு :** (வே) பயனற்ற நிலம். நிலங்களை அளக்கும் போது புழுதிப்பாடாகும் பூமியாக உள்ள பகுதியை நீக்கியே அளந் துள்ளனர்.

*"இத்துரவின் வடகரை புழுதிப்பாடு முக்கோல் நீக்கி"*

(தெ. கல். தொ. 8, கல். 105)

**புள்ளடிக்கல் :** (அ) பறவையின் அடிச்சுவடு போன்றகுறி பொறிக்கப் பட்டு நாட்டப்பெறும் எல்லைக்கல்.

*"வடகீழ் மூலையினின்றும் செவ்வேய் வடக்கு நோக்கி நாற் கோல் திருவிழா வீதிவிட்டு நாட்டின புள்ளடிக் கல்லி நின்றும்"*

(தெ. கல். தொ. 5, கல். 518)

**புள்ளி குத்திவிக்கவும் :** (அ) குற்றப்பதிவு செய்விக்கவும்.

*"மன்றுபாடு சென்று நன்று மறுக்கவும் புள்ளி குத்திவிக்கவும் பெறாதோமாகவும்"*

(தெ. கல். தொ. 8, கல். 1)

**புள்ளிகுத்துவிக்கப் பெறாதோமானோம் :** (வ) ஊர்மக்கள் பெயர்க் கணக்கில் குற்றப்பதிவில் பதிப்பிக்கப் பெறாதநிலை பெற்றோ மாவோம். தண்டத்தொகை கட்டியதனை நீதிமன்றத்தார் குற்றக் கணக்கில் பதியாமல், பெற்றுக்கொண்டு, தொடர்ந்து பணி செய்யச் செய்தல்.

*'தர்மாசனத்து நிசதி நாலேகால் காணந்தண்டமிட, ஒட்டிக் கொடுத்தோம். இட்ட காணஞ்சென்று நின்று புள்ளிகுத்து விக்கப் பெறாதோமானோம்''*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 91)

**புள்ளிகுத்துவிக்கப்பெறுதல் :** (வ) ஊர் - குற்றப்பதிவேட்டில் பெயர் பதிவிக்கப்பெறுதல். கிராம சம்வத்சர வாரியத்தார் வைத்திருக்கும் கிராம மக்களின் நடத்தை பற்றிய குறிப்பேட்டில், குற்றவாளியென பெயர் முன் புள்ளியிட்டு, குற்றவிளக்கமும் பதிவுபெறுதல். கிராமசபையார் ஆண்டு தோறும் நிகழ்த்தும் குடவோலைத் தேர்தலுக்கு இவ்வாறு புள்ளிகுத்துவிக்கப் பெற்றார் தகுதியற்றவராவரென்பது குடவோலை விதிகளுள் ஒன்று.

*''இம்மன்றுபாடு சென்று நின்று மறுக்கவும் புள்ளிகுத்துவிக்கவும் பெறாதோமாகவும்''*

(தெ. கல். தொ. 8, கல். 5)

*''இதிற்றிறம்பில் உண்டிகையும் பட்டிகையும் கூட்டாதேய் தர்மா ஸநத்து முன்பு நின்றும் புள்ளி குத்து விக்கப் பெறாதோமானோம்''*

(கம்பவர்மன், கி.பி. 9. நூற். தொல்பொருள் துறை ஆண்டு அறிக்கை எண். 207 / 1901)

**புள்ளிச்சோறு :** (வ) இன்ன அளவென்று முன்னமே திட்டப் படுத்தப்பட்ட சோறு (அறச்சோறு).

**புள்ளிநிலம் :** (வே) கணக்கிடப்பட்ட அளவுநிலம். காட்சியாற் கணக்கிடப்பட்ட நிலம்.

*''பெருநான் கெல்லையிலும் உள்ப்பட்ட நிலம் மிகுதிக்குறை வுள்ளடங்க வாய்க்கூற்று புள்ளி நிலம்-நான்குமாவும்''*

(தெ. கல் தொ. 6, கல். 31)

**புள்ளிபார்த்துக் கொள்ளல் :** (வே) விளைந்துள்ள நெல்லின் கூடிய மகசூல் தரத்தினைக் கண்ணோட்டத்தால் பார்த்து அளவிட்டு, அதற்கேற்ப வரிவிதித்துக் கொள்ளுதல்.

*''மாத்தால் அரைக்கால் பழங்காசும் மாத்தால் முக்கல நெல்லும் புள்ளி பார்த்துக் கொள்வதாவும்''*

(புதுக். கல். 134)

**புறக்குடையில் :** (மொ) (புறக்கடையில்) பின்புறத்தில்.

"*அகரத்து பிராமணர் நாயகர் திருத்தேர் எழுந்தருளும்போது திருப்புறக்குடையிலே அதயயனம் பண்ணி ஸேஷித்தும்*"

(தெ. கல். தொ. 8, கல். 43)

**புறணிநாடுகள் :** (அ) ஒரு நாட்டின் எல்லையோடு தொடர்பு பெறும் பிற நாடுகள்.

"சோணாட்டும் *சோணாட்டுப்படும் புறணி நாடுகளிலும்* தொண்டை நாட்டிலும்"

(தெ. கல். தொ. 3:1, கல். 9)

**புறத்தாயநாடு :** (அ) இது ராஜராஜப் பாண்டிநாட்டு, உத்தம சோழ வளநாட்டில் அடங்கிய நாடாகும். இக்காலம் கன்னியா குமரியும் அதைச் சேர்ந்த பகுதிகளுமாகும். இந்நாடு கங்கைக்கு ஒப்பான குமரித்துறையினை உடையதால் "வாரண வாசி நன்னாடு" என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

**புறம் :** (சம) ஒரு அறச்செயலுக்காக இறையிலியாக விடப்பெறும் நிலம் புறம் என்று குறிக்கப்பெறும்.

**புறப்படி :** (அ) கோட்டை சூழ்ந்த நகரத்தின்புறத்தே சார்ந்துள்ள ஊர்.

"*தஞ்சாவூர் கூற்றத்து தஞ்சாவூர் புறம்படி கருந்திட்டைக்குடி*"

(தெ. கல். தொ. 5, கல். 1408)

**புறவாரி :** (வே) சீர்செய்யப்பெற்ற நிலத்திற்குப் புறமாகத் தொடரும் தாழ்விடம்.

"*புறவாரிகளில் கிணறுகளும் கன்று மாமரங்களும் குளங்களும்*"

(புதுக். கல். 156)

**புறவுடல் :** (அ) ஒருவரின் உரிமை நிலத்தில், தன் ஆளுகை வழி விடப் பெறும் தர்மப்பகுதிகட்குரிய நிலங்களுக்காகத் தாமே செலுத்தும் வரி. இதனைப் புறவரி என்றும் கூறுவர்.

**புன்பயிர்க்கடமை :** (அ) ஊர்ப்பொதுவான புன்செய் நிலத்தில் பயிர் செய்வதற்குரியதாக அரசு பெறும் வரி.

**புன்புலர், நன்புலம் :** (வே) மேட்டுப்பாங்காகும் - புன்செய்நிலம், நீர்ப்பாசனம் அமைந்த நன்செய்நிலம்.

*"இவனுக்கு ஊற்று வடக்கே தாழ்வு குளங்கட்டிக்கொண்டு, புன்புல நன்புலமாக்கிக் கொள்வானாகவும்"*

(தெ. கல். தொ. 4, கல். 413)

**புன்னீர் :** (வே) கழிவு நீர். உழைப்பால் கொள்ளும் நீர்.

**புஷ்பகப்பிடி :** (பொ) புஷ்பகம் என்ற உயர் சாதிப் பெண்யானை. அரச மகளிர் ஏறிச்செல்வது. வீரராசேந்திரசோழன் சாளுக்கியரை வென்று கைப்பற்றிய யானைகளுள் ஒன்று.

*"புட்பகப் பிடியும் பொருகளிற் றீட்டமும்"*

(வீரராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**புச்சாதிஸிகாந்தம் :** (கலை) வால் நுனிமுதல் தலை முடிவாக- புலி).

*"பர்வதத்திற்கிடந்த பூச்சாதிஸிகாந்தம் ஐய்விரலலை நீளத்துக் கனமாகச் செய்த புலி ஒன்று"*

(தெ. கல். தொ. 2:2, கல். 50)

**புச்சாதி பணாந்தம் :** (கலை) வால் நுனி முதல் படம் ஈறாக (நாகம்).

*"புச்சாதி பணாந்தம் அறுவிரல் உசரத்துக் கனமாகச் செய்த பாம்பு ஒன்று"*

(தெ. கல். தொ. 2:2, கல். 50)

**பூசல்லோடி - முட்டி :** (அ) பூசலோடி முட்டி. போர்நடந்த இடத்திற்குத் தானொருவனாகவே ஓடி எதிர்த்து நின்று.

*"சாகாடச்சிற்றன் மீக்கொன்றை நாட்டுப் புளியூர் எருமை கொணர்ந்த ஞான்று பூசல் லோடி மேல்வேணாட்டு மணிக்கல வடவூரில் முட்டி, எருமைத்தொறுமீட்டு மாண்டான்"*

(தொறு—நிரை, மந்தை)

(செங்கம் நடுகற்கள் - கம்பவர்ம பல்லவன், கி.பி. 9 -ம் நூற்).

**பூசலில் படல் :** (வ) கலகத்தில் இறத்தல். (மற்போர்ப் பயிற்சிக் கலகத்தில் - இறத்தல்)

*"வேட்டவலத்திருக்கும் பூதுரையாசிரியன் பள்ளிமல்லி பூசலில் பட்டமையில் - மேற்படியானைச் சாத்தி வைத்த திருநுந்தா விளக்கு ஒன்று"*

(தெ. கல். தொ. 7, கல். 887)

**பூசலுட்பட்ட கல் :** (வ) போரில் இறந்துபட்டதற்கு ஊரார் நாட்டிய நடுகல்

''*பகைவரோடு உண்டான போரில் வீரமுடன் போரிட்டு இறந்த வீரனுக்கு ஊரார் அமைத்த நடுகல்*''

''*பெரும்பாண்ணரசர் மக்கள், சாத்த பராவனார் சேவகன் வண்ணலூர் பாவன், பூசலுட்பட்ட கல்*''

(செங்கம் நடுகற்கள்-பக். 3)

**பூசுரர் நாடு :** (சமு) பிராமணர்களாகிய ஆரியர்கள் வாழும் கோசல நாடு. இந்நாட்டினை முதல் இராசேந்திரன் வென்று கைப் பற்றியுள்ளான்.

''*பூசுரர் சேருநற் கோசல நாடும்*''

(முதல் இராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**பூட்டை கிணறு :** (வே) கரையில் சகடைக்கயிறு பூட்டி மாடுகள் இழுக்க நீர் இரைக்கும் கிணறு. (பூட்டை-சகடைக்கால்)

''*பொன்னானடி முடங்கு குழி-398. இதற்கு சமைந்த பூட்டை கிணறு*''

(மூன்றாம் குலோத்துங்கன், தெ. கல். தொ. 4, கல். 645)

**பூப்பொலி :** (சம) முதலீடான பொற்காசுக்கு நாளும் மணப் பூவினை மாலையாகக் கட்டிப்பெறும் வட்டி.

''*பள்ளித்த மத்துக்கு முதலாக வைத்த நிறை குறையாகப் பழங் காசு பதினைந்து. இக்காசினாற் பூப்பொலி காசின் வாய் இரு விரல் அகலத்து இரண்டிரண்டு நறும் பூ இட்டுத் தொடுத்தன இரு முழ நீளத்தன ஒரோவடமாக நியதி பதினைந்து வடம் இடுவதாக*''

**பூமிசம்பத்து :** (வ) நிலபுல உடைமை. சொத்துரிமையாக வழி வழி உரிமை பெறும் நிலபுலன்களாகிய பொருள்.

**பூமி நிலவிலையாவணம் :** (வ) நில விற்பனைச் சாசனம். நிலத்தை விற்பனை செய்தற்குரிய பத்திரம்.

''*ஈசானமங்கலத்து நண்பகலாவணத்து இயன்ற பூமி விலை யாவணம்*''

(தெ. கல். தொ. 8, கல். 604)

**பூமிபுத்திரர் :** (சமு) வேளாண் மக்கள். சித்திரமேழிப்பெரிய நாட்டவர் என்னும் கிராமசபையார்.

**பூர்வகள்** : (சமு) பழமையான குடிமக்கள் முன்னோர்கள்.

*"நம்மூர் உடையார் திருப்புலிவனமுடைய நாயனார்க்கு திருநுந்தாவிளக்கு எரிப்பதாக எங்கள் பூர்வகள் மலர் பக்கலும் பொன்கொண்டு எரிக்கக்கடவார்களாக"*

(தெ. கல். தொ. 12, கல். 96)

**பூர்விகள்** : (சமு) ஊரில் பாரம்பரியமாக இருந்து வரும் குடிமக்கள்.

**பெண்டாட்டி** : (வ) பெண்ணைப்போல் பணிபுரிபவன். சமையல்காரன். இப்பெயரால் முதல் இராசராசன் காலத்தில் படைப்பகுதி ஒவ்வொன்றிலும் அமைந்த வீரர்கட்குரிய உணவினை ஆக்கித் தருவதற்கமைந்த ஆடவன் 'பெண்டாட்டி' என்றே குறிக்கப்பெறுதல் குறிப்பிடத்தக்கதாகும். அரசமாதேவியாருக்குரிய சமையல்காரனும் அவ்வாறே குறிக்கப்பெற்றுள்ளான்.

*"நம்பிராட்டியார் அரிந்தவன் மகாதேவியார் பெண்டாட்டி பூவன்னழகு வைத்த திருநொந்தாவிளக்கு"*

(தெ. கல். தொ. 7, கல். 801)

2. பெண்களைப்போல் சமையல் செய்பவன். குறிப்பிட்ட அளவில் கோட்டைக்காவலுக்கமைந்த படைவீரர்கட்கு நாளும் உணவினைச் சமைத்தளிக்கும் தொழிலுடைமையினால் தொழில் நிலை பற்றி ஆண்மகன் பெண்டாட்டி என்று பெயர் குறிக்கப்பெற்றுளான்.

*"உய்யக் கொண்டான் தெரிந்த திரு மஞ்சனத்தார் வேளத்து பெண்டாட்டி வரகுணன் எழுவத்தூர் இவன்தானும் இவன் அடைகுடி. இவன் உடன்பிறந்த கவடி வீச்சாதிரனும்"*

(தஞ்சைப்பெரியகோயில் கல்வெட்டு) (தெ. கல். தொ. 2:2, கல். 64, 95) (வேளம்—நிலைப்படை)

*"தஞ்சாவூர் மடைப்பள்ளிப் பெண்டாட்டி பலதேவன்"*

(தெ. கல். தொ. 19, கல். 98)

(3) காமக்கிழத்தி.

*"பெண்டாட்டி சேறை சத்தியபாவை பக்கல் நாங்கள் விலை கொண்டு விற்றுக்குடுத்த நிலம்"*

(தெ. கல். தொ. 5, கல். 465)

*''தஞ்சாவூர் பெரிய பெருமான் பெண்டாட்டி வேட்டுவன் ஆதித்த படாரியார்''*

(தெ. கல். தொ. 8, கல். 612)

**பெண்டாட்டியர் பொதுவன் :** (அ) அந்தப்புரத்தில் பணி செய்யும் உணவு அட்டும் மகளிரின் பொதுஉறவினன். உதவிப்பணியாளன்.

*''தங்களாச்சியார் உடைய பிராட்டியார் பரிவாரத்து பெண்டாட்டியர் பொதுவன் திற்றபடி''*

(தெ. கல். தொ. 5, கல். 720)

**பெண்டுகள் :** (அ) அரசமகளிரல்லாத காதற்கிழத்தியர்.

*''நாங்குடுத்தனவும் அக்கன் குடுத்தனவும் பெண்டுகள் குடுத்தனவும்''*

(தெ. கல். தொ. 2, கல். 1)

*''ஒண்டிறல் யானையும் பெண்டிர் பண்டாரமும்''*

—அகப்படுத்தி (முதல் இராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

**பெண்டு பண்டாரம் ஒட்டகத்தோடு அகப்படப்பிடித்து:** (அ) சாளுக்கிய ஆகவமல்லனின் பட்டக்கிழத்தியர் அல்லாத மகளிர், பெருநிதியுள்ள கருவூலம் ஒட்டகப்படை ஆகியவற்றை முழுமையாகக் கைப்பற்றி. (இராசேந்திரன் 2, மெய்க்கீர்த்தி)

**பெண்பள்ளி :** (சம) சமணப்பெண் துறவியர் வாழும் இடம். (தவச்சாலை)

*''திருப்பான் மலை அரிஷ்டநேமி பிடாரர் மாணாக்கியார். பட்டினிக்குரத்தி அடிகளேன் கண்ட கிணறு. இது இவ்வூர் இருபத்து நால்வரை இரக்ஷிப்பதாகவும், இம்மனையும் இக்கிணறும் பெண்பள்ளியாவதாகவும்''*

(தெ கல். தொ. 7, கல். 56)

**பெரியங்காடி :** (வா) பெரிய அங்காடி. பெரிய கடைவீதி.

*''தஞ்சாவூர் உள்ளாலைப் பெரியங்காடி வியாபாரி விழ்யூருடையான்''*

(தெ. கல். தொ. 17. கல்.470)

**பெரியபெருமாள் :** (வ) முதல் இராசராசனின் நினைவாக உலோகத்தால் செய்தமைக்கப்பட்ட படிமம் (சிலை). அதிகாரிகளால் சிறப்புடன் குறிப்பிடப்பட்ட பெயரே பெரிய பெருமாள் என்பதாகும்.

*''பொய்கைநாடு கிழவன் : இவனேதான் எழுந்தருளுவித்த பெரிய பெருமாளுக்குக் குடுத்த தராநிலை விளக்கு ஒன்று''*

(தெ. கல். தொ. 2:2, கல். 41)

பெருங்காவிதி : (அ) காவிதிப்பட்டம் பெற்றாருள் தலைவன்.

*''திருவெள்ளறைப் பெருங்காவிதியும், வானவன் மாதேவிப் பெருங்காவிதியும''*

(தெ. கல். தொ. 19, கல். 62)

பெருஞ்செக்கு : (வா) வாணியர், எள் ஆமணக்கு போன்ற வித்துக்களை இட்டு மசித்து எண்ணெய் எடுக்கும் மரஇயந்திரம். இது பலவகைப் படுமென்பதனைப் பெருஞ்செக்கு என்பது உணர்த்துகின்றது.

*''பெருஞ்செக்கிடப் பெறுவதாகவும்''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

பெருங்குறிசபை : (அ) சதுர்வேதி மங்கலத்திற்கமைந்த ஊர் நிர்வாகசபை. இதனை மகாசபை என்றும் கூறுவர். சில கிராமங்கள் உள்ளடங்கியதாகப் பெரும்பான்மையான சதுர்வேதிமங்கலங்கள் அமைந்திருப்பதால் அவற்றிற்கமைந்த ஊர் நிர்வாக சபைகளும் பிறசபைகளைக் காட்டிலும் வாரியங்களும் உறுப்பினர்களும் கூடுதலாக அமைந்து செயல்படுவனவாக உருவாக்கப்பெறுதலால் பெருங்குறிசபைகள் என்று பெயர் பெற்றன.

*''ஸ்ரீகண்ட சதுர்வேதிமங்கலத்து பெருங்குறி சபையோம்''*

(தெ. கல். தொ. 4, கல். 549)

*''காமரசவல்லிச் சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறி பெருமக்களோம்''*

(தெ. கல். தொ. 19, கல். 231)

பெருந்தரம் : (அ) முதல் இராசராசன் ஆட்சியில், அரசியல் சுற்றமாக அமைந்த அதிகாரிகள் பெருந்தரம் என்றும், சிறுதரம் என்றும் பிரிக்கப்பட்டிருந்தனர். பெருந்தரத்தார், அமைச்சர் சேனாபதி போன்ற உயர்ந்த பதவிகளைக் கொண்டவர்களாகவும் இருந்தனர்.

*"ஸ்ரீராஜராஜதேவர் பெருந்தரம், உய்யக் கொண்டார் வள நாட்டு வெண்ணாட்டு கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலத்து நாராக்கண் ஸ்ரீ கிருஷ்ணந் இராமனான ஸேநாபதி. மும்முடிச் சோழ பிர்ம்ஹமாராயன்"*
(அந்தணர்)

(தெ. கல். தொ. 2:2, கல். 39)

*"ஸ்ரீராஜராஜதேவர் பெருந்தரம் கிழான் வேளானாதித்தனான பிராந்தகப் பல்லவரையன்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 32)

**பெருந்தனத்து ஆனை ஆள் :** (அ) முதல் இராசராசன் காலத்தி லிருந்து அரசியல் பெருஞ்சுற்றமாகப் பெருந்தனம், சிறுதனம் என்ற அமைப்பில் நாட்டுப்பெருமக்கள் இடம் பெற்றுள்ளனர். பெருந்தனத்தார்க்கு யானை முதலிய விருதுகள் இருந்தமையே அவர்களின் யானையாட்கள் குறிப்பிடப்படுவதிலிருந்து அறிய லாகும்.

*"ஸ்ரீராஜேந்திரதேவர் பெருந்தனத்து ஆனையாள்களுக்கு அடைத்த காசில்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 54)

**பெருந்திருவமிர்து :** (சம) கடவுளுக்குப் பெரிய அளவில் படைக்கும் நிவேதனம். பாவாடைச்சோறு.

*"ஒருபோழ்து சிறுகாலை நாநாழி அரிசியால் பெருந்திருவமுது காட்டுவதாகும்"*

(தெ. கல். தொ. 8, கல். 10)

**பெருந்தேவதானம் :** (சம) மிகப்பெரிய அளவில் வருவாய் உடைய தாக ஓரூரினையோ, கூற்றத்தினையோ சிவன் கோயிலுக்குரிய இறையிலி நிவந்தமாகச் செய்யும் பேரறம்.

*"உம்பளநாட்டு பெருந்தேவதானம் திருமறைக்காடு"*

(தெ. கல். தொ. 19, கல். 120)

**பெருநகரத்தார் :** (சமு) பெரிய வணிகர், பெரிய நகரத்திலுள்ளார்.

**பெருநான்கெல்லை ;** (வ) பெரிய பரப்பாக அமைந்த நிலத்திற்கோ, கிராமத்திற்கோ நான்கு பக்கங்களையும் சார்ந்துள்ள எல்லைப் பகுதிகளை விளக்கமாகக் குறித்தல். இச்செயல் நாட்டாரும்

ஊராரும் அதிகாரிகளும் கூடி நிலத்தைஅளந்து எல்லைகளைக் கண்டு உறுதிசெய்யும் செயலாகும்.

*''மேல் வேம்பநாட்டு நாட்டாரும், நலபுரத்து ஊராரும், உட னின்று நிலம் அளந்து பிடிசூழ்ந்து கல்நாட்டி எல்லை தெரிச்ச பெருநான்கெல்லை''*

(சிவகாசிச் செப்பேடுகள்)

**பெரும்படி** : (வா) பெரியபடி—(முகத்தல் அளவை)

(1) திருநெல்வேலி திருக்கோயிலில் வழக்கிலிருந்த அளவை.

(தெ. கல். தொ. 5, கல். 434)

(2) கண்ணோட்டமாக அனுபவத்தினைக்கொண்டு கூறும் மதிப்பீடு.

*''இவ்விசைந்த பெருநான் கெல்லையிலு மகப்பட்ட நீர் நிலனும் புன்செயும்''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**பெரும்பள்ளி** : (சம) சமண ஆசிரியர்களாகிய துறவியர் வாழும் தலைமையான இடம். சமணப்பெருங்கோயில்.

*''வெண்குன்றக் கோட்டத்துப் பொன்னூர் நாட்டு ஸ்ரீ தண்ட புரத்து சித்த பெரும்பள்ளி இருக்கும் குரவனார்க்கு''*

(தெ. கல். தொ. 19, கல். 51)

**பெரும்பாடிகாவல்** : (அ) பல ஊர்கட்கமைந்த நஞ்சைபுஞ்சை போகங்களைக் காவல் செய்வதுடன் வரி இறைகளையும் சேர்த்துக் காவல் செய்வது பெரும்பாடி காவலாகும். பாடிகாவல் செய்யும் அதிகாரி ''பாடிகாவல்'' என்ற பெயரைப் பெறுவதுடன், போகங்களில் தனக்குரிய முறைமையாக நெல்லும் காசும் பெறுதல் அரசுவழி உரிமையாகும்,

*''இவ்வூர்களில் வந்த இப்பாடி காவலும் தறியிறை தட்டார் பாட்டம், கடைத்தெருவுகளும், எசக்குகளும், கமுகு நந்தவனங் களும் உட்பட்ட புன்சை உட்பட்ட பெரும்படி காவலும்''*

(குலோத்துங்கன் 3, கி.பி. 1190. தெ. கல். தொ. 8, கல். 319)

**பெரும்பாணரைசர்** : (மொ) பெரும் வாண அரசர். (செங்கம் நடு கற்கள், பக். 3)

**பெரும்பாணன் :** (சமு) தமிழகத்தில் யாழிசைக் கலைஞராய் விளங்கிய பாண் குடியின் ஒரு பிரிவினன் பெரும்பாணன். (பெரும்பாண்-பத்துப்பாட்டு) இக்குடியினர் பல்லவர் ஆட்சியில் நாட்டில் இருந்துள்ளமையைக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

*''பெரும்பாணர் சக்கடி அலரயர் மகனார் மாதேவனார்க்கு ஒட்டி விற்றுக்குடுத்த பரிசாவது''*

(கம்பவர்ம பல்லவன், கி.பி. 870)

(தெ. கல். தொ. 8, கல். 102)

**பெருமானடிகள் :** (அ) இறைவனையும், அரசரையும் அரசகுடும்பத்தில் பிறந்து அரசுபெறாது வாழும் பெரியோரையும், மக்கள் குறித்துக் கூறும் சிறப்பு மரியாதைப்பெயர்.

*''சோழ பெருமானடிகள்''*

சோழர் குடியில் தோன்றிய பெருமகனார்.

*''சோழ பெருமானடிகள் நியமத்து இராசமார்த்தாண்டபுரத்து நக்கன்''*

(தெ. கல். தொ. 5, கல். 543)

*''தஞ்சாவூர் பெருமானடிகள் சோழமாதேவியார்''*

முதல் இராசராசன் (தெ. கல். தொ. 4, கல். 536)

**பெருவரி :** (அ) இறைக்கும் சில்வரிக்கும் இடைப்பட்ட நிலையில் விதிக்கப் பெறும் வரிவகைகள் பெருவரிகளாகும். பஞ்சவாரம் பெருவரி வகையுளடங்கும்.

*''சித்தாயப் பஞ்சவாரம் உள்படச் சில்வரியும் பெருவரியும் எல்லாம் இறுக்க''*

(இராசாதிராசன், கி.பி. 1072)

(தெ. கல். தொ. 7, கல். 842)

*''நிலம் ஒன்பதுமா-செம்பாதியால் பெருவரி எப்பேர்ப்பட்டிதும் இறுக்கக்கடவார்களாக நின்ற செம்பாதியால் வந்த இறை எப்பேர்ப்பட்டதும் ஸபையொப்ப மெய் இறுக்கக் கடவோமாக''*

(தெ. கல். தொ. 5, கல். 633)

**பெருவழி :** (அ) பெரிய நெடுஞ்சாலை.

*''வட எல்லை விந்தனூர் பெருவழிக்குத் தெற்கு''*

(தென்காசி கல்வெட்டு)

**பெருவாயில் :** (சம) கோயிலின் முதல் வாயிலாகும் இராசகோபுர வாயில்.

*' செம்பொன்னம்பலஞ் சூழ் திருமாளிகையும் கோபுரபெருவாசல் கூட சாலைகளும்''*

(விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தி)

**பெருவெள்ளப் பெருஞ்சாலி :** (வே) ஆறுகளில் பெரு வெள்ளமாக நீர்வரும் ஆடிமாதத்தில் பயிரிடப்பெறும் கார் எனும் குறுவை போகம்.

(பெருஞ்சாலி - பெருங்குறுவை) (புதுக். கல். 274)

**பேடழித்தான்-பாவம் :** (வ) அலியைக் கொன்றவன் பெறும் பாவம்.

*''இத்தர்மத்தில் திறம்பினோம் பேடழித்தான் பாவம் படுவோமானோம்''*

(தெ. கல். தொ. 12, கல். 97)

**பேடு :** (மொ) மணலும் மலைப்பாங்குமாகக் கலந்த இருவியற்கை நிலவளம் பெற்ற ஊர். இதனைப் பேடு என்பர். இப்பெயர் சொற்றொடர் நிலையில் பேட்டு என்றும் வழக்கில் திரிந்து பட்டு என்றும் வந்துளது. தொண்டை மண்டலத்தில் இப் பெயரான் சுட்டப்பட்ட ஊர்கள் பல உள.

*''வெண்பேட்டு வாழும் தளியுடைய காளயன்''*

(தெ. கல். தொ. 12, கல். 52)

*''திருவேங்கடக் கோட்டத்து சிலைநாட்டு திருவிற்பேடு''*

(தெ. கல். தொ. 8, கல். 521)

**பேர்க்கடமை :** (அ) (வரி) ஊரில் பழமையான குடிமக்களாய் நிலையிருப்புடனும் உரிமை நிலங்களுடனும் வாழும் மக்களின் குடும்பத் தலைவர்களும் பலஇன வியாபாரிகளும் அரசின் சமுதாயக் கணக்கில் தன் பேரினைப் பதியச் செய்வித்துக் கொள்ளுதற்குரிய வரி.

*''ஆசு பொதுமக்கள் பேற்கடமை''*

(தெ. கல். தொ. 7, கல். 820)

*' செட்டிகள், வாணிகர் பேர்க்கடமையும்''*

*"செட்டிகள் வாணிகர் சேனையங்காடிகள் இவர்கள் பேர்க் கடமை, இடையர் பேர்க்கடமை"*

(தெ. கல். தொ. 7, கல். 107, 109)

**பேர்க்கடமை :** (சமு) பிராமணர்கள் விவசாயிகளிடம் பெறும் உரிமை.

*"பிராமணர் பேர்க்கடமைசுட்டி வெள்ளாழர் அகங்களில் புக்கு ஒடுக்காதொழியவும்"*

(தெ. கல். தொ. 6, கல். 58)

**பேர்க் கடமை :** (சமு) 2. புதிதாய்க் குடியேறுபவர்கள் தம் பெயரால் அரசர்க்குச் செலுத்தும் வரி.

*"பழங்குடி நீக்கி புதுக்குடியாய் ஏறிக்கொண்ட மன்றாடிகள் பேர்க்கடமையும்"*

*"செட்டிகள் வாணியர் பேர்க்கடமையும்"*

(தெ. கல். தொ. 12, கல். 202)

**பேர்க்கூவப்பட்ட :** (வ) பெயர் கூறப்பட்ட.

**பேர்த்தந்தோம் :** (வ) இன்னாரை இன்னது செய்க வென்று அதிகாரமும் அளித்தோம் என்று அரசன் ஆணையிடல்.

*"பிடிசூழ்ந்து பிடாகை நடப்பிப்பதாகக் கண்காணி நடுவிருக்கும் வெண்ணை நல்லூர்த் தம்மடி பட்டனையும்-ஸ்ரீநாராயண சதுர் வேதி மங்கலத்து நந்தீஸ்வர பட்டனையும் பேர்த்தந்தோம்"*

(முதல் இராசராசன்) (பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**பேர்பணம் :** (அ) சாதிப்பெயர் குறித்த பட்டமுடையவர் செலுத்தும் சாதி வரி. இதனை 'இனவரி' என்றும் கொள்ளலாம்.

*'வெள்ளாழர் பேர் ஒன்றுக்குப் பணம் ஒன்றும், நாட்டிலிருக்கும் செட்டிகள் பேர் ஒன்றுக்கு பணம் ஒன்றும், இடையர் கண்ணாலர் இவர்களுள்ளிட்ட சாதிக்கு பேர் ஒன்றுக்கு பணம் அரையும் பன்னிரண்டு வயதுக்கு மேற்பட்டார் யாவற்கும் ஆண்டுதோறு மிறுக்கும் இராசாரத்துக்கு வழங்கும் பணம்."*

(தெ. கல். தொ. 8, கல். 400)

**பேரகரம் :** (சமு) பிராமணர்கள் குடியிருக்கும் பெரிய இடம்.

**பேரகரமுற்றூட்டு :** (சமு) பெரிய அகரத்துடனமைந்த மூன்று வகையான இறையிலி நிலங்கள். முற்றூட்டு : வேதியன் சோதிடன், மருத்துவன் (சத்திரி) ஆகியோர்க்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

**பேரங்காடி :** (வா) பெரிய கடைத்தெரு.

(தெ. கல். தொ. 7. கல். 73)

''*தஞ்சாவூர் திருபுவனமாதேவிப் பேரங்காடி வியாபாரி வாகூருடையான்*''

(தெ. கல் தொ. 12, கல். 24)

**பேரப்பன் :** (சமு) பெரிய தந்தை, பெரிய அப்பன்.

''*சிவன் அடைகுடி, இவன் பேரப்பன்மகன் புலியூர் சேரியும்*''

(தெ. கல். தொ. 2, கல். 63)

**பேராறு :** (அ) கிருஷ்ணா நதி.

''*விசயவாடையோடடுத்த பேராற்றில் வந்து தடுத்த சனநாதனை*''

(தெ. கல். தொ. 3:1, கல். 30)

**பேரரையன் :** (அ) அரசு ஆட்சி செலுத்தும் துறைகளில் அறிவாலும் திறமையாலும் உயர்ந்து தலைமைப் பதவியினைப் பெறுவார்க் களிக்கும் பட்டம்.

''*பெருகுதிறல் சென்னிப் பேரரையன் தீரன்*''

(தெ. கல். தொ. 19, கல். 39)

**பேரூர் :** (வ) பெரிய ஊர். கடைத்தெருவுகள் அமைந்த ஊர்களும் பேரூர் என்றே பெயர் பெறும்.

''*இந்நாட்டு இளமண்டியத்து ஊரவரும் பாடி ஊரவரும் பேரூர் ஊரவரும்*''

(தெ. கல். தொ. 17, கல். 297)

**பேரேத்தம் :** (வே) ஆற்றிலிருந்து நீரிறைக்க அமைக்கும் பெரிய ஏற்றம் (ஏத்தம்).

**பேழை :** (மொ) வட்டமாக மண்டலித்த நிலை (பாம்பு).

''*நாபிக்குக் கீழ் மூன்று சுற்றுப் பேழை செய்து கொண்டு இருந்தாராகக் கனமாக எழுந்தருளுவித்த ஸ்ரீ பதஞ்சலி தேவர் திருமேனி*''

(தெ. கல். தொ. 2:2, கல். 53)

**பொத்தி** : (கலை) பொன்னில் நவரத்தினங்களை வைத்திழைக்கும் போதும் பொருத்தும்போதும் மணிகளின் வடிவிற்கமைந்த, தாங்கலும் பற்றும் அமைந்த உருவில் செய்யப்பெறும் உம்மச்சு (உம்முசம்).

*''இடைக்கட்டு இரண்டிலும் தடவிக்கட்டின பளிங்கு எட்டும் பொத்தி எட்டும்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 34)

*''நாலித்தலையில் விடங்குடையன எட்டில் கட்டின பொத்தி எட்டும் தடவிக்கட்டின பளிங்கு பதினாறும்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

**பொதாதி** : (மொ) (பொது ஆதி) ஊர்ப்பொதுவாகத் தொன்றுதொட்டு வரும் நிலம் நீர் ஆகிய பகுதிகள்.

*''பல திருப்பணிக்கும் உடலாக வள்ளுவர் பாடிநாட்டில் ஆதனூர் நான்கெல்லைக்குட்பட்ட நன்செய் புன்செய் குளமும் கரையும் பொதுவும் பொதாதியும் உட்பட-இறையிலியாகத் தந்தோம்''*.

(தெ. கல். தொ. 4, கல். 541)

**பொதாரி** : (வ) (பொது-வாரி) ஊர்ப்பொதுவான அரிய வழி. மழை நீர் வழிந்தோடும் பகுதி. பாசனத்திற்குப் பொதுவான நீரோடும் வாரி (வடிகால்).

*''இத்தால் வந்த ஆறும் ஆறிடு படுகையும் பொதுவும் பொதாரியும் எப்பேர்ப்பட்ட உரிமைகளும்''*

*''பொதுவும் பொதுவாரியும்''*

(தெ. கல். தொ. 8, கல். 337)

**பொதுச்சுமை** : (அ) தலைச்சுமைக்கு இன்ன கூலி என்று திட்டப் படுத்துவது (வரி).

**பொருள்மாவறுதி** : (அ) மதிப்பிடப்பட்ட விலைத்தொகைப் பொருளின் மா என்னும் அளவுடைய சில்லரைக்காசும் குறையாமல் பெற்று.

**பொலி (பொலிசை)** : (வ) வட்டி, முதல் கெடாமல் பெறும் வருவாய்.

*''திருப்போத்துடையார் ஸ்ரீ கோயில் படாரர்க்கு முதல் கெடாமை பொலி கொண்டு''*

(அம்பாசமுத்திரம் கல்வெட்டு)

(தெ. கல். தொ. 14, கல். 12)

**பொலிஊட்டாக :** (வ) வட்டி பொருந்தியதாக, வட்டிக்குரியதாக.

*''சபையார் கை இன் மேற்படி பொலிஊட்டாக வைத்த நிறை குறையாய்ப் பழங்காசு முப்பத்திரண்டு''*

(தெ. கல். தொ. 14, கல். 16)

**பொலிகூலி::** (வே) சாகுபடிக்குச் செலவாகும் ஆள்கூலி.

*திரிபுவன மாதேவிச் சருப்பேதி மங்கலத்து சபையார் பக்கல் பொன்குடுத்துப் பொலிக்கூலிக்குச் செலவாக கொண்டு விட்ட வண்ணக்க விளாகம் நிலம்''*

(நந்திவர்மபல்லவன், கி.பி. 997)

(தெ. கல். தொ. 12, கல். 58)

**பொலிதகர் :** (பொ) இனப் பெருக்கத்திற்கான ஆட்டுக்கடா.

*''திருநுந்தா விளக்கெரிய-ஆடு தொண்ணூறும் பொலிதகர் ஒன்றும் கைக்கொண்டார்''*

(தெ. கல் தொ. 5, கல். 646)

**பொலியூட்டு :** (வ) வட்டி செலுத்துதல். பொலி, பொலிசை-வட்டி.

**பொற்கால் :** (அ) பொன்னாலான மரக்கால். விசயதந்தி விக்கிரம வர்ம பல்லவன் ஆட்சியில் மாமல்லபுரத்தில் வழக்கிலிருந்த நெல் அளக்கும் பொன் மரக்கால்

*''பொற்காலால் ஆறாயிரத்து நானூற்றுக் காடி இந்நெல் யாங்கள் கொண்டு''*

(தெ. கல். தொ. 12, பகுதி 1, கல். 34)

**பொற்கொள்கை :** (கலை) பொன்னால் செய்யப்பெற்ற கவசம். தெய்வத்திருமேனிகளுக்கு வடிவத்தோடு பொருந்தியதாகப் பொற்றகட்டினால் செய்யப்பெறும் கவசம்.

*''ஒலோக விடங்க தேவருள்ளிட்ட திருமேனிகளுக்கும் செய்வித்த பொற்கொள்கை முதலிய திருவாபரணங்களும்''*

(தெ. கல். தொ. 5. கல். 521)

**பொற்சாலை நங்கை :** (அ) பொன்காசுகள் தயாரிக்கும் தொழிற் சாலையிலமைந்த பெண் தெய்வம்.

*"ஸ்ரீசாலை கலமறுத்த கோவிராஜராஜகேஸரி வந்மர்க்கு யாண்டு பந்திரண்டாவது வாகூர் மஹாஸபையோம் நம்முடைய சாலை மூலைப் பொற்சாலை நங்கைக்கு"*

(தெ. கல். தொ. 7, கல். 809)

**பொற்பண்டாரி :** (அ) அரசுக்குரிய பொன்னையும் பொன்நாணயங்களையும் வைத்திருக்கும் பண்டாரத்தின் தலைமை அதிகாரி.

*"பொற்பண்டாரி மணிமந்திமாதவன் கிரமவித்தனும்"*

(தெ. கல். தொ. 5, கல். 520)

**பொற்றை :** (வ) மண் அடைவுடைய குறுங்குன்று. சிறுமலை. பொச்சை, பொத்தை என்பன தென்பாண்டிநாட்டு வழக்கு.

*"பொச்சை வெஞ்சுரமேற்றி"*

(முதற்குலோத்துங்கன்—மெய்க்கீர்த்தி)

*"இவ்வேரியின் வடகரைப் பாறையினின்றும் வடகிழக்கு நோக்கி வழியின் கீழ்வழியேய் கிடந்த சிதட்டுப் பொற்றைக்குத் தெற்கு"*

(தெ. கல் தொ 5, கல். 747)

*"பொற்றை வெஞ்சுர மேற்றி"*

(முதற்குலோத்துங்கன்—மெய்க்கீர்த்தி)

**பொற்றோட்டெழுதுதல் :** (அ) விக்கிரமசோழனின் ஆட்சியாண்டுகளில் ஒவ்வோராண்டின் முதல் நாள் அரசியல் வளர்ச்சியாண்டின் (வர்ஷவர்த்தனம்) தொடக்க விழாவாக நிகழும்.

விழாவின் சிறப்புச் செயலாக பொன் தகட்டில் அரசனுடைய வளர்ச்சியடைந்த மெய்க்கீர்த்தியினை எழுதி, வாழி வாழி இம் மாநிலம் காக்க வென்னும் காப்புரையும் குறித்து, அரசியல் கணக்கினைத் தலைமைக் கணக்கர் தொடங்குவர்.

அதுபோது விழாவிற்குத் திறைப் பொருளுடன் வருகை தந்துள்ள ஆட்சிக்கு உட்பட்ட மன்னர்களின் திறைப்பொருள்களையும், நட்புரிமை கொண்ட பிறநாட்டு மன்னர்கள் அனுப்பிய

காணிக்கைப் பொருள்களையும் அதிகாரிகள் முறையாகக்கண்டு கணக்கில் எழுதச் செய்வர். இதன் நிறைவாக அமைச்சர் முத லான அரசியலதிகாரிகள் வரவு பெற்ற மதிப்புடைய பொருள்களு டன் கணக்கினையும் ஒப்பிட்டுப் பார்த்துச் சரி சொல்ல, 'துல்யம்' என்ற குறிப்புடன் அரசன் பொன்னேட்டில் கையொப்பம் இடுவன். இச்சிறப்பு விழாச் செயலே-பொற்றோட்டெழுதலாகும்.

*''மண் முழுதும் களிப்ப மனுநெறி வளர்த்துத் தன் கோயிற் கொற்ற வாசல் புறத்து, மணி நாவொடுங்க முரசுகள் முழங்க, விசையமும் புகழும் மேன் மேலோங்க, வாழிவாழி இம் மாநிலம் காக்கத் திருமணிப் பொற்றோட்டெழுது பத்தாண்டு, வருதிறை முன்னே மன்னவர் சுமந்து திறை நிறைத்துச் சொரிந்த செம் பொற் குவையால்''*

(விக்கிரமசோழன்-மெய்க்கீர்த்தி)

**பொறை :** (வே) குளத்து நீர்ப்பாசனத்தால் விளையும் நிலம். களிப்பு மிகுந்த வலிய நிலம்.

*''காஞ்சிரங்குளத்தின் கீழ் கீழப் பொறை தடி ஒன்று''*

(தடி-நிலப்பிரிப்புப் பகுதி)

(பார்த்திவ சேகரபுரச் செப்பேடுகள்)

**பொன்அளவை :** (பொ) சோழர் பாண்டியர் ஆட்சிக்காலங்களில் கோயில்களிலும் நாட்டிலும் பொன்னை எடையிடும் அளவை முறைகள்.

5 மா — 1 குன்றி,
2 குன்றி — 1 மஞ்சாடி
20 மஞ்சாடி— 1 கழஞ்சு
1/10 மஞ்சாடி — 1 மா
(கி. பி. 10, 11-ஆம் நூற்றாண்டு)

**பொன்ஒன்பதுமாறி :** (வா) பொன் ஒன்பது மாற்று தரம் உடையது (சிறந்த பொன்).

*''நகரத்தார்க்குக்குடுத்த பொன் ஒன்பது மாறி எண்பதின் கழஞ்சு''*

(நிருபதுங்கபல்லவன், கி. பி. 863)

(தெ. கல். தொ. 8, கல். 303)

**பொன்காணவல்லார் :** (வா) ஊரில் மக்கள் புழக்கத்திலுள்ள பொன்னை உரையிட்டும் உரையிடாமலும் தரம் காணுதற்கு

வல்லவர்கள். உத்தரமேரூரில் இத்தகைய திறத்தாரைக் குட வோலைவழித் தேர்ந்தெடுத்துள்ளனர்.

(முதல் பராந்தகன் ஆட்சி)

(தெ. கல். தொ. 6, கல். 295)

*''இறைக்குடிகளில் பொன் காண வல்லாரைப் படுவாரை நோக்கி மாடவீதியார் கூடிக் குடவோலை எழுதிப் புகவிட்டு தங்கள் சேரியில் நால்வரைக் குடவோலையில் போந்தாரைக் கொள்வதாகவும்''*

பொன்கொடுசெய்த முத்து வளையல் : (கலை) பொன்னைக் கொண்டு முத்துக்களைப் பதித்துச் செய்த வளையல்.

*''பண்டாரத்துப் பொன்கொடு செய்த முத்து வளையல்''*

(தெ. கல். தொ. 2, கல். 3)

பொன்மாளிகை : (அ) சோழராட்சிக்குட்பட்ட தொண்டைநாட்டின் தலைநகர் காஞ்சியிலிருந்த அரசமாளிகை இப்பெயர் பெறும். பொன்மாளிகை துஞ்சிய தேவர்-இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன்.

*''பொன்மாளிகைத் துஞ்சினதேவர் தேவியார் சேரமானார் மகளார் பிறாந்தகன் தேவியம்மனார்''*

(தெ. கல். தொ. 5, கல். 723)

பொன்வரி : (அ) பொன்னாகஅரசு பெறும்வரி, பொன்வரி. மாடைக் கடமை என்பனவும் இதுவேயாகும்.

பொன்வாரியம் : (அ) அரசாங்கத்தில் வெளியிடப்பட்ட பொற் காசு, செப்புக் காசு ஆகியவற்றை ஆராய்ந்து கண்காணிக்கும் கிராமசபையுள்ளமைந்த குழு.

பொன்றை இட்டு மண்ணறக்கொண்டு : (வே)விலைப் பொரு ளான பொன்னை பாக்கியன்றிக் கொடுத்து அதற்குரிய நிலங் களை குறைவன்றி கைக்கொண்டு.

*''ஆக நிலம்பத்துமாவும், சியமங்கலத்து ராரிடைப் பொன்னற இட்டு, மண்ணறக் கொண்டு விட்டேன்''*

(தெ. கல். தொ. 7, கல். 64)

பொன்னின் சுரி : (கலை) பொன்னால் செய்யப்பட்ட திருகாணி, வட்டத்தகட்டுக் கவசம்.

**பொன்னின் நாணிற் கோத்த மாணிக்கத்தின் திரு** :(கலை) பொன் சரட்டில் கோத்த மாணிக்கத்தாலி.

(திரு-திருத்தாலி)

*''உமாபரமேஸ்வரியார்க்கு - பொன்னின் நாணிற் கோத்த மாணிக்கத்தின் திரு ஒன்றிற் கட்டின வயிரம்''*

(தெ. கல். தொ. 2, கல். 46)

**போக்கறுத்தல் :** (வ) (குடியிருப்பார்களின்) குடியிருப்புக்காலத் தொடர்ச்சியை நீக்குதல். தொடர்ந்த உரிமையினைத் தடை செய்தல்.

*''கோயில் பண்டாரத்தாற்கு - குடிமைபோக்கறுப்பார்களாகச் சொன்னோம்''*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 119)

**பொன்னின் பட்டை மேற் குண்டு வைத்து விளக்கின வளையல்** (கலை) பொன்னால் வளையலாகச் செய்யப்பட்டு அதன்மேற்புறம் பொற்குண்டுகள் பொருத்தப்பட்டு, பட்டைகள் செதுக்கப்பட்ட வளையல்.

*''உமாபரமேஸ்வரியார்க்கு குடுத்தன பொன்னின் பட்டைமேற் குண்டு வைத்து விளக்கின வளையல்''*

(தெ கல். தொ. 2:2, கல். 46)

**போக ஆயகம்** : (வே) அனுபோகத்துடன் பெறும் நில அடமானம் ''போக்கியம்''.

**போகம் :** (வ) நெற்பயிர் முதலிய தானிய வருவாய்கள். மூலதன வருவாய்.

*''பெருவெள்ளங் கொண்டு ஊரும் போகமும் அழிந்து அநர்த்தப் பட்டு''*

(தெ. கல். தொ. 7, கல். 96)

*''கன்னரதேவ மாயிலட்டி எடுப்பித்த ரரட்டீஸ்வரத்துக்குத் துவனை வளஞ்சியரோம் வைத்த போகம்''*

(தெ. கல். தொ. 19, கல். 28)

*''எங்கள் பங்கு நிலம் ஒன்றினால் வந்த போகம்''*

(தெ. கல், தொ. 14, கல். 74)

''அவ்வவ்வாண்டுகள் செய்த போகங்களில் சுவாமி போகத்தால் வந்த நெல்''

(தெ. கல் தொ. 8, கல். 68)

**போகமடக்கி :** (மொ) நெல், மகசூலைத் தனதாக்கி விளைவுப் பயனைக் கைக்கொண்டு.

''இந்நிலம் நம்மூர் திருக்கோயிலுடைய ஸிவ பிராஹ்மணரே பயிரேற்றி, யிந்த போகமடக்கி இப்பொற்சாலை நங்கைக்கு இரண்டு ஸந்தியும் - அமுது செய்விப்பார்களாகவும்''

(தெ. கல். தொ. 7, கல். 809)

**போகி :** (சமு) அகவின்பத்திற்குரியவள்.

''வயிர மேகனாகிய வாண கோசராயர் போகி அமத்தியாயின குறும்ப கோளலி''

(தெ. கல். தொ. 12, கல். 87)

**போகியார் :** (சமு) இன்ப போகத்துக்குரிய பதியலார்.

''சோழப்பெருமானடிகள் போகியார் நியமித்து இராசமாத்தாண்ட புரத்து நக்கன்''

(தெ. கல். தொ. 5, கல். 543)

**போசர் :** (அ) போசளர், போசள சாதியினர்.

**போத்தரையர் :** (அ) பல்லவர். பல்லவர்கட்குரிய மரபுப்பெயர்களுள் ஒன்று.

**போதிகை :** (கலை) கருங்கற் கட்டடங்கட்குரிய தூண்களின் தலைப்பின்மேல், மேலே குறுக்கிட்டு அமைக்கப்பெறும் துலாக் கல்லிற்குத் தாங்கலாக அமைக்கப்பெறும் துண்டுக்கல் போதிகை எனப்படும். இக்கல்லின் முகப்பிடங்கள் சிற்ப வேலைப்பாட்டுடன் திகழும்.

''அர்த்தமண்டபத்தின் தென்மாட்டிலும் வாசலில் மேற்கடைய உத்திரத்திலும் போதிகையிலும் விற்கண்டத்திலும் கல்வெட்டின படி''

(தெ. கல். தொ. 5, கல். 588)

**போதை :** (மொ) பொழுது. போதைக்கு-பொழுதிற்கு.

''நிவேதிக்கத்தஇரமுது ஒரு போதைக்கு நாழியாகவும்''

(திருச்செந்தூர் கல்வெட்டு, தெ. கல். தொ. 14, கல். 16)

போது போதையென்றாயிற்று.

**போனகக்குருத்து:** (சம) நிவேதன உணவினைப் படைப்பதற் குரிய வாழைக்குருத்து.

*"போனகக்குருத்து பன்னிரண்டுக்கு நெல்லு இருதாழியும்"*

(தெ கல். தொ. 2:2, கல். 26)

**போனகம்:** (சம) போசனம், உணவு. நிவேதன உணவினைக் குறிக்கும்.

*"இருநாழி தூக்குத்தலரிசியால் இராப்போனகம் காட்டுவா ரானார்கள்"*

(திருவல்லிக்கேணி கல்வெட்டு)

(இந்திய தொல்பொருள் தொகுப்பு, 8, கல். 29)

*"திருவண்ணாமலை நாயனார்க்கு திருமந்திரப் போனகப் புறமாக விட்ட பற்றில்"*

(தெ. கல். தொ. 8, கல். 130)

போனகம் என்பது உணவு யென்பதனைக் கம்பநாடரும்,

*"வானகம்தனின் மண்ணினின் மன்னுயிர் போனகந்தனக்கென்று எனும் புந்திய"*

என்று - தாடகை - படலத்துக்கூறுவர்.

**ப்ரஸாதஞ் செய்தருளின:** (அ) திருமுக ஆணை கொடுத்தருளின.

**ப்ரஸாதம் செய்துவந்த:** (அ) அரசனது ஆணை இலச்சினை பொறிக்கப்பட்டு வந்த-திருமுகம்.

*"திருவாய் மொழிந்தருளி உடையார் ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார் கோயில் சீகார்யஞ்செய்வார்க்கும், பரியாரமூலப்பட்டுடைப் பஞ்சாசாரியத் தேவர் கன்மிகளுக்கும் ப்ரஸாதம் செய்து வந்த திருமுகப்படி"*

(விக்கிரமசோழன் சாசனம், தெ. கல். தொ. 2:3, கல். 68)

**பல்லவர் சாசன முடிவுரை:** (அ) பஹுபிர்; வஸுதா தத்தா ராஜபீ ஸகராதிபி; யஸ்யமஸ்ய யதா பூமி; தஸ்ய தஸ்ய ததாபலம்.

பல்லவமன்னர்களுடைய சாசனங்கள் முடிபு பெறும் வழக்-காக அமைந்துள்ளன.

இதன் பொருள்: ஸகராதிபீ; சகரன் முதலிய. பஹுபீர்—பல ராஜபி. அரசர்களால். வஸுதா - பூமி, தத்தா - தானமாகக்

கொடுக்கப்பட்டது, யஸ்ய யஸ்ய - எவ்வெவனுக்கு. பூமி — நில-மானது. யதா—எப்படியோ. தஸ்ய தஸ்ய - அவ்வவனுக்கு. அம்முறையிலேயே. ததாபலன் - அமைந்த பலனாகும்.

ஸ்ரீபண்டாரிகள் : (அ) கோயில் கருவூலக் காப்பாளர்கள்.

"*துவராபதி அப்பன் ஸ்ரீ பண்டாரிகள்*"

(தெ. கல். தொ. 5, கல். 749)

ஸ்ரீபாதக்கோல் : (அ) தொண்டை மண்டலத்தில் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில், சோழர் ஆட்சிக்காலத்தில், குடியாத்தம் என்ற ஊரில் வழக்கிலிருந்த நில அளவுக்கோல்.

(தெ. கல். தொ. 5, கல். 222)

ஸ்ரீபாதபீடம் : (கலை) தெய்வச்சிலையெனும் திருமேனியின் பாதங்கள் பொருந்தி நிற்கும் சிற்ப வேலைப்பாடமைந்த பகுதி.

இது வெள்ளியாலும், பொன்னாலும் பிற உலோகத்தாலும் செய்யப்பெறும்.

"*வெள்ளியின் ஸ்ரீ பாதபீடம்*"

"*பொன்னின் ஸ்ரீ பாதபீடம்*"

(தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டு)

ஸ்ரீபாதபுஷ்பமாக : (சம) இறைவனுடைய பாதங்களுக்கு இட்டு வழிபடும் மலர்களாக.

"*உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் ஸ்ரீ பாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுத—பொற்பூ*"

(தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டு) (தெ. கல். தொ. 2, கல். 3)

மகமை : (அ) விற்பனைச்சரக்குகளுடன் வழிச்செல்லும், அல்லது விற்பனை செய்யும் வணிகர், அங்காடிகள் ஆகியோரின் வருவாயில் ஒரு பகுதியை, பொதுமக்களிடம் நாள்முறையிலும், வாரமுறைமையிலும் கோயில், அறச்சாலை ஊர்ப்பொதுக்கூட்டம் ஆகியவற்றின் நிகழ்ச்சிக்குரியதாக, அவர்களின் விருப்பமாகவோ, ஊர்க்கட்டுப்பாட்டின்படியோ ஊர்ச்சபையார் பெறும் காசு மகமை எனப் பெயர் பெறும்.

ஆண்மக்கள் செய்யும் வணிகத்திறனுக்குரிய நியதியாக அளிக்கும் வரியும் மகமையேயாகும். இது மகன்மை என்றும்

கல்வெட்டுக்களில் கூறப்பட்டுளது மகன்மை என்பது மக்கட் பேறில்லாதார் தத்தாகப் பிறர் பிள்ளையை எடுத்துக்கொள்ளுதலை யும் குறிக்கும்.

*''முஞ்ஞைப் பூண்டியில் நாம் கொள்ளக்கடவபட்டிக்காசு **மகந்மைக் காசு** மற்றும் எப்பேர்ப்பட்டதும்''*

(வீரராசேந்திரசோழன்—தெ. கல். தொ. 17, கல். 294)

*''இவர்களை **மகன்மை** கொண்ட பள்ளி எழுவன்''*

(மகன்மை - சுவீகாரம்)

(தெ. கல். தொ. 17, கல். 249)

**மகரதோரணம் :** (அ) மகரமீன் வடிவமைந்த தொங்கல்களாகச்செய்து கோவை செய்யப்பெற்ற அணிகலன். கோட்டை வாயில், மாளிகை வாயில் ஆகியவற்றிற்கு ஒப்பனையாக மகரமீன்கள் எதிரிட்டு இணைந்து நிற்கும் பாங்கில் அழகு செய்யப்பெறும் வளைவு.

*''இப்பொன்—உடையார் ஊருடைப்பெருமாளுக்கு சாத்தி அருள செய்த **மகர தோரணத்துக்கு** இட்டது''*

(மூன்றாம்குலோத்துங்கன், தெ. கல். தொ. 8, கல். 287)

*''வெண்சாமரையும் மேகடம்பமும் சூகரக்கொடியும் **மகர தோரண மும்** — பறித்து''*

(வீரராசேந்திரன்—மெய்க்கீர்த்தி)

**மகாதேவரடியான்:** (சம) (மஹாதேவடியான்) சிவத்தொண்டு செய்யும் அடியான்.

*''திரு அகத்தீஸ்வரத்து **மஹாதேவரடியான்** மணியன்''*

(பரமேசுவரபல்லவன், கி. பி. 673, தெ. கல். தொ. 8, கல். 331)

**மகாநியோகம் :** (அ) அரசன் இட்ட சிறந்த ஆணையினைப் பொறுப் புடன் சிறப்பாக நிறைவேற்றுதல்.

**மகாஜனம் :** (அ) (மகாஜனம்) கிராமமகாசபை உறுப்பினர்.

*''**மஹாஜனம்** பணியால் ஊர்க்கணக்கு வெள்ளரும்பாக்கமுடை யான் காமாண்டை எழுத்து''*

(தெ. கல். தொ. 7, கல். 45, தொ. 4, கல். 353)

**மஹாஸாகை :** (சம) தெய்வத்தன்மையால் சிறந்த கல்லால மரக் கிளை. சாகை-கிளை. தஞ்சைப் பெரிய கோயிலில், முதல்

இராசராசன் அமைத்துவைத்த செப்புத்திருமேனிகளுள் தக்ஷிணா மூர்த்திகள் திருமேனி சிறப்புடனமைந்ததாகும். இறைவன் அமர்ந் திருந்த இடம் கல்லால நிழலாதலின், அக்கருத்திற்கமைந்த தாகவே திருமேனி அமர்ந்துள்ள மலைப்பகுதியின் பின்புறம் கல்லால மரம் இருப்பதாக உலோகத்தில் செய்தமைக்கப் பட்டுளது.

*"தக்ஷிணாமூர்த்திகள் திருமேனி ஒருவர்—பர்வதத்துக்கு மேல் அர்கத்தளவுடஞ் செல்ல, ஒரு முழமேல் எண்விரலரை ஆறு தோரைச் சுற்றும் உடையதில், வேறாகச் செய்து தைத்த மஹாஸாகை ஒன்பதும் இவற்றுள் அநுஸாகை நாற்பத்தி ரண்டும் உடைத்தாகக் கனமாகச் செய்த ஆலவிர்க்ஷம் ஒன்று"*

(தெ. கல். தொ. 2:2, கல். 50)

**மஹாசாமந்தன்** : (அ) நால்வகைப்படைக்கும் தலைமைச் சேனாதி பதி.

*"விரைமலர்த் தெரியல் விக்கலன் தன்னொடு வரிசிலைத்தடக்கை மாசாமந்தரை"*

(வீரராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**மஹாசுரை** : (சமு) வைணவப்பிராமணருள் ஒரு சாராருக்குரிய குடிப்பெயர்.

*"இவை மஹாசுரை வரத்ராஜபட்டன் எழுத்து"*

**மஹாதேவியார்** : (அ) பட்டத்திற்குரிய அரசியார், முதல்மனைவியார்.

*"உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் நம்பிராட்டியார் சோழ மஹா தேவியார்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 42)

**மஹாவியவஸ்தை** : (சம) (கோயில் நிர்வாகிகள்) சிறப்பாகவும் முடிவாகவும் செய்து எழுதின தீர்மானம். உறுதியாகச் செய்த தீர்மானம்.

*"மூலப்பருஷைப்படி எழுதின மஹாவியவஸ்தைப்படி"*

(தெ. கல். தொ. 12, கல். 166)

**மகுடம்** : (கலை) விளிம்பில் தொங்கல்களுடன் குவிந்ததாக மொட்டு பறளை என்ற பகுதிகளுடன் அமைக்கப்பெறும் திருச்சின்னம்.

இது திருப்பள்ளித்தொங்கல், மகுடம் என்றும் பெயர் பெறும். இறைவன் வீதியுலாவருங்காலத்து எடுத்துச் செல்லும் விருதுச் சின்னங்களுள் ஒன்று.

*"செம்பின் பொன்பூசின மகுடம் க."*

(தெ. கல். தொ. 5, கல். 644)

*"திருப்பள்ளித் தொங்கல் மகுடம் ஒன்று"*

(தெ. கல். தொ. 2, கல். 1)

*"மகுடம் நாலினால் செம்பின் மேலும் பந்தத்தின் மேலும் தருக்கினபொன்"*

(தெ. கல். தொ. 5, கல். 521)

**மகேஸ்வரர்** : (சம) சிவபெருமானை முழுமுதல் தெய்வமாகக் கொண்டு திருநீறு உருத்திராக்கம் முதலிய சிவச்சின்னங்களை அணிந்து சிவபூசனை செய்யும் சிவனடியார்.

*"மாசிமகம் திருவிழா ஏழுநாளும் பதினைவர் மகேஸ்வரர் மேற்படி உண்ண வைத்த துளைப்பொன் ஐங்கழஞ்சு"*

(தெ. கல். தொ. 19, கல். 338)

**மச்சம்** : (மொ) அணிகலன்கள் செய்வதற்கு அளிக்கப்பெறும் பொன்னின் தரமறிய, கொடுக்கும் பொன்னில் எடுத்து வைத்துக் கொள்ளும் பகுதி. இதனைக் "காணவாசி" என்றும் கூறுவர்.

*"மச்சம் ஒருகாணம் ஆகப் பொந் பதின்காற்கழஞ்சே ஒருகாணம்"*
*"நகரப்பொன் ஆணியோடொத்த பொந்துக்கு காணவாசி நல்ல பொன்"*

(காணவாசி - உரைமாற்றுக் குன்றாத பொன்)

(தெ. கல். தொ. 5, கல். 266)

**மசக்கல்** : (வே) மயக்கல், மேடும் காடுமாக நின்ற நிலத்தைவெட்டிச் சீர்திருத்தி நன்செய்யாக்கின நிலம்.

*"இதன் தென்பால் சூற்றிய தேவன் மசக்கல் நிலன் அரையும்"*

(தெ. கல். தொ. 4, கல். 537)

*"பனங்காட்டில் வெட்டி கல்லி மசக்கி-அமைத்துக்குடுத்த நீர்நிலம்"*

(முதல் இராசராசன், தெ. கல். தொ. 5, கல். 523)

*"புன்செய் திடல் கல்லி அகழி திருத்தி மயக்கிக் குடுத்த நிலம்"*

*"வெட்டிக் கல்லி மசக்கின நீர் நிலம்"*

(தெ. கல். தொ. 5. கல். 533, 523)

**மசக்கி :** (வே) நன்செய் நிலமாக மாற்றி. (மயக்கி)

*"திருவையாற்று மகாதேவர் பனங்காட்டில் நின்றும் வெட்டி கல்லி மசக்கி-அமைத்துக் குடுத்த நீர்நிலம்"* (நஞ்சை நிலம்)

(தெ. கல். தொ. 5. கல். 523)

**மஞ்சாடி :** (பொ) பொன் நிறுத்தலளவையிலொன்று. 2 குன்றி-1 மஞ்சாடி.

*"திங்கள் பொன் குன்றியாக ஓராண்டைக்கு காசுக் கல்லால் பொன் ஆறு மஞ்சாடி"*

(குன்றி-ஒரு குன்றிமணி எடை)

(தெ. கல். தொ. 17, கல். 222)

**மஞ்சிக்கம் :** (வே) தரிசு. பயிரிடப்பெறாது கிடக்கும் பரந்த நிலம்.

*"கீழ்மஞ்சிக்கமான நிலம் சிற்றம்பலக் கோலால் வைத்த குழியாயிரம்"*

(தெ. கல் தொ. 3:1, கல். 19)

**மடக்கல் :** (அ) ஊர் நிலக்கணக்கில் உட்படுத்தி எழுதுதல்.

*"இறையிலி செய்வதாய் பழம்பெரும் பழந்தரமும் தவித்து ஆசந்ர காலம் மடக்கிலே இறையிலி செய்து தந்தோம்"*

(தெ. கல் தொ. 5, கல். 986)

**மடக்கிலேகுரம் படைத்தல் :** (வே) ஓலை மடக்கினால் வாய்க்-காலின் திருப்பமாகும் முடக்கத்திலே நீரைக் குறுக்காக அடைத்தல் நிலத்திற்கு நீர் பாயவிடுதற்குரியதாக, வாய்க்காலின் குறுக்கே காலூன்றி ஓலை மடக்காலே அடைப்பிட்டு நீரை ஏற்றங்கொள்ளச் செய்து வரப்பில் மடைவாய் வெட்டிப் பாய்ச்சும் செயல்.

*"நீர்கொள்ள மடக்கிலே குரம்படைத்து வெட்டிக் கொள்ளக் கடவோமாகவும்"*

(தெ. கல். தொ. 6, கல், !7)

**மடப்புற இறை இலி :** (சம) சமயச் சார்புடைய மடங்களுக்கும் அம் மடத்திலிருந்து சமயத்தலைமை புரியும் பெரியோர்கட்கும் அனு-போகமாக அளிக்கப்பெறும் இறைஇலி நிலம்.

*"சுத்தமல்லி வளநாட்டு தனியூர் இராஜாதிராஜச் சதுர்வேதி மங்கலத்து ஸ்ரீமற்றுவராபதி மண்டலத்தார் மடத்து விருத்திக்கும் வண்டுவராபதி மஹாமுனிகளும் இவர் ஸிஸ்யை பெரிய பிராட்டியும் தங்கள் அர்த்தமிட்டு கொண்டு இவற்கு மடப்புற இறை இலியாய் அனுபவித்துப் போதுகிற இவ்வூர்ப்பிடாகை சோழநல்லூர்"*

(தெ கல். தொ. 6, கல். 59)

**மடப்புறம் :** (சம) மடங்களுக்கும் சமயச்சார்புடைய யோகியர்க்கும் இறையிலியாக விடப்பெற்ற நிலங்களும் வருவாய்களும்.

*"பழநிலம் நாலுமாவும் இம்மடத்துக்கு மடப்புறமாக, ஆயம்பாடி காவல் உட்பட்ட ஆயங்களும் மடத்துக்கே உடலாகச் சந்திராத்த வரை செல்வதாக விட்டோம்"*

*"திருவோத்தூருடையாரை கும்பிட்டு சிவலிங்கார்ச்சநம் பண்ணியிருக்கும் தபஸ்ஸி விடையின்மேல் வருவானுக்கும் இவன் வம்ஸத்தார்க்கும் மடப்புறமாக இபூமி பெறுவிலை"*

(தெ. கல். தொ. 7, கல். 96, 141)

*"ஆண்டார் சிவயோகிகள் தபஸியர்—மடப்புறம்"*

(தெ. கல். தொ. 5, கல். 702)

**மடவிளாகம் :** (சம) மடவளாகம், கோயிலைச்சுற்றியுள்ள தெருவில் மடத்திற்கென்று அமைக்கப்பட்ட நிலப்பகுதி.

**மடா :** (பொ) மிடா, கடாரம். பெரிய பாத்திரம். சமைக்கும் பெரிய உலோகப்பானை.

*"மடாவில் அட்டும் பரிசே"*

**மடுக்கிலை :** (வ) மடித்து வாயிலிடும் வெற்றிலை. செந்நெல் குத்தல்.

*"பழவரிசி இருநாழியினால் நாநாழியும் உழக்கு நெய்யும் மடுக்கிலையும் ஐந்து காயும் நாலுபழமும் முட்டாமை குடுப்போமானோம்"*

(தெ. கல். தொ. 12, கல். 70)

**மடை :** (வே) நீர்நிலைகளிலிருந்து நன்செய் நிலங்களுக்கு நீர் பாய்கின்ற திறப்பு.

"குளத்தப் பெரிய மடையிலும் சிறுமடையிலும் எங்களுக்கு முன்பு நீர் பாஞ்சுவருகிறமை-பாய்வதாகவும்"

(புதுக்-கல். 259)

"கீழ்மடைக் கொண்ட வாளையும்"

(புறநா-42)

மடைப்பள்ளிப் பெண்டிர் : (சம) திருக்கோயில்களிலமைந்த உணவு அட்டும் சாலையாகிய மடைப்பள்ளியில் பணியாற்றும் பெண்டிர்.

"திருநலக்குன்றத்து கோதண்ட மடைப்பள்ளிப் பெண்டிர்"

(புதுக்-கல். 78)

மடையன் : (சம) சமையற்காரன். மடைத்தொழில் செய்பவன்.

"இவ்வறச்சாலை-மடையன் ஒருவனுக்கு"

(தெ. கல். தொ. 4, கல். 223)

மடைவளாகம் : (சம) மடவளாகத்துடன் சார்ந்த மடைப்பள்ளி இடம். கோயில் பணியாளர் குடியிருக்கும் இடம்: கோயிலைச் சூழ்ந்த வீதியில் அமையும் இவற்றுள் தவசியர் தங்கும் இடம்—மடவளாகம். மடவளாகத்தினைச் சார்ந்து தவசியார்க்கும் கோயில பணியாளர்க்கும் உணவு அட்டும் இடம் மடை விளாகம், இதனை மடைப்பள்ளிப் பகுதி என்றும் கூறலாம்.

(மடவளாகம்) மடம் அமைந்த நிலம். மடம் முதலாக அமைந்த கோயில் பணியாளர் வாழும் கோயிலைச்சூழ்ந்துள்ள பகுதி. மடைவளாகம் - சமையல் மனைநிலம். (வளாகம் - மனைநிலம், பூமி.)

"தென்கடல் வளாகம் பொதுமையின்றி"-புறநானூறு.

"ஆட்கொண்ட தேவர் கோயிலுக்கு வடக்கு ஆண்டார் பிச்சர் பிறைசூடி ஆண்டார் திருமடம்"

(தெ. கல். தொ. 12, கல். 141)

"வீரசோழன் திருமடை வளாகத்தில் குடியிருந்த தவஸியார்க்கும்"

(தெ. கல். தொ. 3:1, கல். 26)

மடைவளாகத்தில் குடியிருப்போர் : (சம) மடைவளாகத்தில் குடியிருக்கும் மக்கள். இவர்கள் தவசியர், சிவபிராமணர், தேவரடி-

யார், உவச்சர், கோயிலுக்குரிய பல பணியாளர்கள் ஆகியோரா வர்.

*''கருவூர் திருவானிலை ஆளுடையார் கோயில் தேவர் கன்மி களுக்கு இன்னாயனார் கோயிலுக்கு நம்பேரால் யேற்றின வீர சோழன் திருமடைவளாகத்தில் குடியிருந்த தவசியார்க்கும் சிவப்பிராமணர்க்கும் தேவரடியார்க்கும் உவச்சற்கும் பல பணி நிமந்தக் காறர்க்கும்''*

(தெ. கல். தொ. 3:1, கல். 26)

**மண் ஏறி உள்ளேய் குத்திக்கொண்டு :** (வே) தேவையான மண்ணை ஏரியினுள்ளேயே வெட்டி எடுத்துக்கொண்டு. (குத்திக்கொண்டு— வெட்டி எடுத்துக்கொண்டு)

*''முன்னூற்று அறுபது குழிமண் ஏரி உள்ளேய் குத்திக் கொண்டு கரை ஏற அட்டுவிப்போமானோம்''*

(கரை ஏறி - கரை உயர)

(தெ. கல். தொ. 6, கல், 353)

**மண்டலராயன் :** (அ) பிறநாட்டில் கைப்பற்றிய மண்டலங்களுக்குப் பேரரசு அமைக்கும் ஆட்சித் தலைவன்.

*'ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு ௰அ-வது உடையார் திருவண்ணாமலை உடையநாயநார்க்குத் கடு ருடைய மண்டலராயன் மழுவேலும் புத்யாகி நாச்சன் வீரப் பெருமாளேன்''*

(தெ. கல். தொ. 8, கல். 132)

**மண்டலி :** (அ) அரசின் ஆணையின்கீழ் மண்டலங்களைக் கண் காணிக்கும் திறமைமிக்க அதிகாரி. மண்டலிகன்.

*'மண்டலியான ராஜராஜவங்கார முத்தரையன்''*

(மூன்றாம் குலோத்துங்கன், தெ. கல். தொ. 8, கல். 288)

**மண்டை :** (சம) பொன்னின் மண்டை. கபால வடிவில் அமைக்கப் பெற்ற பொற்பாத்திரம். சற்று நீண்ட வட்ட வாயமைப்புடன் உட்குழித்த தோற்றமுடையது. சிவன்கோயில் வழிபாட்டில் இடம் பெறும் பரிகலங்களுள் ஒன்று.

*'ஸ்ரீராஜராஜதேவர் நாளதினாலேய் குடுத்த பொன்னின் மண்டை ஒன்று''*

(தெ. கல். தொ. 2, கல். 1)

**மண்ணிநாடு :** (அ) இது இராசேந்திர சிங்க வளநாட்டின் (விருத ராஜ பயங்கர வளநாட்டின்) உட்பிரிவுகளில் ஒன்றாகும். திருப் பனந்தாள், வேப்பத்தூர், திரைலோக்கி, முறையூர் முதலான ஊர்கள் இந்நாட்டில் அடங்கியிருந்தன. எனவே தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் வட்டப்பகுதியும் மாயூரம் வட்டப் பகுதியும் தன்னகத்துக்கொண்டது இந்நாடாகும்.

**மண்பாடு :** (வே) மண்ணால் உயர்த்தப்பட்ட இடம். கரை. அகழ்ந்த மண்ணைக் கொட்டியதால் உண்டான மேட்டிடம்.

*''ஏரிக்கரை மண்பாட்டுக்குக் கிழக்கும்''*

(தெ. கல். தொ. 4, கல். 347)

**மணிக்கிராமம் :** (வா) வாணிகச்செல்வத்தால் சிறந்த கிராமம். தமிழக வணிகருள் கடல் வாணிபம் செய்த ஒரு பிரிவினர் வாழ்ந்த நகரங்கள் மணிக்கிராமம் என்ற பெயரால் குறிப்பிடப் பட்டிருந்தன என்பதைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

*''திருநெய்த்தானத்து ஆதித்தபுரத்து மணிக்கிராமத்து வியாபாரி''*

(தெ. கல். தொ. 5, கல். 590)

*''கொடும்பாளூர் மணிக்கிராமத்து வியாபாரி''*

(தெ. கல். தொ. 4, கல். 147)

*''தென்வாரி நாட்டு மணிக்கிராமத்து தர்மசெட்டி''*

(தெ. கல். தொ. 19, கல். 4i7)

**மணியம்பலம் :** (சமு) ஊர்ச்சபை கூடும் மண்டபம். ஊர்ச்சபை கூடுவதை மணியோசையாலறிவிக்கும் வெண்கலப் பெருமணி கட்டப் பெற்ற மண்டபம்.

*''இவ்வூர் மணியம்பலத்தே கூட்டங் குறைவறக் கூடியிருந்து''*

(தெ. கல். தொ. 4, கல். 537)

**மத்தளி :** (கலை) மத்தளத்தின் உறுப்புக்களமைந்த இருமுகத்தோற் கருவி.

*''அடுத்தன தட்டழி மத்தளி சரடிகை தாளம் காகளம் ஏற்றி எட்டுப் பணி-அறமரு சாதிகாக்கும் பரிசினாற் காப்பது''*

(பார்த்திபசேகரபுரச் செப்பேடுகள்)

**மத்யஸ்தன் :** (அ) ஊர்ச்சபைக்கணக்கன். இவன் பத்திரப் பதிவ கத்துக் குழுவிலும் இருப்பவனாவன். இவனைக் கரணத்தான் என்றும் கூறுவர்.

*''இவ்வாவணக் குறியுள்ளிருந்து ஸபைபணிபடி எழுதிநேன். இவ்வூர் மத்யஸ்தன்''*

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 105)

**மத்யாநஸந்திக்கு :** (சம) பகல் உச்சியம்போது வழிபாட்டிற்கு.

*''மத்யாநஸந்திக்கு தும்பைத் திருப்பள்ளித்தாமம்''*

(முதற்குலோத்துங்கன், கி. பி. 1111, தெ.கல்.தொ. 7, கல். 409)

**மதகு :** (வே) ஆறு, ஏரி, குளம் ஆகியவற்றின் நீரினை நீர்ப்பாசனத் திற்குப் பெறுவதற்கு, வாய்க்கால் வழி நீர் செல்ல கரையிடையே அமைக்கப்பெறும் கட்டிடத் தூம்பு.

**மந்திரத்தார் :** (அ) அரசவைக்குரிய அமைச்சர், சேனாதிபதி, ஒற்றர், தூதுவர் ஆகியோர்.

**மநித்தர் இறையிலி :** (வே) மனித்தர் இறையிலி. மனிதருக்குச் செய்யும் இறையிலி நிலங்கள். தேவதான இறையிலியினின்றும் வேறுபடுவது மனித்தர் இறையிலி.

(புதுக்கோட்டை கல். தொ. கல். 559)

**மயக்கல் :** (வே) திருத்தியமைக்கப்பட்ட நிலம். வயக்கல் என்பதன் திரிபு. இது வசக்கல், மசக்கல், மயக்கல் என்றும் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படும்.

*''பூஞ்சேரி என்று பேர் கூவப்பட்ட திடல் நிலம்-உழுது நடக்கடவ திறைறியே உசரமாய்க்கிடந்த நிலம் மிகுதிக் குறைவுள்ளடங்க இதில் நந்திகேஸ்வர மயக்கல் என்று திருத்தின நிலம் ஒரு மாவரையும்''*

(தெ. கல். தொ. 5, கல். 642)

**மயக்கின நிலம் :** (வே) வயக்கின நிலம். மாற்றியமைத்த நிலம். நெல் விளையும் நிலத்தைக் கரும்புவிளையும் நிலமாக்குதலாக மயக்குதல்.

*''இத்தேவர் பழந்தேவதானம் பிருந்தை ஊர்ப்படும் நீர்நிலன், சோளாந்தகனென்றுதான் மயக்கின நந்தவனம்''*

(நீர்நிலமெனும் நெல்விளை நிலத்தை, நந்தவனமாக மாற்றிய தன்மை - மயக்கிய தன்மை கூறப்பட்டுள்ளது.)

(தெ. கல். தொ. 14, கல். 84)

**மரக்கோவை :** (வே) மரங்களின் தொகுதி. பல்வகைப்பட்ட மரங்கள் வளர்க்கப்பட்ட தோப்பு.

**மரவடை :** (அ) கிராமத்திலோ, ஊர்களிலோ பொதுவருவாயாக ஊர்ப்பொதுவிடத்தில் வளர்க்கப்பட்ட பயன் தரும் மரங்களையும் சாலைகட்கமைந்த நிழலாக இருபுறமும் தொடர்பாக அமைக்கப் பட்ட மா, புளி, நெல்லி ஆகிய பயன்தருமரங்களையும், அனு- பவிக்கும் அல்லது கடமைக்கு உட்படுத்திக்கொள்ளும் உரிமை, மரத்திற்கு உரிய வரி, சாலையோரத்தில் நிழல் தரும் மரங்களை அரசு அமைத்துள்ளமைக்குரிய வரியென்றும், தோப்பிடங்கட் குரிய வரியென்றும் கூறுவர்.

''*இந்நிலத்தால் வந்த ஆயம்-மாவடை மரவடை மற்றும் எப்பேற் பட்ட ஆயங்களும்*''

(தெ. கல். தொ. 8, கல். 88)

**மரவடைக்கடமை :** (அ) கிராமங்களில் பொதுவான தோப்புகள் அமைப்பதற்குப் பெறும் வரி.

**மரு :** (வே) மருபப்பச்சை, மணமுள்ள இலைக்கொழுந்து. பச்சை நிறமுடையது.

''*காவுதெங்கிடப் பெறுவதாகவும், தமனகமும் மருவும் இருவேலி யும்-இடவும், நடவும் பெறுவதாகவும்*''

(பெரிய லெய்டன்—செப்பேடுகள்)

**மருத்துவக்குடி :** (அ) மருத்துவர்க்கு அளிக்கப்பட்ட ஊர். சோழ நாட்டிலுள்ளதோரூர்.

(தெ. கல். தொ. 14, கல். 7)

**மருத்துவப்பேறு :** (அ) கிராம வைத்தியனுக்கு வருவாயாக வரி யில்லாமல் விட்ட நிலம்.

**மழநாடு :** (அ) மழவர் நாடு. சோழ மண்டலத்தின் மேற்குப்பகுதி யில் காவிரிக்கு வடகரையில் அமைந்த நாடு. திருமழபாடி, அன் பில் ஆகிய ஊர்கள் இதன்கண் அடங்கியதாகும். இங்கு-தென் கரையிலமைந்தது இடையாற்று நாடாகும். மழவர் என்னும்

சங்ககாலக் குறுநில மன்னரால் ஆளப்பட்டதால் மழவர்நாடு என்று பெயர் பெற்றது. வழக்கில் மழநாடு என்றாகியுளது.

*"வடகரை மழநாட்டு கிலாரக் கூற்றத்து அன்பில்-தென்கரை இடையாற்று நாட்டுத் திருக்கடை முடி"*

(தெ. கல். தொ. 7, கல். 504)

*"ஒளிறு இலங்கு நெடுவேல் மழவர்"* - புறநா.88. *"குறும்படை மறவர்"* - அகநா. 35.

**மல்லன் :** (சமு) மற்போரில் வல்லவன். சோழர் காலத்திலேயே மற்போர் வீரர்களடங்கிய படைப்பகுதி இருந்ததை இக்கல்வெட்டுச் செய்தி புலப்படுத்துகின்றது.

*"தஞ்சாவூர் மஞ்சனத்தார் வேளத்து மல்லன் அரங்கன்"*

(உத்தமசோழன்—தெ. கல். தொ. 19, கல். 193)

**மறு :** (வே) கார்கால நெற்பயிராகிய குறுவை அறுவடையைத் தொடர்ந்து நடப்பெறும் மறுவிளைவாகிய தாளடிப்பயிர்.

*"காரும் மறுவும் ஒருபூவும் கடைப்பூவும்"*

(தெ. கல். தொ. 17, கல். 127)

**மன்றப்பெறுதல் :** (மொ) உறுதியாக, நிச்சயமாக, பொருந்திய தண்டமாக. இச்சொல் செயல் தெளிவை உணர்த்தும் இடைச் சொல். பொருந்த என்னும் பொருளிலும் வரும்.

*"இத்தன்மம் முட்டில் தன்மாஸனத்திலே நிசதம் ஐங்கழஞ்சு பொன் பன்மாகேஸ்வரரே மன்றப் பெறுவதாகவும்"*

(திருவல்லம் கல்வெட்டு, தொ 3:1, பக். 95)

**மன்றாடிகள் :** (சமு) இடையர்கட்குரிய பட்டப்பெயர்களுள் ஒன்று. இவர்கள் நுந்தா விளக்குக் குடிகளாக ஊர்ச்சபையில் பேர்பதிந்தவராதலின் மன்றாடிகள் எனப்பட்டனர்.

*"திருநுந்தாவிளக்குக்குடிகளாய் ஆடு கைக்கொண்டு நெய்யளந்து வருகிற மன்றாடிகளில் அரவணை வெண்காடன், வைச்சிய நாத கோன்"*

(தெ. கல். தொ. 5, கல். 643)

*"ராஜராஜபுரத்திற்கு மன்றாடி சந்திரன் பெருங்காடனாண மதுராந்தகக் கோன்"*

(தெ. கல். தொ. 7, கல். 839)

*"நுந்தாவிளக்குக் குடிகளாய் ஆடு கைக்கொண்டு நெய் யளந்து வருகிற மன்றாடிகள்"*

(தெ. கல். தொ. 5, கல். 643)

**மன்றாடிகள் பேர்க்கடமை :** (அ) மன்றாடிகள் எனப்படும் இடையர்கள், தம்பெயரை ஊர்ச்சபைக்கணக்கில் பதிவு செய்து வைப்பதற்குப் பெறும் வரி.

கோயில்கட்குத் திருவிளக்கு அறநிவந்தமாக ஆடுகள் அமைக்கப்பெறும்போது, அவற்றைப் பெற்றுப் பராமரித்து உரிய அளவில் நெய்யளக்கும் பொறுப்பினைச் சபையார் வழியே கோயில் நிர்வாகத்தார் வழியோ பெறுதற்குரிய முன்சலுகையாகத் தத்தமது பெயர்களைப் பதிந்துவைப்பது இடையர் வழக்காகுமென்பது இதனால் புலனாகும்.

**மன்றுபாடு :** (அ) கிராம நியாய விசாரணை சபையார் செய்த தீர்ப்புப் படி, மன்றத்திலேயே செலுத்தும் அபராதப்பணம். முதல் பராந்தகன் ஆட்சியில், அரசனே நேரில் குற்றவிசாரணை செய்துவந்ததனைக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

*"இவ்வூர்க்குடிகளைக் குற்றந் தோஷம் மன்றுபாடு தேவரேய் தண்டித்துக் கொள்வதாகவும்"*

(தெ. கல். தொ. 2:1, கல். 12)

**மனித்தர் :** (சமு) மனிதப் பிறப்புடையவர். மக்கள்.

*"உடையார் திருவிடை மருதூருடையார் திருமடை விளாகத்துப் பெருந்திருவாட்டியென்று செய்வித்த மடத்துக்கு, தைப்பூசத் திருநாளில் மனித்தர், நிமந்தத்துக்கு"*

(தெ. கல். தொ. ?, கல். 702)

*"மனித்தப்பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே"*

(அப்பர்)

**மனைப்படைப்பை :** (சமு) மனைப்படப்பை. வாழ்மனையைச் சுற்றியுள்ள இடம்.

*"மனையும் மனைப்படப்பையும்"*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**மனைப்பணம் :** (அ) குடியிருப்பு மனைக்குரியதாகச் செலுத்தும் வரிப்பணம். மனைப்பகுதிப்பணம் என்பதும் இதுவேயாகும்.

**மனையிறை :** (அ) இவ்வரி வணிகராய செட்டிகட்கும், செக்கிட்டுத் தொழில் புரியும் வணிகர்க்கும் இடம்பெறும் இடவரியாகும்.

*' செட்டிகள் வாணிகர் மனையிறை''*

(தெ. கல். தொ. 8, கல். 88)

**மனைவழிகூறிடாது :** (வ) வீடுகள் அமைந்த இடத்தில் துண்டித்துப் பாகுபடுத்தாது.

*''எங்களூாகுப் பிடாகையாகப் பெற்றுடைய ஊர்களில் மனை வழி கூறிடாது நகரப் பொதுவாய்க் கிடந்த புலிகுன்றத்துக்குக் கீழ்பாற்கெல்லை''*

(தெ. கல். தொ. 3:1, கல். 16)

**மாகாணி :** (வா) பொன்எடையிடும் அளவையுள் ஒரு பகுதி. இது மாவும் காணியும் எடை கொண்ட கணக்காகும்.

1/10 மஞ்சாடி—1 மா. 1/40 மஞ்சாடி —1 காணி.

என்ற அளவில் முதல் இராசராசன் காலத்தில் கொள்ளப்பட்டுள்ளது.

*''ஸ்ரீவாஹுவளையும் - நிறைமுக்கழஞ்சே இரண்டு மஞ்சாடியும் முக்காணியும''*

(தெ. கல். தொ. 2:1, கல். 7)

**மாங்காடுநாடு :** (அ) தொண்டை மண்டலத்தில் உட்பிரிவுகளுள் ஒன்றாகிய படுவூர் கோட்டத்துள் அமைந்த நாடாகும்.

*''படுவூர் கோட்டத்து மாங்காடு நாட்டு விடேல் விடுகு சதுர்வேதி மங்கலம்''*

(தெ. கல். தொ. 12, கல். 82)

*''ஸ்ரீ சந்தம் ஒன்று பொன் அறுபத்தொன்பதின் கழஞ்சே முக்காலே இரண்டு மஞ்சாடியும் ஐஞ்சுமாக் காணியும்''*

**மாச்சின்னம் :** (பொ) நாணய மதிப்பீட்டளவிலும் நில மதிப்பீட்டளவிலும் மிகச்சிறிய கடைசி மதிப்பீடு.

*''இதில் ஒரு மாச்சின்னம் பெருவான் கெங்கைக்கரையில் குரால் பசுவைக் கொன்றான் பாவம் கொள்வான்''*

(தெ. கல். தொ. 8, கல். 127)

**மாசாத்துவணிகன்** : (வா) மிகப்பெரிய வணிகர் கூட்டத்து வணிகன் (தலைவன்).

*"ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி மாசாத்து வாணிகன் மகனையாகி"*

(சிலம்பு·வழக்குரைகாதை)

*"மாடக்குளக்கீழ் மதுரைச் சீவல்லபன் மடிகைய் பூத மங்கலம் உடையான் மாசாத்து வணிகன் சொக்கன"*

(தெ. கல். தொ. 5, கல். 434)

**மாஸன்** ; (வ) மாஸம், மாதம், திங்கள்.

*"இவ்வூர் பிரம்மஸ்தானத்தே ஆறுமாஸன் தண்ணீரட்டுவதாகவும்"*

(தெ. கல். 3:1, கல். 14)

(கி.பி. 10-ம் நூற். பிற்பகுதி, சோழர்காலம்)

**மாட்டறிதல்** : (வ) மாட்டறிதல். சாசனப்பத்திரத்தில் சான்றுக் கையொப்பமிடுதற்கு இயலாதவர்க்குப் பிரிதியாக மற்றொருவர் கையொப்பமிடுதல். இதனை சைய்க்னை (சயிக்னை) என்றும் கூறப்பெறும்.

*"இப்படி அறிவேன் அழகிய சோழமாராயர் தற்குறிக்கு மாட்டெறிந்து நானுமறிவேன் பொன்னம்பலப்பிள்ளையான இரட்டைப் பள்ளி கொண்டான எழுத்து"*

(தெ. கல். தொ. 8, கல். 213)

*"மணலி கணத்தாருள் யாமெழுத்திட வெய்கைம்மாட்டாமையிற் பிறராலெழு துவித்து இப்படி"*

(தெ. கல். தொ. 12, கல். 105)

**மாட்டில்** : (பொ) செல்வத்தில். மாடு-செல்வம். பெருஞ்செல்வம்.

*"மலைநாட்டுச் சேரமானையும் பாண்டியர்களையும் எறிஞ்சு கொண்ட மாட்டில்"*

(முதல் இராசராசன் — தெ. கல். தொ. 2, கல். 3, 59)

**மாட்டுக்கிறை** : (அ) மாடுகள் தங்குவதற்குரியதாக அமைக்கப் பெறும் தறிக் கொட்டகைகட்கு அரசு பெறும் வரி.

**மாடலன்** : (சமு) பிராமணருக்குரிய குடிப்பெயர்களுள் ஒன்று. (மாடலமறையோன் —சிலம்பு)

"திருவலஞ்சுழிபட்டனும், மாடலன் ஆளுடையான் பட்டனும்"
(தெ. கல். தொ. 8, கல். 216)

"இவ்வூர்சட்டன் திருக்கோட்டியூர் மாடலன் நாராயணன்"
(புதுக். கல். 100)

**மாடை :** (பொ) பொற்காசு. தொண்டை நாட்டில் பல்லவர் ஆட்சிக் காலம் முதலாக சோழர்காலத்திலும் நாட்டு வழக்கில் இருந்த பொற்காசின் பெயர். இக்காசு "நெல்லூர் மாடை" என்றும், இராசராசன் ஆட்சிக்காலத்தில் "இராசராசன் மாடை" என்றும் பெயர் பெற்றுளது.

"கோயிலிலே சந்தி விளக்கு எரிக்க உபையமாகக் கைக்கொண்ட மாடை-க. இம் மாடை ஒன்றும்"

"சீபண்டாரத்து ஒடுக்கின நெல்லூர் மாடை"
(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 197, 218)

"மழவராயன் இட்டமாடை ஒன்றுக்கு சந்திவிளக்கு ஒன்று"
(தெ. கல். தொ. 5, கல். 499)

**மாடைக்குமாறி :** (பொ) மாடை என்னும் பொற்காசுக்கு ஒத்த மதிப்பீடு கொண்ட மாற்றமுடைய பொன்.

"இது மாடைக்கு ஒந்பதரை மாறி"

**மாண் :** (மாணி) கோயில் மடைப்பள்ளியிலிருந்து நிவேதனம் சமைத்தளிக்கும் பிர்மச்சரிய பிராமணன். நிவேதனஉணவு சமைத்தலோடு வழிபாட்டிலும் அர்ச்சகருக்கு உதவி செய்பவன்.

"திருப்பரிசாரகஞ் செய்ய மாணி ஒருவனுக்கு நிசதம் நெல்லுப் பதக்கும்"

"இந்நாட்டு காவிரிமங்கலத்துச் சபையார் இடக்கடவ திருப்பரிசாரகஞ் செய்யும் மாண் ஒன்று"
(தெ. கல். தொ. 2, கல். 66, 69)

**மாணபோகம் :** (சம) கோயிலில் பரிசாரகஞ் செய்யும் பிரமச்சரிய பிராமணனுக்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

"திருவிறையான் குடி தேவர்க்கு பணிசெய்யும்படி ஆளுக்கு இட்டமாண போகம்-நிலத்துக்கு"
(புதுக். கல். 92)

**மாணிக்கத்தின் குற்றங்கள் :** (பொ) சிகப்புநிற இரத்தினமாகும் மாணிக்கக்கல்லில் அமைந்த குற்றங்கள் ஆறு. அவை, குழிவு, ப்ரஹரம், வெஜ்ஜம், வஸாநி, த்ராஸம், கற்பற்று என்பன வாம். குழிவு-குழிந்திருப்பது; ப்ரஹரம் - கோட்டமுடையது; வெஜ்ஜம் - வெந்தது போன்ற மழுங்கிய தோற்றமுடையது; லஸாநி-வெண்ணிறப் புள்ளிகளுடையது; திராஸம் - பிளவு பட்டிருப்பது. (கற்பற்று-கற்றுகள் கலந்த பிறப்பாக அமைந்தது. பரு-பொறிப்பும், புடைப்புமாக இருப்பது. பரியன - பெரியவை, நெரியன-நெரிந்ததைப் போன்ற அமைப்புடையன.)

(தெ. கல். தொ. 2; 1. கல்.7)

**மாணிக்கம் :** (பொ) இரத்தினவகையுள் சிவப்புக்கல், அரதனம். மாணிக்கம்-தோற்றம், வடிவு, பொலிவு, ஒளிநிலை, நிறம் ஆகியவற்றால் பலவகைப்படும். அவற்றுள் ஹளஹளம், குண வியன், குருவிந்தம், கோமளம், நீலகந்தி, சுகந்தி, தளம், குப்பி என்பன கல்வெட்டுக்களால் அறியப்படும் வகைகளாகும்.

இவற்றுள் நிறம் மிகுந்த ஒளிக்கதிர் நிறைந்திருப்பது 'அரசி மாணிக்கம்' என்றும், வெண்சிவப்பாக ஒளிமிகுந்திருப்பது 'பத்ம ராஜன்' என்றும் பெயர் பெறும்.

(தெ. கல். தொ. 2, கல். 1. 3, 7)

**மாணாக்கிகள் :** (சம) சமணத்துறவிகளின் மாணாக்கிகள்.

*''ஸ்ரீ தீர்த்த படாரர் மாணாக்கிகள் இளநேச்சரத்து குரத்திகள்''*

*'ஸ்ரீமம்மைக் குரத்திகள் மாணாக்கியர் அரட்டநேமி குரத்திகள்''*

(தெ. கல். கல். 5, கல். 371)

**மாத்தால் :** (வே) மா ஒன்றுக்கு இவ்வளவு என்று-நெல் அளத்தல்.

*''நிலம்-யாண்டு பதினாறாவது முதல் கைக்கொண்டு உழுது அச்சுவற்கம் இறுத்தும் மாத்தால் பதினறு கலனே தூணியாக வந்த பாட்டம் அளக்கவும்''*

(தெ. கல். தொ. 5, கல். 243)

*''இந்நிலத்தால் மாத்தால் இருபத்து இருகலமாகவுந் நெல் குடுப்போமானோம்''*

(தெ. கல். தொ. 5, கல். 244)

**மாநவட்டில் :** (பொ) வேலைப்பாடமைந்த அழகிய கிண்ணம்.

*''நாளதினாலேய் குடுத்த பொன்னின் மாநவட்டில் ஒன்று''*

(தெ. கல். தொ. 2, கல். 1)

**மா நிலம் :** (வே) ஒருமா நிலம். இந்நில அளவு, பதினாறு சாண் கோலால் நூறு கொண்டது ஒருமரவாகப் பெரும்பான்மையும் இருந்துள்ளதாயினும், நிலத்தின் தரம் விளைவு ஆகியவற்றிற் கேற்ப மாறுபட்டுளது.

*"பதினறு சாண்கோலால் நூறுகுழி கொண்டது ஒரு மாவாக"*

(தெ. கல். தொ. 8, கல். 316)

*"பதினறு சாண்கோலால் ஐந்நூற்றொருபத்திரண்டுகுழி கொண்டது ஒரு மாவாக"*

(தெ. கல். தொ.7, கல். 947)

**மாப்பப்பாளம் :** (அ) மலையா தீபகற்பத்திலுள்ள ஊர். இதனைச் சார்ந்த தலைத்தக்கோலம், மாயிருடிங்கம், வளைப்பந்தூரு, இலங்கா சோகம், மதமாலிங்கம், இலிம்பங்கம் ஆகிய ஊர்களையும் முதல் இராசேந்திரன் தனது கடற்படையால் வென்றுள்ளான்.

*"அலைகடல் நடுவேபலகலம் செலுத்தி-காப்புறு நிறை புனல் மாப்பப்பாளமும்-மாப்பெரு தண்டாற் கொண்ட"*

(முதல் இராசேந்திரன்—மெய்க்கீர்த்தி)

**மாபொருதண்டு :** (அ) பெரும் போரைச் செய்யும் சேனை. படை.

*"தொடுகடற் காவற் கடுமுரட் கடாரமும்*
*மாபொரு தண்டாற்கொண்டகோ பரகேசரி"*

(முதல் இராசேந்திரன் —மெய்க்கீர்த்தி)

**மாயிலட்டி :** (சமு) சங்கரப்பாடியார் என்று பெயர் குறிக்கப்பெறும் எண்ணெய் வாணியருள் ஒரு பிரிவினர்க்குரிய பட்டப்பெயர்.

*"சங்கரப்பாடியான் கண்டன் மறவனான சோழேந்திர சிங்க மாயிலட்டி"*

(தெ. கல். தொ. 3, கல். 19)

*"உய்யக்கொண்டான் சோழபுரத்து வியாபாரி உய்யக் கொண்டான் சோழபுர மாயிலட்டி"*

(தெ. கல். தொ. 8, கல். 7)

*"சங்கரப்பாடியான் படியசோலை அரைசான குலோத்துங்க சோழ மாயிலட்டி"*

(சங்கரப்பாடியார்-பார்க்க)

**மாராயன் :** (அ) சோழர் பாண்டியர் அரசியலில் உயர்பதவி அதிகாரிகளான அமைச்சர் சேனைத்தலைவர், மண்டலத்தலைவர் ஆகியோருக்கு அளிக்கப்பட்டிருந்த விருதுப்பெயர்.

*''சேனாபதி சோழமண்டலத்து உய்யக்கொண்டான் வளநாட்டு வெண்ணாட்டு அமண்குடியான கேரளாந்தகச் சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீகிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழ பிரம மாராயன்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 31)

மாராயம் என்பது அரசராற் பெருஞ்சிறப்பு. 'மாராயம் பெற்ற நெடுமொழி' (புறத்திணை-7) என்பது தொல்காப்பியம்

**மாவடை :** (சமு) கிராமத்தில் கால்நடை அடையும் இடம். (இதற்கு வரியுண்டு)

**மாவடைகடமை :** (அ) கிராமத்தில் கால்நடைகள் அடையும் பொதுவிடத்திற்கான வரி. கால்நடைகட்கு அடைவிடமாகத் தனியார் உபயோகப்படுத்துவதற்கமைந்த கடமை என்னும் வரியாகும்.

**மாவறுதிப்பொருள் சிலவோலை :** (வ) விற்கும் பொருளின் மீது முன்புள்ளதாக மா என்ற சிறிய நாணய அளவுடையதான எத்தகைய கடன் பொருளும், செலவுகளும் அதுபற்றிய வேறு உரிமைகளும் வாரிசு பற்றிய ஓலைகளும் -காட்டுவதற்கு இல்லாத நிலத்தினை, தூய நிலையில் முழுவிலைக்கு விற்றுக் கொடுத்தேன். 'எத்தகைய வில்லங்கங்களும் இன்றி கிரைய சாசனம் செய்து கொடுத்தேன்' என்பது இக்கால வழக்காகும்.

*''இது வல்லது பொருள் மாவறுதிப் பொருள் சிலவோலை காட்டக் கடவ்நல்லதானாகவும். இப்பரிசு ஒட்டி விலைக்கற விற்று விலையாவணஞ் செய்தேன்''*

(தெ. கல். தொ. 5, கல். 669)

*''இதுவே விலையாவணமாகவும் வேறு பொருள் மாவறுதி பொருள் சிலவு காட்டக் கடவரன்றி விற்று விலையாவணம் செய்து குடுத்தோம்''*

(தெ. கல். தொ. 19, கல். 211)

**மாவிறை :** (அ) ஊர்களிலும் நெடுஞ்சாலைகளிலும் அரசு அமைக்கும் குதிரை லாயம் போன்ற கட்டுத்தறிகட்கு அரசு பெறும் வரி.

**மாற்கமாடை** : (சம) நாள்வழிச் செலவு. (மாடை - காசு).

*''இக்கோயில்-சீகாரியப் பேற்றுக்கும் மாற்க-மாடைக்குமாக''*
(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 187)

**மானாய நாழி** : (அ) நிருபதுங்கவர்மபல்லவன் ஆட்சிக்காலத்தில், தொண்டை மண்டலத்துக் காவிதிப்பாக்கத்தில் வழக்கிலிருந்து முகத்தலளவைக்குரிய நாழி யளவைப் படியின் பெயர்.

*''நிசதி உழக்கெண்ணை மானாயனாழியோடொக்கும் உழக்கினால''*

தெ. கல். தொ. 12:1, கல். 67)

**மிக்கிது** : (மொ) மிகுதியானது, மிகுதியான பொருளை, இதனில் மிக்கதை.

*''4 மாவின் போகத்தில், ஸ்ரீ கோயிலில் கணபதியார்க்கு அமுது செய்வதாகவும்; மிக்கிதுகொண்டு சித்திரை உத்திரத்திந் நான்று அமுது செய்வதாகவும்''*

(செந்தலைக்கல்வெட்டு, கல்வெட்டுஅறிக்கை எண் 7/1899)

**மிகுதிக்குறை** : (வ) ஏறத்தாழ. நிலத்தை நேரில் அளந்து கணக்கிட்டு எழுதும்போது இவ்வாறு குறித்தெழுதுதல் சாசன வழக்காகும்.

*''இன்னான்கெல்லையிலும் உள்ப்பட்ட கருத்தளவில் மிகுதிக் குறை உள்ளடங்க ஊர்க்கொல்லையும்''*

(சிதம்பரம் கல்வெட்டு, தெ. கல். தொ. 12, கல். 171)

*''நிலம் இரண்டுமா மிகுதிக் குறைமை உள்ளடங்க விற்றுக் குடுத்துக் கொண்டது''*

(தெ. கல். தொ. 19, கல். 211)

*''பெருநான்கெல்லையுள் மிகுதிக்குறைவு அகப்பட்ட மதுராந்தகன் மயக்கல் நிலம் கால்''*

(தெ. கல். தொ. 19. கல். 391)

**மிணாட்டி** : (சமு) மணாட்டி என்னும் சொல்லின்திரிபு. மனையாட்டி, மனைவி. மனைவாழ்க்கை மேனியவள்.

*'இது மாறுவான் தந் மிணாட்டியை பரைமாயன்றுக்குக் குடுப்பான் இது பந்மாஹேஸ்வரர் ரக்ஷை''*

(தெ. கல். தொ. 12, கல். 164)

**மிலாடு :** (அ) மலாடு. மலையமான் நாடு மலாடு என்று மரூஉப் பெயராகியது. இப்பெயர்ச் சொல் கல்வெட்டுக்களில் 'மிலாடு' என்றும் குறிக்கப்பெற்றுளது நடுநாட்டின் வளநாடுகளில் ஒன்று.

*''நடுவில் மண்டலத்து பெண்ணை வடகரை மலாடாகிய ஜநநாத வளநாட்டு குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோயிலூர்''*

*''மிலாட்டு குறுக்கை கூற்றத்து திருக்கோயிலூர்''*

(தெ. கல். தொ. 7, கல். 936)

**மிலாடுடையார் :** (சமு) மலையமான் நாட்டின் ஆட்சியை உடைய அரசன். மெய்ப்பொருள் நாயனார். மலையமான் நாடு. மலாடு என்றாகி மலாடர் கோமான் என்பது மிலாடுடையார் என்றாகி யுள்ளது.

*''இரண்டு கையுடையாராகக் கனமாகச் செய்த தத்தா நமரேகாண் என்ற மிலாடுடையார் ஒருவர்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 40)

**மிழலைக்கூற்றம் :** (அ) பாண்டி நாட்டில் இராசேந்திர சோழ வளநாட்டின் உட்பிரிவுகளுள் ஒன்று மிழலைக் கூற்றமாகும்.

*''ராஜராஜ பாண்டி நாட்டு ராஜேந்திரசோழவளநாட்டு மிழலைக் கூற்றதது நடுவிற் கூற்று தச்சன் நென்மலி உடையான்''*

(தெ. கல். தொ. 14, கல். 101)

இக்கூற்றத்தின் நடுவே ஓடும் ஆறு பாம்பாறு எனப்படும். இக்கூற்றம் மீபாம்பாற்று நாடு, கீழ்பாம்பாற்று நாடு, நடுவிற் கூற்றம், என்ற பிரிவுகளுடன் தென்மிழலைக் கூற்றம் வடமிழலைக் கூற்றம் என்ற இருபகுதியாகவும் பிரிக்கப்பட்டிருந்ததைக் கல் வெட்டுகள் குறிக்கின்றன. இதன்கண் அடங்கிய ஊர்கள் விளத்தூர், பாராந்தக நல்லூர், சேந்தவன் மங்கலம், அத்தாணி, வித்தூர், மஞ்சகுடி, கருஹூர், பெருந்துறை, மணமேற்குடி, சிறு வம்பூர், பொன்பேற்றி முதலியனவாகும். (புதுக். கல். 376, 567, 824, 895)

*''மிழலைக் கூற்றத்து வடபாம்பாற்றுச் சுந்தர பாண்டிய நல்லூர் சிறுவம்பூர்''*

(தெ. கல். தொ. 5, கல். 987)

**மிழலை நாடு :** (அ) கும்பகோணம் வட்டத்தின் கிழக்குப் பகுதியில், காவிரியின் வடகரையிலுள்ள, சோழபுரம், சேய்ஞ்ஞலூர், திருவாப்பாடி மிழலை, திருத்தேவன்குடி ஆகிய ஊர்களடங்கிய பகுதியே மிழலை நாடாகும். (மிழலைக்கூற்றம், புதுக்கோட்டை, தஞ்சை, இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களின் தொடர்புடைய பகுதியாகும்.)

*''வடகரை மிழலைநாடு''*

(திருவிசலூர்கல்வெட்டு. தெ. கல், தொ. 23, கல். 22)

**மிறுக்கு :** (வ) மிக்க இடர்ப்பாடு. துன்பம்.

*''நாங்கள் நெடுநாள்பட கிடந்து மிறுக்குப் படுகையில்''*

(தெ. கல். தொ. 12, கல். 224)

**மீக்கோழை :** (அ) இது பாண்டிய குலாசனி வளநாட்டின் பிரிவுகளில் அடங்கிய நாடாகும். மீகோழை கீழ்க்கோழை என்னும் இரண்டு பிரிவுகளை உடையது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின் பகுதி களாகும். விளநாட்டைச் சார்ந்தது மீக்கோழை நாடு. திருவானைக் கா மீகோழை நாட்டுள் அடங்கிய ஊர்களுள் ஒன்றாகும்.

*''பாண்டிய குலாசனி வளநாட்டு மீகோழை தேவதான பிரமதேயம் திருவானைக்காவில்''*

**மீசெங்கிலி நாடு :** (அ) புதுக்கோட்டை நாட்டின் குளத்தூர் வட்டம் மலையம்பட்டி முதலான ஊர்கள் இந்நாட்டிலடங்கியதாகும்.

இந்நாடு, மீசெங்கிலிநாடு, கீழ்ச்செங்கிலி நாடு என்றும் பிரிக்கப்பட்டிருந்தது.

(புதுக்கோட்டை கல்வெட்டு — 116)

**மீட்டுப்பட்டான் :** (மொ) மீட்டபொழுது இறந்தான். ஆநிரைகளை மீட்பதற்கும் பகைவரோடு போரிட்டு மீட்டுவிட்டானெனினும், பகைவரால் கொல்லப்பட்டான். மீட்டல்—கரந்தை என்ற புறத் திணைக்கு இச்செய்தி இலக்காகி நிற்கின்றது.

*''ஆந்தைப்பாடி ஈசைபெரும்பாணாரைசரு மருமக்கள் தொறுக் கொண்ட ஞான்று, மீட்டுப்பட்டான்''*

(செங்கம் நடுகற்கள்— கி.பி. 7-ஆம் நூற்றாண்டு)

**மீபார்க்கெல்லை :** (வ) மேற்புற எல்லை. (மீ-மேல்)

**மீமாம்சை :** (சம) இந்நூல் வேதவேள்வி வழிக் கிரியைகளை விளக்கும் வடமொழி நூலாகும். இது பூர்வ மீமாம்சை, உத்தர மீமாம்சை என்று இரண்டு வகைப்படும்.

*"மீமாம்ச பட்ட விருத்தி நிலம் ஐவேலி"*

(கரந்தைச் செப்பேடுகள்)

**மீன்படுபள்ளம் :** (மொ) மீன்கள் தங்குவதற்குரியதாக இயற்கையாக அமைந்த பள்ளம். விலையாவணம் அல்லது இறையிலி செய்யும் நிலங்களின் உள்ளகப்பட்ட நில நிலைகளைக் கூறும் சாசனப் பகுதியில் இடம் பெறும் குறிப்பாகும்.

**மீயாட்சி :** (வே) நிலங்களின் குத்தகைப்பங்குரிமை. நிலத்திற்கு உரிமையாளராகிய ஆட்சியாளர், தன்னிடம் குத்தகைக்குப் பெற்றுப் பயிரிடுபவரிடம் விளைவு போகத்தில் பங்குரிமை ஆட்சி பெறுதலின், ஆட்சிமேல் ஆட்சி பெறுதலின், மீயாட்சி என்று கூறப் பட்டது.

**முக்காலாவதும் :** (வ) மூன்று முறையாவதும். ஒரு செயலுக்கமைந்த உறுதிப்பாட்டினைக் குறிப்பதற்கமைந்த சொல் வழக்கு.

*"இப்பரிசுக்கு ஒருகாலாவதும் இருகாலாவதும் முக்காலாவதும் இசைந்து சம்மதித்தோம்"*

(தெ. கல். தொ. 6, கல். 351)

**முக்காலே அரைக்கால் முழம் :** (பொ) முதல் இராசராசனுடைய மனைவியருள் சோழமகா தேவியார் ஸ்ரீராஜராஜீஸ்வரத்தில் செய்தமைத்த உலோகத் திருமேனியாகும் ஆடவல்லான் திரு மேனியை முழத்தால் அளந்த முறை.

*"பதாதி கேஸாந்தம் முக்காலே அரைக்கால் முழ உசரம்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 42)

முழ அளவையாகச் சொல்லப்பட்ட இவ்வளவை, ஒருசாண் 72 தோரை உயரம் என்பதாகும்.

1 நெல் — 1 தோரை; 12 விரல் — 1 சாண்;
8 தோரை — 1 விரல்; 2 சாண் — 1 முழம்.

**முக்காவலுடைய பாடிகாப்பான்** : (அ) நாடுகாவல், ஊர்க்காவல் இறைக்காவல் எனும் முக்காவலுடைய ஊரின் காராண்மைக் காவலாகிய பாடிகாப்பாளன்.

**முககட்டணம்** : (சம) கோயில் முகப்பிலமைந்த கற்கட்டிடம், மண்டபம்.

''*திருநாவுக்கரசு தேவன் திருமடத்து நாயனார், அழகிய திருவையாறுடையார் கீலழத்திருவாசல் முககட்டணத்து எழுந்தருளி இருந்து*''

(தெ. கல். தொ. 8, கல். 43)

**முகம்** : (கலை) முகப்பு. அணிகலன்களின் முன்புறத்தோற்றம். அணிகலன்களின் தோற்றப் பொலிவாக்வும் புடைப்பாகவும் இரத்தினங்கள் வைத்து இழைக்கப்படும் முகப்பு.

''*முத்தின் பட்டிகை ஒன்றினால் பொன்னின்பூ ஆறும்முகம் ஒன்றும*''

(தெ. கல். தொ. 5, கல். 521)

**முகமண்டபத்தே கூடியிருந்து** : (சமு) கோயில் முகமண்டபத்தில் சபையோர் குறைவறக்கூடியிருந்து. ஊர் அல்லது கிராமசபை அங்கமைந்த கோயிலின் திருமுற்றத்திலோ அன்றி முகமண்டபத்திலோ கூடும் வழக்கினை இதனால் அறியலாகும்.

''*விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்து ஸபையோம் எம்மூர்ப் புவனி மாணிக்க விஷ்ணுகிரஹத்து முகமண்டபத்தேய் கூடியிருந்து*''

(தெ. கல். தொ. 3, பகு. 1, கல். 7)

**முகவாய்** : (வே) ஏற்றச்சால் முகக்கும் நீர்முகப்பு வாய்) ஏற்றச்சால் முகப்பதற்கு ஏற்புடையதாக கரை முகப்பிடத்தில் தோண்டுவிக்கும் மடை நீர் வாய்,

**முகவெட்டி** : (அ) சோழர் ஆட்சியில் இறைவரி முதலிய பல துறைகளிலும், அரசும் அதிகாரிகளும் செலுத்தி வந்த ஆணைக்குரிய ஓலைகளைத் தணிக்கை செய்து இலச்சினையிட்டு உரியவர்க்கு ஆணைவழி அனுப்பும் அதிகாரி.

''*இவை புரவுவரி சீகரணத்து முகவெட்டி தெங்கூருடையானெழுத்து*''

(தெ. கல். தொ. 5, கல். 662)

*"உடையார் திருவாய் மொழிந்தருளினமைக்கு (குலோத்துங்க சோழன்) இவை புரவுவரி திணைக்களத்து முகவெட்டி கரஞ்சிக் குறியுடையான் எழுத்து"*

(தெ. கல். தொ. 17, கல். 298)

**முகவெட்டி நாயகம் :** (அ) புரவுவரித்திணைக் களத்தில் அடங்கிய முகவெட்டி என்னும் வரிதிட்ட அதிகாரிகள் எழுதிய ஆணை ஓலைகளை ஆய்வு செய்து அனுமதிக்கும் தலைமை அதிகாரி.

**முட்ட :** (மொ) தடைபட, நிறைவாகச் செய்யவியலாமல் தடைபட. முட்டில் - தடைபட்டால்.

**முட்டாவாள் :** (சமு) இடையறாமல் தொடர்ந்து கிராமப்பொதுவேலை நிகழ்வதற்குரியதாக ஆள் கொள்ளுதற்கு அளிக்கும் கடமை. முட்டி, முட்டாவாள், முட்டையாள் என்பனவும் இப்பணியினையே குறிக்கும்.

**முட்டிரட்டி :** (மொ) முட்டியது இரட்டிப்பாக, தடைப்பட்ட பொருளின் அளவைப்போல் இரண்டு மடங்கு.

*"நிசதி கலவரை அரிசி பத்தெட்டுக் குத்தல் ஸ்ரீகோயிலுக்கே கொண்டு சென்று அளப்போமானோம். அளவோமாயின் முட்டி ரட்டி பந்மாஹேஸ்வரர் தண்டிக் கொள்ள ஒட்டிக் குடுத்தோம்"* (தெ. கல். தொ. 12, கல். 61)

**முட்டுவதாயின் :** (மொ) தடைப்படுவதாயின். கொடுக்கத் தவறுவதாயின்.

*"நிலைப்பொலியூட்டாசத் திங்கள் தோறுமாக குடுப்போமானோம் முட்டுவதாயிற் தர்மாசநத்து நிசதி நாலேகால் காணம் படுவோமானோம்"*

(தெ. கல். தொ. 12, கல் 70)

**முடக்கு :** (மொ) மூலை. கோடித்திருப்பம். நெரிந்த வளைவு.

*"முடக்குத் தூம்பினின்றும் வடக்கு நோக்கிப் போன வாய்க்கால்"*

(தெ. கல். தொ. 7, கல். 137)

*"இவ்வோடைதான் கிடந்தவாறேய் பலமுடக்கு முடெங்கி வடக்கு நோக்கி இந்நிலமேயுற்று"*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

முடி : (கலை) தெய்வத் திருமேனிகட்கும் அரசர்க்கும் **தலையில்** அணி விக்கும் இரத்தினங்களால் ஒப்பனை செய்யப்பட்ட பொன்முடி· **திருமுடி.**

*"அர்த்த நாரீஸ்வரர் திருமேனி ஒன்று, இவர்க்கு குடுத்தன ஸ்ரீமுடி ஒன்றிற் கோத்த முத்து நூற்றிருபத்தொன்று"*

(தெ. கல். தொ. 2:2, கல். 39)

*"மனுநெறி தழைப்ப மணிமுடி சூடி"*

முண்டதாரி : (கலை) சுருதிக் கருவியை, பாடல் ஆசிரியனுக்கு அருகிருந்து இசைப்பவன்

*"கானபாடி மூவர்க்கு முண்டதாரி அணுக்கனுச்கு ப்பங்கு ஒன்று"*

(த. பெ. கோ. கல்வெட்டு, தெ. கல். தொ. 2, கல். 66)

முத்தரையர் : (அ) வேளிரின் **உ**றவுமுறையினராகவும் பல்லவர் ஆட்சியில் சிற்றரசர்களாகவும் இருந்த மன்னர் குலமரபினர். இம்மன்னர் சோழநாட்டிலும் பாண்டியநாட்டிலும் வாழ்ந்துள்ளர். சோழ நாட்டு செந்தலை, நியமம் ஆகிய ஊர்கள் இவர்கட்குத் தலைமையிடமாக இருந்துள்ளது. இவர்கள் விடேல்விடுகு, பெரும்பிடுகு, மாற்பிடுகு என்னும் பட்டங்களைப் பெற்றுள்ளனர்.

*"செம்பியன் இருக்குவேள் தேவியார் முத்தரையர் மகளார் வரகுணனாட்டி பெருமாள்"*

(தெ. கல். தொ. 19, கல். 155)

*"பெரும்பிடுகு முத்தரையனான சுவறன் மாறன் எடுப்பித்த படாரி கோயில்"*

(செந்தலைக் கல்வெட்டு)

*"விடேல்விடுகு முத்தரையன் அடியான் கிடாவந்காத்தான்"*

(செந்தலைக் கல்வெட்டு)

*"சோழநாட்டு ஆலங்குடி சத்துருபயங்கர முத்தரையர் அரசியார் —அப்பிநங்கை"*

(தெ. கல். தொ. 14, கல். 71)

இக்குறுநில மன்னர்கள் பாண்டியர்க்கு உட்பட்டிருந்த காலத்தில் மாறன் என்ற பட்டத்தினைப் பெற்றவராகவும் இருந்துள்ளனர்.

''*பெரும்பிடுகு முத்தரையனாயின குவாவன் மாறனவன் மகனிளங் கோவதியரையனாயின மாறன் பரமேஸ்வரன்*''

(செந்தலை-கல்வெட்டு) முத்தரையர்கள் சோழருக்குக் கீழ் அரசிலதிகாரிகளாக இருந்த காலத்தில் சோழ முத்தரையர் என்ற பட்டங்களைப் பெற்றிருந்தனர்.

''*சேக்கிழான் சத்திமலையனாகிய சோழமுத்தரையன் பக்கல்*''

(தெ. கல். தொ. 19, கல். 78)

''*இம்மன்னர்கள் வள்ளன்மையிற் சிறந்தோராக இருந்துள்ளனர்*''

''*பெருமுத்தரையர் பெரிதுவந்து ஈயும்*''

(நாலடியார்-பாடல்-200)

**முத்திற்கோத்தமுத்து :** (கலை) அனுவட்டமான பருமுத்து ஒவ்வொன்றின் அடியிலும் குறுமுத்து ஒவ்வொன்றினைக் கோத்த அமைப்பில் உருவாக்கப்பட்ட முத்துமாலை.

''*முத்திற்கோத்த முத்து - தொளாயிரத்தெண்பத்தொன்றினால்*''

(தெ. கல். தொ. 2, கல். 1)

**முத்தின் குற்றவகை :** (பொ) இரத்தினவகையில் ஒன்றான முத்து. பிறப்பிலேயே சில குறைபாடுகளுடன் விளைந்ததாக அமையும் அக்குற்றங்கள் முறையே. வரை, கறை, குரு, கறடு, சுப்பிரம், திரங்கல், தோல் தேய்ந்தன, தோல்கிடந்தன என்பனவாகக் குறிக்கப்பட்டுள்ளன.

(தெ. கல். தொ. 2, கல். 1, 3, 86, 93; தொ. 2:2, கல். 7; தொ. 2 2, கல். 34, 39, 46, 51)

**முத்தின்சலாபம் :** (அ) முத்துக் குளிக்கும் இடம். பாண்டிநாட்டின் கீழ்க் கடல் துறை. மன்னார் வளைகுடாவிலுள்ள கொற்கைத் துறை.

''*முத்தின் சலாபமு முத்தமிழ்ப் பொதியிலும்*''

(முதற்குலோத்துங்கன்—மெய்க்கீர்த்தி)

**முத்தின் சிடுக்கு :** (கலை) முத்தாலான காதணி (தோடு)

''*முத்தின் சிடுக்கு ஓரணையிற் கோத்தமுத்து பதினெட்டும் பொன்னும் உட்பட*''

(தெ. கல். தொ. 2;2. கல். 51)

முத்தின் சூடகம் ; (கலை) இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட பொன் நகாசு வளையல்.

*''முத்தின் சூடகம் ஒன்றில் துண்டம் இரண்டிற் கறடிகை ஆறும் கேவணம் வைத்து லிளக்கிக் கட்டின பளிங்கு எழுபத்தொன்பதும்''*

(தெ. கல். தொ. 2:2. கல். 51)

முத்தின்வகை : (பொ) இரத்தினங்களுள் ஒன்றான முத்தின் வகைப் பலவாயினும் தஞ்சை இராசராசேச்சுரக் கல்வெட்டுக்களில் முதல் இராசராசன் அளித்த இரத்தின அணிகளில் இடம் பெற்ற முத்துக்கள் முறையே-வட்டம், அனுவட்டம், ஒப்புமுத்து, குறு முத்து, சப்பத்தி, சக்கத்து, நிம்போளம், பயிட்டம், பழமுத்து, சிவந்த நீர், குளிர்ந்த நீர், அப்புமுது, அப்புமுதுபாடன், கறடு, இரட்டை, இப்பிப்பற்று, அராவன, பாணிச்சாய், தோல் தேய்ந் தன; திரங்கல், தோலிடந்தன பருமுத்து, ஒருபுறவன் எனப்பல வகைகளாகக் குறிக்கப்பட்டுள்ளன.

(தெ. கல். தொ. 2, கல். 1, 3, 7, 34, 39, 46 51, 86, 93)

முத்தின்வளையல் : (கலை) பொன்வளையலின் மேல் முத்துக்கள் பதித்தும், கட்டியும் செய்யப்பெறும் வளையல்.

*''பொன் கொடு செய்த முத்துவளையல் ஒள்று-கோத்தமுத்து முன்னூற்று ஐம்பத்து மூன்றினால்''*

(தெ. கல். தொ. 2. கல். 3)

முத்து : (பொ) கடலில் அலையற்ற பகுதிகளில் ஒருவகைக் கிளிஞ்சில் இனமாகும் சிப்பியின் அகட்டில் உருவாகும் மணி. இரத்தினம் ஒன்பதனுள் வெண்மையான நிறமும் ஒளியும் திரட்சியும்பொருந்தி விளங்குவது. தரத்தில் உயர்ந்த முத்தினை அணிவதால் நலம் பல விளையும் என்பர். இதன் வகைகளையும், இயல்புகளையும் அணிகலன்களில் இவை இடம் பெறும் சிறப்பினையும் முதல் இராசராசன் தான் எழுப்பிய தஞ்சை இராசராசேச்சுரத்திற்கு அளித்துள்ள திருவாபரணங்களை விளக்கும் கல்வெட்டுக்கள் புலப் படுத்துகின்றன. முத்தின்வகை பார்க்க

(தெ. கல். தொ. 2 : 1 - 3)

முத்துவடம் : (கலை முத்துக்களால் ஆனமாலை. முத்துச்சரமாலை. (கழுத்தணி)

**முதல் :** (பொ) செலவுக்குரிய வருவாயாக அமைத்துவைக்கும் பொன்னும் பொருளும் நிலமுமாகிய மூலநிதி.

*"முதல் வாடாக் கடன்"*

(தெ. கல். தொ. 8, கல். 315)

**முதல்வாடாக்கடன் :** (பொ) முதல் அழியாத நிலையில், வட்டி மட்டும் தொடர்ந்து செலுத்தும் கடன்தொகை.

*"இவர் பக்கல் நாங்கள் முதல் வாடாக்கடனாக பொலிசை இடகைக் கொண்ட காசு நாலாயிரம்"*

(தெ. கல். தொ. 8, கல். 345)

**முதலை :** (அ) முதலைக்குளம் எனும் ஊர், திருநெல்வேலி மாவட்டம் நாங்குநேரி வட்டத்திலுள்ளது முதலைக்குளம் என்ற ஊரின் பெயரே முதலை எனக் குறிக்கப்பட்டுளது.

**முதுகண் :** (வ) வாரிசு, சொத்துரிமை வாரிசுதார். உறவுவழி உரிமைத் தொடர்பு.

*"ஸ்ரீமூலத்தானமுடையார்க்கு நொட்டூர் திருவாண்டாள் சாநியேந், எந் மகந் தாமோதிரபட்ட நாந வீரகத்திரபிள்ளையை முதுகண்ணாக கொண்டு-தண்ணீர்பட்டி ஒருமாவரையும் தலைப் பாடகம் அரைமாவும் களர் ஒருமாவரையும கீழை தெருவில் மனை அரையும் தேவர்க்கு தேவதாநமாக குடுத்தேன்"*

(தெ. கல். தொ 7, கல். 47)

*"இவ நுக்கு முதுகண் பட்டு விற்ற பெருமருதூர் கருணாகர நம்பி எழுத்து"*

(தெ. கல். தொ. 12, கல். 184)

*"திருச்சிற்றம்பலக் கூத்தனை முதுகண்ணாகவுடைய இவன் பிராம்மணி மாதேவன் சாத்தி"*

(தெ. கல். தொ. 12. பகு. 1, கல். 171)

**முதுநிலம் :** (வே) இயற்கைமாறாமல் இருக்கும்நிலம். காடும் மேடுமாக உள்ள நிலம்

**முயங்கி :** (அ) பல்லாரி மாவட்டத்திலுள்ள உச்சங்கிதுர்க்கம் என்னும் ஐதராபாத் மாவட்டத்திலுள்ள மாஸ்கி என்னும் பெருநகர் என்றும் கூறுவர். இதனை முதல் இராசேந்திரன் வென்றுள்ளான்.

*"முயங்கியில் முதுகிட்டொளித்த சயசிங்கன்"*

(முதல் இராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

**முரப்பு :** (வே) பரற்கல்லும், கரம்புமாக முரண்படக்கிடக்கும் நிலப் பரப்பு. வன்னிலம்.

**முரிப்பு :** (வ) (முறிப்பு) நேர்திருப்பம். ஒடிந்த வளைவு. கட்டடங் களின் மூலைத் திருப்பம்.

*"திருநந்தாவனத்துக்கு எல்லையாவது நள்ளாற்று முரிப்புக்கு மேற்கும்"*

(தெ. கல். தொ. 5, கல். 251)

*"உத்தம சோழர் காஞ்சிபுரத்துக் கோயிலில் கீழை முரிப்பில் எழுந்தருளியிருக்கையில்"*

(தெ. கல். தொ. 19, கல். 169)

**முழத்தின்கீழ் :** (வா) நீட்டலளவையுள் ஒன்று. முழம் என்ற அளவைக்குக்கீழ்ப்பட்ட சாண் விரல்,தோரை முதலிய அளவைகள்

*"இருமுழமே இருபதிற்று விரலேய் ஆறுகோரை சுற்றிற் கனமாகச் செய்து இவரைக் கவித்த பிரபை ஒன்று"*

(தெ. கல். தொ. 2, கல். 52)

**முளைப்புழுதிச் செய் :** (வே) நாற்றங்கால் நிலம்.

*"இத்தேவர் திருமுளைப்புழுதிச் செய்க்குத் தெற்கும்"*

(தெ. கல். தொ. 8, கல். 585)

**முற்பாடு பிற்பாடு :** (மொ) முன்னர், பின்னர். முன்னதாக அதன் பின்னதாக.

*"நூற்றுக்கால் திருமண்டபத்து நாயனார் நாடற்கரிய கூத்தரும் நாயகரும் ஏறி அருளினால் முற்பாடு திருத்திரை எடுத்ததால் பதி யிலார ஆடவும் பிற்பாடு திருத்திரை எடுத்தால் தேவரடியார் ஆடவும் கடவதாக"*

(தெ. கல். தொ. 8, கல். 333)

**முற்றூட்டு :** (வே) அறுவடை முடிபில் செலுத்துதல். கார், சம்பா, நவிரை ஆகிய பட்டங்களின் மகசூல் முடிபாக, குத்தகைக்குரிய நெல்லவளவை அவ்வக்காலங்களில் செலுத்துதல்.

*"இந்நிலம் அஜு கொண்டானே இந்நிலம் உழுது பயிர் ஏற்றி முற்றூட்டும் [illegible]ண்டு வந்து திருமுற்றத்து அளப்பதாகவும்"*

(முதல் இராசேந்திரன்—தெ. கல். தொ. 5, கல். 678)

புலவர், சோதிடர், கலைஞர் ஆகிய முத்திறத்தார்க்கும் இறையிலியாக அளிக்கப்பெறும் நிலமும் முற்றூட்டென்று குறிக்கப் பெறும்.

*"பூம்புலியூர் நாடகஞ்செய் நாவலன் பெற்ற நிலம்"*

(முதற்குலோத்துங்கன, தெ. கல். தொ. 7, கல். 753)

**முன்பிலாண்டு :** (மொ) முன், கடந்த ஆண்டு முன்னே சென்ற வருடங்கள்.

**முன்னிவாஜகம் :** (மொ) முன் இ வாசகம். முற்காலத்தில் கல்வெட்டிலிருந்த இந்த செய்திவிளக்கம்.

*"முன்னிவாஜகம் வெட்டிக்கிடந்த தனிக்கல்லால் உபையோகம் இல்லாமையால் அது தவிந்தது"*

(நிருபதுங்க பல்லவன், தெ. கல். தொ. 12, கல். 78)

**முன்னீர்ப்பழந்தீவு :** (அ) கடலிலுள்ள பழமையான தீவுகள் இசை பன்னீராயிரம் தீவுகளடங்கிய கூட்டமாகும். தமிழகத்தின் தென் மேற்கில் இந்துமாகடலில் அமைத்த மால்டிவ்ஸ் தீவுகள் என்று கூறப்படும். பழமையான தீவுகளாகும். இதனை இலட்சத்தீவுகள் என்றும் கூறுவர். இத்தீவுகள் கடல்கொண்ட தமிழகத்தின் எஞ்சிய பகுதிகளாகும். முதல் இராசராசன் இத்தீவுகளைக் கடற்படையால் வென்று கைபபற்றியுள்ளான்.

*"முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும்"*

(முதல் இராசராசன் — மெய்க்கீர்த்தி)

**முன்னுடையாரும் பழம் பேரும் நீக்கி :** (வ) நிலம் முன் யாவருக்கு உரிமையாய் இருந்ததோ அதைப் பொருள் கொடுத்துத் தனதாக்கியபின், அவர் பெயரையும் நிலத்திற்கமைந்த அவரது உரிமைப் பெயரையும் வரிக்கணக்கில் இருந்து நீக்கி-தன் பெயரால் பதிவு செய்வது, பண்டைய நிலக்கிரைய சாசன வழக்கு.

*"இந்நிலம் ஏழுசெலியும் இறையிலி காராண்மையுமுட்பட முன்னுடையாரும் பழம பேரும் நீக்கி"*

(திருவாங்கூர் கல்வெட்டுத் தொகுதி 2:1. பக். 18)

**முன்னூற்றுவன் திருவாரூரன் :** (சம) தமிழகத்தில் சோழர் பாண்டியர் ஆட்சியில் விளங்கிய சைவாகநெறியுடைய சிவாச் சாரியார்கள் 48,000-பேர்களுள் முன்னூற்றுவர் அடங்கிய குழுவினருள் திருவாரூரன் என்பவர் ஒருவராவரென்பது இதனால் புலனாகும்:

(தெ. கல். தொ. 14, கல். 64)

**முன்னொடுக்குவித்தான் :** (மொ) முன்னரேயே கணக்கில் செலுத்துவித்தான்

**மூக்குவட்டகை** (பொ) இக்காலத்தில் மூக்குவட்டா என்று கூறும் மூக்குடன் கூடிய குவளை.

*''ஸ்ரீராஜராஜதேவர்—சேரமானையும் பாண்டியர்களையும் மலைநாட்டு எறிந்து கொண்ட வெள்ளியின் திருப்பரி கலங்கள்—மூக்குவட்டகை ஒன்று''*

(தெ. கல். தொ. 2, கல். 91)

**மூத்தவரைதிகை :** (மொ) மூந்தவர்த்திகை அனுபவம் மிகுந்த நிலையில் தொடரும் பணி. சோழர் அரசியலில் ஒற்றர் தூதுவர் ஆகியோர் இத்தகுதி பெற்றவராகவே இருந்துள்ளமையை இத்தொடர் குறிக்கின்றது.

*''முத்தவரைதிகை தூதன்...வீரஸ்ரீ ஆலகுடையான்''*

(முதல் இராசராசன் - தெ. கல். தொ. 5, கல். 652)

**மூலப்பருஷையார் :** (சம) உரிமையும், பொறுப்பும் உள்ளகோயில் நிர்வாகத்தினர் இவர்கள் அர்ச்சகர், தேவகன்மிகள், கணக்கர், ஸ்ரீகார்யம் செய்வார் ஆகியோராவர். கல்வெட்டுக்களில் மூலப்பரடையார் மூலப்பருடையார் என்றெல்லாம் கூறப்பெறுபவர் இவரேயாவர்.

*'பெரும்பற்ற புலியூர் மூலப்பருஷையார்,'' ''திருக்குட மூக்கில் மூலபரடைப் பெருமக்கள்''*

(தெ. கல். தொ. 19, கல். 95)

**மூவேந்தவேளான் :** (அ) சோழர் அரசியலில் உயர்ந்த பதவிகளைப் பெற்றிருப்பார்க்கு அளிக்கப்பட்டிருந்த விருதுப்பெயர்.

*''ஸ்ரீகார்யம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனான தென்னவன் மூவேந்த வேளான்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 41)

மூன்று சுற்றுப்பேழை : (மொ) மூன்று சுற்றாகப் பெட்டிபோல் பொருந்திய வால். இது, பதஞ்சலி முனிவரின் சிலை அமைப்புப் பகுதியாகும்.

(த. பெ. கோ. கல்வெட்டு)

மூன்றுதூணி ஒருகலம் : (பொ) மூன்று தூணி முகத்தல் அளவு கொண்டது ஒருகலம்.

*''ஆகநாள் 1-க்கு, நெல்லுத் தூணியாக நாள் 360-க்கு நெல் 120 கலத்தின் நெல்லு நூற்றிருபதின் கலமும்''*

(தெ. கல். தொ. 8, கல். 285)

மெஞ்சை : (வே) மென்செய், உழுது. நீர்விட்டு மென்மையாக்கப் பட்ட நீர்நிலம். நன்செய்.

மெய்க்காவல் : (சம) கோயில் பாதுகாவலர். தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுக்களில், ''மெய்காப்பு'' என்று பெயர் கூறப்பட்டுளது.

*''நித்தவினோதவளநாட்டுப் பாம்புணிக் கூற்றத்துச் சிற்றம்பர் ஊரார் இடக்கடவ திருமெய்க்காப்பு ஒன்றும்''*

(தெ. கல். தொ. 2:2, கல். 57)

மெய்கண்டு : (வ) இத்தனை ஆள் என்பதை நேரிற்கண்டு. (மெய்—ஆள்)

*''இந்நெல் தண்டவந்தார்க்கு மெய்கண்டு சோறு கொடுப்ப தாகவும்''*

(தெ. கல். தொ. 8, கல். 5)

மெய்க்கீர்த்தி : (அ) சோழபாண்டிய மன்னர்களின் கல்வெட்டுச் சாசனங்களின் முதற்பகுதியே மெய்க்கீர்த்தி எனப்படும். இப்பகுதி அகவல்சீர் அமைதியுடன் சீர் நான்காய் இரண்டடித்தொடையில், அரசன் மெய்ப்புகழ் எல்லாஞ் சொல்லியும், முடிவில் அவன் வரலாறு சொல்லியும், அவன் மனைவியுடன் வாழ்க எனச் சொல்லியும் அவன் இயற்பெயர் முன்னர் சிறக்க யாண்டெனக் கூறியும். முடிவதாகும். இதன் இலக்கணம், பன்னிரு பாட்டியல், வச்சணந்திமாலை முதலிய பாட்டியல் நூல்களில் காணப்படுகிறது.

சோழமன்னர் தங்கள் மெய்க்கீர்த்திகளில் தத்தம் வெற்றி களையே முறையாகக் கூறுவர், பாண்டிய மன்னரோ, தங்கள்

வெற்றிகளுடன் தங்கள் முன்னோர்களின் அருஞ்செயல்களையும் உடன் சேர்த்துக் கூறுவர்.

முதலாம் இராசராசன் முதலாம் இராசேந்திரன் ஆகிய சோழ மன்னர்களின் மெய்க்கீர்த்திகளில், இலக்கணம் குறித்தபடி. அரசனுடன் அவன் தேவியும் வீற்றிருந்தாள் என்ற செய்தி காணப்படவில்லை.

சோழபாண்டி மன்னரின் வரலாற்றின் அடிப்படைச் சான்று களாக அமைந்திருப்பது இம்மெய்க்கீர்த்திகளேயாகும்.

*''ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந் தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொள''*

(முதல் இராசராசன் மெய்க்கீர்த்தித் தொடக்கவும்)

*''திருமக ளிருந்தென வீரசிம் மாசனத்து, உலகுடையாளொடும் வீற்றிருந்தளிய-குலோத்துங்க சோழ தேவர்க்கு''*

(முதல்குலோத்துங்கன—மெய்க்கீர்த்தி)

**மெய் காவலர்:** (சம) திருக்கோயில்களைக் காவல் செய்பவர் இவர்கள் இருவகைப்படுவர். இவர்கட்கு நாள்நிவந்தமோ, காணி யாட்சி நிலமோ அளிக்கப்பெறுவது வழக்கு.

(திருமெய்க்காவல்—பார்க்க)

**மெய்ப்பூட்டுத்தீட்டு :** (வ) நபர்சாட்டுதல் சீட்டு. பாரம்பரிய உடன்படிக்கைச் சீட்டு.

*'இந்நால்வரோம் மெய்ப்பூட்டுத் தீட்டுக் குடுத்த பரிசாவது சந்திராதித்தவரையும் நாங்களும் எங்கள் வங்க்ஷத்தாரும் அளக்கக் கடவோமானோம்''*

(தெ. கல். தொ. 5, கல். 480)

**மெய்யால் திவஸம் :** (மொ) ஒருவர்க்கு ஒருநாளைக்கு. திவஸம். நாளொன்று.

*''இவர்களுக்கு மெய்யால் திவஸம் முன்னாழி நெல்லு''*

(தெ. கல். தொ. 5, கல். 716)

**மெய்யாலரிசி நாடுரியாக :** (வ) ஆள் ஒன்றுக்குரிய சோற்றரிசி நாழியும் உரியும் கொண்ட அளவினதாக (மெய்-ஓர் ஆள்)

*"ஆயிரவர்க்கும் பத்தெட்டுக்குடுத்தல், மெய்யாலரிசி நாடேரி யாக நிசதம் மரிசி இருநூற்றறுபத்திருகாடி"*

(தெ. கல். தொ. 8, கல். 529)

**மெழுக்கு அடிகள்மார் :** (சம) கோயிலில் இரவு வழிபாட்டின் போது தீவர்த்தி விளக்கு, ஆகியவை பிடிக்கும் ஊழியர்.

*"இராஸ்ரீ பலி எழுந்தருளும் பொழுது எரியக்கண்ட இருப்பு பிடி விளக்கு முப்பதினுக்கு நிசதம் எண்ணெய் நாழி உழக்கு. இவை பிடிப்பார் மெழுக்கடிகள்மார் நால்வர்"*

(முதல் இராசராசன், கி.பி. 990) (தெ. கல். தொ. 5, கல், 625)

**மென்செய் :** (வே) உழவு செய்வதற்கு ஏற்புடைய மென்மையான நன்செய் நிலம். நிலத்தை உழுது மண்ணை மென்மையாகச் செய்யப்பட்ட நிலம்.

*"தோட்டமும் அகையாறும் புன்செய் மென்செயும்"*

(நிருபதுங்கவர்மன், தெ. கல். தொ. 4, கல். 531)

*"தொடிப்புழுதி கஃசாக"*

உழுத நன்செய்நிலம் - (குறள்)

*"புன்செய் மென்செயுமாக ஒன்பது மாநிலம்"*

(தெ. கல். தொ. 19, கல். 71)

*"உண்ணில மொழிவின்றியே நீர்நிலமும் புன்செயும் மென் செயும்"*

(தெ. கல். தொ. 5, கல். 679)

**மேகடம்பம் :** (அ) மேகாடம்பரம். நிழல் செய்வதற்குரிய அமைப்பில் ஒப்பனை செய்யப்பட்ட மேற்கட்டி (விதானச் சீலை)

*"வெண்சாமரையும் மேகடம்பமும்"*

(வீரராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

*"ஆகவமல்லனின் நாளோளக்க மண்டபத்தின் பேற்கட்டியாக ஒப்பனையுடனும் ஓவியத்துடனும் விளங்கிய விதானம் இதனை வீரராசேந்திரன் கைப்பற்றியுள்ளான்"*

**மேதினி விளக்கு :** (அ) உலகத்தில் தம்புகழ் விளங்கும்படிச் செய்து. (வீரராசேந்திரன்-மெய்க்கீர்த்தி)

**மேநடைநீர் :** (வே) பருவகாலத்தில் பாசன வாய்க்காலில் பெருகி வரும் நீர். முதலாவதாகப் பெறும் பாசனநீர்.

"*இவ்வாய்க்கால் மேநடைநீர் பாயப்பெறுவதாக*"

(தெ. கல். தொ. 19, கல். 344)

**மேல்வாரம் :** (வே) நிலக்குத்தகை—வருவாய். நிலத்தை உழுது பயிரிட்டுப் பயன்பெறுபவன், உரிமையாளருக்கு, போகங்களின் பங்கீட்டு முறைமையாகச் செலுத்தும் நெல்வருவாய்.

"*இந்நிலம் உழுது மேல்வாரத்தால் வந்த நெல்லு தேவர் பண்டாரத்தே அளப்பதாநோம்*"

(தெ. கல். தொ. 8, கல். 66)

"*இதில்மேல் வாரத்தால் வந்த நெல்லு ஆயிரத்திருநூற்றிபத்தைங்கல்*"

(தெ. கல். தொ. 4, கல். 223)

"*பட்டி ஒன்றினுக்கு மேல்வாரத்தால் வந்த நெல்லு அறுபது கலமாக இருபத்திரண்டு பட்டியால் நெல்லு-1320 கலமும்*"

(1-பட்டி-60 கலம்) (தெ. கல். தொ. 17. கல். 243)

**மேலடுத்தது :** (மொ) பெயரின் மேல் கொடுக்கப்பட்டது. பெயருக்குத் தொடர்ந்து வழங்கியது. (ஒதுக்கப்பட்டது)

"*மன்றாடி சாத்தன் அசலஞ்சி மேலடுத்த ஆடு-32, மன்றாடி ஆச்சன் தம்பிமார் மேலடுத்த ஆடு-32.*"

(தெ. கல். தொ. 19. கல். 132)

**மேலேற்றமாக :** (மொ) அதிகப்படியாக, முன் செய்ததைவிட கூடுதல் அளவுடையதாக

"*அமுது செய்தருளி வருகிற வெண் போனகத்துக்கும், பருப்புப் போனகத்துக்கும், அப்பத்துக்கும் மேலேற்றமாக பால்ப் போனகமும்*"

மேல் அளவுள்ளதாகப் பால் பொங்கலும்)

(தெ. கல். தொ. 12, பகு. 1, கல். 201)

**மேவரு மனுநெறி :** (அ) மேலானதாகத் தொடர்ந்து வருகின்ற மனுவென்னும் மன்னன் வகுத்த அரசியல் வழி.

*"மேவரு மனுநெறி விளக்கிய கோவிராசகேசரி வர்மரான உடையார் ஸ்ரீ வீரராஜேந்திர தேவர்க்கு"*

(மெய்க்கீர்த்தி)

மேழி : (வே) நிலம் உழும் கலப்பை, ஏர்.

*"மேழிபிடித்து உழக்கடவார் எல்லாரும் விடக்கடவராகவும்"*

(தெ. கல். தொ. 5. கல். 496)

மேழித்தோரணம் : (வ) தென்னைக்குருத்தொலையில் ஏர்கலப்பை வடிவில் கீறி பின்னலிட்டு வரிசையாகக் கட்டப்படும் தோரணம். சித்திரமேழி பெரிய நாட்டாரின் இலச்சினைகளுள் இத்தோரணம் ஒன்றாகும்.

*"இத்திருமுற்றத்திலே பூமிபிராட்டியை எழுந்தருளுவித்து, மேழித் தோரணமும் சாத்தி"*

(இராசாதிராசன், கி.பி. 1048)

(தெ. கல். தொ. 8, கல். 291)

மேற்படி : (மொ) மேலே குறித்தபடி.

*"மேற்படிவைத்த திருநந்தாவிளக்கு க-ஆக விளக்கு அஞ்சு"*

(தெ. கல். தொ. 5, கல். 468)

மேற்படியான் : (மொ) மேலே சொல்லப் பெற்றவன்.

*"திருக்கழுங்குன்றக் கண்ணப்பந் வைத்த திரு நுந்தாவிளக் ஒன்று-மேற்படியாத வைத்த விளக்கு க-ஆக திருநந்தாவிளக்கு ஆறு"*

(தெ. கல். தொ. 5, கல். 468)

மேன்பார்க்கெல்லை : (வ) மேல் பால் எல்லை, மேற்குப் பக்கத் எல்லை.

இறையிலி செய்யப் பெற்ற, அல்லது விலைக்குப் பெறப்பட்ட நிலத்திற்கோ, கிராமத்திற்கோ அமைந்த நான்கு பக்க எல்லை களையும் முறையாகக் கண்டு உள்ளவாறு சாசனத்தில் குறிப்பது வழக்காகும்.

*"மேல்பாற்கெல்லை வடக்கு நோக்கி நாட்டுப் போக்குத் தலைவாயர் வெட்டிப் பேற்றுக்குக் கிழக்கும்"*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

*"மீபாற்கெல்லை-புதுக்குடி எல்லைக்கும் கிழக்கும"*

(தெ. கல். தொ. 3:2, பக். 168)

**மேற்கட்டுக்கூறை :** (சம) கோயில்களின் இறையகம், கல்புறை மடைப்பள்ளிக் கட்டு ஆகிய இடங்களில் உள்ளகத்தின் மேல் விதானம் போன்று வெண்மையானதும் நீளமும் அகலமும் பொருந்தியதுமான துணிகளை விரிப்பாக அமைப்பது கோயில் நியதிகளுள் ஒன்றாகும்.

*"ஸ்ரீகற்பகிரகத்துக்கட்டு மேற்கட்டிக்கு வெண்கூறை இணை"*

*ஸ்ரீ மடைப்பள்ளிக்கட்டு மேற்கட்டிக்குப் புடவை இணை"*

*"கல்புறைக்குப் புடவை இணை"*

(தெ. கல். தொ. 14, கல். 16-அ.)

**மேனி :** (வ) முழுமை. முழுத்தொகை. விகிதம். அளவு முறை. விழுக்காடு

*"வாடாக் கடமையாகத் தண்டல்மேனி நானூற்றைம்பது பொன்"*

(தெ. கல். தொ. 5, கல். 305)

மாவுக்கு இருபது கல நெல் விளைவில் ஐந்து மேனி குத்தகை அளப்பது.

(மேனி - விகிதம்)

**மேனோக்கின மரமும் கீனோக்கின மரமும் :** (வ) வானை நோக்கி எழும் பயன்தரும் மரங்களும், பூமியின் கீழ் அகழ்ந்துள்ள கிணறும், நீர்நிலைகளும்.

*"இக்கூறு கோல் மூன்றரையில் நின்ற இளமரம் தெங்கு, மா, நெல்லி, நாவல் உள்ளிட்டு மேனோக்கின மரமும் கீனோக்கின கிணறும் பாகாஸ்ரயங்களும்"*

(முதற்குலோத்துங்கன், தெ. கல். தொ. 4, கல். 5'2)

**மையச்சையம் :** (அ) மேற்குமலைத்தொடர்ச்சி மலை, விந்தியமலை என்றும் கூறுவர்.

*"மத்த வெங்கரிபடு மய்யச் சையமும்"*

(முதல் குலோத்துங்கன் —மெய்க்கீர்த்தி)

மொரலியம் : (கலை) (மோர்வியம்) துளையிட்டு இசைக்கும் இசைக் கருவிகளுள் ஒன்று. முகவீணை என்றும் கூறுவர்.

மோதிரம் : (கலை) கைவிரல்களில் அணிவிக்கும் அணிகலன். இது பொன்னில் இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட வேலைப்-பாட்டுடன் திகழும்.

*"ரத்ந மோதிரம், ஒன்றிற்கட்டின வயிரம் நாலும் மாணிக்கம் ஒன்றும்"*

(தெ. கல். தொ. 2, கல். 93)

ஸ்ரீமுகம் கண்டு : (அ) அரசனுடைய ஆணையினை எழுதிய ஓலை யைக் கண்டு, அரசன் புதிதாக அனுப்பும் ஆணையை கிராமசபை-யார் ஏற்று; அச்செயல் உடனாக நிறைவேற சபை உறுப்பினருள் தக்காரை வாரியமாகத் தோற்றுவித்துச் செயல்படுத்துவது வழக் கென்பது இதனால் புலனாகினறது.

*"ஸ்ரீமுகம் அருளிச் செய்துவர, ஸ்ரீ முகம் கண்டு பிரஸாதப்பட்டு ஸபையோரும் வாரியமிட்டு ஸ்ரீமுகப்படியே கல்லில் வெட்டு விக்க"*

(முதல் இராசராசன், கி.பி 1005, கல்வெட்டு அறிக்கை எண். 200/1901.)

வக்கிரப்பாதன் : (வ) தர்மத்திற்கு மாறுபட்டவன் (பல்லவர்காலக் காப்புரை)

*"இதற்கு வக்கிரப்பாதான் சந்திராதித்யருள்ளதனையும் நரகத் தினிற்பானாகவும்"*

(தெ. கல். தொ. 12, பகு. 1. கல். 34).

வங்கிஷம் : (சமு) வம்சம், குடும்பவழி, வங்கிசத்தார். ஒருகுடும்பத்தில் வழிவழியாகப் பெருகிவரும் சுற்றத்தார்.

*"இது, என் வங்கிஷத்தில் இறக்குவான் சிவத்தரோகியுமாய் கெங்கை இடைகுமரியிடை குராற்பசு கொன்றான் செய்த பாவங் கொள்வான்"*

(தெ. கல். தொ. 8, கல். 130).

*"இது நானாதல் என் வங்கிஷத்திலுள்ளாராதல் மாறுவான் கெங்கைக் கரையில் குரால் பசுவைக் கொன்றான் பாவங் கொள்வான்"*

(தெ. கல். தொ. 8, கல். 110, 130)

வசக்கி : (மொ) வயக்கி. காடும் மேடுமாய்க் கிடந்த நிலத்தைச் சீர் செய்து.

*"ஊரின் மேலூர் புற்றும் தெற்றியுமாய்க் கிடதத பாழ் நிலத்தை. வசக்கி வயலும் குளமுமாக்கி"*

வசம் : (மொ) இடம். இடத்து.

*"தானத்தார் வசம் குடுத்து"*

வட்டம் : (அ) முதல் பராந்தகன் ஆட்சியில் நாட்டுப் பிரிவுகளுள் ஒன்றாக இச்சொல் பயன்படுத்தப்பட்டுளது. பல ஊர்களடங்கிய சூழலே வட்டமாகக் கணிக்கப்பட்டுள்ளது. இக்காலத்தில் ஓரூரின் உட்பிரிவுகளாகக் குறிக்கின்றனர். இச்சொல், ஊதியம் வருவாய் ஆகியவற்றிற்கமைந்த காலவரையறையினைக் குறிக்கும் வழக்குச் சொல்லாகவும் பயின்று வருகின்றது.

*"இடையாற்று நாட்டு வடகரையூர் நாட்டு சிற்றாயல் வட்டத்து சிற்றுவக்குடி"*

(தெ. கல். தொ. 7, கல். 515)

*"திருமறைக்காடுடையார் கோயில் முப்பது வட்டத்துக் காணி யுடைய சிவபிராமணர்"*

*"இந் நாயனார் கோயில் முந்நூற்று இருபது வட்டத்து காணி யுடைய சிவபிராமணர்"*

(தெ. கல், தொ. 17, கல். 454, 461)

*"இவர்களிருவர்க்கும் - ஆட்டைவட்டம் புடவை முதலுக்கு நெல் பதின்கலம்"*

(தெ. கல். தொ. 14, கல். 86)

வட்டங்கண் கூலி : (அ) நாணயமாற்றம் செய்யும் தரகர் பெறும் கூலி எனலாம்.

வட்டமுத்து : (பொ) வட்டவடிவில் அமைந்த முத்து. பிறப்பிலேயே தட்டையான வடிவில் வட்டமாக அமைந்த முத்து.

வட்டிநாழி : (அ) வட்டித்தொகை பெறுதற்குரியதாகப் பெறப்படும் பழையவரி. இதனை, நெல்லாகப் பெறும் வரியென்றும் கொள லாகும்.

வட்டில் : (கலை) உலோகத்தால் செய்த நிவேதனத்தட்டு. கிண்ணம்

*''வட்டில் பஞ்சவன் மாதேவி என்னும் திருநாமத்தால் விளங்கிற்று ஒன்று''*

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

**வட்டி வாணிபம்** : (வா) பொருளை முதலாக வைத்து, கடனாகக் கொடுத்து கடன் தொகைக்குரிய வட்டிக்காசினைக் கால அளவு நியதிப்படிப் பெற்றுவரும் வாணிகம்,

*''புறவரவாவந்து வட்டி வாணியஞ் செய்வாரையும் உள்ளூரிலிருந்து வட்டி வாணியஞ் செய்வாரையும் வட்டியால் நாழி நெல்லாகக் கொண்டும்''*

(தெ. கல். தொ. 17, கல். 235)

**வடதலையில்** : (மொ) வடக்குத் தலைப்பில். தலை, தலைப்பு, முகப்பிடம்.

*''ஊர் வடதலையில் நத்தமும்''*

**வடவாயிற் செல்வி** : (சம) ஊரின் வடக்கு வாயிலில் அமர்ந்திருக்கும் கொற்றவை. கோட்டையின் வட வாயிலின் காவல் தெய்வமாகவும், கொற்றவையின் திருக்கோயில் விளங்கும்.

**வடுகவழி பன்னீராயிரம்** : (அ) வாணர்களுடைய நாடு நெல்லூர், குண்டூர், கடப்பை முதலிய பகுதிகளாகும். இதில் பன்னீராயிரம் என்பது பூமியின் பரப்பைக் குறிப்பதாமென்பர். பன்னீராயிரம் ஊர்களைக் கொண்ட பரப்பிடம் என்பதனை, முடியலூர் சாசனம் உணர்த்துகின்றது. (வடுகர்வழி - வடுகர் நாடு)

*''நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும், வால் நிணப்புகலின் வடுகர் தேயத்து''*

(அகம் - 213 : 7—8)

**வடுகவாளி** : (கலை) வடுகர் நாட்டு மகளிர் காதில் அணியும் தொங்கல். முதல் இராசராசன் மனைவியருள் பஞ்சவன்மாதேவியார் என்பவள் தஞ்சையழகருடன் செய்தமைத்த உமாபரமேஸ்வரிக்குரிய காதணியாகச் செய்ளிதத்த முத்திலான வடுகவாளி.

*''வடுகவாளி ஒன்றில் கோத்தமுத்து ஒன்பது''*.

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

(வடுகர்நாடு—தெலுங்கர் நாடு)

**வண்ணக்கன்** : (சமு) சலவைத் தொழிலாளி: வண்ணச் சித்திரங்கள் எழுதுபவன்.

*''சனநாதக் தெரிந்த வலங்கை வேளைக் காறரில் வண்ணக்கன் ஐயாறனாகிய சித்திரயாளி''.*

தெ. கல். தொ. 17, கல்.238) (முதல் இராசராசன் கி.பி. 1007, முதல் இராசராசன் திருநெய்த்தானம் கல்வெட்டு).

**வண்ணம்** : (மொ) அளவு, ஒப்பு, முறைமை, விகிதம், ஈடு, நிகர். வண்ணமாக—ஒப்புடையதாக.

*''நாழிக்கு நெல்லு தூணிவண்ணமாக ஓராட்டை நாளைக்கு நெல்லு 120-கலமும்''.*

(தெ. கல். தொ. 14, கல். 210)

*''நெல்லு குறுவாள் கூலி ஏற்றி அஞ்சிரண்டு வண்ணத்தால் அறுநாழி உழக்கும்''*

(ஐஞ்சுக்கு இரண்டு வீதம்)

(தெ. கல். தொ. 19, கல். 210)

*''பொன் ஒன்றுக்கு நெல்லு ஏழுகல வண்ணமாக''*

(ஒருபொன்னுக்கு ஏழுகலநெல் ஒப்பு)

(தெ. கல். தொ. 17, கல். 328)

**வண்ணார் கற்காசு** : (அ) நீர்நிலைகளில் வண்ணார் துணி துவைப்பதற்கென்றும், காயவைப்பதற்கென்றும் அமைத்துக் கொள்ளும் கற்கள் பரப்பின இடத்துக்குப் பெறும் காசு வரி. இதனை வண்ணார்பாட்டம் என்னும் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பெறும்.

**வண்ணானைக் கும்பிட்டார்** : (சம) முதல் குலோத்துங்கன் ஆட்சியில், தகடூர் நாட்டைக் காத்திருந்த அதிகாரியின் பெயர். இப்பெயர் சேரமான் பெருமாள் நாயனாரின் சிறப்புப் பெயர்களிலொன்றாகும். (பெரியபுராணம்)

*''திருக்காளத்தியினின்றும் ஆண்டார் வண்ணானைக் கும்பிட்டார் ரெழுந்தருளி''*

(தெ. கல். தொ. 7, கல். 533)

**வண்ணிகைத் திருக்கொற்றக் குடை** : (சம) ஒப்பனை செய்யப் பெற்ற கொற்றக் குடை.

*"வண்ணிகைத் திருக்கொற்றக் குடை மகுடம் மொட்டு அடுத்து விளக்கின பறளை உள்பட ஒன்று"*

(தெ. கல் தொ. 2, கல். 1)

**வயக்கல் :** தரிசு நிலத்தைத் திருத்திப் பயிர் செய்வதற்குரிய நீர் நிலமாக ஆக்கப்பட்டது வயக்கல்.

*"திடல் வயக்கின நிலம்".*

(தெ. கல். தொ. 8, கல்.660)

*"கல்லி வயக்கின நிலம்"*

*"கல்லி நீர் நிலமாக வயக்குவித்த நிலன்"*

(தெ. கல் தொ. 8, கல். 655, 681)

*"தேவதானம் செய்தது முதல் இரூள் வரையலுந் செல்லப்பயிர் சென்றறியாத நிலத்தில், சேத்தரபாலர்க்கு திருத்திந ராஜராஜ வயக்கல்"*

(முதல் இராசராசன் கி பி. 1013, புதுக். கல். 92)

**வயிரம் :** (பொ) வைரம். இரத்தினங்களுள் முதன்மையானது. கனிப் பொருளாகப் பூமியிலிருந்து எடுக்கப்பெறுவது. அனுச்செறிவு மிக்க ஒளியுள்ள கரிப்பொருள். இது குணத்தாலும் குற்றத்தாலும் 12 வகைப்படும். (குணம்-6, குற்றம்-6)

*"ஸ்ரீ சந்தம் ஒன்றிற் கட்டின வயிரம் நாலும் மாணிக்கம் நாலும்"*

(தெ. கல். தொ. 2:3, கல். 93)

**வயிரம் உயர்ந்தவை :** (பொ) வயிரமணிகளில் உயர்ந்த தரமுடையவை இரண்டாகும். ஒன்று "ராஜாவர்த்தம்" மற்றொன்று "ஸப்ரயோகம்" என்பதாகும். இதனை மாணிக்கத்திற்கும் கூறுவர்.

**வயிரம் :** (மொ) (குணம் -6) வைரம். உயர்ந்த வயிரங்களில் அமைந்த குணங்கள் ஆறு என்பது இரத்தினநூல் வழக்கு. அவை அறு கோணமாயிருத்தல், இலேசாக இருத்தல், சமமான எட்டுத் தளங்களுடன் அமைதல், கூரிய முனைகளுடமை, ஒளித் தெளிவுடைமை, நான்கு பட்டைச்சவக்கமாக இருத்தல் என்பனவாகும்.

கல்வெட்டுக்களில் சிறந்த வயிரம் ராஜாவர்த்தனம் என்ற பெருடன் குறிக்கப்படுவதுடன், பளிங்கு, பொத்தி, தாளிம்பம்,

பளிக்குவயிரம், சப்படி, உருளை, கோமளம் என்ற பெயர்களுள்ளனவாகவும் வயிர வகைகள் குறிக்கப்பட்டுள்ளன.

பளிங்கு : உள்ளொளித் தெளிவுடனமைந்தது.
பொத்தி : கீழ் குழிவும் மேல்புடைப்பும் உள்ளது.
தாளிம்பம் : பனையோலை கீற்றுப்போன்ற வடிவுடையது.
பளிக்குவயிரம் : தூய ஒளியுடன் கூடியது.
சப்படி : சப்பையாக பிறப்பிலேயே இருப்பது.
கோமளம் : மென்மையும் வெளிறிய ஒளியும் பொருந்தியது.
உருளை : திரட்சியாக இருப்பது
பந்தஸாரம் : ஒன்றன் மேலொன்றாகப் படிந்த விளைவுடனிருத்தல்.

(தெ. கல் தொ. 2:1, 2:2.) (முதல் இராசராசன்)

**வயிரம் (குற்றம்—6) :** (பொ) வயிரங்களிலமைந்த குற்றங்கள் ஆறு வகைப்படும். அவை, (1) புள்ளி அல்லது பொறிவு பெற்றிருத்தல், (2) கோடு அல்லது முறிவு பெற்றிருத்தல், (3) நீரோட்டம் அல்லது இரத்தம் போன்ற செந்நிறமாக ஒளிவீசுவது, (4) அழுக்கு அல்லது வெந்தன போன்று மழுங்கலாக இருப்பது, (5) காகபாதம் அல்லது உள்ரேகையாகக் கீற்றோடி இருப்பது, (6) சப்படி என்னும் தட்டை வடிவில் அமைந்து இருப்பது என்பனவாம்.

1. பொறிவு, 2. முறிவு, 3. இரத்தபிந்து, 4. காகபிந்து, 5. வெந்தன, 6. மட்டதாரை, 7. மட்டசப்படி, 8. மட்டதாரை என்பன தஞ்சைப் பெரிய கோயிலில் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெறுவனவாம்.

(தெ. கல். தொ. 2:1, 2:2)

**வயிரம் கோத்த பட்டைக்காறை :** (கலை) வயிரங்கள் வைத்திழைக்கப்பட்ட பொற்பட்டைக் காறை (கழுத்தணி).

**வயிராகரம் :** (அ) மத்திய மாகாணத்திலுள்ள பெருநகரம். இதை முதற்குலோத்துங்கன் கைப்பற்றினான்.

"*மதவரையீட்டம் வயிராகரத்து வாரி*"

(முதற்குலோத்துங்கன் — மெய்க்கீர்த்தி)

**வர்ஷவர்த்தனம் :** (அ) ஆட்சி ஆண்டு நிறைவு வளர்ச்சி.

வர்ஷம்—ஆண்டு, ஆட்சியாண்டின் வளர்ச்சி

*"ஸ்ரீதந்திவர்ம மஹாராஜர்க்கு வர்ஷவர்த்தனம் யாண்டு பன்னிரண்டாவது"*

(இந்திய கல்வெட்டு வெளியீடு. தொ. 8, எண். 29)

**வரம்பறுத்த விளைநிலம் :** (வே) அளந்து எல்லையிட்டுப் பிரித்த நன்செய் நிலம். எம்மூர் வரம்பறுத்த விளைநிலமாயின வயல் நிலம்.

(தெ. கல். தொ. 12, கல். 102)

**வராக வெல்கொடி :** (அ) 11-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சாளுக்கிய பேரரசனாக விளங்கிய ஆகவமல்லன் காலத்தில் சாளுக்கிய நாட்டு அரசியல் சின்னமாகவும் கொடியிலமைத்த சின்னமாகவும் வராகம் பொறிக்கப்பட்டிருந்தது.

*"வேகவெஞ்சளுக்கு ஆகவமல்லன் வராக வெல்கொடி முதல் இராசபரிச் சின்னமும்-இணையன பிறவும் முனைவயிற் கொண்டு".*

(விசயராசேந்திரன் மெய்க்கீர்த்தி, கி. பி. 1056)

**வரிகளைக் கோயில் திருப்பணிக்கு உரிமை செய்தல் :** (சம) கிராம சபை வழிபெறும் வரி மகமைகளை அவ்வூர் கோவில் திருப்பணிக்கு உரிமை செய்யும் அரச ஆணை. பொத்தப்பிச் சோழன் ஆட்சியில் மணிமங்கலம் கோயில் திருப்பணிக்கு விடப்பட்டுள்ளது.

*"அனைத்து ஆயங்களும் திருப்பணிக்கு உடலாக விட்டோம். இன்னாள் முதல் இன்னிலத்தால் வந்த அனைத்தாயங்களும் ஊருடன் கூட்டாதொழ்வதாகச் சொன்னோம்".*

(தெ. கல். தொ. 6, கல். 256)

**வரிசிறையாய் கிடந்தபூமி :** (அ) வரி பெறுதற்கின்றி வரிதாகப் பயிரிடாமல் கிடந்த நிலம்.

*"ஊர்மஞ்சிக்கமாய் வரிசிரையாய்க் கிடந்தபூமி"*

(தெ. கல். தொ. 3:3, கல். 156)

**வரிசிலத்துக் கிடந்தபூமி :** (அ) வரி, சில்லாயம் முதலியன இல்லாமல் தரிசாகக் கிடந்த நிலம்.

*"ஊர்மஞ்சிக்கமாய் வரிசிலத்துக் கிடந்த பூமி".*

(தெ. கல். தொ. 3:3, கல். 156)

**வரிசைப்படி இறுத்து வருதல் :** (அ) அரசு விதித்த திட்டமுறைப் படி கொடுத்து வருதல். வரி இதுத்தல் - வரி செலுத்துதல்.

**வரிப்பொத்தகம் :** அரசுக்குரிய இறை, வரி ஆகியவற்றிற்குரிய கணக்குப் புத்தகம். இப்புத்தகத்தில் வரவு, தரவு விபரங்களை எழுதும் அதிகாரி, ''வரிப் பொத்தகக் கணக்கு'' என்று பெயர் பெறுவர்.

*''வரிப்பொத்தகம் சாத்தனூருடையான் குமரனரங்கனும், பருத்தி யூர்க்கிழவன் சிங்கன் வெண்காடனும் இருந்து-வரியிலிட்டுக் குடுத்த ஆனைமங்கலம்''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

*''இவ்வூர் ஆயமும் அந்தராயத்தால் காசுநெல் உள்பட தேவ தானமாகக் குடுத்தோமென்று வரியிலார்க்கும் வரிப்பொத்தகஞ் செய்வார்கட்கும் சொன்னோம்''*

(தெ. கல், தொ. 7, கல். 538)

**வரியிலிடல் :** கிராமசபையில் உள்ள நிலக்கணக்கில் புதிய நில வரிகளைப் பதிவு செய்தல்.

*''இவ்வூர் சபையார்க்குக் காசு குடுத்துவிலைக்கு கொண்டு சிவ சரணசேகர நல்லூர் என்னுந் திருநாமத்தால் வரியிலிட்டு இந் நிலம் ஐவேலிக்கும்''.*

(திருவாலீஸ்வரம் கல்வெட்டு)

**வரியிலார் :** வரிவிதிப்பவர். ஊரிற்கமைந்த இறை வரி கடமை ஆயம் உள்ளிட்ட வரிகளை, நேரிற்கண்டு கணக்கிட்டு விதிக்கும் அதிகாரி.

*''இவ்வூர் ஆயமும் அந்தராயத்தால் காசு நெல் உள்பட தேவ தானமாகக் குடுத்தோமென்று வரியிலார்க்கும் வரிப் பொத்தகஞ் செய்வார்கட்கும் சொன்னோம்''*

(தெ. கல். தொ. 7, கல். 538)

**வரியிலீடு :** (அ) வரிப்புத்தகம் என்னும் கிராம நிலவரிக்கணக்கில் சேர்க்கப்பட்ட வரிப்பதிவு. புதிய வரிகளை நிலவரி கணக்கில் சேர்க்கும் அதிகாரி.

*''வரியிலிடு உறுவூருடையான் தாழி வீரசோழன்''*

(பெரிய லெய்டன் செப்பேடுகள்)

**வல்லவர் கோன் :** (அ) சாளுக்கிய நாட்டவர் அரசன்.

''*வல்லவர் கோனை வரவு காணாது*''

(வல்லவர்கோன்—சாளுக்கிய ஆகவமல்லன்)

(வீரராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**வல்லவரையர் வந்தியத்தேவர் :** (அ) இவன் கீழைச்சாளுக்கிய மன்னன். முதல் இராசராசனின் தமக்கையார் குந்தவை தேவி-யாரின் கணவன்.

''*ஸ்ரீராஜராஜதேவர் திருத்தமக்கையார் வல்லவரையர் வந்தியத் தேவர் மஹாதேவியார்*''

(தெ. கல். தொ. 2:1, கல். 7)

**வலங்கை இடங்கைப் படைகள் :** (அ) இவ்விருவகைப் படைகளும் பகைவரின் குறும்பையோ அரணையோ வலதுபுறமாகவும், இடதுபுறமாகவும் வளைத்துச் சென்று போரிட்டு வெல்வதற்குரிய தனிப்பயிற்சி பெற்ற வெட்சி வீரர்களைக் கொண்ட காரணத்தால், வலங்கைப்படை, இடங்கைப்படை என்ற சிறப்புப் பெயர்-களைப் பெற்றிருந்தன. முதல் இராசராசன் ஆட்சியில் இப் படைகள் சிறந்த முறையில் வளர்ச்சியடைந்திருந்தன.

சோழர் படையில் வளர்ச்சியடைந்திருந்த இப்படைகள் முதல் குலோத்துங்கன் ஆட்சியில், சோழநாட்டில் காவிரிக்கு வடகரை-யில் கஞ்சனூரில் இவ்விருபடையும், படைவீடிருந்து, ஆட்சிக்குப் பகையாய் அமைந்திருந்த குறும்பொன்றை அழித்து, அவர்களது ஆநிரைகளைக் கவர்ந்து வந்ததை, திட்டைக்குடிக் கல்வெட்டு புலப்படுத்துகின்றது.

குறும்பெறிந்து ஆநிரை கவர்தலே, வெட்சித்திணையின் செயலாக,

''வேந்துவிடு முனைஞர் வேற்றுபுலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்''

என்று கூறும் தொல்காப்பிய இலக்கண மரபுடன், வெட்சி யாரின் செயல்களாகக் கூறப்பெறும், ''தந்துநிறை'' பாதீடு'' ஆகிய துறைகட்கமைந்த நிகழ்ச்சிகள், சோழர்காலத்தில், கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்திருப்பதனைக் கல்வெட்டொன்று புலப்படுத்துகின்றது

*"இத்தேவற்கு மூன்றாவது நாளிலே, சோழமண்டலம் இடங்கை வலங்கையாய் இன்னாயனார்க்குக் குறும்பெரிய காவேரிக்கு வடகரையில் கஞ்சனூரகத்திலே விட்டுக்கொடு இருந்து, குறும்பெறிந்து, நிரைகொண்ட ஆடும், மாடும், எருமையும், கிடாவும், இன்னாயனார் திருத்தான்தோன்றி சுரமுடைய நாயனார்க்கு, திருநுன்தா விளக்குக்கு குடுத்த உருக்களில் திருநுன்தா விளக்கு இரண்டுக்கு உடலாக நீக்கினபசு நாற்பதும் நீக்கி, ஆடும் மாடும், எருமையும் கிடாவும் முதலான காசு ஒள அ)''.*

(தொல்பொருள் ஆய்வுத்துறை அறிக்கை 15/ ·1903)

கி.பி. 1070-இல் சோழநாட்டில் அரசுக்கு வாரிசு இல்லாமையால் ஏற்பட்ட குழப்பத்தை, கீழைச்சாளுக்கிய மரபினனாகிய குலோத்துங்கன் அறிந்து, சோழர் பெண்கொடுத்த தன்தாய் வழி முறைமையால் விரைந்து வந்து அரசேற்றான். ஆட்சியேற்ற மூன்றாவது நாளிலேயே இந்நிகழ்ச்சி நிகழ்ந்திருப்பது இச்செய்திக்கு உறுதுணையாகும். இச்செயலை விரும்பாத நிலையில் சோழநாட்டில் பகைவர்கள் அமைந்திருந்ததையே இக்கல்வெட்டு தரும் குறும்பெறிந்த நிகழ்ச்சிபுலப்படுத்துகின்றது.

*''ஸ்ரீராஜராஜதேவர் வலங்கைப் பழம்படை''*

(தெ. கல். தொ. 2:2, கல். 35)

**வலங்கை இடங்கை மகன்மை :** (அ) வலங்கைப்படை, இடங்கைப் படை என்ற சிறப்புப் பெயர்களுடன் சோழராட்சியில் அமைக்கப் பட்டிருந்த படைக்குரிய காணிக்கையாக மக்கள் விருப்பமுடன் அளிக்கும் வரி.

*'வலங்கை இடங்கை மகன்மை உள்ளிட்ட அந்தராயத்துக்கு''*

(தெ. கல். தொ. 8, கல். 4)

**வலங்கைப் பழம்படை:** (அ) முதல் இராசராசன் ஆட்சியில் அமைக்கப் பட்டிருந்த படைகளுள் பழமையாக வரும் வலங்கைப்படையின் பெயராகும். வலங்கை, இடங்கை என்பது படைகளின் பாகுபாட்டிற்கமைந்த குறிப்புப் பெயராகும்.

**வழிச்சாரியை :** (அ) வரி. விற்பனைப் பொருள்களை மாட்டின்மீதும் தலைச்சுமையாகவும் கொண்டு, சாலைவழியே வேற்றிடம் செல்லும் அங்காடிகளிடம், ஆள் சுமைக்கு இவ்வளவு காசு என்று அரசு பெறும் கட்டணம்.

*''நம் நாட்டில் வழிச்சாரியை கொள்ளும் துறைகளிலே தலைச் சுமைக்கும் எருத்துப்பொதிக்கும் பேர் ஒன்றுக்கு இரண்டாக வந்த காசும்''*

(தெ. கல். தொ. 17, கல். 141)

**வழியெச்சம் :** (வ) குடும்பவழி தொடர்தற்குரிய மகப்பேறும், சுற்றமும்.

*"இத்தர்மம் அழிவு செய்வான் வழியெச்சமறுவான்"*

(தெ. கல். தொ. 5, கல். 224)

**வழுதிவளநாடு :** (அ) தென்பாண்டி நாட்டில் திருச்செந்தூர் மான வீரப்பட்டினம், வரகுணமங்கலம் முதலிய பகுதிகளடங்கிய நாடு.

**வளஞ்சியர் :** (வா) வாணிகத்தால் நாட்டின் செல்வவளத்தினைப் பெருக்கியவர்கள்.

இவர்கள் நானாதேசி வளஞ்சியர் என்று கூறப்பெறும் வணிகக் குழுவினராவர். சித்திரமேழி பெரியநாட்டுக் குழுவிலும், பதினெண்பூமி திறலாயிரத்தைந்நூற்றுவராய வாணிபக்குழு-விலும் இடம் பெற்றிருந்த வைசியராவர்.

*"திருவேள்விக்குடி உடையார்க்கு திருக்கற்றளி எடுக்கின்ற வளஞ்சியரும் நானாதேசியத் திசையாயிரத்தைஞ் ஞூற்றுவரும்"*

(தெ கல். தொ 19, கல். 459)

**வளையில் :** (அ) வளையம், பல பகுதிகளாக அமைக்கப்பெற்று ஒன்றாக ஓருருவாக அமைக்கப்படும் உலோகத்தாலான பாத்தி-ரங்கள், ஒன்றற்கொன்று அடுக்கிச் செருகி உருவாக்கும் சுரை யிடங்களே வளையில் என்று பெயர் பெறும்.

கோபுரகலச அமைப்பினால் இவ்விணைப்பினை அறியலாம்.

(தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு)

**வளையிற்சுற்று :** (வே) ஊரைச் சூழ்ந்த பகுதிகள். ஊரைச் சுற்றி வளைந்ததாக அமைந்த நிலபுலங்கள்.

**வன்பாட்டம் :** (வே) குத்தகை குறையாமல் அளக்க வேண்டிய குத்தகை நெல்.

**வன்னிபேடு :** (அ) செங்கற்பட்டு மாவட்டம், வாலாசாபாத்திற்குத் தெற்கே ஒருகல் தூரத்திலுள்ள ஊராகும்.

பேடு மணல்செறிந்த மண்ணும் பாறையுமாக அமைந்த நிலப் பாங்கு.

**ஸ்ரீவாகுவளையம் :** (கலை) தோள்கட்கு அழகு செய்யும், பொன்னாலும் மணிகளாலும் ஒப்பனை செய்யப்பட்ட வளையம்.

இவ்வணி தோள்களில் பொருந்தும் அமைப்புடன் அமைக்கப் பெறும்.

பாஹு-வளையம் (பாஹு - வாகு, தோள்)

**வாங்கி :** (மொ) (வாங்குதல்) இடித்தெடுத்து, இடித்து வாங்கி. கல்வெட்டுச் செய்திகளுள் இவ்வெச்சச் சொல், பழமை மிகுந்ததனால் பழுதுபட்டிருந்த கட்டடங்களை இடித்தெடுக்கும் கருத்திற்கமைந்த பொருளமைதியுடன் கையாளப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

*''திருமழுவாடியுடையார் ஸ்ரீவிமானம் வாங்கி, திருக்கற்றளியெடுக்கவென்று உடையார் ஸ்ரீராஜராஜதேவர் அருளிச் செய''*

(முதல் இராசராசன்—கி.பி. 1013)

(தெ. கல். தொ. 5, கல். 652)

**வாச்சிய மாராயன் :** (கலை) வாத்திய மாராயன். இசைக்கருவிகளில் வல்ல கலைஞனுக்குச் சோழ அரசில் அளிக்கப்பெற்ற பட்டப் பெயர். திருக்கோயில்களில் நாளும் வழிபாட்டின்போது இசைக்கப் பெறும் மேளக்காரர்கட்குத் தலைவன்.

*''மோர்வியம் ஒன்றுக்கு அரையன் ராஜாஸ்ரீயனான நித்த விநோத வாத்ய மாராயனுக்கு பங்கு இரண்டும்''*

(தெ. கல். தொ. 2, கல். 66)

**வாசல் காணிக்கை :** (அ) அரண்மனைக்கு மக்கள் செலுத்தும் காணிக்கைப்பணம். இதனை வசூலிப்பவன், ''வாசல்காரியம்'' என்பவனாவன். இவனுக்குரிய காணிக்கைப் ணம், ''வாசல் விநியோகம்'' என்று கூறப்பெறும்,

**வாசல் மரத்தேய்-கூடி :** (அ) பெருங்குறி-வாசலில் நிற்கும் மர நிழலில் கூடிய கிராம மகாசபை. இதனான், கிராமசபை, ஊரின் தெருவிலமைந்த அரசு, மா, முதலிய பெருமரங்களின் நிழலிலும் கூடுமென்பதும் பெரும்பான்மையும் பகற்காலத்திலேயே கிராமமகாசபை கூடுதல் வழக்காகுமென்பதும் கல்வெட்டுச் செய்திகள் உணர்த்துகின்றன.

*''வாகூர் நாட்டு வாகூர் மஹாசபையோம் இவ்வாட்டை மிதுந நாயற்று, அபரபக்ஷத்து நாயற்றுக் கிழமை பெற்ற கார்த்திகை நான்று, பகல் நம் வாசல் மரத்தேய் நிரம்ப பெருங்குறி கூடி இருந்து''.*

(முதல் இராசராசன் - கி.பி. 996.)

(தெ. கல். தொ. 7, கல், 805).

**வாசல்பேறு :** (அ) வாசல் என்னும் பெயரால் அமைந்த அதி-காரிக்குச் செலுத்தும் காணிக்கைக் காசு.

**வாசல்விநியோகம் :** (அ) அரண்மனைத் திருமுற்றத்தில் கொண்டு செலுத்தும் காணிக்கைகள்.

*''கோமுற்றமுடைய திருப்புதியது நெல்லும், பொன்வரி அரிசிக் காணமும் புன்செய் உள்பட திருவாசல் விநியோகம்''*

(தெ. கல். தொ. 7, கல். 57)

**வாசி :** (பொ) பொன்னின் மாற்றுரை. பொன்னின் தரம்.

*''நகரப்பொன் ஆணியோடொத்த பொன்னுக்கு காணவாசி நல்ல பொன்''*

(தெ. கல். தொ. 5, கல். 266)

**வாசியேற்றுதல் :** (அ) மதிப்பீட்டினை உயர்த்திச் சேர்த்தல்.

*''மற்றுமெப்பேற்பட்ட ஸித்தாயதியுமடங்கலாக வாசியேற்றி இடக்கடவப் பொன் இருகழஞ்சரையும்''*

(தெ. கல். தொ. 5, கல். 1375).

**வாடாக்கடமை :** (அ) குறையாத நிலவரி. எக்காலத்தும், தொகை குன்றாது வசூலிக்கும் வரி.

*''தேவதானம திருப்புவனத்து தனிப்பங்கு, பாட்டத்துக்கு எட்டாவது தைமாதம் முதல ஆண்டொன்றுக்கு வாடாக் கடமையாகத் தண்டல்மேனி நானூற்று ஐம்பது பொன்''.*

(தெ. கல். தொ. 5, கல். 305)

*''இவ்வாண்டு முதல் வாடாக்கடமையாக நிறுத்துவித்து இறுக்கும் பொன நானூற்றைம்பது.''*

(அரிகேசரி பராக்கிரம பாண்டியன் சாசனம்.)

(தெ. கல். தொ. 5, கல். 306)

**வாணிகர் பேராற் கடமை :** (அ) எண்ணெய் வாணிகர். ஓர் ஊரில் எண்ணெய் வாணிகம் செய்வதற்குத் தம் பெயரால் அவ்வூர்க்குச் செலுத்தும் வரி.

*''செக்குக்கடமை வாணிகர் பேராற் கடமை உள்ளிட்ட கடமை-களும்''.*

(தெ. கல். தொக. 7 கல். 98)

**வாமனக்கல் :** (அ) திருமால் வாமன பிராமணனாக மகாபலியிடம் வந்த வடிவினை, பிராமணர்க்கு வழங்கும் தான சாசனத்திலும் பொறித்து வேதியர்க்கு அளித்த பிர்மதேய இறையிலிகற் சாசனம். திருமால் வாமன பிராமணனாக மகாபலியிடம் வந்த வடிவுடன் பொறித்து வைத்தல் ''வாமனக்கல்'' என்பதாகும். (தலைமலை பாறைச் சாசனம்)

**வாய்த்தலை :** (வே) பாசன வாய்க்கால் நீரினை முதல்மடையாகப் பெறும் தலைப்பான நிலம்.

*''திருப்தொங்கமங்கலத்து மீயூர் வாய்த்தலையின் மேல் பக்கத்தால் கால் செய் உண்ணாழிகைப் புறமாக-குடுத்தோம்''*

(தெ. கல். தொ. 19, கல். 49)

**வாயிலாண்டை :** (மொ) வாயிற்பக்கம். (வழக்குச் சொல்)

*''இத்திருநுந்தாவிளக்கெரிய இவ்வடவாயிலாண்டை இட்ட மூன்று நிலை குத்துவிளக்கு''.*

(தெ. கல். தொ. 8, கல். 101)

**வாரம் :** (அ) பங்கு. குறைத்துப் பெறும் வரி.

*''பெருவெள்ளப் பெருஞ்சாவிபோகில் கண்டு கண்காணிச்சு வாரம் கொள்ளக் கடவோமாகவும்''*

(புதுக். கல். 279)

**வாரிகப்பட்டோம் :** (மொ) வாரிசுதாரரானோம்.

*''தானம்-இயற்றுவதற்கு வாரிகப்பட்டோம்''*

(தெ. கல். தொ. 12, பகுதி, 1)

**வாரியம் :** (அ) ஊர்மகாசபைக்கு உள்பட்ட சிறுநிர்வாகக் குழு. இக்குழு, ஏரிவாரியம், கழநிவாரியம், பஞ்சவாரவாரியம், கணக்கு வாரியம், சம்வத்சரவாரியம், தடிவழிவாரியம், கலிங்கு வாரியம், என்ற பிரிவில் ஊரின் நிர்வாகத்துறைகளை நடத்தும் பலவாரியங்களாக அமைந்து செயல்பட்டன.

*''இது குறியுள்ளிருந்து அவ்வாரிகப் பெருமக்கள் பணிக்க எழுதினேன்''*

(குறி-கிராமசபை)
(தெ. கல். தொ. 3:3, கல். 156)

*"பழூர் கோட்டத்து காவிதிப் பாக்கமாகிய அவனி நாராயணச் சதுர்வேதி மங்கலத்து இவ்வாட்டை ஊர்வாரியப் பெருமக்களும் ஏரிவாரியப் பெருமக்களும்"*

(தெ. கல். தொ. 19, கல். 84)

**வாளி :** காதணி வகையுள் வளையமாகச் செய்யப்பெறும் அணி.

**வாளுக்கும் தோளுக்கும் நன்றாக :** (வ) வெற்றிக்கும் வீரத்திற்கும் உயர்வு உண்டாக.

**விக்கிரம வீரர் :** (அ) வலிமை பொருந்திய வீரர்.

*"விக்கிரம வீரர் சக்கர கோட்டமும்"*

(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**விக்நம் :** (மொ) விக்கினம். குறைவு. இடையூறு, அழிவு.

*"இப்பொருள் பண்டாரித்துப் புகாமல் விக்நம் பண்ணுதல் பண்ணிவித்தல் செய்தானுண்டாகில் பொருளிரட்டியும் கொண்டு*

*"மனையுமிழந்து போகக் கடவநாகவும்".*

(தெ. கல். தொ. 8, கல். 75)

**விகாரத்துப்பள்ளி :** (சம) பௌத்த விகாரம். பௌத்தசமயப்பள்ளி. (ஆலயம்)

*"கிடாரத்தரையன் சூளாமணிபந்மன் க்ஷத்ரியசிகாமணி வள நாட்டுப் பட்டினக் கூற்றத்து நாக்கப்பட்டனத்து எடுப்பிக்கின்ற சூளாமணி பந்ம விகாரத்துப் பள்ளிக்கு".*

(ஆனைமங்கலச் செப்பேடுகள்)

**விச்சாதிரத்தோரணம் :** (அ) போர்ப்பயிற்சிக் கள வாயில் முகப்புத் தொங்கல். தலைநகரின் அகனகரிடத்தே அரசகுமரர்களும், படைவீரர்களும் படைக்கலப் போர்ப்பயிற்சி பெறும் களத்தின் வாயில் முகப்பில் படைக்கலங்களில் வடிவங்கள் பலவாக எழுதப் பெற்ற ஒப்பனையோடு விளங்கும் தொங்கல். (அலங்காரத் தோரணம்).

*"கடாரத்தரசனை-ஆர்த்த அகநகர்ப் போர்த்தொழில் வாசலில் விச்சாதிரத்தோரணமும்-மாப்பொருதண்டாற் கொண்டு"*

(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**விச்சுக்கிழாய் :** (வ) விச்சுக்கிடாய், பொலிகிடா. நல்ல பருவமாக வளர்ந்த ஆட்டுக்கடா. கிழாய் – கிடாய் என்ற வழக்குச் சொல்லின் திரிபு.

*"ஒரு நொந்தாவிளக்கினுக்கு சாவாமுவாப் பேராடு வைத்த ஆடு விச்சுக்கிழாய்-௯."*

(முதல் பராந்தகன் கி.பி. 712. தெ. கல். தொ. 5, கல். 655)

**விசயம் :** (அ) சுமத்திரா தீவிலுள்ள ஊர். இவ்வூருடன் பண்ணை, மலையூர், இலாமுரிதேசம் ஆகிய சுமத்திராதீவிலடங்கிய இடங்களையும், முதல் இராசேந்திரன் கப்பற்படையுடன் சென்று கைப்பற்றியுள்ளான்.

(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

*"அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்தி-நிறைநீர் விசயமும் துறைநீர்ப் பண்ணையும்-கொண்ட"*

**விசயவாடை :** (அ) இக்காலத்தில் 'பெசவாடா' அல்லது 'விசய வாடா' என்று வழங்கப்பெறும் பேரூர். கிருஷ்ணா நதியின் கரையிலுள்ளது.

*"கடுந்தவத்தானை எழில் விசையவாடையோ, டடுத்த பேராற்றின் வந்து தடுத்த சனநாதனை"*

(வீரராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

**விசிட்டர் :** (அ) (விசிஷ்டர்) : கல்வி, ஒழுக்கம், தவம் இவற்றால் மேம்பட்ட சான்றோர். கிராம மகாசபையின் உறுப்பினர்.

*"இவ்வாட்டை ஸம்வத்ஸரவாரியப் பெருமக்களும் ஏரிவாரிப் பெருமக்களும் விஸிஷ்டர்களும் உள்ளிட்ட மஹாசபையோம்"*

(முதல் இராசராசன் கி.பி. 1002, தெ. கல். தொ. 3:1, கல். 14)

*"பட்டர்களும் விசிட்டர்களும்உள்ளிட்ட மகாசபை"*

(திருப்பாற்கடல் கல்வெட்டு)

*"வசிட்டனும் அருமுறை வடிவு போன்றொளிர் விசிட்டனும் வேத்தவை பொலிய மேவினார்".*

(கம்பராமாயணம். பால. திருஅவதார — செய். 77)

ஈண்டு அயோத்திமாநகர் புக்க கலைக்கோட்டு முனிவனைக் குறிக்கும்.

விஷுஅயநசங்க்ரமம் : மேடராசி முதலாக கும்பராசி வரையில் செல்லும் கதிரவனின் பாரித்த செலவு நிலை. அவை, ஆண்டொன்றிற்கு நான்கு சங்கிரமங்களாகக் கொள்ளப் பெறும். (விஷு - சித்திரை)

*"இக்கோயிலில் திருமாளிகைப் பிள்ளையார்க்கு அமாவாளி பன்னிரண்டும், இடைஉவாப் பன்னிரண்டும், விஷுவயந ஸங்க்ரமம் நாலும்-பிள்ளையாலர அமுது செய்விக்கவும்".*

(தெ. கல். தொ. 8. கல். 27)

விடங்கன் : (சம) உளியால் செதுக்கப் படாதவர். சிவன் கோயில்களில் மூலவராகவும், அருவுருவாகவும் அமைக்கப்பெறும் சிவலிங்கத் திருமேனியாகும். இலிங்கம் உளியால் செதுக்கப் படாமல் இயல்பாக அமைந்த கற்களில் அமைக்கப்பெறுமாயின் "விடங்கம்" என்று பெயர்பெறும்.

இயற்கையாக இரேகையும் ஒளியும் திரட்சியும் நீட்சியும் ஒருங்கே பொருந்திய கற்கள், கங்கை, நருமதை, கோதாவரி ஆகிய தெய்வ நதிகளினின்றும் எடுக்கப்பெற்று சிவ மூர்த்த லிங்கங்களாக அமைக்கப்பெறுவது காமிக ஆகம விதியாகும். அத்தகைய இலிங்கங்களே விடங்கத் திருமேனியாகும். இதனைச் சுயம்பு என்றும் கூறுவர்.

விடங்குடையன : (கலை) பட்டிகை போன்ற பொன்னணிகளின் பார்வைப் பகுதியின் முகப்பாக அமைக்கப் பெற்றன.

*"திருப்பட்டிகை முகம் ஒன்றில்-நாலித்தலையில் விடங்குடையண எட்டில்".*

(தெ. கல். தொ. 2:2, கல். 51)

விடு : (மொ) விடை, பதில்.

*"ஆற்றூர் ஊரவர் கண்டு விடு தந்ததாவது"*

(தெ. கல். தொ. 12, பகு 1, கல். 120, 202)

விடுதீட்டு : (வ) அனுமதி உத்தரவுச் சீட்டு.

*"நாயனார் பண்டாரத்தார்க்கு விடுதீட்டுக் குடுத்த பரிசாவது"*

(தெ. கல். தொ. 5, கல். 287)

விடேல்விடுகு : (அ) பல்லவ மன்னர் பெற்றிருந்த விருதுப் பெயர்களுள் ஒன்று. இது விடை வெல் விடுகு என்றிருத்தலேசரி என்றும்

கூறுவர். பல்லவ அரசியரும் இப்பெயரினைப் பெற்றிருந்தனர். இதற்குப் பொருள் வெற்றியையுடைய நந்தி இலச்சினையோடு விடுதல் பெற்ற ஆணை என்பதாகும். பல்லவர் ஆட்சியில் ''விடேல் விடுகு'' என்னும் பெயரால் அளவைகள் வழக்கிலிருந்தன.

*''திருவொற்றியூர்ப்புறத்து மணலி ஸபையோம் எம்முருடைய மஹாதேவர்க்கு உம்பள நாட்டு விடேல் விடுகு பல்லவரையர் தேவியாரிற் பழயந் பில்விகுடேத்த பொந்''.*

(தெ. கல். தொ. 12, கல். 70)

*''வடகரை குறுக்கை நாட்டு பிர்மதேயம் விடேல் விடுகு, தேவிச் சதுர்வேதி மங்கலம்''*

(தெ. கல். தொ. 19, கல். 27)

*''இவ்வாடு நூறுங் கொண்டு நிசத முழுக்கு நெய் விடேல் விடு கோடொக்கும் உழக்கினால் அட்டுவமானோம்''.*

(தெ. கல். தொ. 12, கல். 89)

*''விற்றுக்குடுத்து கொண்டவிலைப்பொருள் வெடேல் விடுகு கல்லால் துளைப்பொன் முப்பதின் கழஞ்சு''.*

(தெ. கல். தொ. 8, கல். 612)

2. பல்லவருடைய ஆணைக்கு விடேல் விடுகு என்று பெயர். பல்லவரின் சிறந்த படையொன்றும் விடேல் விடுகு எனப் பெயர் பெற்றுளது.

*''விடேல் விடுகு எனும் ஆணையும் நடாவி''.*

**விடைப்பேர் :** (அ) (விடைபேறு) கால் நடைகள் வைத்து, அதன் வழி வருமானம் பெற்று வாழ்வார், அத்தொழிலுக்குரியதாகத் தம் பெயர்ப்பதிவு செய்து கொள்ளுதற்கமைந்த வரி. இதனை அரசனின் அனுமதி உத்தரவு பெறுவதற்கு அளிக்கும் வரியென்றும் கூறுவர்.

**விண்ணப்பம் :** (அ) அரசன் செய்ய விரும்பிய அறச்செயல்களைக் காலமும் இடமும் அறிந்து நினைவுபடுத்துவது, விண்ணப்பமாகும். அரசன் ஆணையினைக் குறிப்பிட்டபடி நிறைவேற்றி அறச் செயலாக்குவது ஆணைத்தியாகும்.

"மாவலி வாணராயனான விக்கிரமாதித்த வாணராயன் விண்ணப்பத்தாலும், காடு வெட்டித் தமிழ் பேரரயன் ஆணத்தியாலும் ஏகக்கிராமமாக்க்".

(தெ. கல். தொ. 3:1, கல். 43)

**விண்ணப்பம் செய்ய :** (அ) இறைவன், அரசன், திருமுன்னர் அறிவித்துக்கொள்ள; முன்னர் நின்று முறையாகப் பாட.

"மீனவன் வீர நாராயணற்கு விஸ்வாஸகர் மங்கட்கான தன்மையனாதலில் அருளறிந்து விண்ணப்பம் செய்ய".

(தளவாய் புரச் செப்பேடுகள், கி. பி. 9 நூற்.)

"அவ்வவர்க்கு அடுத்தமுறை கடவார் அந்நெல்லும் பெற்றுத் திருப்பதியம் விண்ணப்பம் செய்யவும்".

(முதல் இராசராசன், தெ. கல். தொ. 2:3, கல். 65)

**விந்தை :** (அ) இது விந்தனூர் ஆகும். திருநெல்வேலி மாவட்டம் செங்கோட்டை வட்டத்திலுள்ளது.

**விமானம் :** (கலை) கோயில் கருவறையின் மேற்கூரையாக சிற்ப ஒப்பனையுடன் உயர்ந்து, உச்சியில் கலசத்தோடு விளங்கும் கட்டிடம். கோயில் கட்டிடத்திற்குரியதான, அடிப்படை, உடல், தோள், கழுத்து, தலை, முடி என்னும் உறுப்புக்களுள் தலையும் முடியும் கூடிய பகுதியே விமானம் என்று பெயர் பெறும்.

"தேவர் கோயில் ஸ்ரீவிமானம் கல்லால் எழுந்தருளுவிச்சேன் உத்தமசோழர் பெருந்திரத்து விக்கிரம சோழ மாராயன்"

(தெ. கல். தொ. 19, கல். 332)

**வியஞ்சனங்கள் :** (சம) திருக்கோயில்களில் நாளும் நிகழும், வழிபாட்டிற்கமைந்த நியதிப்பொருள்கள்.

"அமுதுபடி சாத்துபடி, வழிபாடு முதலிய இனங்களுக்கு உள்ளிட்ட வியஞ்சனங்களுக்கு திருவிடையாட்டமாக விட்டவூர்".

(தெ. கல். தொ. 8 கல். 295)

**வியவஸ்தை :** (வ) ஒழுங்கு முறைமை. சபையார் கூடிப்பேசி முடிபு செய்த செயல்கள் (தீர்மானம்).

"குறைவறக் கூடியிருந்த ராஜராஜப் பெருநிரவியேசம்-ம்மிவிசைந்து வியவஸ்தை பண்ணினபடி".

(தெ. கல். தொ. 8. கல் 198)

**வியாக்யான விருத்தி :** (கலை) சாத்திரங்கள், புராணங்கள் ஆகிய வற்றைத் திருக்கோவில்களிலிருந்து நாளும் மக்களுக்கு விரிவாக உரைப்பவனும் அச்செயலை வழிவழி செய்வாரும் வருவாயாகப் பெறும் இறையிலி நிலம்.

**வியாகரணதானமண்டபம் :** (கலை) திருவெற்றியூர் கோயிலில் உள்ள மண்டபமொன்றின் பெயர். இதிலிருந்து நாளும் வட மொழி வியாகரணத்தினை அந்தணரொருவர் விரித்துரைப்பதற்கு இறையிலி செய்யப் பெற்றிருந்தது என்பது புலனாகும்.

**விரல் உயரம் :** (வா) எட்டுதோரை நெல் நீளம். ஒரு நெல் அளவு

'*8 தோரை கொண்டது ஒரு விரல் அளவு*''.

**விரவிக்காட்டுந் திருவமிர்து :** (சம) நெய் — கலந்து ஆக்கி நிவேதிக்கும் பிரசாத உணவு.

**விருச்சிக நாயிறு :** (வ) கார்த்திகைத் திங்கள், விருச்சிக இராசியில் சூரியன் நிலவும் மாதம்.

**விருத்தி :** (வ) சீவனத்துக்குரியதாகவும் நிலையாகவும் அமைத வருவாய். வேத ஆகமம் புராணம் ஆகியவற்றின் வளர்ச்சிக்குச் செய்யப்பெறும் நிவந்தம்.

''*தண்ணீர் அட்டுவார்க்கு விருத்தி-துடவை தடி-1*''.

(தெ. கல். தொ. 14, கல். 40)

''*பாநிநீய விருத்திக்கும் கொண்ட கொல்லை*''.

(தெ. கல். தொ. 4, கல். 353)

**விருத்தூணர் :** விருத்த பிராமணர்.

**விருதராச பயங்கர வளநாடு :** (அ) இது சோழநாட்டில் வடகிழக்குப் பகுதியில் காவிரிக்கும், சிதம்பரத்திற்கு வடபால் ஓடும் வெள்ளாற்றுக்கும் இடைப்பட்ட பெருநிலப் பரப்பாகும்

இராசேந்திர சிங்க வளநாடு, முதற்குலோத்துங்க சோழனாட்சியில் விருதராசப்பயங்கர வளநாடென்று பெயர் பெற்றது.

**விரோதநின்றார் :** (மொ) பகைவராக இருந்தவர். மாறுபட்டவர்களாக இருந்தவர்.

''*இத்தர்மத்திற்கு-விரோதநின்றார்*''.

(தெ. கல். தொ. 3:1, கல். 14)

**வில்லவன் :** (அ) வில்லை அரச இலச்சினையாகக் கொண்ட சேரன்.

**வில்வாள் கொந்தவர் :** (அ) வில்வாள் போர்களில் பயிற்சி பெற்ற சேனா வீரர்கள்.

(முதல் இராசராசன் ஆட்சியில் கி. பி. 1013. இத்தகைய வில் வாள்படை இருந்துளது).

**விலங்கடைத்தல் :** (வே) பாசன வாய்க்காலில் நீர் உயர்ந்து நிலத் திற்குப் பாய, வாய்க்காலில் மடை வாயிலைச் சார்ந்து வளைவாக அடைத்து நீரேற்றங் கொள்ள விடுதல்.

*"இந்நிலத்துக்கு விலங்கடைக்கவும் குறங்கறுத்து விடவும் பெறாதோமாகவும்".*

(தெ. கல். தொ. 8, கல். 1)

**விலை இட்டுக்கொண்டு :** (வ) நிலத்திற்கு உரிய மதிப்பீட்டு விலையைக் கிராம சபையாரைக் கொண்டே மதிப்பிட்டுப் பெற்றுக் கொண்டு.

*"இவ்வூர் மஹாசபையார் பக்கல் விலை இட்டுக்கொண்டு விட்ட நிலங்கள்".*

(விக்கிரம சோழன். கி.பி. 1125. தெ. கல். தொ. 7, கல். 416)

**விலைக்கலம் :** (வ)விலையாகக் கொள்ளும் தொகை (கலம்-தொகை).

**விலைச்சிராவணை :** (சம) விலைக்காணிக்கை. நிலத்தை விற்ற தொகையைக் காணிக்கையாகச் செலுத்துதல்.

*"இந்நிலம் ஆயிரத்தறுநூறு குழியும் இறையிழிச்சியிதேவர்க்கே யிந்நாள் செலுத்துவதாக விற்று விலைச் ஸ்ராவணை செய்து குடுத்தோம்".*

(தெ. கல். தொ. 8. கல். 9)

**விலைப் பிரமாணம் :** (பொ) கிரையப்பத்திரம். எத்தகையகுற்றமும் இல்லாத நிலையில்—விற்பனை செய்த செய்தியுடைய உறுதிச் சீட்டு.

**விலையறக்கொண்டு பொருளறக்குடுத்து :** (வ) நிலத்திற்குரிய விலைமதிப்பினைக் குறையின்றி உறுதிப்பாடு செய்து, அதற் கமைந்த பொருளினை மிச்சமின்றி விற்பானிடம் கொடுத்து.

*'விலையறக் கொண்டு பொருளறக் குடுத்து ஆனார் உதைய திவாகரநான அருமொழி மூவேந்த வேளார் கொண்டு தந்தமையில்''.*

(முதல் இராசராசன். கி.பி 1003, தெ. கல். தொ. 7, கல். 156)

**விலையுமொற்றியுஞ் செல்லா :** (வ) விற்பதற்கும் ஒற்றி வைப்ப தற்கும் செல்லாது.

*''அர்க்சனாபோகம் செய்த நிலம்-இவை விலையு ஒற்றியுஞ் செல்லா''.*

(தெ. கல். தொ. 12, கல். 83)

**விழாப்புறம் :** (சம) கோயிலில் அமைக்கப்பெறும் திருவீதியுலா உள்ள விழாக்களுக்குரிய வருவாயாகக் கொடுக்கப்பெறும் இறையிலி நிலம்.

*''கற்குறிச்சித் திருக்கற்றளி ஆழ்வார்க்கு திருவிழாப் புறமாகக் குடுத்த பூமி''*

(புதுக். கல். 38)

**விழிஞம் :** (அ) திருவனந்தபுரத்திற்குத் தெற்கில் பத்துக்கல் தொலை வில் உள்ள கடற்றுறைப்பட்டினம்.

ஜடாவர்மன் பராந்தக பாண்டியனும், முதற்குலோத்துங் கனும். பின்னர் பராந்தக பாண்டியனும் அவரவர் ஆட்சிக் காலங்களில் மிக முயன்று இப்பட்டினத்தைக் கைப்பற்றி இருப்ப தால், இவ்விழிஞம் மேலைநாட்டு வணிகத்தால் செல்வச் சிறப்புள்ள மேற்குக்கரைப் பட்டினம் என்று அறியலாகும்.

**விழுக்காட்டுப்படி :** (வ) பங்குக் கணக்கில் உள்ளபடி. (ஊர் நிலத்தில் தனக்குள்ள பங்கு விகிதக் கணக்குப்படி)

*''ஊர் விழுக்காட்டுப்படி பொத்தகம் (நிலக்கணக்குப் புத்தகம்) ஏற்றி வந்த நிலம்''.*

(சீர்காழி கல்வெட்டு 394/1918)

**விழுத்துகை :** (மொ) நீக்குகை. நீக்கம் செய்தல்.

*''இன்னிலம் இறைவிழுத்துகைக்கு வேண்டும் பொன்கொண்டு சந்திராதித்தவரை இறைவிழுத்திக் குடுத்தோம்''.*

(தெ. கல். தொ. 3:3, கல். 35)

**விளக்குக் குடிமக்கள் :** (சம) திருக்கோயில்களில் திருவிளக்கு எரிப்பதற்குரியதாகச் செய்யப்பெற்ற நிவந்தமான ஆடுகளையோ பசுக்களையோ பொறுப்பேற்று, நாளும் அவற்றின் வழி பெறும் பயனாக நெய்யளக்கும் இடையர் குடி வழி மக்கள்.

*"இக்கோயில் விளக்குக் குடிமக்களில் சிறு நம்பிக்கோன் பெரியான் கைக்கொண்ட விளக்கு அரையும்"*

(இரண்டாம் இராசராசன், தெ. கல். தொ. 4, கல். 816)

**விளக்கு கால் :** (சம) இரண்டு சந்தி எரியும் விளக்கு; கால் விளக்கு என்ற கால அளவையால் குறிக்கப்பெறுதல் வழக்கு. இவ்வாறே விளக்கு அரைக்கால் என்பதும் 7½ நாழிகை அளவு ஒரு சந்தி எரியும் விளக்காகும். கால் விளக்கு என்று குறிக்காமல், விளக்கு கால் என்று காலக் குறிப்புடன் பிழையின்றிக் குறித்திருத்தல் குறிப்பதாகும்.

*"இவ்வூர் இருக்கும் மன்றாடி கைக்கொண்ட விளக்கு கால்"*

(வீரராசேந்திரன் கி.பி. 1067. தெ. கல். தொ. 7, கல். 410)

*"தொண்டைமானாற்றூரில் இருக்கும் பெற்றிக்கோன் விளக்கு அரையும்".*

(முதல் இராசராசன் கி. பி. 1001)

(தெ. கல். தொ. 8, கல். 465).

**விளக்குப்பிடிப்பார் :** (சம) திருக்கோயில்களில் இரவு வழிபாடு நிகழும்போது, திரியிட்டு எரியவிடும் பிடியோடு கூடிய விளக்குகளை ஏந்தி நிற்கும் பணியாளர். இவர்களை, திருமெழுக்கிடுவார், திருமெழுக்கு அடிகள்மார் என்றும் கூறுவர்.

*"இராஸ்ரீபலி எழுந்தருளும்பொழுது எரியக்கடவ இருப்பு பிடி விளக்கு முப்பதினுக்கு நிசதம் எண்ணெய் நாழி உழக்கு இவை பிடிப்பார் மெழுக்கடிகள்மார் நால்வர்".*

(முதல் இராசராசன் கி.பி. 990.)

(தெ. கல். தொ.5, கல். 625)

**விளாகம் :** (அ) வளாகம், பரந்த நன்செய் நிலம்.

*"ஊர்க்கீழ் இறையிலியாக கொண்டுவிட்ட வண்ணக்க விளாகம் நிலம் கறா இன்னிலம் ஒன்றரையும்".*

(நந்திவர்ம பல்லவன், தெ. கல். தொ. 12, கல். 58)

*"தென்கடைய தோட்ட விளாகம் என்று பேர் கூவப்படும் தடி நிலன் நான்கு மாவும்"*

(கறா—சரியான அளவு)

(தெ. கல். தொ. 4, கல். 537)

**விற்படி :** (அ) வில் என்னும் ஆயுதம் தயாரித்து விற்பாரிடம் பெறும் வரி. (விற்படி - வில்லின் குதை)

**விற்றொற்றிப் பரிக்கிரயம் :** (வ) விற்றல் ஒற்றி வைத்தல் ஆகிய வகைகளின் மாற்றத்தால் பெறும் மதிப்பீட்டுத் தொகை.

*"ராஜகம்பீர நல்லூர் இவர்க்குக் காணியாக நாற்பாலெல்லையும் விற்றொற்றிப் பரிகிரியத்துக்கு உரித்தாவதாக குடுத்தோம்".*

(தெ. கல். தொ. 1, கல். 74)

**விற்றன் வடுகன் புலிக்குத்துப்பட்டான் :** (சம) விந்தன் வடுகன் புலிகுத்திப்பட்டான். விந்தன் வடுகன் என்பவன், காட்டில் புலியைக் குத்தியபோது புலியால் கொல்லப்பட்டான். அவனது வீரத்திற்கு இலச்சினையாக ஊரார் அவன் நினைவாக நடுகல் நாட்டி, அவனது பீடும் பெயரும் பொறித்தனர்.

(செங்கம் நடுகற்கள். கி.பி. 7-ஆம் நூற்.)

**வினாப்போக்கி ஒத்தெழுத்திட்டு :** (வ) கிராமசபை குறைவறக் கூடியதும், சபைக்கரணத்தான் எழுந்து "யாதானும் குறை யுண்டாகில் ஊரார் கூறலாமெனும்" வினாப்போக்கி, ஏட்டில் மங்கலத் தொடக்கமாக சுழிக்கீரலாகும் ஒற்றை எழுத்திடலும் மரபாகும். இவ்வொத்தையெழுத்தே கால வளர்ச்சியில் பிள்ளை-யார் சுழியெனப் பெயர் பெறலாயிற்று.

(கன்னரத்தேவர்-யாண்டு 27, தெ. கல். தொ. 8, கல். 811)

**விஷ்ணுகிரஹம் :** (சம) திருமால் கோயில்.

**விஷவிருத்தி :** (சமு) விஷக்கடிகட்கமைந்த மருந்தாகும் பச்சிலை, மூலிகைகளை வளர்ப்பதற்குரியதாக மருத்துவர்கட்களிக்கும் இறையிலி நிலம்.

*"வீரசோழன் மண்ணறையில் விஷவிருத்தி நிலம் ஒருமாவும்"*

(தெ. கல். தொ. 5, கல். 260)

**விஷையம் :** (அ) நாட்டாட்சிக்குரிய சபை. நாட்டின் உட்பிரிவு பல்லவர் காலத்தில் தொண்டைமண்டலத்தின் உட்பிரிவாகிய **கோட்டங்களின் உட்பிரிவு** நாடு.

"*ஜயங்கொண்ட சோழ மண்டலத்து பெடை நாட்டு விஷையமான முண்கூட நாட்டு விஷையத்தோமும, பேராத்தி நாட்டு விஷையத் தோமும்*".

(தெ. கல். தொ. 5, கல். 496)

"*கிட்டருஞ் செறிமிளை ஒட்ட விஷையமும்*"

(தெ. கல். தொ. 7, கல். 755, முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**விஜயாபிஷேகம் :** (அ) வெளிநாடுகளைக் கைப்பற்றி அடக்கப் படையெடுத்துச் சென்ற மன்னன் வெற்றியோடு தலைநகர் திரும்பியவுடன் செய்து கொள்ளும் வெற்றித் திருமுழுக்கு.

"*முன்னவர் விரத முடித்து வேங்கைநாடு மீட்டருளி விஜையாபிஷேகம் பண்ணி வீரஸிம்ஹாநத்து உலகமுழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய ஸ்ரீவீரராஜேந்திர தேவர்க்கு*".

(மெய்க்கீர்த்தி)

**வீணைவாசிப்பானுக்கு நிலம் :** (கலை) முதல் இராசராசன் ஆட்சி யாண்டு 10-ல் (கி.பி. 995), திண்டிவனம் திருத்திண்டீசுவரர் சன்னிதியில் நாளும் வீணை வாசிப்பானுக்கும் உடன்பாடுவானுக்கும் இறையிலி நிலம் அளிக்கப் பெற்றுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

"*ஒய்மாநாட்டுக் கிடக்கை ஞாட்டுக் கிடங்கில் திருத்திண்டீஸ்வர தேவர்க்கு வீணைவாசிப்பானுக்கும், உடன் பாடுவானொருவனுக்கும்-திருத்தி வைத்த நிலம்*".

(தெ. கல். தொ. 7, கல். 154)

**வீரக்கொடி, தியாகக்கொடி :** (அ) வீரத்தை உணர்த்தும் இலச்சினை பொறித்த கொடி. கொடைத் திறத்தை உணர்த்தும் இலச்சினை எழுதிய கொடி.

"*செங்கோல் செலுத்தி வேத நீதியை விளக்கி மீதுயர் வீரத் தனிக்கொடித் தியாகக் கொடியோடும் வீற்றிருந்த*".

(வீரராசேந்திரன்—மெய்க்கீர்த்தி)

**வீரபட்டம் :** (கலை) ஐய்யனார் வீரபத்திரர் போன்ற திருமேனிகட்கும் வீரராய்த்திகழ்ந்த அடியார்களின் படிமங்கட்கும் நெற்றியில் அணியப்பெறும், பொன்னில் வைரங்கள் வைத்திழைக்கப்பட்ட நெற்றிப்பட்டை.

*''சீராள தேவர் ஒருவர் இவர்க்கே இவன் குடுத்தன பொன் சுருக்கின வீரபட்டம் ஒன்று''*

*''இராசராசதேவர் குடுத்த பொன்னின் திருப்பட்டம் ஒன்று''*

(தெ. கல். தொ. 2:2, கல். 43, 1)

**வீரர் அபிஷேகம் :** (அ) வீராபிடேகம். தன்னோடு பகைத்து நின்ற நாட்டின் மீது படையெடுத்துச் சென்று, நேரில் போரில் பகைவரையும் அவரது நாட்டினையும் அழிந்து, வெற்றிக் களிப்புடன் தலைநகர்க்கு மீண்ட அரசன், தன் வீரச் செயலைப் பிறவரசரும் அறியுமாறு செய்து கொள்ளும் அபிடேகப் பெருவிழா வீராபிஷேகம் என்பதாகும்.

*''திரிபுவனச் சக்கரவர்த்திகள், மதுரையும் ஈழமும் கருவூரும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளி வீரர் அபிஷேகமும் விசையர் அபிஷேகமும் பண்ணியருளின திரிபுவன வீரதேவற்கு''*

(தெ. கல். தொ. 12. பகு. 1, கல். 96)

**வீரை :** (அ) வீரகேரளம்பூதூராகும். திருநெல்வேலி மாவட்டம் செங்கோட்டை வட்டத்திலுள்ளது.

**வெங்காலநாடு :** (அ) அதிராசராச மண்டலம், வெங்கால நாடு, தட்டையூர் நாடு முதலாகப் பலநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் கருவூரைத் தலைமையாகக் கொண்ட நாடு வெங்கால நாடாகும்.

**வெஞ்சமர் விளாகம் :** (அ) (வளாகம்). கொடிய போர்க்களம்.

*''தொடுகழல் சங்கு ஒட்டல் மகிபாலனை வெஞ்சமர் வளாகத்து அஞ்சுவித்தருளி''*

(முதல் இராசேந்திர சோழன் —மெய்க்கீர்த்தி)

*''தென்கடல் வளாகம் பொதுமையின்றி''*

(புறநானூறு)

**வெட்டி :** (அ) நாளும் குறிப்பிட்ட பணி ஒரு சிறிது காலம் செய்த பின்னர் வறிதாகவே அற்றைப் பொழுதைக் கழிக்கும் பணி, வெட்டி என்றும். அப்பணியாளர் வெட்டியாளென்றும் கூறப்பெறும்.

*"திருமஞ்சனம் எடுக்கும் திருமேனிக்கு வெட்டிக்கும் ஜீவனத் துக்கும் நிலம்"*

(தெ. கல். தொ. 5, கல். 634)

**வெட்டிகாட்டாள் :** (அ) ஊதியமின்றி உணவு உடை உறையுள் பெறுபவன் வெட்டி என்ற பணியாளனென்றும், அவ்வாறே பெற்று ஏவல் வழி நிற்பவன் காட்டாள் என்றும் பொருள் கொள் ளலாம்.

*"அந்தராயம் பாட்டம் உட்பட மடப்புற இறையிலியாகவும் வெட்டி காட்டாள் உள்ளிட்டு ஒடுக்கும் காசு".*

(தெ. கல். தொ. 5, கல். 478)

**வெட்டிக்குடி :** (சமு) கிராம சமுதாயத்தில் ஒருகுடியினராக, கோயில் களுக்கு அளிக்கப்பெறும் திருவிளக்கு நிவந்தமாக வரும் ஆடு-களையோ, பொன்னையோ அதிகாரிகள் வழிப்பெற்று, திட்டப் படி நாளும் நெய்யளந்து வரும் இடையர் குலமக்கள்.

*"இவ்வாடு ஐம்பதும் கொண்டு ஆள்வார் வெட்டிக்குடி ஆயன் வசண்டி தூதுவனும் ஆயன் சேந்தில் கிழவனும் அட்டக்கடவ நெய்".*

(தெ. கல். தொ. 14, கல். 29)

**வெட்டிப்பற்று :** (வே) வெட்டி என்ற பெயரால் தற்காலிகமாக கிராமப் பொதுக் காரியங்கட்கு ஆளிட்டுக் கூலிநெல் கொடுப்பதற் குரிய வருவாயாக கிராம சபையார் அமைத்து வைக்கும் நிலம்.

*"வெட்டிப் பற்றான நிலம் காலும்"*
(தெ. கல். தொ. 5, கல். 421)

**வெட்டிமுட்டாள் :** (அ) நாள் கூலிக்கு ஆள் அமைத்துக் கொள்ளுதற் குரியதாக அரசுபெறும் வரி. இதனை வரிவகையுள் விநியோகம் என்றும் கூறப்பெறும்.

*"தறியிறை தட்டொலிப்பாடம்-வெட்டிமுட்டாள் மற்றும் எப்பேற் பட்ட வரிகளும்".*

(தெ. கல். தொ. 8, கல். 411, 438)

*"வெட்டி தனியாள்-மற்றும் எப்பேர்ப்பட்ட ஆயங்களும்".*

(தெ. கல். தொ. 8 கல். 88)

வெட்டியமைஞ்சி : (சமு) வெட்டி அமைஞ்சி. ஊதியமின்றி உண விட்டு ஏவின வேலைசெய்தற்குப் பணியாள் அமர்த்திக் கொள்ளல். இதற்கு வரியுண்டு.

*''அந்தராயம், ஆள்வரி வெட்டியமைஞ்சி - காட்டவும் கொள்ளவும் பெறாதோமாகவும்.''*

(தெ. கல் தொ. 7, கல். 540)

வெட்டி வரி : (அ) தற்காலிகமாக ஆளிட்டு வேலைவாங்குவதற் குரியதாகப் பெறும் வரி. ஊதியமின்றி உணவும் உடையுமளித்து ஏவின செய்ய ஆளமைத்துக் கொள்ளுவார் செலுத்தும் வரி எனலாம். இவ்வரி நெல்லாகச் செலுத்துவதாகும்.

*''நாற்பாக்கெல்லைக்குட்பட்ட-சாரிகையும் வெட்டி வரியும் கொள் வரியும் உட்பட்ட எப்பேற்பட்ட நெல்லாயங்களும்''*

(தெ. கல். தொ. 4, கல். 648.)

வெட்டி வேதிளை வாலக்காணம் : இவை மூன்றும், கிராமத்திற்குப் பொதுவான, பணிகளுக்கு அவ்வப்போது ஆளிட்டு, வேலைக் கேற்ற கூலியை உடனுக்குடன் கொடுக்கும் நிலையற்ற தற் காலிக கிராமத் தேவையாள் நிலைகளாகும். சோறிட்டு வேலை செய்யப்பெறும் பொதுக் காரியச் செயல்கள் என்றும் கொள்ள லாகும்.

*''இவ்வூர் ஏறின குடிகளை ஸபாநியோகத்தால் (சபையார் இடும் கட்டளையால்) ஸம்வத்ஸர வாரியஞ் சேய்வோமும், ஏரி வாரியம் செய்வோமும, தோட்டவாரியஞ் செய்வோமும், இக்குடிகளை வெட்டியும், வெதிளையும், வாலக்காணமும் கொள்ளப் பெறாதோமாகவும''.*

வாலக்காணம்-வேலைக்கேற்ற கூலியைக் காசாகவோ, உணவா கவோ பெறுதல்.

(தெ. கல். தொ. 3:2, கல். 12.)

வெண்கலம் பறித்தும் மண்கலம் தகத்தும் கொள்ளக்கடவர் : (அ) ஊராரின் செலுத்தும் கடமைகளாகச் சில முறைமைகளைச் சபையார் செய்து வைத்தபடி நிகழும்போது, முறைப்படி தராத வர்களின் இல்லத்தில் அதிகாரிகள் புகுந்து உலோகத்தால் ஆன பாத்திரங்களைக் கைப்பற்றியும் மண்பாத்திரங்களை உடைத்தும் வசூல் செய்வர் என்ற வழக்கும் உண்டென்பது புலனாகும்.

(இராசாதிராசன், கி.பி. 1048, தெ. கல். தொ. 8, கல். 291)

**வெண்கலமடல் :** (சம) வெண்கலம் என்னும் கலப்பு உலோகத்தால் செய்த மடல் என்னும் கலம். மடல் - தாழை மடல் வடிவில் பாதமுள்ளதாக உட்குழிந்த வடிவில் செய்யப்பட்டு, கோயில்களில், திருநீறு வழங்கும் கலமாகும். இதனைத் திருநீற்றுமடல் என்றும் கூறுவர்.

**வெண்சாமரைக்கை:** (சம) கவரிமான் மயிர்க்குஞ்சத்தால் செய்யப்பட்டு திருமேனிகட்கு எடுத்து வீசப்பெறும் மரியாதை வழிபாட்டிற்குரிய வெண்சாமரையின் பிடி. (சோடச உபசாரம்)

*''இவரே வைத்த வெண்சாமரை-ஒன்று''.*

(தெ. கல். தொ. 19, கல். 75)

*"உத்தமசோழ மலாடுடையான் இட்ட உட்கருவுள்ள வெண் சாமரைப் பொற்கை இரண்டு"*

(தெ. கல். தொ. 7, கல். 891)

**வெண்போனகம் :** (சம) வெண்பொங்கல் - பிரசாதம்.

**வெள்ளாட்டி :** (சமு) பொதுமகள். இவருள் ஆடல் பாடல்களில் வல்லாரும் இருந்துள்ளனர்.

*''ராஜேந்திர சோழ நாட்டு, பவித்தர மாணிக்கவளநாட்டு பிர்ஹம தேயம் அழகிய சோழ சருப்பேதி மங்கலத்து ஸ்ரீமூலஸ்தாநமுடைய மஹாதேவர்க்கு ........ இவ்வூர் வெள்ளட்டி வைத்த திருநுந்தா விளக்கு''*

(தெ. கல். தொ. 7, கல். 807)

*''இவ்வூர் வெள்ளாட்டி கோதை மகள் உய்யவந்தாள்''.*

(தெ. கல். தொ. 8, கல். 20)

**வெள்ளான் வகை :** (வே) பயிர் செய்து பயன்பெறும் வகை. அவை, உழுதுண்ணுதலும், உழுவித்து உண்ணுதலுமாகிய நிலவாரம், மேல்வாரம் என்பனவாகும். இதனைக் காராண் கிழமை, மீயாட்சி என்றும் கூறப்பெறும்.

*''வெள்ளான் வகையில் முதலாக்கி''.*

(தெ. கல். தொ. 14. கல். 145)

**வெள்ளான் வெட்டி :** (சமு) விவசாயத் தொழிலுக்கு நாட்கூலியாள், இன்ன வேலைக்கு இன்னது கூலி என்று உடன்பட்டுச் செய்யும் கூலியாள். உடையும் உண்டியும் பெற்று வேளாண்மைப் பணி செய்யும் ஆள்.

**வெள்ளிக்கல் :** (வா) திருக்கோயிலூர் திருவிடைக் கழி கோயிலில் சர்க்கரை முதலிய பொருள்களை நிறுவை செய்யப் பயன் படுத்தப் பெற்ற வெற்றியாலான எடை கல்.

*''வைள்ளிக்கல்லால் நாற்பதின் பலச்சர்க்கரையும்''.*

(தெ. கல். தொ. 7, கல். 139).

**வெள்ளிலையமுது :** (சம) இறைவன் நிவேதனத்தின் போது படைக்கப்பெறும் வெற்றிலையமுது.

*''அடைக்காய் அமுதுக்கு, பாக்கு பன்னிரண்டும், வெள்ளிலை யமுது இருபத்துநாலுக்கும்''.*

(தெ. கல். தொ. 2:2, கல். 35, முதல் இராசராசன்)

**வெற்றிலைப்படலிகை :** (வ) வெற்றிலை அடுக்கு. படலிகை - நூறு எண்ணிக்கையாக அடுக்கிய அடுக்கு, இதனைப் பற்றென் றும் கூறப்பெறும்.

**வேங்கைநாடு :** (அ) கோதாவரி ஆற்றுக்கும் கிருஷ்ணா ஆற்றுக்கும் இடைப்பட்ட நாடு. இது கீழைச்சாளுக்கியருக்கு வாழ்விடமாகும்.

(முதல் இராசராசன் வென்ற நாடு)

**வேட்கோவர் :** (சம) குயவர். மண்ணால் கலங்கள் செய்யும் குயவர்.

*''கலமிடும் வேட்கோவர்''.*

(தெ. கல். தொ 5, கல். 693)

**வேண்டுகோள் :** (அ) அரசனுக்கோ, அதிகாரிகட்கோ செய்து கொள்ளும் விண்ணப்பத்திற்குரிய கட்டணம். மனுக்கட்டணம்.

**வேண்டும் பயிர் செய்தல் :** (வே) நன்செய் புன்செய் நிலங்களில் உரிமையுடையார் விரும்பும் பயிர் செய்தல்.

*''இந்நிலம் முப்பது மாவும்-இறையிலியாகக் கொண்டு பசானமும் குவிரையும் காரும் சித்திரைக்காரும் புன்பயிரும் புன்செய்யும் கமுகும் கொழுந்தும் மற்றும் உள்ளிட்டு வேண்டும் பயிர்செய்து''.*

(தெ. கல். தொ. 17, கல். 128)

**வேணாட்டு அரசு :** (அ) திருவாங்கூர் அரசு. பண்டைய சேர நாட்டின் தென் பகுதி வேணாடு என்று பெயர் பெறும்.

*"வேணாட்டரசைச் சேணாட் டொதுக்கி"*

(இராசராசன் மெய்க்கீர்த்தி)

**வேதாத்யாநம் :** (கலை) வேதம் ஓதுவித்தல். வேத அத்யயநம்- வேத பாராயணம்.

*"வேதாத்யானம் பண்ணுவிக்கும் உபாத்தியாயனுக்கு வேத விருத்தியாக".*

(தெ. கல். தொ. 7, கல். 45)

*"இவ்வகரத்து வேதாத்யாயனம் பண்ணுவிக்கும் உபாத்தியாயற்கு நிலன்".*

(தெ. கல். தொ. 4, கல். 353)

**வேல் மறுத்திச் சென்ற ஞான்று :** (மொ) வேலினைப் பகைவர்க்கு எதிரிட்டு நீட்டிச் சென்ற பொழுது.

(மறுத்தி - எதிராக நீட்டி)

(செங்கம் நடுகற்கள் - பல்லவர். கி.பி. 7ஆம் நூற்.)

**வேலிக்காசு :** (அ) நிலங்களில் பயிர்பாதுகாப்பாகப் பருவ காலங்களில் அமைக்கும் வேலிக்குக் காசாகச் செலுத்தும் வரி. இவ்வரி அந்தராய வகையினைச் சேர்ந்ததாகும்.

*"தறிப்புடவையும் வேலிக்காசும்-உள்ளிட்ட அந்தராயத்துக்கு".*

(தெ. கல். தொ. 8, கல் 4)

**வேள்கோவன் :** (சமு) குயவன், மட்பாண்டம் செய்பவன்.

**வேளத்துப்பெண்டாட்டி :** (அ) நிலைப்படை வீரர்கட்கு உணவு அட்டும் பெண்மைத் தொழில் புரிபவள்.

*"சடையவர்மன் சுந்தரபாண்டியன் தேவி உலகுடைய பிராட்டியார் படைக்குரிய பெண்டாட்டி" யென்று, சமையற்காரன் குறிக்கப்பட்டுள்ளான்.*

*"உலகுடைய பிராட்டியார் வேளத்துப் பெண்டாட்டி".*

(தெ. கல் தொ. 14, கல். 170)

**வேளார் :** (சமு) வேளிர் மரபில் வந்தவர்க்குரிய பட்டப்பெயர்.

*"ஏரிவாரியப் பெருமக்களோம் செம்பியன் இளங்கோ வேளார் பூதி ஆதித்தர்"*

(தெ. கல். தொ. 19, கல். 121)

**வைகானஸரோம் :** (சம) வைணவ ஆகம அர்ச்சகர்கள்.

*"இஸ்ரீகோயில் வைகானஸரோம் மதுசூதன் சோலையும் திராகரன் சுப்பிரமணியனும்".*

(தெ. கல். தொ. 5, கல். 745)

**வைச்ச :** (மொ) வைத்த, மூலப்பொருளாக வைத்த.

(வழக்கில் குறைந்த சொல்)

(பல்லவர் காலம்)

**வைத்ய பாகம் :** (சமு) மருத்துவத்திற்கு விடப்பட்ட இறையிலி நிலப் பங்கு, போகம். இதனை வைத்தியபோகம் என்றும் கூறப்பெறும்.

*"வைத்யபாகம் ஒன்றும்-இறையிலி ஆகத் தந்த நிலமாவது"*

(தெ. கல். தொ. 7, கல். 936)

*"விளைநிலமாய் இறைவயல் நிலமுப்-வைத்திய போகமும்"*

(தெ. கல். தொ. 12, கல். 102)

**வைப்பு :** (மொ) நிலையாக வைக்கப்பெற்ற வருவாய்.

*"திருவாசலுக்கு நானாதேசிகளோம் வைத்த வைப்பு".*

(தெ. கல். தொ. 8, கல். 405)

**வைரம் :** (பொ) (தூயன) மட்டதாரை, மட்டதாரைச்சப்படி, பந்த சாரம், மட்டதாரைச் சவகம் என்பனவாம்.

சப்படி—தட்டையாக அமைந்திருப்பது.

சவக்கம்—சதுர வடிவுள்ளதாக இருப்பது.

**ஸ்ரீவிமானம் :** (சம) கோயில் இறையகத்தின் மீது எழுப்பப்பெறும் ஒப்பனைப்பகுதி. இது கொடுங்கை மேலமையும் வரிநிலை பீடம் முதலாக கும்பம் அளவினதாக அமைக்கப்பெறும். இதனை அடிப்படை முதலாக ஸ்தூபி வரையிலென்றும் அளவிடுவர்.

*"உபாநாதி ஸ்தூபி பர்யந்தம்".*

*"தேவர் கோயில் ஸ்ரீவிமானம் கல்லால் எழுந்தருளுவிச்சேன் சோழர் பெருந் திறத்து விக்கிரமமாராயன்"*

(தெ. கல். தொ. 19, கல். 332.)

**ஸ்ரீவைஷ்ணவக் கண்காணி :** (சம) திருமால் கோயிலில் வைணவ ஆகம விதிப்படி வழிபாடுகள் நிகழ கண்காணிக்கும் அதிகாரி, இவர் ஸ்ரீகார்யத்தின் மேற்பார்வையாளராகவும் இருப்பர்.

*"எம்பெருமான் கோயிலில் ஸ்ரீகார்யஞ் செய்கின்ற இராயூர் அருளாள பட்டனும், இக்கோயிலில் ஸ்ரீவைஷ்ணவக் கண்காணி செய்கின்ற வண்டுவராபதி பட்டனும்".*

(தெ. கல். தொ. 3:1, கல். 38)

## பிற்சேர்க்கை

### கி. பி. 13-ஆம் நூற்றூண்டு முதல் 17-ஆம் நூற்றூண்டு வரை, கல்வெட்டுக்களிலுள்ள வடமொழிச்சொற்களும் தமிழ்ச் சொற்களும்

"அ"

**அகப்பற்று :** (வே) ஒரு கிராம எல்லைக்கு உட்பட்ட நிலம்.

**அகாரணக்கண்காணி :** (சமு) ஊர்ச்சபையின் செயல்கள், கோயில் களின் செயல்கள் ஆகியவற்றை விரும்பியபொழுது ஆய்வு செய்யும் அதிகாரி.

*"அகாரணக் கண்காணி தற்புருஷ தேவர்"*

(தெ. கல். தொ. 17, கல். 576

**அங்கவயிச்சியர் :** (வா) அங்க வைசியர் வணிகருள் ஒரு பகுதி யினர்.

(தெ. கல். தொ. 5, கல். 441)

**அஷ்டபரிபாலனம் :** (சம) எட்டுவகையான கோயில் நடைமுறை-களை நிகழ்வித்தல். இடத்தூய்மை, திருமேனிகள் தூய்மை, தீர்த்தத்தூய்மை, வழிபாட்டுத் தூய்மை, திருப்பள்ளித்தாமத் தூய்மை நிவேதனத் தூய்மை, திருவிளக்குத் தூய்மை, வருவாய்த் தூய்மை.

**அஸ்வமேதஸஹஸ்ரம் :** (சம) ஆயிரம் அஸ்வமேத யாகம்.

*"இத்தர்மம் ரக்ஷித்தவன் அஸ்வமேதஸஹஸ்ரம் பண்ணின புண்யம் பெறக் கடவன்"*

(தெ. கல். தொ. 17, கல். 692)

**அச்சை :** (சம) (அர்ச்சை) நான்மறையுள் ஒன்றனுக்குரிய தொடர்.

**அத்தியயனம் :** (சம) பல பிராமணர் சேர்ந்து வேதங்களை முறை யாக ஓதுதல்.

*"அத்தியயனம் பண்ணுமிடத்து நாளொன்றுக்கு ஒரு சந்தி எட்டுப் பேராக அத்தியயனம் பண்ணவும்"*

(தெ. கல். தொ. 17, கல். 584)

**அமரம் :** (அ) நிலையாக விடப்பெறும் காணியாட்சி - நிலம். என்றும் குறையாமல் அழியாமல் இருக்கும்படி செய்யப்பட்ட இறையிலி நிலம்.

(தெ. கல். தொ. 17, கல். 562) (தேவராயர்-1426.)

**அயிராவதம் :** (சம) இந்திரனின் ஊர்தியாகிய தெய்வயானை. நான்கு தந்தங்களுடையது.

**அர்த்த சாமம் :** (சம) நள்ளிரவு. (அர்த்தம் பாதி)

**அர்த்தித்தல் :** (சமு) பாகப்பிரிவினை செய்தல்.
''*அர்த்திகக நிலவிலைப் பிரமாண இசைவுதிட்டு*''

(தெ. கல். தொ. 23, கல். 353)

**அரண்மனையிற் பிறக்கும் வரி :** (அ) அரண்மனையிலிருந்து அரசு பிறப்பிக்கும் வரி.

(தொகுதி 7, கல். 108)

**அரைமனை சோடி :** (அ) அரண்மனைக்குச் செலுத்தும்வரி.

**அவ்வையார் :** (சமு) பாட்டியார்.

(தெலுங்கு மக்கள்-முறைப்பெயர்)

(தேவராயர் ஆட்சி, கி.பி. 1426)

(தெ. கல். தொ. 17, கல். 562)

**அவதானம :** (கலை) நிகழ்ச்சி, செயல்படுத்துதல்.

**அவனிது :** (மொ) அவனுடையது.

(தெ. கல். தொ. 5, கல். 726)

**அன்வயத்தார் :** (சமு) ஒருகுடியில் வழிவழி வருபவர்.

**அன்றாடு நடக்கும் நற்காசு :** (அ) நாட்டு நடைமுறையில் வழக்கிலிருக்கும் குற்றமற்ற பொற்காசு.

(தெ. கல். தொ. 5, கல். 483)

## '' ஆ ''

**ஆக்கினை :** (அ) தண்டனை.

**ஆகாமி :** (மொ) அனுபவத்திற்கமைந்திருப்பது.

**ஆங்கேய் :** (மொ) அவ்விடத்தே.

**ஆட்டைக்கோள் :** (அ) ஆண்டுதோறும் வசூலித்துக்கொள்ள வேண்டிய வரி.

**ஆடிபூரப்பச்சை :** (சம) ஆடிப்பூர நன்னாளிலமைந்த திருவிழாவிற்காக மக்களிடம் திங்கள் தோறும் பெறும் வரி.

(தெ. கல். தொ. 7, கல். 22)

ஆண்டுகள் அடவு : (வ) குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு அமைந்த உரிமை.

ஆதிக்கப் பேறு : (அ) அதிகாரம் செலுத்துதற்குரிய கட்டணம்

ஆதிதாசர் : (சம) சண்டேசுவரர்.

ஆதிரைப்பாட்டம் : (அ) திங்கள்தோறும் ஆதிரைச் சிறப்பு நாள் குறித்து மக்களிடம் பெறும் வரி.

ஆயப்பாடி : (அ) வழிச்சாரிகையாகச் செல்லும் பொருள்கட்கு ஆயம் விதிக்கும் எல்லை.

ஆராதனை : (சம) கோயிலில் வழிபாடு செய்யும் ஆரிய பிராமணர்களைக் கண்காணிக்கும் பிராமணன்.

(தெ. கல். தொ. 5, கல். 649)

ஆரியன் : (சமு) ஆரிய பிராமணன்.

ஆலஸ்யம் : பயன்படுத்தப்பெறாத நிலை. பாழடைந்த நிலை. "தொந்தாவிளக்கும் ஆலஸ்மாயிருக்கக் கண்டு"

(தெ. கல். தொ. 3:1, கல். 49.)

"இ"

இஞ்சித்தீர்வை : (அ) இஞ்சிக்கிழங்கு ஏற்றுமதி செய்யப் பெறுதற்கு அரசு பெறும் தீர்வைக் கட்டணம்.

(தெ. கல். தொ. 17, கல். 264)

இடங்கசாலை : (சம) நாயக்கர் ஆட்சியில் திருவையாற்றில் சமயத்துறைக் குரியதாக அமைக்கப் பெற்றிருந்த அறநிலையம்.

(தெ. கல். தொ. 5, கல். 555)

இடுவிச்சு : (மொ) (இடுவித்து) ஒப்படைத்து, அடைக்கலப்படுத்தி. (தொகுதி. 7, கல். 85)

இடையீடு : (வ) அனுபவமாக வரும் நிலத்தின்மீது புதிய உரிமைகளை நியமித்தல்.

இடைவட்டை : (அ) ஓராண்டின் இடையே பலபிரிவாகப் பெறும் வரி.

இப்படி அறிவுக்கு : (மொ) இப்படியாக அறிந்தமைக்கு. (இன்னார் எழுத்து)

**இயற்றண்டம்** : (வ) ஊர்க் கட்டுப்பாட்டினை மீறுவோர் பெறும் தண்டனை.

**இரட்டிக்க இலக்கர்** : (பொ) இரண்டு பங்கான தொகை. (பணம்)

**இராசகரம்** : (அ) அரசு கையோலைவழி அளித்த உரிமைகள்

*''கையோலை பெற்ற மஹேஸ்வரர்க்கு காணி மடப்புற இறையிலி இராசகரம உட்பட்ட ஸாவ்வ மான்ய இறையிலி''*

(தெ கல் தொ. 7, கல், 106)

**இருந்து பரிமாறுவார் பேரிற் கடமை** : (அ) அங்காடிகட்குப் பிற இடங்களிலிருந்து வரவழைக்கும் பொருள்களைப் பெற்று உரிய வியாபாரிகட்குப் பங்கீடு செய்து கொடுக்கும் பொறுப்பாளி கொடுக்கவேண்டிய வரித்தொகை. இவ்வரி பிற்காலப் பாண்டியர் ஆட்சியில் வழக்கிலிருந்துளது.

**இல்லரி** : (வே) வீடுகளில் பாதுகாக்கப்படும் விதைநெற் கட்டு.

**இலைக்கொடி** : (பொ) வெற்றிலைக் கொடி.

**இளங்கூறு** : (வ) சிறிய அளவில் பெறும் பகுதி.

**இளவட்டம்** : (சமு) இளைஞர், வாலிபவயதினர்.

**இளைய தார்** : (சமு) இளைய வாரிசுதாரர்.

**இளைய நாயனார்** : (சம) விநாயருக்கு இளைய முருகப்பெருமான்.

**இறங்கல் இடல்** : (வ) உரிமைகளை மாற்றிச் செய்தல்.

(தொ, 5, கல். 479)

**இறங்கு சாத்து** : (வ) வெளியிடங்களிலிருந்து வந்து இறங்கும் வணிகர் கூட்டம்.

**இறுப்பு** : (பொ) மூலப்பொருள், முதற்பொருள்.

**இறைபோகம்** : (அ) அரசுபெறவேண்டிய இறையை வருவாயாகப் பெறும் நிவந்தம்.

**இறையிலிப்பற்று** : (அ) வரி இல்லாமல் தர்மத்திற்கு விட்ட நிலம். (பற்று-நிலம்)

**இறையிறுக்கும் கோல்** : (அ) நிலத்தை அளந்து இறை அளவிடுதற்கமைந்த நில அளவுகோல்.

"ஈ"

ஈக்காலாணி : (கலை) பொன்னணிகளின் மூட்டுவாயில் இடப் பெறும் வளைவான பொற்கம்பி ஆணி.

ஈசானியம் : (வ) வடகிழக்கு மூலை.

ஈழச்சேரி : (சமு) ஈழநாட்டிலிருந்து குடியேறிய மக்கள் வாழும் இடம்.

ஈழம் : (மொ) இலங்கை, தாழ்நிலப்பரப்பு.

"உ"

உசாவடி இரேகை : (அ) ஊர்விசாரணைச் சாவடியின் பதிவுக் கணக்கு.

(தெ. கல். தொ. 17, கல். 562)

உட்கோள் : (அ) உள்பட்டதாகப் பெறும் வரி அல்லது வருவாய்.

உடற்கோள் : (பொ) மூலப்பொருளோடு கொள்ளுதல்.

உடனிலை : (மொ) ஒன்றாகச் சேர்க்கும் நிலை.

உண்டியச்சு : (பொ) உண்டியல் பணம்

உத்ஸவம் : (சம) திருவிழா.

உதகபூர்வதன்மதானம் : (சம) அறம் செய்பவர், பெறுபவர் கையில் நீரால் தாரை வார்த்து உறுதி மொழிந்து அறவழியே அளிக்கும் பொருள்.

(தெ. கல். தொ. 7, கல். 23)

உதிரித் தீர்வை :(அ) நெல், அரிசி ஆகிய உணவுப் பொருள்வகையின் பேரில் பெறும் வழிச்சாரியைக் கட்டணம்.

உதிரி நாட்டாயம் : (அ) அப்போதைக்கப்போது நாட்டிலே விதிக்கப்பெறும் ஆயக்காசு. இதைப்போன்றே உதிரித்தீர்வை-களும் விதிக்கப் பெறுதலுண்டு.

உப்பிஞ்சி : (பொ) உப்பிட்டுப் பதன் செய்யப்பட்ட இஞ்சிக் கிழங்கு. இதற்கு அரசு வரிவிதித்துளது.

உபத்திரகம் : (மொ) தொல்லை கொடுத்தல், சிறுகுறும்பு செய்தல்.

உபய சாசனம் : (சம) செயலாக்கும் சாசனம்.

*''பக்த ஜனங்களுக்கு உபயசாசனம் பண்ணிக் குடுத்தபடி'*

(தொ. 17, கல். 331)

**உபய மார்க்கம் :** (வா) சார்ந்த விதிமுறை, நடைபாதை வழி.

**உபய தேசி :** (வா) சில்லறை வியாபாரிகள்; இடம் பெயரும் வணிகர் குழு.

**உபாதி :** (வ) கொடுக்கக் கடமைப்பட்டவை.

**உம்பள நாடு :** (பொ) உப்பின் அளர்மிகுந்த நிலப்பரப்புடைய நாடு. இது சோணாட்டின் தென்கிழக்குப் பகுதியாகிய திருமறைக்காடு, கோடிக்கரை முதலிய ஊர்கள் பொருந்திய நாடாகும்.

(உப்பளங்கள் நிறைந்த நாடு)

**உம்பளம் :** (வ) புதிய வருவாய்; ஊதியமல்லாத வருவாய்.

**உலவிபொன் :** (அ) (உலைவி பொன்) உலையிலிட்டுக் காய்ச்சி தூய்மை செய்த பொன். (உலவி—நாட்டுவழக்கில் உலவிய பொன்)

**உழப்பம் :** (சமு) பலவகைப் பணி.

**உழுதுடி :** (வே) உழுது பயிரிடும் குடி.

**உழுதான் குடி :** (வே) உழுது பயிரிட்ட உழவர்குடி.

(தொ. 5, கல். 441)

"ஊ"

**ஊட்டு :** (மொ) உண்ணுதற்குரிய அறம்.

*"ஊட்டில் உண்ணும் பிராமணர்கள் போஜனத்துக்கு"*

(தெ. கல். தொ. 23, கல். 117.)

**ஊர்கள் பொத்தகம் :** (அ) ஊர்களின் நில அளவுகள். அவற்றிற்குரிய இறைவரி ஆகியவைகள் குறிக்கப்பட்ட கணக்குப் புத்தகம்.

**ஊர்ப்படி :** (அ) ஊர் கணக்குப்படி; ஊர்க்கணக்கு.

(தொ. 5, கல். 629)

**ஊரிலே ஒட்டுக்கு :** (அ) ஊரிலே பெறப்படும் வரி, வருவாயில் சேர்ப்பதற்கு.

(தொ. 17, கல். 600)

**ஊழியம் :** (அ) அதிகாரிகளின் கட்டளைக்குட்பட்ட பணி; ஊர்ப் பொதுக் காரியங்களைச் செய்யும் பணியாள்.

"எ"

எடுத்துக்கட்டி : (சமு) வீட்டைச் சுற்றி அமைக்கும் மதிள். (வேலி)

எருத்துப்பொதி : (அ) காளைமாட்டின் மீது ஏற்றிவரும் சரக்கு. மாட்டின் முதுகில் அமைத்தற்கேதுவான பைகளில் இரண்டு மூட்டையாக அமைக்கப்பெற்று சுமத்தப்படுதலின் பொதி என்ற பெயராயிற்று.

எல்கை : (வே) (எல்லை) நிலங்களை அளந்து எல்லையிடுதல்.

"ஏ"

ஏகபோகம் : (சமு) தனிமனிதன் வழிவழியாக அனுபவிக்கும் நிலம் அல்லது வருவாய்.

ஏகாந்தி : (சமு) சுற்ற மில்லாதவன்; துறவி.

ஏகாடியம் : (வ) பிறர் விரும்பாத செயல்.

ஏரிக்கம்பம் : (வே) ஏரியின் நீரளவைக் காட்டும் கல்கம்பம்.

ஏரிக்கோப்பு : (வே) மழைக்காலத்தில் ஏரியில் நீர் நிரப்புதல்.

ஏரிவாய் : (வே) ஏரிக்கு மழைநீர் வழிந்தோடிவரும் திறப்பு.

ஏற்றம் : (மொ) மிகுதி. நீர் பாய்ச்சும் ஏற்றம்; கூடுதல்.

ஏற்றமாக : (மொ) மேல் கூடிறயதாக-மேலேற்றமாக.

*"எங்களுக்கு ஏற்றிவிட்ட நிலம்"*

(தெ. கல். தொ. 17, கல். 171)

ஏறத்தண்டிக்கொள்ளுதல் : (வ) முன்னருள்ள தொகைக்கு மேல் கூடுதலாக வசூலித்துக் கொள்ளுதல்.

ஏறுபொதி : (வா) காளைமாட்டின்மீது சுமத்திச் செல்லும் சரக்கு மூட்டை.

"ஒ"

ஒட்டுட்டி : (கலை) பாதம் இணைக்கப்பட்ட உலோகப்பானை; ஒட்டுருளி.

ஒடுக்குதல் : (பொ) முன்னைய முதலோடு சேர்த்தல்.

ஒழுகு : (மொ) முறைமை; வரிவிதிப்பு.

ஒழுகுபாட்டம் : (அ) ஊர்க்கணக்கில் அடங்கிய முறைப்படி பயிரிடும் விளைவு.

"ஓ"

ஓடவரி : (அ) ஆறு, ஏரி ஆகியவற்றில் ஓடம் செலுத்துவார் கொடுக்கும் வரி.

**ஓடாணி :** (கலை) பொன்னணியின் மூட்டுவாயில் பொருத்தும் செப்பாணி,

**ஓலை ஏடுபடி :** (அ) சாசன ஓலைகளை ஏடுகளில் படிசெய்து வைப்பதற்கு அரசுபெறும் கட்டணம.

**ஓலைக்காசு :** (பொ) சாசனமெழுதும் ஓலைக்குரிய மதிப்புக்காசு.

" க "

**ஹிரிஹுயன் :** (சம) இந்திரன்.

**கங்காணி (கண்காணி) :** (அ) மேற்பார்வையாளன்.

**கட்டம் :** (வே) சதுரமாக அமைந்த விளைநிலம்.

**கட்டளை :** (சம) திட்டப்படி நிலையாக நிகழச்செய்யும் அறச் செயல்.

**கட்டிக்குடுப்பது :** (மொ) அமைத்துக் கொடுப்பது.

*"வண்டுவேது கட்டிக்குடுப்பதென்று வந்த திருமுகப் படிக்கு"*

(தெ. கல். தொ. 5, கல். 445)

**கடியாரவாசல் :** (அ) சத்திரங்களின் தலைவாசல் கடியாரம் வைக்கப்பட்டுள்ள தலைவாசல்.

நாயக்கர் காலம். (தொ.5, கல். 555)

**கடைச்சரக்குத் தீர்வை :** (அ) மிளகு, மஞ்சள், பாக்கு, சுக்கு, கடுக்காய், சர்க்கரை, சீரகம், வெந்தயம், மற்றும் உண்டான கடைச் சரக்குகளின் மீது பெறும் கட்டணம்.

**கண்டம் :** (கலை) கருங்கற்கட்டடத்தின் அடிப்படையில் உள்பதிந்த தொடர் வரிசை; பரந்துநிற்கும் நிலத்தின் ஒரு கூறு.

**கண்டு :** (பொ) மட்டமான வயிர வகையுள் ஒன்று.

**கண்டுழவு :** (வே) மகசூலின் பயன்.

**கணபோகம் :** (பொ) பலருக்குரியதாகும் ஒருவழி வருவாய்.

**கணி :** (கலை) சோதிடன்.

(தொ. 5, கல். 483)

**கர்த்தாக்கள் :** (அ) நிர்வாகத் தலைமையுடையவர்கள்.

**கரணதண்டம் :** (அ) ஊர்ச்சபையாரால் விதிக்கப்பட்ட தண்டனை.

**கரதானம் :** (சம) பெறுபவனிடம் கையில் கொடுக்கும் அறப்பொருள் (தெ. கல். தொ. 7, கல். 30)

**கரு ஆழ்த்தாழ்வு** (கலை) கம்மாளர், உலோகத்தால் ஆக்கும் பொருள்களின் மெழுக்காசுகளை மண்ணால் மூடி கருவாக்கி பூமியில் தொழில் முறையால் பதித்து, உலோக உருக்கினை அதன் புழைவழியே ஊற்றிச் செய்தற்கு அரசு பெறும் தொழில் வரி.

(தெ. கல். தொ. 7, கல். 22)

**கருக்கு :** (கலை) கொடிக்கருக்கு. உலோகக்கலங்களன் மேற்புறம் பொறிக்கும் கொடி வேலைப்பாடு.

**கருங்கலி :** (வ) கொடிய பஞ்சம்.

**கருவுகலம் :** (அ) (கருவூல) மூல பண்டாரம்.

*"இக்காசு நற்காசு கருவுகலத்தே ஒடுக்க வேணுமென்று"*

(தெ. கல். தொ. 17, கல். 452)

**கலசம் :** (சம) உலோகச் சொம்பு.

**கவரி :** (சம) கவரிமான் வால்மயிர்க்கற்றை. இஃது இறைவன், அரசன் ஆகியோர்க்குரிய விருதுச் செயல்களுக்குரியதாக வீசப்பெறும் சின்னங்களுள் ஒன்று.

**கற்பித்த காரியம் .** (வ) புதிதாக அமைந்த செயல் திட்டம்.

**கன்னப்பூ :** (கலை) காதிலணியும் பொற்பூ.

**காமக் காணி :** (சமு) விருப்பத்திற்குரியதாக அளிக்கப்பட்ட நிலம்.

**காடுகாவல் :** (அ) நகரைச் சூழ்ந்துள்ள காடுகள்; ஆட்சிக்கு உட்பட்ட காடுகளைக் காவல் செய்வதற்கு மக்களிடம் பெறும் சிறுவரி.

(தொ. 17, கல். 127)

**காணம் :** (பொ) ஓரளவுடையதாக அமைந்த பொன் நாணயம்.

**காரணவர் :** (அ) கணக்கர்; அணுக்க அதிகாரிகள்.

**காரியப்பிள்ளை :** (அ) அரசகாரியங்கள் பார்க்கும் அதிகாரி.

(கோப்பெருஞ்சிங்கன். யா. 20)

**காரையோடு பள்ளம்** : (வே) சுண்ணாம்புக் காரையாக அமைந்த பள்ளத்தாக்கு.

**கால் வடம்** : (கலை) காலணிகளுள் ஒன்று.

**காலறுதி** : (வே) வாய்க்காலின் முடிவிடம்.

**கீழிடுகை** : (பொ) கீழ்க் குத்தகை.

**கீற்றுவரி** : (அ) கூரைவரி.

**குச்சிக்கொண்டு செல்லல்** : (சம) அர்ச்சகர் கோயிலுக்குச் செல்லும் போது பெருக்குமார் எடுத்துச் செல்லல்.

**குடைவரை** : (கலை) சிற்பியால் கோயிலாகக் குடைந்தெடுக்கப்பட்ட மலைப்பகுதி.

**குடிநைு** : (அ) ஆட்சியாளர் மக்களுக்கென்று அமைக்கும் திட்டம்

**குடிமன்றாடுதல்** : (சமு) ஊரிலுள்ள குடிமக்கள் ஊர்ச்சபையாகும் மன்றத்தில் உறுப்பினராதல்.

**குண்டு** : (வே) குறிப்பிட்ட வளைவிற்குள் அமைந்த சிறிது பள்ளமான நன்செய் நிலம்.

**குத்தொகை** : (வே) திட்டமாகக் குறிப்பிட்ட தொகை; குத்து மதிப்பான தொகை.

(தொ. 17, கல். 562)

**குப்பி** : (பொ) தட்டை வடிவில் ஒருபுறம் குழிந்துள்ள வயிரம்.

**குலை** : (வே) வண்டலிடு மேடு; திட்டு.

**குளகம்** : (வா) நாயக்கராட்சியில் கொண்கான நாட்டில் (தர்மபுரிப் பகுதி) வழக்கிலிருந்த தானியமளக்கும் அளவைகளில் பெரிய அளவையின் பெயர். (குளகம்-கல அளவை போன்றது.

(தெ. கல். தொ. 7, கல். 11)

**குளிகை** : (அ) சிறிய திரண்ட வடிவிலமைந்த நாணயம்.

(குளிகைப் பணம்)

**கையெழுத்தோலை** : (அ) ஆணையர்தம் கையால் எழுதி அனுப்பும் ஓலை. (கட்டளை)

**கைவாசி :** (அ) விற்பனைத் தானியங்களில், இருகையால் அள்ளிக் கொள்ளும் மகமை உரிமை. இதனை அள்ளாயம் என்றும் கூறுவர்.

**கேள்விமுதலி :** (அ) அரசனிடும் உத்தரவுகளை நேரில் கேட்டு எழுதும் அதிகாரி.

**கொடிக்கால் :** (வே) வெற்றிலைக் கொடி பயிரிடும் நிலம்.

(தெ. கல் தொ. 23, கல். 163)

(மாற. குலசேகரன், கி. பி. 1290)

**கொழுவுழவு :** (வே) ஐந்து நாழிகை உழவு: ஒருசால் உழவு.

**கோட்டமதிள் :** (அ) கோட்டை மதிள் ஆகிய ஊர்ப் பாதுகாப்பிற்குரியதாகப் பெறும் வரி.

(தொ. 5, கல். 733)

**கோட்டை :** (வா) (நெல் அளவை) ஒரு கலம் என்பது போன்ற அளவு. பாண்டிநாட்டில் ஒரு கோட்டை நெல்லளவு வழக்கில் உள்ளது.

**கோத்திர மூலபட்டன் :** (சமு) பிராமணருக்குரிய பிராம்மண கோத்திரங்களுள் ஒன்றின் மூலமாக இருந்த இருடியின் வழிவந்த பிராமணன்.

**கோமயம் கோமூத்திரம் :** (சம) பசுவின் சாணம்; சிறுநீர்.

(தொ. 17, கல். 178)

**கோமுகம் :** (சம) கோயில்களில் அபிஷேகநீர் வழியும் முகப்பில் பசுவின முகம்போல் அமைக்கப்படுதலின் இப்பெயர் பெற்றது.

**கோயில் சாமுதாயம் :** (சம) திருக்கோயில் வழிபாட்டு நடைமுறை, நிர்வாகம், வரவு செலவு, கண்காணிப்பு முதலியவைகள்.

*''இப்படி அறிவேன் கோயில் சாமுதாயம் புற்றிடங்கொண்டான்''*

(தெ. கல். தொ. 17, கல். 584)

**கோயிலுழவு :** (சமு) கோயிலுக்குரிய நிலங்களைக் கோயிலாரே உழுதுபயிரிட்டு அறுவடை செய்து கொள்ளல்.

**ஸ்ரீ ஹஸ்தம் :** (சம) திருக்கை. தெய்வத் திருமேனியின் கை

*''சண்டேசுவரம் ஸ்ரீஹஸ்தத்து நீர்வார்த்துக் குடுத்தேன்''*

(தெ. கல். தொ. 17, கல். 583)

**ஸ்ரமணர் :** (சம) சமணர்.

*"வைகாசனர் ஊர்களிலும் ஸ்ரமணர் ஊர்களிலும்"*

(தெ. கல். தொ. 3:1, கல். 9)

**ஸ்ராவணை :** (சம) அர்ச்சகர், சமய ஆச்சாரியர் ஆகியோருக்கு அளிக்கும் மரியாதைக் காணிக்கை.

**ஸஹஸ்ரகலைசம் :** (சம) (ஸஹஸ்ர கலசம்) ஆயிரம் கலசப்பானைகள். கோயில்களில், திருமேனிகட்கு நிகழ்த்தும் சிறப்புத் திருமஞ்சன நீராட்டுதற்கு ஆகமவிதிப்படி 1008 கலசங்கள் அமைத்து நீராட்டுவர்.

**ஸங்கராந்தி :** (வ) சூரியன் உலகமையத்தினின்றும் $23\frac{1}{2}$ பாகை தெற்கினும் வடக்கினும் சென்று மீளும் காலத்தின் பொதுப் பெயர்.

*"ஸங்க்ராந்தி இரண்டுக்கு ஆண்டுவரை நெல்லு பதிநால்க் கலனே"*

(தெ. கல். தொ. 17, கல். 314)

**ஸத்யதர்சனிகள் :** (சம) உண்மை நெறியுணர்ந் தொழுகும் துறவியர்.

**ஸம்ஞயன் :** (வ) (ஸம்ஞ்ஜை) எழுத்தறியாதவன். (தற்குறி)

*"பங்குக்கு முதுகண்ணாக வைகாவுடையானும் கூற்றுடையானும் ஸம்ஞயானமைக்கு நாராயணன் சுந்தரத் தோளுடையான் எழுத்து"*

(தெ. கல். தொ. 8, கல். 205)

**ஸம்பாவனை :** (சம) சமயப்பெரியோர்கட்குச் செய்யும் மரியாதை, காணிக்கை.

**ஸம்மதம் :** (மொ) உடன்பாடு.

*"ஸம்மதித்து கைக்கொண்ட ஆடு பன்னிரண்டு"*

(தெ. கல். தொ. 8, கல். 39)

**ஸமர்ப்பித்தல் :** (வ) காணிக்கையாகக் கொடுத்தல்.

(தொ. 7, கல். 53)

**ஸர்வமான்யம் :** (ஆ) அரசோ, ஊர்ச்சபையோ ஊழியம் இட்டு அதற்குரிய ஊதியமாக எல்லா உரிமைகளும் பெறுவதாக அளிக்கும் குடிநீங்காக்காணியாட்சி நிலம். உரிமை பெற்ற-

வனின் வழியினர், முன்னோர் செய்துவந்த தொழிலைத் தொடர்ந்து செய்து அந்நிலத்தினைத் தொடர்ந்து அனுபவிக்கும் முறைமை பெற்றதால் இப்பெயர் பெற்றதாம்.

(தெ. கல், தொ. 7, கல். 23.)

**ஸர்வாயஸகிதர் :** (அ) எல்லாவகையான ஆயம்வரி உட்பட.

(தெ. கல். தொ. 7, கல். 3)

**ஸரீரம் :** (வ) ஓர் ஆயுள்; ஆள் ஒன்று.

*"இப்பன்னிருவர்க்கும் ஸரீரம் ப்ரிதி ஆழாக்கு நெய்யும் ஐந்து கறியும பிராமணர்கு ஊட்டுவதா".*

(தெ. கல். தொ. 3:1, கல். 1)

**ஸபையார் :** (அ) ஸபையார்; கிராம நிர்வாக சபையார். கிராமங்களில் குடவோலை வழியே தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் அடங்கிய கிராம நிர்வாகக் குழுவினர்.

**ஸாஸ்வதம் :** (மொ) நிலையானது; என்றும் மாறாத நிலையுடையது.

*"சந்திராதித்தவற் ஸாஸ்வதமாக எரிக்கக் கடவோமாக"*

(தெ. கல். தொ. 17, கல். 445. குலோத்துங்கன் 3, கி. பி. 1182)

**ஸாமுதாயம் :** (சம) கோயில் நடைமுறைச் செயல்கள்; பணிச் செயல்கள்.

*"கோயில் ஸ்ரீகார்யம் செய்வார்களும் சாமுதாயம் செய் வார்களும்"*

**ஸிம்ஹநாயறு :** (வ) சிம்பராசியில் சூரியன் செல்லும் திங்கள்; ஆவணி மாதம்.

**ஸிம்ஹாஸநம் :** (அ) (சிம்மாசனம்); அரியாசனம். அரசன் இருந்து ஆட்சி நிகழ்த்தும் இருக்கை. பொன்னாலும் மணியாலும் செய்யப் பெற்று சிங்கங்கள் சுமந்த பாங்கில் அமைக்கப் பெறுதலின் இப் பெயர் பெற்றது

*"வீரஸிம் ஹாஸநத்து உலகுடையாளோடும் வீற்றிருந் தருளிய ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்"*

(மெய்க்கீர்த்தி)

**ஸிலேலாகை :** (வ) கற்பொறிப்பு; கல்லெழுத்து

"*இத்தேவற்கு முன்பு ஸிலாலேகை பண்ணின நிலத்துக்கு தெற்கும்*"

(தெ. கல். தொ. 3:1, கல். 29)

**ஸீர்த்தனம் :** (சமு) சீதனம்; வரிசைப்பொருளாகக் கொடுத்த செல்வம். பெண்களுக்குப் பெற்றோர் அளிக்கும் பொருள் வரிசை. பெண் தெய்வங்கட்கும் திருக்கல்யாணத் திருவிழாவின்போது சீதன நிகழ்ச்சி இடம் பெறுதல் வழக்கு.

"*நாச்சியார்ககு இவ்வூர் ஊரோம் ஸீர்த்தனமாக குடுத்த நிலமாவது*"

(தெ. கல். தொ. 8, கல். 30)

**ஸ்வஸ்திஷ்ய தாராபூர்வம் :** (சம) நலமுண்டாக நீர் வார்த்துச் செய்யும் தானம்.

(தெ. கல். தொ. 23, கல். 271)

**சோமகிரஹணம் :** (சம) சந்திர கிரஹணம். பூமியின் நிழல் நிறை மதியின் மீது சிறிதுகாலம் மறைத்து நீங்கும் ஆண்ட இயக்க நிகழ்ச்சிகளுள் ஒன்று. (சோமன்—சந்திரன்)

**ஜயபத்திரத்தூண் :** (அ) வெற்றிப்பத்திரம் பொறித்ததூண் அரசன் தான் கைப்பற்றிய நாட்டின் தலைநகரிலோ ஆங்கமைந்த சிறந்த பகுதியிலோ, தமக்குரிய இலச்சினையுடன் வெற்றியையும் விளக்கமாகப் பொறித்து நாட்டிவைக்கும் கற்றூண்.

"*இரட்டபாடி ஏழரையிலக்கம், முரட்டொழில் அடக்கி, முழங்கெரி மூட்டி, வெங்கதிர்ப்புலியேறு வியந்து விளையாடத் துங்கபத்திரைக் கரை ஜயபத்திரத்தூண் நாநிலம் பரசநாட்டி*"

(வீரராசேந்திரன்—மெய்க்கீர்த்தி)

(தெ. கல். தொ. 3:1, கல். 30)

**ஜாகை :** (சமு) தங்குமிடம்; மனை.

**ஜீவனத்துக்கு நிலம் :** (சமு) வாழ்க்கைக்குரிய வருவாயாக அளிக்கப்பட்ட நிலம்.

(தொ. 5, கல். 635)

**ஜீவிதம் :** (சமு) மக்கள் வாழ்க்கைக்குரிய வருவாய்.

"*தேவதானமாக ஊர்களில் ஜீவிதம் அடைக்கும்படியாலுள்ள நெல்லுக்கும்*"

(தெ. கல் தொ. 8, கல். 56)

**சகலஸ்வாமயம் :** (வே) எல்லாவகையான நிலபுலன்கள் நஞ்சை புஞ்சை காடு கறம்பு முதலியன.

(தெ. கல். தொ. 7, கல். 21. சதாசிவராயர் ஆட்சிக்காலம்.)

**சகலலோகத்துக்கும் தம்பிரானார் :** (சம) எல்லாவுலகங்கட்கும் தலைவனான சிவபெருமான் (தம்பிரான்-சிவபெருமான்.)

(தொ. 5, கல். 286)

**சதா சேர்வை :** (அ) நிலையான ஊழியம்.

**சடித்தம் :** (மொ) பிடிவாதஞ்செய்தல்; வற்புறுத்தல்.

''*வருஷம் வருஷம் அதிகாரிகள் சடித்தம் பண்ணி இரட்டித்த இலக்கம் கொண்டு*''

(தொ. 17, கல். 562)

**சண்டை :** (கலை) (ஜண்டை) தோற்கருவி.

(தொ. 5, கல். 726)

**சத்ரம் :** (சம) வழிப்போக்கர்கட்கு இளைப்பாறவும் பசியாறவும் அமைக்கப்பெறும் அறச்சாலை; குடை.

(தொ. 17, கல். 275)

**சந்தான பரம்பரை :** (சமு) மக்கள் வழிவழித் தொடர்பினர்.

**சமயக்கணக்கன் :** (சம) திருக்கோயில்களின் வரவு செலவுகளைக் கணக்கிட்டெழுதி வைப்பவன்.

**சர்வநாயகன் :** (அ) அரசியல் துறைகள் அனைத்தினையும் கண்காணிக்கும் அதிகாரி.

(நாயக்கர் காலம்)

**சரக்கு ஆயம் :** (அ) சாலைகளில் செல்லும் வாணிகத்திற்குரிய சரக்குகள் மீது பெறப்படும் கட்டணம். இக்கட்டணம் பொருளின் தரத்திற்கும், அளவிற்கும் ஏற்பப் பெறப்படும்.

(தொ. 17, கல். 127)

**சரிவாரம் :** (வே) விளைவில் சரிபாதி நிலவுரிமையாளருக்கு அளிக்கும் குத்தகைத் திட்டம்.

**சல்லரி :** (சம) கிராம தேவதைகளின் விழாக்களில் ஒலிக்கச் செய்யும் உலோகத்தாலான பெருஞ்சிலம்பி.

**சல்லியம் :** (வ) துன்பம்.

**சறுவசுவாமியம் :** (சம) (சர்வசுவாமியம்) சுவாமியின் வழிபாட்டிற் குரிய எல்லா வகையான செயல்கள்.

(தொ. 5, கல். 286)

**சறுவமான்ணியம் :** (அ) (சர்வமான்யம்) எல்லா உரிமைகளும் பெற்ற இறையிலி நிலம்.

**சனிமூலை :** (வ) வடகிழக்கு மூலை.

*''இவ க்கு மடப்புறம் இறையிலி ஆக விட்ட சனிமூலை திரு விளார் குழிநிலம்''*

(தெ. கல், தொ. 7, கல். 76)

**சாஸ்வதிகமாக :** (மொ) நிலைப்பாக: உரிமை நிலைப்பானதாக. (நிரந்தரமாக).

**சாத்தியம் :** (மொ) இயன்ற செயல்; கொடுத்த அளவு.

**சாதகக்குடி :** (சமு) தனக்கு அனுகூலமாக அமைந்த பணியாளர் குடி.

**சிங்கபுரம் :** (அ) செஞ்சி வட்டத்திலுள்ளதோரூர்.

*''செயங்கொண்ட சோழமண்டலத்து பல்குன்ற கோட்டத்து சிங்கம் பொருத வளநாட்டு செஞ்சிப்பற்று சிங்கபுரம்''*

என்று கல்வெட்டுக்களில் கூறப்பட்டுளது.

(தொ. 17, கல். 257)

**சித்திரைக்கார் :** (வே) சித்திரைத் திங்களில் பயிர் செய்யப்பெறும் குறுவை நெற்பயிர். (தொண்டை நாட்டுப் பருவப் பயிர்)

**சிவப்பு :** (பொ) வைரங்களுள் சிவப்பு நிறமுள்ள அரதனம்.

(தொ. 7, கல், 53)

**சிறுகொடை :** (வே) புன்செய்ப் பயிர்களில் ஊடு பயிராகப் பனி ஈரத்தால் ஓரளவு விளைந்த பயன்தரும் பயிர்கட்குரிய பருவம்.

*''நிலம் பத்துமாவும் கார், பசானம் சிறுகொடை வான்பயிர் உட் பட முற்றும் எப்பேற்பட்ட பயிர்களும்''*

(தெ. கல். தொ. 23. கல். 117)

**சிறு முறி :** (அ) உத்தரவுக் குறிப்போலை

**சிறை அச்சு :** (அ) சிறைச்சாலை நிர்வாகத்திற்குரியதாக மக்களிடம் காசாகப் பெறும் வரி.

**சீகரணம் :** (அ) சிறந்த அல்லது தலைமையான ஆய்வகம். *"பரவுவரி சீகரணம்"*

(தொ. 5, கல். 662)

**சீபாதந் தாங்கிகள் :** (சம) கோயில் திருவிழாக்களில் பல்லக்கு சுமக்கும் மக்கள்.

**சீயர் :** (சம) வைணவத்துறவு; வைணவசமயத்தலைவர்; திருமால் கோயில் நிர்வாக சமயத்தலைவர்.

**சுகியன் பிரஸாதம் :** (சம) உள்ளீடாக இனிப்பிட்ட பருப்புத் துகைப்பிட்டுச் செய்யும் பண்டம்.

*"திருவேங்கடமுடையானுக்குரிய நிவேதன பிரசாதங்களுள் ஒன்றாகும்."*

**சுங்கம் உடையமார்க்கம் :** (அ) சுங்கச் சாவடி அமைந்த கிளைச் சாலை.
(நாயக்கர் ஆட்சி) (தொ. 5, கல். 289)

**சுந்தரபாண்டியன் கோல் :** (அ) இது 24 அடி நீளமுடைய நில மளக்கும் கோல். மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சியில் நாட்டு வழக்கிலிருந்த நில அளவைக்கோல்.

**சுரவித்துறை :** (சம) (சுரபித்துறை) திருக்கோயில்களுக்குரிய ஆநிரைகள் பாதுகாப்புத் துறை; பசுமடம்.

(தொ. 17, கல். 584)

**செப்பியன் மாதேவியாலே அறுநாழி உப்பு :** (சம) செம்பியன் மாதேவி என்ற பெயரால் திருமழபாடி கோயிலில் நாயக்கர் காலத்தளவும் வழக்கிலிருந்த மரக்கால்.

(தொ. 5, கல். 627)

**செல்கால் நிலம் :** (வே) நீர் செல்லும் வாய்க்கால் பாசனமைந்த நிலம்.

**செவ்வாடு :** (சம) செம்மறியாடு.

(தொ. 5, 648)

**சேவித்தல் :** (சம) வணங்கல்; பணிவிடை செய்தல்.

**ஞாடு :** (மொ) நாடு

**டங்கசாலை :** (அ) நாணயங்களை உருவாக்கும்தொழிற்சாலை.

**தட்டாரப்பணி செய்காணி :** (சம) திருக்கோயில்களில் திருமேனிகட்கு அணிவிக்கும் திருவாபரணங்களைச் செய்யும் பணியாளராகிய தட்டார்கட்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

(தெ. கல். தொ. 5, கல். 515)

**தட்டோடு :** (பொ) தட்டையாகவும் வளைவாகவும் மண்ணால் செய்து சுடப்பெறும் கூரை ஓடு.

**தண்டம் :** (அ) தண்டனை விதிப்பு, அபராதம்.

**தர்ம தானம் :** (சம) விரும்பிச் செய்யும் அறம்.

**தானமானம் :** (சம) அறஞ்செய்தற்குரிய அளவு.

**தண்டலை :** (வே) பசிய கிளைகளும் இலைகளும் தலைப்பில் தழைத்திருக்கும் மரங்கள்.

''*தெங்கு கமுகு பலா, மா மற்றும் உள்ளிட்ட தண்டலைகளும்*''

(தெ. கல். தொ, 17, கல். 143)

(சடைய சுந்தரபாண்டியன் கி.பி. 1265)

**தண்டு :** (அ) போர்ப்படை, பல்லக்கு வரை என்னும் மரம்.

**தத்தியோதனம் :** (சம) வெண்ணெயிட்ட தயிர்ப் பிரசாதம்.
(தொ. 7, கல். 53)

**தந்திரபாலன்** (அ) படைத்தலைவன், அமைச்சன்.

**தரிசில் தடி :** (வே) அரிசுப்பகுதியில் நன்செய் நிலமாகத் துண்டிக்கப்பட்ட நிலப்பகுதி.

(தொ. 17, கல். 128)

**தருப்பு :** (பொ) தளம் என்னும் கல்லிலிருந்து அளவுடன் உடைத்தெடுக்கும் வெள்ளைக்கல்.

**தலைச்சுமை :** (அ) தலையில் சுமந்து வரும் பொருட்கள், ஒரு ஆள் சுமக்கும் பாரமுள்ள பொருட்கள். தலைச்சுமைக்கு விதிக்கும் வரி.

**தவப்பன் :** (சமு) தந்தை.

**தன்மதாவனம் :** (அ) தர்மவிசாரணை சபை கூடுமிடம்.

(தெ. கல். தொ. 5, கல். 492)

**தனவான் :** (அ) கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் தொண்டை நாட்டாட்சியில் இடம் பெற்றிருந்த நாட்டுச் செல்வர்கள், தனவான் எனப்பட்டனர். (தொ. 5,)

**தாங்கல் :** (வே) நீர் நிலம், நீர் தங்குதற்குரிய பள்ளமான நிலப் பரப்பு. (நன்செய்)

(தொ. 7, கல். 107)

**தாழ்வற நடத்துதல் :** (அ) தடைபெறாமல் குறைவில்லாமல் நிகழ்த்துதல்.

**தானதர்ம விக்கிரயங்கள் :** (வ) தானம், தர்மம், விற்பனை செய்து பொருள் பெறல் ஆகிய உரிமைகள்.

**தானிகர் :** (அ) தலைமையாளர்.

**தியதி :** (வ) தேதி, மாதத்திற்குட்பட்ட எண்ணமைந்த நாள்.

**திரு உடையாட்டம் :** (சம) (திருவிடையாட்டம்) வைணவக் கோயில்களுக்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

**திருப்பள்ளி எழுச்சி :** (சம) திருக்கோயில்களில் வைகறைப் பொழுதில் இறைவனைத் திருப்பள்ளியினின்றும் எழுப்புவதாக அமைத்துச் செய்யப்பெறும் வழிபாடுகள்.

(தொ. 5, கல். 442)

**திருப்பள்ளி நாச்சியார் :** (சம) திருக்கோயில்களில் அமைக்கப் பெறும் திருப்பள்ளியறை என்ற பகுதியில் எழுந்தருளச் செய்யும் அம்மன் திருமேனி.

**திருமெய்க்காவல் :** (சம) திருக்கோயில் காவற்பணியாளன்.

**தில்லங்காடு :** (வே) தில்லை என்னும் முள்மரங்கள் செறிந்த காடு. தில்லை மரம்-பால்வகை மரங்களுள் ஒன்றாகும்.

(தொ. 17, கல். 128)

**தினவழி :** (வ) நாள்வழிச் செலவிடுவதாக.

**தீர்வை :** (அ) இன்ன மதிப்புடைய பொருளுக்கு இன்ன அளவுவரி என்று திட்டம் செய்வது. நிலத்திற்கு உரிய வரி.

(தெ. கல். தொ. 7, கல். 21)

துர்க்காபதி : (அ) கோட்டைத் தலைவன். (துர்க்கம்-கோட்டை)

துலா இறைப்பு : (வே) கிணற்றில் பூட்டையிட்டு இறைக்கும் நீர்ப்பாசனம்.

துலாபார வரி : (அ) அரசன் துலாக்கோற் றட்டிலமர்ந்து, தன் எடையளவுள்ள பொன்னைப் பிராமணர்க்குத் தானமாக வழங்கும் சிறப்பு விழாவின் பொருட்டு மக்களிடம் பெறப்படும் வரி.

(பாண்டியர் கால வழக்கு)

(தொ. 17, கல். 128, (விக்கிரமபாண்டியன், கி.பி. 1290)

துவாரபாலகன் : (சம) வாயிற்காவலன். (தொ. 5, கல். 456)

தூக்கம் : (வா) நிறுத்தலளவு, உயர்மதிப்பீடு. எடையிடல்.

தூப தீபம் : (சம) நறும்புகையும் திரிச்சுடரும், திரிவிளக்கும்.

தேவ விருத்தி : (சம) கோயில்களுக்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

தேவை : (சம) சிறப்பான நிகழ்ச்சி.

தோப்பரா பணம் : (அ) கிஸ்திபணம், அரசுக்குச் செலுத்தும் தீர்வைப்பணம்.

நம்பு செய்வான் : (சம) வழிபாடு செய்யும் அர்ச்சகன்.

*''விண்ணகராழ்வார் கோயில் நம்பு செய்வானுக்கும்''*

(தெ. கல். தொ. 23, கல். 109)

நரதி : (அ) மக்கள் தலைவன், அரசன்.

நாட்டாயம் : (அ) ஒரு நாட்டிற்கு உள்பட்ட சாலைகளில் செல்லும் விற்பனைச் சரக்குகட்கு விதிக்கப்பெறும் ஆயவரி.

(தெ. கல். தொ. 17, கல். 264)

நிகுதி செய்தல் : (வ) நியதிசெய்தல், திட்டம் செய்தல்.

நிச்சயித்தல் : (பொ) அப்பொழுதே உறுதி செய்தல்.

நியாயம் : (மொ) நேர்மை, நீதி.

*''உண்மை புலப்பாடு நியாய காஞ்சிபுரத்து நியாயம்''*

(காஞ்சிபுரத்திலுள்ள கிராமசபை.)

**நிருபம் :** (அ) அரசின் ஆணை எழுதப்பட்ட கடிதம்.

**நிலக்கூலி :** (அ) இடவாடகை.

"*இவூரில் உப்புவிற்பார் நிலக்கூலியாக முன்பிலாண்டுகளும் இட்டுவரும் காசு*"

(தொ. 5, கல். 627)

**நிறுஉத்தரவு :** (அ) மாறாத உத்தரவு, நிலைத்த ஆணை.

**நீர்நிலை :** (வே) பொதுவாகவும், பாசனத்திற்கும் பயன்பெறும் ஏரி குளம் ஆறு, கால்கண்ணி ஆகிய நீர்நிலைகளின் உரிமைகள்.

**நெற்றி :** (கலை) முகப்பிடம், பீடத்தின் நெற்றி, முன்முகப்பு.

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

**நைவேத்தியம் :** (சம) இறைவழிபாட்டிற்குரியதாகப் படைக்கும் தூய உணவு.

**பஞ்ச திரவியம் :** (சம) ஐந்துவகை திருமஞ்சனத்துகள். திருக்கோயில்களில் திருமேனிகளைத் திருமுழுக்கு செய்யும்போது பயன்படுத்தும் ஐந்துவகையான மணப்பொருட்கள் கஸ்தூரி, அகில், குகில், தேவதாரு, சந்தனம், இலவங்கம், நெல்லி, முள்ளி. விரை : நாகம், நன்னாரி, கஸ்தூரி, நெல்லி, முள்ளி.

**படப்மா :** (வே) (படர்மா) உயர்ந்து வளராமல் படர்ந்ததாகப் பெருகி நிற்கும் மாமரம்.

(தெ. 5, கல். 473)

**படி :** (வா) அளவு (முகத்தலளவை)

"*முட்டில் படியிரட்டி*"

(தொ. 5, கல். 729)

**படுகைகள் :** (வே) ஆற்றின் இருகரைப் பகுதிகளிலும் வண்டல் படிந்து உண்டான இடங்கள்.

(தொ. 17, கல். 596)

**படைமுதலிகள் :** (அ) படைத் தலைவர்கள்.

**பண்டாரவாடை :** (சம) சைவ மடத்தின் பராமரிப்புக்குரிய வருவாயாக அமைக்கப்பெறும் நிதி, நிலம், அல்லது கிராமம்.

(தொ. 5, கல். 704) (தொ. 17, கல். 562)

சைவ வைணவ மடங்களின் நிர்வாகத்திற்குரிய வருவாயாக அளிக்கப்பட்ட இறையிலி நிலம் அல்லது கிராமம்.

(தொ. 17, கல். 562)

**பண்டாரி :** (அ) பண்டாரத்தைப் பாதுகாக்கும் தலைவன்.

(பண்டாரம் - நிதிக்கருவூலம்)

**பரமண்டலம் :** (அ) பிற நாடுகள்.

**பரிகலங்கள் :** (சம) இறைவன் வழிபாட்டிற்கும் நிவேதனம் ஆக்குவதற்கும் பயன்படுத்தப்பெறும் உலோகத்தாலான பாத்திரங்கள்.

**பரிகாரர் :** (சமு) ஏவற்பணி செய்பவர்கள்.

(தொ. 5, கல். 478)

**பரிசாரகப் பேறு :** (சம) கோயிலில் சுவாமிக்கு நிவேதனம் ஆக்குதற்குரியதாக வைக்கப்பெறும் மூலப்பொருள், காசு அல்லது நிலம்.

**பரிசாரகன் :** (சம) திருக்கோயில்களில் மடப்பள்ளியில் நிவேதனப் பிரசாதம் சமைப்பதுடன், வழிபாட்டிற்கு எடுத்துச் செல்லும் கடமை பெற்றுள்ள பிராமணன்.

''*பிரசாதம் எடுத்துப் போய் கறிகாயும் சமைத்திடும் பிராமணன்*''

(தெ. கல். தொ. 17, கல். 275) (சாளுவநரசிம்மன், கி.பி 1468)

**பருத்திவிளை உசரம் :** (வே) (உயரம்) பருத்தி விளையும் மேட்டுப்பாங்கான நிலம்.

**பருவரப்பு :** (வே) திண்மையும் உயரமுமான வரப்பு.

**பலவிருஷங்கள் :** (வே) பலன் தருவனவாகிய மா, பலா, புளி, தென்னை முதலிய பல்வகை மரங்கள்.

**பள்ளச் செறு :** (வே) பளத்தாக்கான நன்செய் வயல்

**பறைந்தவன் :** (மொ) சொன்னவன். பறைதல் — கூறுதல்.

''*இதுக்கு விக்கினம் பறைந்தவன் நினைத்தவன். கெங்கைக் கரையில் மாதாபிதாவையும், காராம் பசுவையுங் கொன்ற பாவம் அனுபவிப்பாராகவும்*''

(தெ. கல். தொ. 23, கல். 118)

பாஷ்ய விருத்தி : (சம) திருமால் கோயில்களில், இராமாநுசர் அருளிய விசிஷ்டாத் துவைத பாஷ்யத்தினை விளக்கிச் சொல்லு தற்கு வைக்கப்பட்ட மூலதனமாகிய நிலம்.

பாடுகொண்டு : (மொ) உழைப்பைக் கொண்டு.

பாளையம் : (அ) சேனை, சேனை தங்கும் இடம்.

பிச்சன் : (சம) சிவனடியார்.

பிர்ம்ம க்ஷேத்ரம் : (சம) பிராமணர்கட்கு பிர்மதேயம் என்ற பெய ரால் கொடுக்கப்பட்ட கிராமம். நிலம்(பூமி).

பிரட்ட குடி : (அ) சாளுக்கியர் குடி. பிரட்டர் சாளுக்கியருள் ஒரு பிரிவினர்.

(தொ. 5, கல். 496)

பிரவேசகம் : வேதாகமங்களைச் சொல்லும் முறை.

பிள்ளையார் நோன்பு தேவை : (சம) ஆவணித் திங்களில் சதுர்த்தி நாளில் அமைந்த பிள்ளையார் நோன்பு விழாவில் நிகழ்த்துதற் குரியதாக மக்களிடம் பெறும் சிறுவரி. இவ்வரி மகமை என்றும் பெயர் பெறும்.

(தெ. கல். தொ, 7, கல். 22)

பிறாப்தியாளர் : (சம) சொத்துரிமையாளர், நெருங்கிய உறவினர்.

பீதாம்பரம் : (பொ) பொன்னிழையாலான ஆடை.

(தொ. 7, கல். 531)

புதுந்த நிலம் : (வே) பதத்து உரிமை செய்த நிலம். தேவைக்குரிய தாக அமைத்துக் கொண்ட நிலம்.

(தொ. 5, கல். 630)

புட்டகம் : (கலை) இடை ஆடை.

புணைப்படை : (அ) பின்னணிப்படை.

புதுநெல்லு : (வே) அறுவடைக்குத் தொடக்கமாகப் புதிர்நெல். காட்டுகைக்குச் செலுத்தும் வரி.

(கி.பி. 14-ஆம் நூற்றாண்டு)

(தொ. 7, கல். 109)

**புரோஹிதம் :** (சம) சடங்குகளைச் செய்வித்தற்கமைந்த முறைகள்.

**புரோவவரி :** (அ) புரவுவரி, நிலவரிக்கணக்கு அதிகாரி.

**புறப்பாடு :** (கலை) முன்னெழுச்சி, புடைப்புத் தோற்றம்.

"*இத நெற்றியில் இரண்டிலும் ஐவிரலோ ஆறு தேரைப் புறப் பாட்டு ஸிம்ஹம் இரண்டும்*"

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

**பூட்டை :** (வே) நீர் இறைப்பதற்குரிய உருளை.

"*பூட்டை இட்டும்*"

(தெ. கல். தொ. 5, கல். 489)

**பூதானம் :** (சம) நிலதானம்.

(தெ. கல். தொ. 7, கல். 22)

**பூமிபுத்திரர் :** (சமு) வேளாளர்,

**பூர்வா சாரம் :** (வ) சமயச் சார்பில் பழமையாகத் தொடர்ந்து வரும் வாழ்க்கை முறைமைகள்.

**பூறுவம் :** (மொ) (பூர்வம்) முன்னாள்.

**பெருக்க நலங்கினோம் :** (மொ) மிகவும் வருந்தலுற்றோம்.

(தொ. 17, கல். 562)

**பெருந்திணை :** (அ) வீரபாண்டியன் ஆட்சியில் இருந்த பெரிய அதிகாரிக்கமைந்த பட்ட பெயர்.

(தொ. 5, கல். 452)

**பொத்தகம் :** (மொ) கணக்கு எழுதும் பொத்தகம்.

(தொ 23, கல். 313)

**ப்ரமாதம் :** (மொ) கொலை செய்யப்படுதல்.

**மஹா நாடு :** (அ) பெரிய நாடு.

"*இருக்கிற அளவுக்கு மூக்கனூர் பற்று மஹா நாடு குடுத்தபடி*"

(தெ. கல். தொ. 7, கல். 2)

**மகாஜனம் :** (அ) கிராம சபையோர்.

**மகாபிரதானி :** (அ) மிகப்பெரிய தலைமை அதிகாரி. நாயக்கர் ஆட்சியில் அமைச்சர்கட்கமைந்த பெயர்.

**மஞ்சிலியீழம் :** (அ) ஈழநாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பெறும் பொருட்கள்மீது பெறப்படும் தீர்வைக் கட்டணம்.

(தொ. 17, கல். 264)

**மணலி :** (வே) மணற்பாங்கான நிலம்.

**மதிநாள் பக்கம் :** (வ) வளர்பிறைநாள் பக்கம்.

(தொ. 5, கல். 286)

**மந்திரதீபம் :** (சம) கருவறையல் திருமேனிக்கு இடப்புறம் எரியும் திருவிளக்கு. வழிபாட்டில் காட்டும் தீபம்.

*''இத்தேவர்க்கு மந்திர தீபத்துக்கு வைத்த அன்றாடு நற்காசு ஒன்பது''*

(தெ. கல். தொ. 18, கல், 319)

**மந்தைப்பணம் :** (அ) ஆட்டு மந்தைகளை நிறுத்தும் ஊர்ப்பொது விடத்திற்குப் பெறும் வரி.

(தொ. 7, கல். 109)

**மயேஸ்வர பூசை :** (சம) சிவவழிபாடு, சிவனடியார் வழிபாடு.

*''சைவ மடத்துக்கு மயேஸ்வர பூசைக்கு''*

(தெ. கல். தொ. 17, கல். 211)

**மரநிலை :** (வே) பயன்தருவன, நிழல் தருவனவாகிய மரங்களின் உரிமைகள்.

**மருசாதி :** (மொ) (மரியாதி) நடைமுறைமை.

**மறுபயிர் :** (வே) கார்நெல், அறுவடை நிலத்தில் தொடர்ந்து விளைவிக்கப்பெறும் தாளடிப்பயிர்.

**மறுவாசி :** (வே) தாளடிப்பயிர். இதனை மறுபடியும் பயிரிடப்பெறும் நெல். ''ஒருபூவும் மறுவும்'' என்றும் கூறப்பெறும்.

**மாஸம் :** (வ) (மாதம்) முப்பது நாள் அல்லது சந்திரனின் இயக்கவழி இரண்டு பட்சம் கொண்ட முப்பதுநாள்.

**மாடை :** (பொ) சோழர்காலம் முதலாக நாட்டு வழக்கிலிருந்த பொற்காசுகளில் ஒன்று.

மாந்தோட்டு பச்சை : (பொ) மாணிக்க வகைகளுள் பச்சை நிற-முடையது, பச்சையெனப் பெயர் பெறும். அதன் வகைகளுள் ஒன்று மாந்தோட்டு பச்சை.

மாப்பணம் : (பொ) நாயக்கர் ஆட்சியில் சோழநாட்டில் வழக்கி-லிருந்த நாணயம். இது, பணம், மாப்பணம் என இரண்டு தரத்தில் அமைக்கப்பட்டிருந்தது.

(தொ. 5, கல். 555)

மாமூலாதாயம் : (வ) வழக்கமாகப் பெறும் வருவாய். (வரி)

மார்க்கம் : (அ) நெடுஞ்சாலை, நடைமுறை.

மானவாரி புழுதிநெல் : (வே) பெய்யும் மழையைக் கொண்டு நிலத்தை உழுது ஈரப்புழுதிப்படுத்தி விதைக்கும் நெல். இத் தகைய வேளாண்மை வானம் பார்த்த பகுதிகளிலேயே செய்யப் பெறுவதாகும்.

(தெ. கல். தொ. 17, கல். 127 மாறசுந்தரபாண்டியன்.)

முகாந்திரம் : (வ) சான்று, சந்தர்ப்பம், விளக்கம், மூலகாரணம்.

முதல் அடங்கல் : (வ) செய்யப்பெற்ற அறச்செயல்களுக்குரியதாக அமைந்த முதலீட்டு நிலை திறப்புப் பொருள்.

*''விளக்கு ஐஞ்சுக்கும் முதல் அடங்கல் இறையிலியாக சந்தி ராதித்தரை செல்வதாக விட்டோம்''*

(தெ. கல். தொ. 7, கல். 82)

முதுமாந்திநிலம் : (வே) பழமையாகத் திருத்தப்பட்ட நிலம்; வலிமையும், பழமையும் இருந்து வெட்டித் திருத்தின நிலம்.

(தொ. 17, கல். 129)

மேல்தலை : (வே) நிலத்தின் மேற்புறத் தலைப்புப் பகுதி.

(தொ. 23, கல். 126)

மேலெழுத்து : (வ) சாசனங்களில் ஊர்ப்பெருமக்கள் இடும் சான்றுக் கையெழுத்து.

மேனி : (மொ) விகிதம், வீதம்.

*''விளைந்த நிலத்துக்குப் பதினாறு மேனித்திரகம் ஒன்றும்''*

**மௌலி :** (அ) அரசர்கள் அணியும் பொன்முடி.

**யானுடைய :** (மொ) என்னுடைய.

(தொ. 3:1, கல். 53)

**ரக்ஷித்தவன் :** (மொ) பாதுகாத்தவன்.

**ரக்ஷித்தார் :** (மொ) பாதுகாத்தார்.

*"இத்தாமம் ரக்ஷித்தாரடி இரண்டும் என்முடி மேலன"*

(கல்வெட்டு-காப்புரை)

**ரக்ஷை :** (வ) காப்பு, காப்பார்களாக.

**ரத்நநியாஸம் :** (கலை ; சம) கோயில்களில் அமைக்கப்பெறும் தெய்வத் திருமேனிகளின் அடிக்குக் கீழிடத்தில் தெய்வீகம் உயிர்ப்புடன் விளங்குவதற்குரியதென ஆகமங்கள் கூறியுள்ள நியதிப்படி மந்திரச் சக்கரத்துடன், தூய ஒன்பது வகை இரத்தினங்களையும், ஒன்றாகக் குழிப்பீடத்தில் பதித்து சிலையினை நிறுவுதல். இவ்வாறே உலோகத் திருமேனிகளின் அடிக்கீழ் தாமரை வடிவில் அமைக்கப்பெறும் இருப்பின் உள்பகுதியில் மேற்கூறிய பொருள்களைப் பொதிப்பாகச் செய்தலுமாகும்.

*"ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் கோயிலில் எழுந்தருளுவித்த செப்புத் திருமேனிகள் கனமாக எழுந்தருளுவித்த ரிஷப வாஹந தேவர் திருமேனி ஒன்று ரத்நநியாஸஞ் செய்து இவர் எழுந்தருளி நின்ற மூவிரலறை உசரம் உள்ள பத்மம் ஒன்று"*

(முதல் இராசராசன் கி.மு. 1014)

(தெ. கல். தொ. 2:2, கல். 40)

**ரதகாரர் :** (சமு) தச்சாசாரியர், சிற்பியர்.

**ராஜ்ய வர்ஷம் :** (அ) ஆட்சியாண்டு. ஆட்சி தொடங்கும் அரசனுக்குப் பட்டம் சூட்டப் பெற்ற நாளிலிருந்து கணக்கிடப்பெறும் ஆண்டு ஆட்சியாண்டாகும்.

**ராசிப் பொன் :** (வா) மாற்றில் குறையாத பொன்.

**ரிஷபதேவர் :** (சம) இடபதேவர் சிவபெருமானின் ஊர்தி. சிவன் கோயில்களில் திருமுற்றப் பகுதியில் மூலவரை நோக்கிய வண்ணம் அமைக்கப்பெறும் காளைமாட்டு வடிவிலமைந்த திருமேனி.

ரிஷபவாஹனதேவர் : (சம) (இடப வாகன தேவர்) காளைமாட்டை ஊர்தியாகக் கொண்ட தோற்றத்தில் அமைந்த சிவபெருமான்.

*"ஸ்ரீஹஸ்தம் நாலும் உடைய கனமாக எழுந்தருளுவித்த ரிஷபவாஹநதேவர் திருமேனி ஒன்று"*

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

ருத்ரபாராயணபுறம் : (சம) ஸ்ரீ ருத்ரம் என்னும் வடமொழிச் சுலோகங்களை இறைவனுக்கு முன்னர் நாளும் பாராயணம் செய்யும் வேதியர்க்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

*"இவ்வாண்டு இம்மாதம் முதல் ஸ்ரீ ருத்ர பாராயணப்புறம் இறையிலியாகத் தந்தோம்"*

(தெ. கல். தொ. 5, கல். 432)

ரேகைப் பொன் : (வா) பசும் பொன், அடையாளம் பொறிக்கப்பட்ட பொன் நாணயம்.

லக்ஷணம் : (மொ) ஒழுங்குமுறை, நியதி.

*"இநநாச்சியாற்கு அமுதுபடி செல்லக்கடவதாக இப்படி லக்ஷணம் பண்ணிக் குடுத்து லக்ஷணப்படி கல்வெட்டுவித்தோம்"*

(குலோத்துங்கன் I, தெ. கல். தொ. 7, கல். 30)

லகிதச் சீவிதம் : (வ) அரசு அளித்த உத்தரவுச் சீட்டினை ஆதாரவாகக் கொண்டு வாழ்க்கைக்குரியதாகப் பெற்றுள்ள நிலம். (தொ. 17, கல். 562)

லிங்கம் : (சம) சிவலிங்கம், பீடத்தின்மேல் கந்துடை வடிவில் அமைக்கப் பெறும் அருஉரு.

*"லிங்கத்தோடும் கூடச் செய்த பிர்ஹமர் ஒருவர்"*

(தெ. கல். தொ. 2:2, கல். 44)

லோகரக்ஷார்த்தம் : (சம) உலக மக்களின் நன்மைக்காகும் செயல்.

வகையரு : (வ) முதலியன, ஒரு இனச்சார்பு.

வங்க்ஷத்தார் : (சமு) வமிசத்தினர், குடும்பவழியினர். (தொ. 5, கல். 475)

வஸ்து வாகனம் : (வ) பொருளும் ஊர்தியும்.

**வதை** : (வ) உயிர் வருந்துமாறு ஆயுதங்களால் உடலில் பல-விடத்தும் புண்படுத்துதல்.
(தெ. கல். தொ. 7, கல். 21)

**வம்புபயிர்** : (வே) பருவகாலப் பயிர்களின் இடையே விளைவிக்கும் ஊடுபயிர்.

**வம்புபுன்பயிர்** : (வே) நன்செய் நிலங்களில் கோடை காலத்தில் புதிதாகப் பயிரிடும் புன்செய்ப் பயிர்வகைகள்.
(தொ. 7, கல். 76)

**வயணம்** : (மொ) விபரம், முறைமை.

**வயிஷ்ணவர்** : (சம) வைணவர், திருமாலை முழுமுதற்கடவுளாகக் கொண்ட சமயத்தினர்.

**வரிசை கொள்ளல்** : (அ) முறையாகிய இறைவரி அரசு கொள்ளல்.

**வரிசைப்பற்று** : (வ) முறைமையால் உரிமை பெறும் நிலம்.

**வழக்கு முறி** : (அ) வழக்கின் விபரம் எழுதப்பட்ட ஓலை.

**வலசை** : (சமு) குடிபெயரும் மக்கள், மாறிமாறிவரும் அதிகாரம்.

**வாஸ்து** : (பொ) பூமி, மனை.
"குடியிருப்பு நத்தமான வாஸ்துவும்"
(தெ. கல். தொ 7, கல். 22)

**வாசகபிழை** : (மொ) சாசன ஓலைகளில் அமைந்த கருத்து தொடர் நிலைப் பிழை.
(23, கல். 271) நாயக்கர் காலம்.

**வாசல் குழி** : (அ) வீட்டு வாயிற் பகுதியில் தேவைகட்கேற்பப் பந்தல் முதலியன இடுதற்குரிய கால்நடும் குழிகளமைத்தற்குப் பெறும் வரி.
(தொ. 7, கல். 109)

**வாசல் பணம்** : சந்தை இடத்தில் வணிகர் செல்லுதற்குரிய வரி. (நுழைவுக்கட்டணம்)
(தொ. 7, கல். 109)

**வாசி** : (வ) பங்கு விகிதம், வருவாயுள் ஒரு பங்கு வரியாதல்.

**வாசியாலேறு மரிசி** : (சம) பலதரச் செலவினங்கட்குரியதாக அளவில் உயர்த்தப்பட்ட அரிசி.
(தொ. 5, கல். 458)

**வாரம் :** (வ) விளைவில், பெருக்கத்தில், தொடர்ந்துபெறும் பங்கு.

**வான்பயிர் :** (வே) மழையைக் கொண்டு விளையும் பயிர்.

**வான்பயிர் :** (வே) பயன் மிகுந்த பயிர்கள். வழிபாட்டிற்கும் வாழ்க்கைக்கும் இன்றியமையாத பொருள்களைப் பெறுதற்குப் பயிரிடப் பெறுதலின் வான்பயிர் என்று சிறப்புடன் குறிப்பிடப் பெற்றன.

*"கரும்பு, செங்கழுநீர், வாழை, இஞ்சி, மஞ்சள், தெங்கு, கமுகு, பலாமரம் கொழுந்து உள்ளிட்ட வான்பயிரும்"*

(தெ. கல். தொ. 17, கல். 127)

**விஜ்ருப்பனை :** (மொ) மனச்செருக்கு.

**விடுதீட்டு :** (அ) ஓலைவழி அனுப்பிய கட்டளை.

**விலைஸராவணை :** (பொ) கிரைய சாசனம், விலை உறுதிப்பாடு.

**வீசுவலைப்பாட்டம் :** (அ) நீர்நிலைகளில் வீசுவலையால் மீன் பிடிப்பதற்குச் செலுத்தும் நாள்வரி.

(தொ. 17, கல். 143)

**வெஞ்சனம் :** (சம) வியஞ்சனம் கறிவகைகள் (உணவு).

**வெட்சிக்காடு :** (வே) வெட்சிஎன்னும் செடிகள் மண்டிக்கிடக்கும் பகுதி. (தொ. 17, கல். 128)

**வெட்டி :** (அ) நாளும் குறிப்பிட்ட பணி ஒரு சிறிது காலம் செய்த பின்னர் வறிதாகவே அற்றைப் பொழுதைக் கழிக்கும் தொழிலாளர் வெட்டி என்றும் அப்பணி வெட்டி என்றும் சுட்டப்பெறும்.

*"திருமஞ்சனம் எடுக்கும் திருமேனிக்கு வெட்டிக்கும் ஜீவனத்துக்கும் நிலம்"*

(தெ. கல். தொ. 5, கல். 634)

**வெள்ளாட்டி :** (சமு) ஒருவனிடம் உடன்பட்ட வாழ்க்கையுடையவள்.

**வெள்ளான்வரிசை :** (வே) பயிரிடும் முறைமை.

**வேட்கோவன் :** (சமு) குயவன், மட்பாண்டங்கள் செய்யும் தொழிலாளி. (தொ. 17, கல். 584)

**வேழ்வி :** (சமு) வேள்வி, மந்திரங்கள் சொல்லி பிராம்மணர் செய்யும் தீ வழிபாடு.

**வைபோகம் :** (வ) சிறப்பு நிகழ்ச்சி, சிறந்த வழிபாடு, உயர்ந்த வாழ்வு.

# வடமொழிச் சொற்கள்

## ''ர''

ரத்ந கடகம் : (கலை) இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்டதும் புயக்கையில் அணிவிப்பதுமான ரத்ந நகாசு வளையம் (கடகம்).

''ரத்த கடகம் ஒன்றிற் கட்டின வயிரம் முப்பத்தாறும் மாணிக்கம் இருபத்தைஞ்சும், மரகதம் பத்தும் உட்பட''

(தெ. கல். தொ. 2, கல். 93)

ரக்ஷித்தார் : (வ) பாதுகாத்தார்.

''இத்தாமம் ரக்ஷித்தாரடி இரண்டும் என்முடி மேலன''

(கல்வெட்டில் காப்புரை)

ரத்ந நியாஸம் : (கலை) திருமேனிகளின் அடிக்குக் கீழ் தெய்வீகம் விளங்க, ஜீவரத்நசக்ர மந்திரச் சங்ககங்களுடன் ஒன்பது இரத்தினங்களையும சேர்த்துப் பொதிப்பாகச்செய்யப் பெறுதல், உலோகத் திருமேனிகளில் நின்ற தாமரைவடிவினமைந்த பத்மபீடத்தின் ரதநநியாஸம் செய்தமைத்தல் ஆகமவிதி என்பர்.

''ஸ்ரீராஜராஜீஸ்வரமுடையார் கோயிலில்-எழுந்தருளுவித்த செப்புத் திருமேனிகள் - கனமாக எழுந்தருளுவித்த ரிஷபவாஹநதேவர் திருமேனி ஒன்று. ரத்நயாஸநஞ் செய்து இவர் எழுந்தருளி நின்ற மூவிரலரை உசரம உள்ள பத்மம் ஒன்று''.

(முதல் இராசராசன், கி.பி. 1014, தெ. கல்.தொ. 2:2, கல். 40)

ரத்ந மோதிரம் : (கலை) நவரத்தினங்களுள் ஒன்றினை வைத்துப் பதித்துக் கட்டப்பெறும் விரல் அணி.

ரக்ஷிப்போம் : (வ) (ரக்ஷிப்போம் ஊரோம்) காப்பாற்றுவோம்.

ராஜ்ய வர்ஷம் : (வ) ஆட்சியாண்டு

'' ஸ்ரீ கோமாறஞ் சடையற்கு ராஜ்ய வர்ஷம் ஆறுவது''.

(தெ. கல். தொ. 14, கல். 3)

ராஜராஜன் மாடை : (அ) முதல் இராசராசன் ஆட்சியில் சோணாட்டில் வழக்கிலிருந்த பொற்காசு.

''ராஜராஜன் மாடையோடொக்கும் பொன்''.

(தெ. கல். தொ. 7, கல். 836)

(தெ. கல். தொ. 5, கல் 702)

**ராஜராஜீஸ்வரம் அளவை வகை :** (அ) திருமேனிகள், படிமங்கள், ஆகிய உலோகச் சிலைகள் முழம், சாண், விரல், தோரை என்னும் அளவையினைக் கொண்டும், ரத்னங்கள் தக்ஷிண மேருவிடங்கன் என்னும் நிறைகல்லினைக் கொண்டும், பொன்-வெள்ளி ஆகிய வற்றை ஆடவல்லான் என்னும் கல்லினைக் கொண்டும் எடை யிடப்பட்டன.

''*ராஜராஜீஸ்வரம் உடையார் கோயிலில் செப்புத் திருமேனிகள், உடையார் கோயிலில் முழத்தால் அளந்தும், ரத்னங்கள் தக்ஷிண மேரு விடங்கனெனனுங் கல்லால் நிறை எடுத்தும் பொன்னும் வெள்ளியும ஆடவல்லானென்னும் கல்லால் நிறை எடுத்தும் கல்லில வெட்டினபடி*''.

(தெ. கல். தொ. 2:2. கல். 51)

**ராஜராஜீஸ்வரம் உடையார்க்கு ஸ்ரீகார்யம் :** (சம) தஞ்சை இராச ராசேச்சுரம் கோயில் காரியங்களைச் செய்துவந்த அதிகாரி, பொய்கைநாடு, கிழவன் ஆதித்தன் சூர்யனான தென்னவன் மூவேந்த வேளான் என்பவனாவன்.

(கி.பி. 1009)

**ராஜவர்த்தனம் :** (பொ) நவரத்தினங்களுள் வயிரம் என்னும் மணி களில், ஒளிநிலை, நிறம், தரம், குணம் ஆகியவற்றினால் சிறந்தது ராஜவர்த்தனம் என்னும் வயிரமாகும்.

''*திரிசரம் ஒன்றில் - முத்து தொண்ணூற்று ஒன்பதும், பவழம் ஆறும், ராஜவர்த்தனம (உயர்ந்த வயிரம்) ஆறும்*''

(தெ. கல். தொ. 2:2, கல். 34)

**ரிஷபதேவர் :** (சம) இடபதேவர். சிவபெருமானின் ஊர்தி. சிவன் கோயில்களில திருமுற்றத்தில் மூலவரை நோக்கிய பாங்கில் அமைக்கப்பெறும் காளைமாட்டு வடிவிலுள்ள திருமேனி.

**ரிஷபவாஹனதேவர் :** (சம) இடபவாகனமுடைய சிவபெருமான்.

''*ஸ்ரீஹஸ்தம் நாலும் உடைய சுனமாக எழுந்தருளுவித்த ரிஷப வாஹநதேவர் திருமேனி ஒன்று*''.

(தெ. கல். தொ. 2:2, கல். 46)

**ரிஷபக்கோல் :** (வா) இடபம் என்னும் பெயரோடு சார்த்தி பெயரிடப்பட்ட தராசு. இத்துலாக்கோல், இராசாதிராசன்

ஆட்சியில் மதுராந்தகத்தில் இருந்த வியாபாரிகள் பயன்படுத்திய துலாக்கோலாகும்.

(இராசாதிராசன் கி.பி. 1172, தெ. கல். தொ. 5, கல். 994)

ருத்ரபாராயணபுறம் : (சம) ஸ்ரீருத்ரகானம் என்னும் சுலோகங்களை இறைவனுக்கு முன்னர் நாளும் பாராயணம் செய்யும் வேதியர்க்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

*"இவ்வாண்டு இம்மாதம் முதல் ஸ்ரீ ருத்ரபாராயணப்புறம் இறையிலியாகத் தந்தோம்."*

(தெ. கல். தொ. 5, கல். 432)

"ஜ"

ஜீவிதம் : (வ) மக்கள் வாழ்க்கைக்குரிய வருவாய்.

*"தேவதானமான ஊர்களில் ஜீவிதம் அடைக்கும்படியாலுள்ள நெல்லுக்கும்"*

(தெ. கல். தொ. 8, கல். 56)

ஜயபத்திரத்தூண் : (அ) அரசன் தான் கைப்பற்றிய நாட்டின் தலைநகரிலோ, ஆங்கமைந்த சிறந்த பகுதியிலோ தனது வெற்றியை விளக்கமாகப் பொறித்த கல்வெட்டோடு கூடிய தூணினை நிறுத்தி வைத்தல் மரபு. அவ்வெற்றித்தூண் இப்பெயர் பெறும்.

*"இரட்டபாடி ஏழரையிலக்கம் முரட்டொழில் அடக்கி முடிங்கெரி மூட்டி வெங்கதிற் புலியேறு வியந்து விளையாடத் துங்கபத்திரைக் கரை ஜயபத்திரத்தூண் நாநிலம் பரச நாட்டி"*

(வீரராசேந்திரசோழன் - மெய்க்கீர்த்தி)

(தெ. கல். தொ. 3:1, கல். 30)

ஜயஸ்தம்பம் : (அ) வெற்றித்தூண். அரசன் தான் வென்ற நாட்டின்கண் தமக்குரிய இலச்சினையுடன் வெற்றியையும் பொறித்து பகைவர் நாட்டில் நடும் கற்றூண்.

*"ஆங்கவன் ஏதக்கிரியில் ஓங்கிகல் உழுவை ஏறெழுதி உயர் ஜயஸ்தம்பம் எழில் பெற நிறுத்தி"*

(விசையராசேந்திரன் - மெய்க்கீர்த்தி)

"ல"

**லக்ஷணம் :** (மொ) ஒழுங்குமுறை.

*"இந்நாச்சியாற்கு அமுதுபடி செல்லக்கடவதாக இப்படி லக்ஷணம் பண்ணிக்குடுத்து லக்ஷணப்படி கல்வெட்டுவித்தோம்".*

(குலோத்துங்கசோழன்)

(தெ. கல். தொ. 7, கல். 30).

**லிங்கம் :** (சம) சிவலிங்கம். பீடத்திலிருந்து பாணமாக எழுந்து நிற்கும் பகுதி.

*"லிங்கத்தோடும் கூடச் செய்த பிர்ஹ்மர் ஒருவர்"*

(தெ. கல். தொ. 2:2 கல். 44)

**லோகரக்ஷார்த்தம் :** (வ) உலகமக்களின் நன்மைக்காகும் செயல்.

"ஸ"

**ஸம்மதம் :** (மொ) உடன்பாடு

*"ஸம்மதித்து கைக்கொண்ட ஆடு பன்னிரண்டு"*

(தெ. கல். தொ. 8. கல். 39)

**ஸிம்ஹநாயறு :** (வ) சிம்மராசியில் சூரியன் செல்லும் திங்கள். ஆவணி மாதம்.

**ஸிம்ஹாசனம் :** (அ) சிம்மாசனம். அரியாசனம். அரசன் இருந்து ஆட்சி நிகழ்த்தும் இருக்கை. பொன்னாலும் மணியாலும் செய்யப்பட்டு சிங்கங்கள் சுமந்த பாங்கில் செய்யப் பெறுதலின் இப்பெயர் பெற்றது.

*"வீர ஸிம்ஹாசநத்து உலகுடையாளொடும் வீற்றிருந்தருளிய ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்"*

**ஸ்வஸ்தி :** (வ) மங்களம். மங்கல வாழ்த்து.

*"நாயகர் குலோத்துங்க சோழன் தோப்பில் எழுந்தருளினல் ஸ்வஸ்தி சொல்லி ஸேவித்தும்"*

(தெ. கல். தொ. 8. கல். 43)

**ஸாமுதாயம் :** (சம) கோயில் நடைமுறைச் செயல்கள். பணிச் செயல்கள்.

*"ஸ்ரீகார்யம் செய்வார்களும் சாமுதாயம் செய்வார்களும்"*

**ஸபையார் :** (அ) கிராம சபையார். கிராமங்களில் குடவோலை வழியே தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் அடங்கிய கிராம நிர்வாக சபையார்.

**ஸண்டேஸ்வரதேவரிடை கொண்டபொன் :** (சம) சிவன் கோயில் களில் அமைந்த திருச்சுற்று மாளிகைத் தெய்வங்களுள் முதன்மை பெற்றவர் சண்டேசுவர தேவர் திருமேனியாகும். கோயில் நிர்வாக அதிகாரிகள் சண்டேஸ்வரரைத் தலைமையாகக் கொண் டே வரவு செலவு செய்தல் மரபாகும். அம்முறையிலேயே பொன் கொள்ளப் பெற்றுளது.

(தெ. கல். தொ. 8. கல். 67)

**ஸீர்த்தனம் :** (வ) சீதனம். பெண்களுக்குப் பெற்றோர் அளிக்கும் பொருள் வரிசை. பெண் தெய்வங்கட்கும் திருக்கலியாண சீதன நிகழ்ச்சி இடம் பெறுதல் வழக்கு.

*''நாச்சியார்க்கு இவ்வூர் ஊரோம் ஸீர்த்தனமாக குடுத்த நில மாவது''.*

(தெ. கல். தொ. 8. கல். 30)

**ஸங்ரமம் :** (சம) மாதப்பிறப்பு. மேடம் முதலாக சூரியன் செல்லும் இராசிகளில், நின்ற இராசியின் இறுதியும் தொடரும் இராசியின் தொடக்கமும் கூடிய காலம் சங்கிரமம் என்பதாகும். இந்நாள் சங்கிராந்தி என்று பெயர்பெறும்.

*''ஸங்கிரமம் ஒன்றுக்கு ஆடியருளுந் திருமஞ்சன நீரிலுந் தண்ணிர் மீதிலும் இட ஏலவரிசி ஆழாக்காக ஸங்கிரமம் பன்னிரண்டுக்கு ஏலவரிசி நாழிஉரியும்''*

(தெ. கல். தொ. 2 : 2. கல். 24)

**ஸரீரம் :** (வ) ஆள். ஆள் ஒன்று.

*''இப்பன்னிருவர்க்கும் ஸரீரம் ப்ரதி ஆழாக்கு நெய்யும் ஐந்து கறியும்-ஊட்டுவதாக''*

(தெ. கல். தொ. 3:1. கல். 1)

**ஸிலாலேகை :** (மொ) கற்பொறிப்பு. கல்லெழுத்து.

*''இத்தேவற்கு முன்பு ஸிலாலேகை பண்ணின நிலத்துக்கு தெற்கும்''*

(தெ. கல். தொ. 3:1. கல். 29)

**ஸ்ரமணர் :** (சமு) சமணர்.

*''வைகாசனர் ஊர்களிலும், ஸ்ரமண் ஊர்களிலும்''*

(தெ. கல். தொ. 3 : 1. கல் 9)

**ஸோமகிரஹணம் :** (சம) சந்திரகிரகணம்.

**ஸர்வ மான்யம் :** (அ) நில உரிமை அளிக்கும் அரசோ, ஊர்ச்சபையோ ஊதியத்திற்குரியதாக அளிக்கும் நிலம். சர்வ மான்ய உரிமை பெற்றவனின் வழியினர், முன்னோர் செய்து வந்த தொழிலைத் தொடர்ந்து செய்து அதற்குரிய ஊதிய மாகத் தொடர்ந்து அனுபவிக்கும் நிலமாதலின் சர்வமானியம் எனப் பெயர் பெற்றது.

**ஸம்ஞயான் :** (அ) (ஸம்ஞ்ஜை) எழுத்தறியாதவன் (தற்குறி)

*''பங்குக்கு முதுகண்ணான வைகாவுடையானும் கூற்றுடை யானும் ஸம்ஞயானமைக்கு நாராயணன் சுந்தரத்தோளுடையான் எழுத்து''*

(தெ. கல். தொ. 8. கல். 205)

**ப்ரம்ஹஸ்தானம் :** (அ) கிராம பஞ்சாயத்தார் கூடும் இடம்.

*''மணிமங்கலமான இராஜசூளாமணி சதுர்வேதிமங்கலத்து மஹா சபையோம். எம்மூர் ப்ரம்ஹஸ்தானத்தே கூட்டம் குறைவறக் கூடியிருந்து''*

(தெ. கல். தொ. 2 : 1. கல். 28)

**ப்ரதிக்ஷேத்திரம் :** (சம) பரிவர்த்தனையாகச் செய்யப்பெற்ற நிலம்.

**ப்ரீதிகைப் பிரமாணம் :** (வ) ஊழியர் மனநிறைவு பெறுமாறு அளிக்கும் நிலபுல இறையிலிச் சாசனம்.

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 2 | தென்காசின் | பொன்காசின் |
| 35 | தற்வாய்புரம் | தளவாய்புரம் |
| 70 | கேள்வி | வேள்வி |
| 81 | எலவகைளும் | எலவைகளும் |
| ,, | நாடேன்றவரி | நாடென்றவரி |
| 84 | வேதினையும் | வெதிளையும் |
| 89 | கணக்ரு | கணக்கு |
| ,, | எருபூவுமான | ஒருபூவுமான |
| 91 | வளையர் | வலையர் |
| 94 | கங்காபாடி | கங்கபாடி |
| 101 | தடித்தல் | தடிதல் |
| 106 | வடகடகாலம் | வற்கடகாலம் |
| 107 | வாரியமாக | வாரியமாகிய |
| 114 | பெரும்குதியைப | பெரும் பகுதியை |
| 116 | தமிழகத்திற்கு | தமிழகத்திலிருந்து |
| 117 | கறடிகை | கரடி கை |
| 118 | கன்றுபேய்பாழ் | கன்று மேய் பாழ் |
| 119 | நாணயங்களாகவே | நாணயங்களாகவும் |
| 121 | விக்ரிமாதித்த | விக்ரமாதித்த |
| 122 | நிலத்தின்தாம் | நிலத்தின் தரம் |
| 125 | பொருளுக்கமையால் | பொருளுக்கமையாமல் |
| 126 | தொடங்குதலம் | தொடங்குதலும் |
| 128 | காககள் | பூங்காக்கள் |
| ,, | கார்த்திகைப்பிச்சை | கார்த்திகைப் பச்சை |
| 131 | கல்மாட்டில் | கால்மாட்டில் |
| ,, | காலிதி | காவிதி |
| 132 | டுவிற்சேரி | நடுவிற்சேரி |
| 134 | முப்பாகவும் | முகப்பாகவும் |
| 138 | கிராமசபைத் தேர்கல் | கிராமசபைத் தேர்தல் |
| 140 | சோத்துக்கட்டி | சேர்த்துக்கட்டி |
| 157 | அணிந்த | அமைந்த |
| ,, | கடையினர் | படையினர் |
| 158 | கொற்றனவே | கொற்றெனவே |
| 163 | திருக்கோயில் | திருக்கோயிலில் |
| 175 | நிருத்திக்கும் | விருத்திக்கும் |
| 177 | குளிந்த வடிவில் | உட்குவிந்த வடிவில் |
| 178 | ஸ்பாலினியோசத்துக்கு | ஸபாவினியோகத்துக்கு |
| 179 | சப்சர்க்கப்பதிதர் | சம்சர்க்கப் பதிதர் |
| 187 | துறைகள் | துளைகள் |
| 199 | தெ. கல் தொ — | தெ. கல். தொ — 8. |
| 203 | புந்நீர் விட்டு | அந்நீர் விட்டு |
| ,, | செந்நெல் நீட்டல் | செந்நெல் தீட்டல் |

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 213 | ஸாஸ்த | ஸமஸ்த |
| 220 | இலைப்புணை | இறைப்புணை |
| 223 | தன் நாடையிற் | தன் நாளையிற் |
| 226 | வகம் | வசம் |
| 235 | வியடங்கர் | விடங்கர் |
| 238 | உறிதி | உறுதி |
| 253 | குங்கிய துகள் | குங்கிலியத்துகள் |
| 254 | பின் கோயில் | பின் கோயிலில் |
| ,, | வளங்கும் | வழங்கும் |
| 269 | பொழுது கறிக்கு | புழுங்கறிக்கு |
| 272 | அளிவிற்தரிய நிலம் | அளவிற்குரிய நிலம் |
| 276 | உடையர் கோயிலில் | உடையார் கோயிலில் |
| 278 | தெண்வீக மண்டபம் | தெய்வீக மண்டபம் |
| 287 | நீட்டவஞ் செய்ய | நட்டவஞ் செயய |
| 290 | நிலம் | நீலம் |
| 291 | நாற்காலம் | நற்காலம் |
| 294 | தாகாவலும் | நாடுகாவலும் |
| 327 | கடுத்து | குடுத்து |
| 330 | பணா நத்தம் | பணாநந்தம் |
| 331 | பகடரைசு | பகட்டரைசு |
| 334 | எண்பொழுதும் | எப்பொழுதும் |
| 335 | அமைக்மப் பெற்று | அமைக்கப்பெற்று |
| 337 | மூலப்படை பெருமக்கள் | மூலப்பருடைப் பெருமக்கள் |
| 343 | பலியாத்ரம் | பலிபாத்திரம் |
| 344 | கல் கவட்டுகளில் | கல்வெட்டுகளில் |
| 349 | என்பவற்றில் | என் பற்றில் |
| 351 | கொண்டுவரும் | கொண்டு பெறும் |
| ,, | தேற்கு | தெற்கு |
| 354 | ஆதியக்க | ஆதியாக |
| ,, | நூறாடுங் கண்டு | நூறாடுங் கொண்டு |
| 357 | பாலார்க்கு | பாலர்க்கு |
| 359 | பிபீலிகை | பிடிலிகை |
| 360 | திருப்பதியில் | திருப்பதிய |
| 362 | வரி பெறுர் | வரி பெறார் |
| ,, | பொன்னுல் | பொன்னும் |
| 364 | அவிரோத்தால் | அவிரோதத்தால் |
| ,, | தவகாரியமாவது | நவகாரியமாவது |
| 365 | க்ஷபத்தையும் | இடபத்தையும் |
| 367 | செடமேல் | செடிமேல் |
| 368 | பிழைய நாழி | பிழையா நாழி |
| 369 | புடடகவரி | புட்டகவரி |

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 369 | தோழிங்க நாச்சியார் | சோழிங்க நாச்சியார் |
| 376 | பள்ளித்து மத்துக்கு | பள்ளித்தாமத்துக்கு |
| 385 | சிவன் அடைகுடி | இவன் அடைகுடி |
| 390 | குறைவன்றி | குறைவின்றி |
| 392 | பதியலார் | பதியிலார் |
| 398 | குரம் படைத்தல் | குரம்படைத்தல் |
| 411 | மருபப்பச்சை | மருப்பச்சை |
| 413 | மேனியவள் | மேவியவள் |
| 415 | மீட்பதற்கும் | மீட்பதற்குப் |
| 418 | புரவுவதி | புரவுவரி |
| ,, | முட்டி | வெட்டி |
| ,, | நெரிந்த வனளவு | நெறிந்த வளைவு |
| 419 | மான் | மாண் |
| 422 | என்னும் | என்றும் |
| 424 | இசை | இது |
| 430 | மேற்படியாத | மேற்படியாந் |
| ,, | பக்கத் எல்லை | பக்கத்து எல்லை |
| 435 | என்னும் | என்றும் |
| 441 | பழம் மடை | பழம் படை |
| 446 | நக்கப்பட்டனத்து | நாகப்பட்டனத்து |
| 448 | அமாவாளி | அமாவாஸி |



# மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பதிப்புத் துறை வெளியீடுகளில் சில...

| | ரூ. | காசு |
|---|---|---|
| தொல்காப்பியம் அகத்திணையியல் | 15 | 00 |
| ,, புறத்திணையியல் | 18 | 00 |
| ,, களவியல் | 13 | 00 |
| ,, கற்பியல் | 12 | 00 |
| ,, பொருளியல் | 11 | 00 |
| ,, மெய்ப்பாட்டியல் | 16 | 00 |
| ,, உவமையியல் | 11 | 00 |
| திருக்குறள் உரைக்களஞ்சியம் — பாயிரவியல் | 15 | 00 |
| ,, ,, — இல்லறவியல் | 30 | 00 |
| ,, ,, — துறவறவியல், ஊழியல் | 30 | 00 |
| திருக்குறள் மூலமும் பரிமேலழகருரையும் — பொருட்பால் | 15 | 00 |
| குறள் கூறும் இறைமாட்சி | 7 | 00 |
| குறள் கூறும் அரசு | 8 | 00 |
| வள்ளுவர் வகுத்த அரசியல் | 6 | 00 |
| வள்ளுவர் வகுத்த பொருளியல் | 6 | 00 |
| குறள் கூறும் சமுதாயம் | 10 | 00 |
| குறள் கூறும் சமயம் | 7 | 00 |
| Thirukkural with Kannada Translation | 50 | 00 |
| Kalki's Short Stories — A Study (Thesis) | 10 | 00 |
| A Critical Study of Paripatal (Thesis) | 20 | 00 |
| இசுலாமிய தமிழ் இலக்கிய வரலாறு | 40 | 00 |
| Robert Frost & Subramania Bharathi (Thesis) | 15 | 00 |
| The Relation of Tamil and Western Literatures | 6 | 00 |
| Nominal Composition in Tamil (Thesis) | 10 | 00 |
| The Treatment of Morphology in Tolkappiyam | 7 | 00 |
| Dravidian Languages and Literatures | 4 | 00 |
| A Study of the SamkhyaKarika with special reference to Samkhyataruvasanta (Thesis) | 20 | 00 |
| நிகண்டுச் சொற்பொருட் கோவை - தெய்வப்பெயர் | 25 | 00 |
| சதுரகராதி ஆராய்ச்சி (ஆய்வு நூல்) | 20 | 00 |
| தமிழிலக்கிய அறபுச்சொல் அகராதி | 20 | 00 |
| வள்ளலார் — ஓர் அறிமுகம் | 6 | 00 |
| Origin and Development of Saiva Siddhanta upto 14th century | 6 | 00 |
| Studies in Jnanamrtam | 15 | 00 |

| | | |
|---|---|---|
| Mysticism in Thiruvasagam | 25 | 00 |
| Sivajnana Mapadiyam | 38 | 00 |
| Quiescence and Passion | 10 | 00 |
| காத்தவராயன் கதைப்பாடல் | 2 | 50 |
| கான்சாகிபு சண்டை | 3 | 00 |
| ஐவர் ராசாக்கள் கதை | 7 | 00 |
| தோற்பாவை நிழற்கூத்து (ஆய்வு நூல்) | 16 | 00 |
| பாட்டுப்புறப் பாடல்கள் - சமூக ஒப்பாய்வு (ஆய்வு நூல்) | 14 | 50 |
| Madurai Temple Complex (Thesis) | 25 | 00 |
| யூகி முனிவர் பிடிவாதம் ஆயிரம் | 20 | 00 |
| Music in Cilappatikaram (Thesis) | 15 | 00 |
| இசைத்தமிழ் இலக்கண விளக்கம் | 26 | 00 |
| தமிழிசை வளம் | 12 | 00 |
| பாட்டும் கூத்தும் | 6 | 00 |
| நாடக மேடை | 5 | 00 |
| மு.வ. ஆய்வடங்கல் | 10 | 00 |
| அகிலன் ஆய்வடங்கல் | 7 | 00 |
| மு. வ. நினைவு மலர் | 8 | 00 |
| வையை இரண்டாம் மலர் | 7 | 00 |
| வையை மூன்றாம் மலர் | 10 | 00 |
| வையை நான்காம் மலர் | 6 | 00 |
| அகிலன் கருத்தரங்கம் ஆய்வுரைகள் | 12 | 00 |
| The Inner Meaning of Human History | 1 | 20 |
| History of Madurai | 22 | 00 |
| Employment and Economic Growth in India | 2 | 00 |
| The Handloom Industry in Madurai City | 10 | 00 |
| Indian Sugar Industry | 16 | 00 |
| Development of Rule of law | 18 | 00 |
| Studies on the Structure and perfection of Mixed Crystals | 5 | 00 |
| வளரும் அறிவியல் | 25 | 00 |
| Biology Question Bank | 15 | 00 |
| Studies in Uropeltid - Snakes (Thesis) | 20 | 00 |
| Water Pollution in Madurai - Yesterday | 40 | 00 |
| Effective Teaching | 20 | 00 |
| உலகத்தமிழ் | 30 | 00 |

